உ

சிவமயம்.

# குமரன்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே.






அக்ஷய—பிரபவ வருஷம்.





சதங்கை ௬.

பத்திராசிரியர்,

சொ. முருகப்ப செட்டியார்

காரைக்குடி.

# உள்ளுறை.

———

உ

சிவமயம்.

# “குமரன்” KVC0009

“தெள்ளுற்ற தமிழ்அமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்.” —பாரதி.

சதங்கை ௩ } காரைக்குடி அட்சய௵ ஐப்பசி௴ { மணி ௧

## விலையிலா முத்தம்.

“பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து” என்றுகூறும் பெற்றியுடைய இப்பாண்டி நன்னாட்டில் சில நூற்றாண்டுகட்கு முன்னிருந்த முத்தன் ஒருவன் முத்து வாணிகஞ் செய்ய விருப்புடையனாய்த் தொழிற்றலைப்பட்டான். “தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி, நந்து சலஞ்சலம் மீன்றலை கொக்கு நளினம் மின்னார், கந்தரம் சாலி கழைகன்னல், ஆவின்பல் கட்செவிகார், இந்து வுடும்பு கரா முத்தமீனும் இருபதுமே.” என்றபடி தோன்றுகின்ற முத்தங்கள் பலவற்றையும் பெற்று வாணிபம் நடத்தி வருவானாயினான். முத்து முதலிய மணிகள் கோத்தமைத்த நகைகளைச் சுமந்து திரியும் நானிலச் சிறுமதி மக்களைத் தேடியலைந்தான் நமது முத்துவாணிகன். முத்துக்களைத் தேடிப்பெறுவதிலும் இடங்கண்டு விற்பதிலும் தேர்ச்சி பெற்ற முத்துவாணிகன் முத்துக்களின் தரமறியும் பண்பில் நிகரற்று விளங்கவே, எவராலும் விலை மதிப்பிட முடியாத முத்தினைப்பெற விழைந்து நின்றது அவனது மனம். நவரத்தினங்களிலும் தலையாக நின்று விலையிகந்து நிற்கும் பெற்றியுடைய முத்தின் முடிவான ஒன்றினை விழைந்து வெளியேறினான். எண்ணற்ற வணிகரைக் கண்டான். மணிநூற் புலமை கண்ட பேரறிஞரும் தலை துளக்கும் பெற்றி பெற்ற அரதனக் குவியல்களை நோக்கி நோக்கி யகன்றான். வாங்குவாரின்றி மண்ணையும் விண்ணையும் தனக்கு விலைவரம்பாக்கி நின்ற பெருவிலை முத்துக்கள் பலவற்றைக்கண்டு இரங்கினான். இவ்வாறாகப்

பன்னெடுநாள் அலைந்து திரிந்த பின்னர், பாண்டிப் பழம்பதியாய மதுரைமாநகரை மீண்டும் அணுகினன். பாண்டிப்பரதெய்வமான சொக்கேசப் பெருமானுர் மாணிக்கம் முதலிய விலைவரம் பறியாப் பெருவிலை மணிகளை விலைகூறி விற்றாரெனக்கூறும் பெற்றி பெற்ற அப்பழம்பதியை அணுகிய முத்துவாணிகன், அயலிலுள்ள பேரறிஞரிடம் தன்விலைகூறி வருந்தினன். "பெருவிலை மணிகளைத் தரமறிந்து கைமாறும் அரதனப்புலவர் மலிந்த இப்பதியில் விலைமதிப்பறியா வான்மணி பலவும் வழங்கிய புலவர், பழமைக்குப் பழமையும் புதுமைக்குப் புதுமையுமாக விளங்கிநிற்கும் பரம்பொருளான சொக்கேசப் பெருந்தகை ஒருவரேயாவர். அவரது அருங் குழந்தையான சேவலங்கொடிச் செல்வர் திருச்செந்தூர்க் கடலருகே நின்று விளையாடுகின்றார். ஆண்டுச்சென்று வினவினல் ஒருவாறு தந்தை சிந்திய முத்தமொன்றிரண்டு கிடைத்தல் கூடும்." என்று அறிஞர் கூறினர். முத்துவாணிகன் செந்தூருக்கு வழிகூடினன். கண்டான் கடற்கரையில் நின்றொளிருங் கரும்பினை! பேரொலியிட்டுத் துள்ளி விளையாடும் வெண்ணிற அலைகள் போட்டியிட்டு ஒன்றன்பின் ஒன்றாகவந்து அடிவருடிச் செல்லுமாறு காட்சிகொடுக்கும் திருமுருகனின் இளமை வனப்பைக் கண்டு களித்தான் முத்துவாணிகன். இளநகை அரும்பி ஒளி வீசும் திருமுகத்தினையும், அன்பும் அழகும் ஆனந்தமுங் கலந்து வகுத்தனைய திருமேனியையும் பார்த்த வாணிகன் நெஞ்சம் கனிந்துருகியது. பண்டைப்பழமறைக்கும் எட்டாத மதுரை வாணிகன் மகனுன இப் பேரழகுப் பெருஞ்செல்வனிடமுள்ள விலையிலா முத்தம் பெற விழைவுகொண்டான். இன்னும் ஐந்துவயது நிரப்பாத செல்வச்சிறுவனை முன்னிற்கும் குழந்தைக் குமரனை நோக்கி, "இதோ ஒலிட்டுப் புரண்டு வருகிற கடலலையானது கருவுற்ற வலம்புரிச் சங்கங்களையெடுத்துவீச, அதனல் அலைப்புண்டு நோவுற்ற அச்சங்கங்கள் கரையின் மணலில் தவழ்ந்து பெற்ற அரிய முத்துக்களுக்கு விலைமதிப்பிட முடியும். மதம்பொழிகின்ற யானையினது, மூன்றும் பிறைச் சந்திரன் போன்ற வளைந்த கொம்புகளில் முற்றி விளைகின்ற

முத்துக்களை உலகத்தார் விலைமதித்து விடுகின்றனர். நன்றாகத் தழைத்துக் கழுத்து வளைந்து முடிவணங்குமாறு முற்றிய நெற் குலையைச் சுமந்து நிற்கின்ற பசிய நெல் முத்தினுக்கும் இவ் வுலகில் விலையுண்டு. மழையைப் பெய்து மக்கட்கின்றியமையாத நன்மை பலவுங் கைமாறுகருதாது ஆற்றிவரும் மேகமானது விரும்பித் தருகின்ற முத்தினுக்கும் கூறத்தகுந்த விலையின் தரமுண்டு. ஆனால் உன்னுடைய அருள்கனிந்த திருவாயினால் அளிக்கின்ற முத்தத்தினுக்கு விலையுண்டோ? விலைமதிப்பா ருண்டோ? முருகப் பெருமானே! நீ இங்கு கொண்டிருக்கும் சிற்றுருவச் சிறுவாயினால் பேரின்பப் பெருவாழ்வான இன் முத்தந் தந்தருளல்வேண்டும். முத்துக்களைத் திருவடியருகே தினந்தோறுஞ் சொரிந்து கொண்டிருக்கின்ற கடல் சூழ்ந்த திருச்செந்தூரின்கண் அமருந் தலைவனே! முத்தம் தந்தருள் வாயாக'' என்று கேட்குங் கருத்தினைக்கொண்டு பகழிக் கூத்தர் கூறும் பாடல் வருமாறு:—

கத்துந் தரங்கம் எடுத்தெறியக்
கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள்
கரையிற் றவழ்ந்து வாலுகத்திற்
கான்ற மணிக்கு விலையுண்டு
தத்துங் கரட விகடதட
தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை
தரளந் தனக்கு விலையுண்டு
தழைத்துக் கழுத்து வளைந்த மணிக்
கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக்
குளிர்முத் தினுக்கு விலையுண்டு
கொண்டல் தருநித் திலந்தனக்குக்
கூறுந் தரமுண் டுன்கனிவாய்
முத்தந் தனக்கு விலையில்லை
முருகா முத்தந் தருகவே
முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முதல்வா முத்தந் தருகவே.

பொருளுண்மைகாண முயலும் பெருமக்கள் உயிர்ப்பிராணிகளைக் கொன்றும் மரஞ்செடிகளை வெட்டியும் எடுக்கும் ஊனமுத்தத்தினை மதிப்பரோ? அன்பும் இன்புங் கலந்த மெய்ஞ்ஞானமுத்தமன்றோ அவர் விரும்புவது? முத்துச்சரம் வைத்த பவளப் பெட்டியை நிகர்த்துத் தெய்வமணங் கமழுகின்ற இளங்குமரன் திருவாயால் கொடுக்கும் முத்தமன்றோ முத்தம்! அம்முத்தம் விரும்பி எவரே நில்லாதவர்? செந்தூர்க் கடற்கரையில் இயற்கையோடு கலந்து நிற்கும் குழந்தை முருகனை நோக்கிக் குறையிரந்து வேண்டும் பகழிக்கூத்தர் விலையிலாத தெய்வத் திருவாய் முத்தங் கேட்பது இயல்பல்லவா?

முரு.

---

# அழகு வேண்டுமா?

அழகுக்கு ஆசைப்படாதவர் ஒருவருமே இல்லை. கடவுள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு உடலைக் கொடுத்திருக்கிறார். அது சிலருக்கு அழகாக இருக்கிறது. பலருக்கு அழகாக இருக்கவில்லை. அழகில்லாதவர் மற்றவரைப்பார்த்து ஏக்கமுறுவது வழக்கம். ஆனால் பொதுவாக ஒவ்வொருவரும் தங்கள் உடல் அழகாக இருக்கிறதென்றே நினைக்கிறார்கள். இதனைக் காண வேண்டுமானால் ஒரு கண்ணாடியைக் கையில் கொடுத்துப் பார்த்தால் தெரியும். முகத்தைத் துடைப்பதும், விழியை விழிப்பதும், வாயைத்திறந்து பார்ப்பதும் வேடிக்கையாக இருக்கும். இதனால் தன்பால் அழகு இருக்கிறதென்றே ஒவ்வொருவனும் நினைக்கிறான். அழகில்லாத விகார சொரூபமான ஒரு பெண்ணின் கையில் ஒரு கண்ணாடி ஒரு சிப்பு குங்குமம் எண்ணெய் கொஞ்சம் வாசனைச் சாமான்கள் புஷ்பம் நல்ல புடவை சில நகைகள் இத்தியாதி சாமான்களைக் கொடுத்துவிடுங்கள். என்ன நடக்கிறதென்று கவனியுங்கள்! தன்னிடத்தில் அழகில்லையென்று கருதுவதே இல்லை. தன்னை இந்த உபகரணங்களைக் கொண்டு அழகு படுத்தலாமென்று நம்புகிறாள். காரணமென்னை? மனிதவர்க்கத்தின்

உள்ளுணர்ச்சி அழகின் வடிவமாக இருப்பதேயாகும். என்றும் அழகின் வடிவாக இன்ப வடிவாக இருக்கும் ஆன்ம உணர்வு அறிந்தோ அறியாமலோ தாம் அழகுடையவர் என்று கருதச் செய்கின்றது.

உலகிலுள்ள அழகான பொருள்களை விரும்பாத மனிதரில்லை. ஒன்றை அழகுபடுத்த வேண்டுமானால் பல அழகான பொருள்களை இணைக்கப் பார்ப்பது உலக இயற்கையாக இருக்கிறது. ஒருவன் தன் உடலை அலங்காரம் செய்ய விரும்பினால் என்ன செய்கிறான்? அழகான ஆடைகள் அழகான ஆபரணங்கள் முதலியவற்றை அணிய விரும்புகின்றான். அழகான புஷ்பங்களை அணிகின்றான். ஒரு வீட்டினை அழகுபடுத்த எண்ணுபவன் என்ன செய்கின்றான்? புறத்திலிருக்கிற அழகான பல பொருள்களை அவ்வீட்டில் ஒருங்கு திரட்டி வைக்கின்றான். அழகிய படங்கள் அழகான கண்ணாடிகள் அழகான ரத்னக் கம்பளங்கள் முதலிய அழகு நிறைந்த பொருள்களைச் சேர்த்து வீட்டை அழகு படுத்துவதைக் காணலாம். அழகான செடி கொடிகளாலும் அழகான புஷ்பங்களாலும் வனங்கள் அழகு பெற்றுத் திகழ்கின்றன. மெல்லிய அலையெறிந்து தாமரை படர்ந்து அழகிய பூப்பூத்து நிற்குந் தடாகமானது அழகின் விளக்கமாக நிற்கின்றது. மதுரைக் கோவிலிலுள்ள சிற்பத்தின் அழகைக்கண்டு களியாதவர் உண்டோ? இயற்கையில் மட்டுமன்றிச் செயற்கையிலும் அழகுண்டு. மனிதன் இயற்கையழகோடு பலசெயற்கை யழகையுங்கண்டு இன்புறுகின்றான்.

இயற்கை யழகாயினும் சரி. செயற்கை யழகாயினும் சரி. அழகு என்பது எது? அதற்கு அடிப்படையாக உள்ள காரணங்களெவை என்பதை யாராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இளமை வளமை தூய்மை திறமை என்னும் நான்கு குணங்களுள் அழகு அடங்கி நிற்கின்றதென்னலாம். இளமையில்லாத விடத்தில் அழகு விளங்குவதில்லை. வளமையின்றேல் அழகின் ஒளி மழுங்கிவிடும். தூய்மையில்லாத விடத்து அழகு பெருமை இழக்கிறது. திறமையின்றேல்

அழகு விகாரமாகிவிடும். இந்நான்கு குணங்களில்தான் அழகுத் தெய்வம் நடனம் புரிகின்றது.

இளமையில் திளைத்து நிற்கும் சிறு குழந்தைகளின் அழகு என்னே! பருவம் வாய்ந்த மங்கையரின் எழில் நலம் இன்பம் பயப்பதன்றோ? வாலிப வயதடைந்த இளைஞர்களின் தோற்றம் உலகைக் கையால் பிடித்தசைக்கும்படியானதாகுமன்றோ? இறைவன் படைப்பிலுள்ள எந்தப்பொருளும் இளமையில் அழகு நிறைந்திருப்பதைக் காணலாம். பசுவின் இளங்கன்றும், காட்டெருமையின் கன்றும், பன்றியின் சிறு மகவும், கழுதையின் குட்டியும், நாயின் சேயும் பச்சிளங் குழவியாக நின்று துள்ளி விளையாடும் போது எவ்வளவு அழகாக இருக்கின்றன! மான் குட்டியும், சிறிய பூனையின் குட்டியும் எலியின் குஞ்சும் இளமைப் பருவத்தில் அழகு மயமாகத் தோன்றவில்லையா? வயதேற ஏற, இளமைத்தன்மை குறையக் குறைய, அழகிழந்து போவதைக் காணலாம். புத்தப் புதிதாக முதுமை யெய்தாத மலர்களின் அழகுதான் என்னே? அன்றலர்ந்த மலர்களில் காணப்படும் அழகுத் தெய்வம் அதன் முதுமைகண்டு மறு நாளில் விலகி விடுகிறாள். முதுமை தோன்றுமானால் அழகு குன்றுகிறது. அழகின் ஆர்வம் இளமைத் தன்மையில்தான் குடிகொள்ளுகிறதென்பது எளிதில் அறியக்கூடியதாகும்.

இளமைப் பருவம் அழகின் செல்வமாக இருப்பினும் வளமையில்லாதவிடத்து இளமை வறுமையடைவதைக் காணலாம். இன்பவுரையாடும் குழந்தையும் பச்சிளங் கன்றும் பறவையின் கூட்டமும் உடல்வளமின்றி என்புந் தோலுமாகத் தோன்றுமாயின் அழகுத் தெய்வங் குடிகொள்ளுமோ? வயிறு வீற்றிய குழந்தை அழகின் பெருமையை யடைவதெங்ஙனம்? நீருக்கு வறுமையுற்று வளமை துறந்த பூஞ்செடிகளும் இன்ப நறுங் கொடிகளும் மரங்களும் பிறவும் அழகின் செல்வத்தைப் பெற முடியுமோ? நீர்வளமும் நிலவளமுமில்லாத பாலைவனங்களில் முளைத்து வரண்டு நிற்கும் மரங்களும் பிறவும் அழகிற்கரண் செய்வனவாகா. இளமை சிறக்க வேண்டுமானால் வளமை வேண்டும். வளமையில்லாத இளமையானது இயற்கையான

தன்னழகுக்குன்றி முதுமையைவிடக் கொடுமையாகி அழகிழந்து ஒடுங்கிவிடுகின்றதென்னலாம்.

இளமையும் வளமையுமிருப்பினும் தூய்மையின்றி அழகுத்தெய்வம் நல்லருக்காட்டுவதில்லை. இளமையும் வளமையும் பெற்ற மனிதன் அகத்திலும் புறத்திலும் அழுக்குடையவனுக இருப்பானுயின் அவனது அழகு சிறப்புற முடியாது. அழுக்கு நிறைந்த புறவுடலும் மாசுபடிந்த மனமுமுடையானெருவன் எப்படி அழகினைப் பெறுதல் கூடும்? மனமாசு, முகத்தில் தோன்றியவுடன் அவனது அரிய இளமையும் வளமையும் ஒளி குன்றித் தன்னிலை கலங்குகின்றனவன்றே? பொய்ம்மையும் பொறுமையும் வஞ்சமும் கெட்ட குணமுமுடைய மனத்தையுடைய முகம் எப்படி அழகுபெற முடியும்? அழுக்குப்படிந்த ஆடையுடுத்தி, அழுக்கு நிறைந்த உடலுடனிருக்கும் ஒருவனின் இளமையும் வளமையும் என்செய்யும்? அழகின் செல்வம் ஆங்கு மறைந்து மாசுற்ற மணிபோல் ஒளி குன்றிப்போகுமன்றே? தூசி படிந்த இலைகளும் அசுத்தம் நிறைந்த தோப்புக்களும் அழகின் செல்வத்தைப் பெறுவதில்லை.

அழகிய வீடானது குப்பை கூளங்களாலும் அசுத்தப் பொருள்களாலும் தன்னழகு குன்றிவிடுகின்றது. எந்தப் பொருள் சுத்தமின்றியிருக்கிறதோ அது அழகு குன்றிப் போவதைக் காணலாம். நூலாம்படை பற்றிய வீடுகள், தூசி படிந்த விரிப்புக்கள், அழுக்கு நிறைந்த துணிகள், விளக்கப் பெறுத பாத்திரங்கள், துடைக்கப்பெறுத கண்ணுடிகள், பாசிநீர் நிறைந்த தடாகங்கள் அழகிழந்து நிற்பதைக் காண்கிறோம். தூய்மை—சுத்தமில்லாதவிடத்து அழகு குன்றிவிடுகின்றது. வைர நகைகளும் துடைத்துச் சுத்தப்படுத்தாதபோது அவற்றின் ஒளி மழுங்கிச் சோர்கின்றது. அழகிய தங்க நகைகளும் அழுக்குப் பற்றும்போது தன்னழகு குன்றி நிற்பதைக் காணலாம்.

இயற்கைப் பொருள்கட்கு இளமையும் வளமையும் இன்றியமையாதனவாயிருக்கின்றன. செயற்கைப் பொருள்

கட்கு இவ்விரண்டும் இல்லை. இயற்கைப் பொருள்கட்கும் செயற்கைப் பொருள்கட்கும் ஒரே படித்தாக தூய்மையும் திறமையும் வேண்டப்படுவனவாகும். இயற்கைப் பொருள் கட்கு இளமையும் வளமையும் தூய்மையும் பெற்றாலும் திறமை யில்லாத போது அழகு கொஞ்சம் குறைவுறுகின்றது. இம் மூன்றினையும் பெற்ற ஒருவனது அவயவங்கள் சரிவர அமையா திருப்பின் அழகு குன்றிப் போகின்றது. கண்ணும் காதும் பிறவுறுப்புக்களும் ஒன்றற்கொன்று பொருத்தமாக அமைக்கப் பெற்றிராவிட்டால் அழகின் பெற்றி யென்னவாகும்? கண் ணிழந்த ஒருவனது இளமையும் வளமையும் என் செய்யும்? மூக்கிழந்த ஒருவனது இளமையும் வளமையும் அழகினைப் பெறுமோ? திறமையாக நெய்யப்பெறாத ஆடை சுத்தமாக இருப்பின் அதன் அழகு சிறக்குமோ? உருவத்தைக் கோண லாகக் காட்டுங் கண்ணாடியை எவ்வளவு சுத்தமாகத் துடைத்து வைத்தும் பயனுண்டோ? திறமையினாலேயே சிற்பங்களும் சித்திரங்களும் மாளிகைகளும் அணிகளும் ஆடைகளும் மற்றைச் செயற்கைப் பொருள்களும் அழகுத் தெய்வத்தின் உறைவிடமாக இருக்கின்றன. திறமையுடைய தச்சனும் கொல்லனும் மற்றைத் தொழிலாளரும் அழகுத் தெய்வத்திருக் கூத்தின் நாடக பாத்திரங்களாக நின்று நடிக்கின்றனர்.

அழகை விரும்பாத மக்கள் உலகில் இல்லை. அழகு எந்த இடத்திலும் உண்டு. நாட்டிலும் உண்டு. காட்டிலும் உண்டு. இயற்கையிலும் உண்டு. செயற்கையிலும் உண்டு. அழகி லேயே ஆண்டவன் உறைகின்றான். அழகைப் பெற முயலுங் கள். அழகினை அடைவோர் ஆண்டவனை அடைவோரே யாவர். இளமை வளமை தூய்மை திறமை ஆகிய நாற் குணங்களில் அழகுத் தெய்வம் நிலைகொண்டு நிற்கின்றது. தனித்தனி சிதறிக்கிடக்கும் இந் நாற்குணமும் ஒன்று சேர்ந்து விளங்கு மிடமே அழகுத் தெய்வத்தின் பூங்கோயிலாக மிளிர்வதைக் காணலாம். அதனையே உலகினர் யாவருங் காதலிக்கின்றார். சாதி வேற்றுமை சமய வேற்றுமையின்றி யாவரும் போற்றும் படியான தெய்வ அருள் இந்நாற்குணம் படைத்த பொருளில்

மிளிர்வதைக் காணலாம். பேத உணர்வின்றி உலக மக்கள் யாவரும் கட்டுப்பட்டு வணங்க நிற்பது பூரண அழகு ஒன்றே யன்றோ?

இந் நாற்குணத்தில் ஒன்றிரண்டு அளவு கடந்து பெருகி நிற்குமிடங்களே மக்கள் உளத்தை ஈர்த்து நிற்கின்றன. இராமன் கன்னன் அருச்சுனன் அரிச்சந்திரன் நளன் முதலியோர் இக்குணங்களைப் பெற்றவராவர். புனிதவதியார், மங்கையர்க்கரசியார், சூடிக்கொடுத்தார், கண்ணகியார், சீதை, சந்திரமதி, சாவித்திரி, தமயந்தி முதலிய பெண் தெய்வங்கள் இந்நாற்குணமும் பெற்றுச் சிறந்தவரான்றோ? இக்குணங்கள் நாட்டிற் பெருகுமாஞல்—அழகுத் தெய்வம் ஒளி பெற்றுத்திகழுமாஞல், இந்திய நாடு பொன்னுட்டையும் தோற்கச் செய்யுமன்றோ?

முரு.

---

# தன்னம்பிக்கை.



சமய உணர்வினுக்கு அடுத்தபடியாக ஒருவனை நல்வழிப் படுத்துவது தன்னம்பிக்கையே என்பது பேக்கனது நல்லுரைகளிலொன்று. கடவுள் மீதும் பெரியார் மீதும் செலுத்துவது மாத்திரம்தான் பக்தி என்பதன்று. ஒருவன் தன் மீதும் பக்தி கொள்ளுதல் வேண்டும். தனது ஆன்மாவின்பால் பக்தி விசுவாசம் கொள்ளாதவன் தனக்காதாரத் தலைவனிடத்தும் உண்மையான பக்தி பூண்டொழுகுவதில்லை. தன்னை நம்பாதவன் பிறரை நம்புவதெங்ஙனம்? கடவுளைத்தான் நம்புவதெங்ஙனம்? தன்னம்பிக்கையில் தலைசிறந்து விளங்குவோன் இயற்கைவீரன், இயற்கை அரசன், இயற்கை மகன். தனக்கு நண்பனுயிருப்பவன் பிறருக்கும் நண்பனுவான் என்று மேலை நாட்டினருள் ஒரு பழமொழியுண்டு. தன்னம்பிக்கை வாய்ந்தவனே தனக்கும் நண்பனுகிப் பிறருக்கும் நண்பனுவான். இன்னும், தன்னம்பிக்கையே ஒழுக்கமென்னும் கட்டடத்தின் அடிப்படையாக அமைவதாகும். தன்னை உயர்த்துவோனும்

தானே, தாழ்த்துவோனும் தானே. 'தீதும் நன்றும் பிறர்தர வாரா'. தன்னை நம்பாதவன் வாழ்க்கைப்போரில் வெற்றி வீரனாக வாகை சூடுவதில்லை. அவன் எத்தகைய கல்வி கேள்விகளிற் சிறந்தவனுயினும் இயற்கையறிவாற்றல்கள் வாய்ந்தவனுயினும் அவை அவனுக்கு விசேஷ நற்பயன் நல்குவதில்லை. சக்தியைப் பற்றிய நம்பிக்கையே ஒருவனுக்குச் சக்தியளிக்கின்றது.

ஒவ்வொருவனும் தன்னைப் பற்றி நல் அபிப்பிராயம் கொள்ளாதவிடத்து, பிறர் அவனைப்பற்றி எவ்வாறு உயர்ந்த அபிப்பிராயம் கொள்ளுதல் கூடும்? சுயமரியாதையில்லாதவன் பிறர் மரியாதைக்கும் உரியனுகான். எல்லாரையும் சிலகாலம் ஏமாற்றலாமென்றும் சிலரை எல்லாக்காலமும் ஏமாற்றலாமென்றும் ஆனுல் எல்லாரையும் எல்லாக்காலத்திலும் ஏமாற்ற முடியாதென்றும் அமெரிக்கா மாஜி ஜனுதிபதி லிங்கன் கூறுகின்ருர். எனினும் நம்மை நாமே ஒருபோதும் ஏமாற்றிக் கொள்ளமுடியாது.

ஒருவன் ஒரு சபைக்குச் சென்றபோது மக்கள் அவன் முகத்தையும் கண்களையுமே நோக்குகின்ருர். அவன் தன் உள்ளத்தினுள்ளே தன்னை எவ்வாறு மதிக்கின்ருன் என்பது அவன் முகத்திலும் கண்களிலும் விளங்குகின்றது. 'அகத்தினழகு முகத்தில் தெரியு'மென்பது உண்மையினும் உண்மையன்ருே? ஒவ்வொரு மனிதனும் தற்சரிதத்தினை முகத்திலே எழுதி நீட்டுகின்ருன். ஆன்மாவின் சாளரவாசல்கள் கண்களே யன்ருே? பேரறிவாளர், பேரன்பர் கண்களின் வாயிலாக, தெய்வ ஒளி வீசுகின்றது. உன்னைககாட்டிலும் உன்னோடு நெருக்கமாகப் பழகியவர் இல்லை. உன்னிலும் உன்னை அறிந்தவருமில்லை. எனவே, உன்னை நீ எவ்வாறு மதிக்கின்ருயோ, அதைவிட அதிகமாக ஒருவரும் உன்னை மதிக்கத் துணிவதில்லை.

தளபதி உல்ப் என்ருெரு வீரனிருந்தான். அவன் ஒரு யுத்தத்திற்குச் செல்லுமுன் ஆங்கில மந்திரியான பிட் என்பவரோடு உரையாடிக்கொண்டிருந்தான். அவன்பால் தன்னம்பிக்கை அளவுகடந்து பொங்கியது. உருவிய கத்தியும் கையு

மாக நின்று அவன் தன் பேராண்மை தோன்ற உரத்த குரலில் கம்பீரமாகப்பேசினன். இது தற்பெருமையாகு மென்று மந்திரியார் கருதினர். இத்தகைய தளபதி தான் சுரநோயுற்றிருந்தும் படுக்கையினின்றும் எழுந்து தன் படை களை நடத்திச் சென்று வெற்றி சூடி மீண்டான். முதற்கண் தற்பெருமையெனத் தாம் கருதியது தன்னம்பிக்கையின் தடிப் பேயென்பது பிட் மந்திரியாருக்குப் பின்னர் வெளிப்பட்டது. கோட்டையை இழந்த ஒரு வீரனை எதிரிகள் பிடித்துக் கொண்டு 'இப்போது உன் அரண் எங்கே? சொல் பார்ப்போம்?' என்று உறுமினர். அவன் தன் நெஞ்சின் மீது கைவைத்துக்கொண்டு 'இதோ என் அரண் இருக்கிறது', என்று இறுமாந்து கூறி னன். 'குரைக்கும் நாய் கடியாது' என்பது உண்மைதான்: எனினும் அது உறங்கும் சிங்கத்தினும் பயன் தருவதன்றோ?

ஆனல் தன்னம்பிக்கை என்பது எப்போதும் ஆரவா ரம் செய்வதன்று; எப்போதும் ஆவேசத்தோடு தலைவிரி கோலமாகத்தாண்டவமாடுவதுமன்று. ஸ்காட்டன் என்ற பெரியார் தன்னைப்பற்றி ஒன்றும்பேசுவதேயில்லை. அவரை எவ்வளவு உபத்திரவம் செய்தபோதிலும் தற்பெருமையாக ஒரு வார்த்தைகூட அவர் கூறுவதில்லை. தமது புகழின் வலி யினை அவர் நன்குணர்ந்திருந்தார். எனினும் அதனைத் தான் கட்டியங்கூறி முழக்குவதில்லை. பிறர் அவரைப் பண்பாடிப் புகழ்ந்தார்கள். அவரோ பெரும் பணிவினை மேற்கொண்டு ஒழுகுவாராயினர். இப்பெரியாரது தன்னம்பிக்கை, சொல் லில் வெளிப்படாது சிந்தையிலும் செயலிலும் பொங்கிப் பரந்தது. இதுவன்றோ உண்மையான தன்னம்பிக்கை; உயர் வற உயர்ந்த பெருவீரம்!

இத்தகைய தன்னம்பிக்கை பேராண்மையாதிய அரும் பெருங்குணங்களையெல்லாம் தொகுத்து அனுமனக இயற்றிக் கம்பன் நமக்களித்துள்ளான். அனுமன் இலங்கையில் சிறை யிருந்த செல்வியைத்தேடி மீண்டுவருகின்றன். அவனது தோழர்களான வானர வீரர் பேராவலோடு அவனது வரவு நோக்கி நிற்கின்றர். அவன் சென்றதுமுதல் மீண்டதுவரையு

முள்ள வரலாற்றினை ஒரு வார்த்தைகூட விடாமல் முற்றும் கேட்க விரும்புகின்றார். ஆனால் அனுமனோ சீதையின் குணாதிசயத்தினையும் அவளைத் தான் சந்தித்ததற்குரிய ஆதாரத்தினையும் மாத்திரமே வெளியிடுகின்றான். தான் இலங்கைமாநகரில் செய்த வீரச்செயல்களைப்பற்றி அவன் ஒருசிறிதும் வாய் திறக்கவில்லை.

ஆண்டகை தேவியுள்ளத்து அருந்தவம் அமையச்சொல்லி,
பூண்டபேர் அடையாளம் கைக்கொண்டதும் புகன்று, போரில்
நீண்டவாள்அரக்கரோடு நேர்ந்ததும், நெருப்புச்சிந்தி
மீண்டதும் விளம்பான், தான் தன் வென்றியை உரைப்ப வெள்கி.

இராமபிரானது வீர பத்தினியான சீதையின் குணாதிசயத்தினை அனுமன் சாவதானமாக வருணித்துரைக்கின்றான். பிராட்டியைத் தான் முகமுகமாகக்கண்டு உரையாடி மீண்டதற்குச் சான்றா: அவள்பால் தான் பெற்ற பேரடையாளத்தினைப் பற்றியும் பிரஸ்தாபிக்கின்றான். ஆனால் பொழிலிறுத்தபின் தன்னொடு போர் தொடுத்த கிங்கரர், சம்புமாலி, பஞ்ச சேனாதிகள், அட்சகுமாரன், ஆகிய அரக்கர்களைக் கூட்டம் கூட்டமாக அழித்து வாகை சூடிய தன் போராற்றலினைக் குறித்து அனுமன் ஒன்றும் சொல்லவில்லை. இராவணன் காணவே, அவனது கோநகரில் நெருப்புச் சிந்தி மீண்ட தன் சாகசத்தைக் குறித்தும் அவனொன்றும் பிரஸ்தாபித்தானில்லை. காரணம் என்னை? இந்நிகழ்ச்சிகளைச் சொல்லத் தொடங்கினால் அவை தன் வெற்றியாகுமே என்று கருதுகின்றான் அனுமன். இங்ஙனம் நினைத்து, தன் வெற்றியை உரைப்ப வெள்கி நிற்கின்றான். இது வன்றோ பேராண்மை? என்ன பயங்கரமான பெரும் பணிவு! எத்தகைய சொற்செட்டு! எத்தகைய மகா வீர மௌனம்!

அனுமனது தன்னம்பிக்கைக்கு அளவேயில்லை. இது இவனது இராம பக்திக்கு இன்றியமையாத அடிப்படையாக அமைந்தது. தன்னம்பிக்கைகொண்டே அனுமன் கடல் தாண்டுகின்றான். தன்னம்பிக்கை கொண்டே வழியில் நேர்ந்த இடையூறுகளையெல்லாம் வென்று மூதூரு காண்கின்றான். தன்னம்பிக்கையினாலேயே பகைவர் தலைநகரின் படா

டோபங்களால் வசீகரிக்கப்பெறாது, தன் கொள்கையினை நிறைவேற்றி மீண்டு வருகின்றான். சுருங்கக் கூறுமிடத்து, 'செவிக்குத்தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயக'ஞக அனுமன் விளங்குவதற்குக் காரணம் அவனது ஆன்ம சக்தியில் வேரூன்றி வளர்ந்துள்ள தன்னம்பிக்கையேயாகும்.

ஜூலியஸ் ஸீஸர் கடல் யாத்திரை செய்துகொண்டிருந்த போது அவன் கப்பல் பெரும்புயலில் சிக்கிக்கொண்டது. கப்பலோட்டி கவலைகொண்டு விழித்தான். அவனை நோக்கி "அஞ்சாதே; ஸீஸரையும் அவனது நல்லதிர்ஷ்டத்தையும் சுமந்து செல்லும் உனக்குக் கவலை ஏன்? உன் மனக்கவலையை விடு, விடு" என்று ஸீஸர் கூறினன். இத்தகைய தன்னம்பிக்கையே இடையூற்றுக்கிடையூறுவது. பணிவு இன்றியமையாததே. பணிவினைப்போலவே தன்னம்பிக்கையும் இன்றியமையாதது. அங்கதன்பால் இவ்விருபெருங் குணங்களும் கலந்து காணப்பட்டன. அங்கதனது பணிவிற்கும் அளவில்லை; தன்னம்பிக்கைக்கும் அளவில்லை.

> பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப்படர்வதேபோல்,
> வீரன் வெஞ்சிலையிற்கோத்த அம்பென விசையிற்போனான்;
> மாருதி அல்லனாகில் நீயெனும் மாற்றம் பெற்றேன்
> ஆரினி என்னோடொப்பார் என்பதோர் இன்பமுற்றான்.

இராமனது அருள்சூடிய ஆண்தகையான அங்கதன் உள்ளம் குளிர்ந்து உடம்பு பூரித்து நின்றான். இராவணன்பால் தூதுசெல்லவேண்டுமென்ற இராமனாணையைச் சிரமேற்றாங்கிய அங்கத வீரனது போற்றலும் பெரும்பணிவும் மேலே குறித்த பாடலில் சித்திரிக்கப்படுகின்றன. அங்கதன் நிலமிசை நெடிது வீழ்ந்து இறைஞ்சுகின்றான். மண்மிசை மண்போல வீழ்ந்து வணங்கிக் கிடந்த அங்கதனது பணிவு பயங்கரமான பணிவன்றோ (Fierce humility)? வணங்கிக்கிடந்த அங்கதனது முகமும் உடம்பும் சாந்திமயமாக இலங்கின. வணங்கிய வீரன் எழுகின்றான். என்ன புதியதோற்றம்! நீறு பூத்த நெருப்பென அடங்கிக்கிடந்த அங்கதனது உள்ளத்திலே கனன்றெரியும் வீரக்கொழுங்கனல்

இப்பொழுது உடம்பிலும் முகத்திலும் ஜ்வலித்துச் சுடர் விட்டெழுகின்றது. நிலமிசை மண்ணென—புல்லெனக்கிடந்த அங்கதன் இப்போது நிமிழ்த்துப் பாயஎழும் சிங்கம்போல விளங்குகின்றான். சாந்தம் வீரமாக மாறுகின்றது. நிலத்தி னின்றும் விண்மிசைப் பாயும் வீரகேசரியை இன்னும் ஒரு கணம் உற்றுநோக்குவோம். இப்போது பிறிதொரு தோற்றம் கட்புலனாகின்றது. இராமவீரனது வெஞ்சிலையில் கோத்த அம்பென ஒரே நோக்கோடு ஒரே குறிக்கோளோடு அங்கதன் விசையிற்செல்லும் அற்புதத்தினைக் கம்பன்தான் வாசகரது மனக்கண்ணுக்கு இலக்காக்கமுடியும். இங்ஙனம் பயங்கரமான பணிவினையும் பயங்கரமான போராற்றலையும் முதலிரண்டு வரிகளில் படம் பிடித்துக்காட்டும் கவிச்சிற்பி பின்னிரண்டடிகளில் அங்கதன்—வீரத்தின் உயிர்நிலை இன்ன தென இனிதுவிளக்குகின்றான். இராமன்பால் அங்கதன் கொண்டுள்ள நட்பெனும் தெய்விகப் பெருங்காதலே அங்கத னது வீரத்தை விசிறி ஜ்வாலைசெய்து வளர்க்கின்றது. அங்கத னது காதலுக்கும் வீரத்திற்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பிருக்கின்றதோ, அவ்வண்ணமே அவனது பணிவினுக் கும் தன்னம்பிக்கைக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு.

வீரருள் பல பிரிவுகள் உண்டு. சிலர் இயற்கை அரசராக விளங்குகின்றார். சிலர் அவதார மூர்த்திகளாகப் பரிணமிக் கின்றார். வேறு சிலர் தீர்க்கதரிசிகளாக அமைகின்றார். இன் னும் சிலர் பேரறிவாளர்களாகவும் பேராசிரியர்களாகவுமிருக் கின்றார். வீரர் திருக்கூட்டத்தின் முடிமணிகளாக இலங்கு வோர் தெய்வமாக் கவிகளாகத் திகழ்கின்றார். எனினும் வீர ஜாதி என்பது ஒரே ஜாதிதான். எல்லா வகை வீரர்க்கும் இன்றியமையாத விசேஷ அருங்குணம் தன்னம்பிக்கை யாகும்.

பி. ஸ்ரீ.



# உருக்குமணி.

(யாழ்ப்பாணம் பண்டிதை சு. பாலாம்பிகை அம்மாள்.)

"அமைச்ச, எனது வளவிய வான்பெருஞ் செல்வம் யாது பயனுடைத்து? என் வாழ்க்கையில் இன்பந் தருமோர் பெண் மகப்பெற்றிலேனே. ஆண்மக்களைப் பெறும் பேறு பெற்றிருந்தும் ஓர் பெண் மகவைப் பெறும் பேறு பெறாதது எனது தவக்குறைபோலும்! ஆதலால், நான் கானகஞ்சென்று இறைவனை நோக்கித் தவம்புரிந்து வரம்பெற்று மீள்வேன். அதுவரையும் என் இராச்சியபாரத்தை யேற்று வழுவின்றிப் பரிபாலிப்பாயாக" என்று கூறி அரசன் தன் மனைவியுடன் காட்டுக்குச்சென்று கடுந்தவமியற்றித் தான் குறித்தவரம் பெற்று தன் னூரையடைந்தான். சில திங்கள் கழிந்தபின் அரசன் தேவி கருவுற்று கமலமாதோ வென ஐயுறத்தக்கவோர் பெண் குழந்தையை யீன்றாள். அதற்கு உருக்குமணி யென நாமஞ் சூட்டப்பட்டது. அருந்தவத்தாற் பெற்ற அக்குழந்தையைச் செவிலித்தாயர் பல்வகையாகப் பாராட்டி வளர்ப்பதாயினர். குழந்தை மேற்றிசைக்கட்டோன்றிய மதிபோன்று நாளுக்கு நாள் வளர்ந்து அழகுடன் பொலிந்தது. இவ்வாறுகப்பேதைப் பருவங்கடந்தது. அம்மானை, கழங்கு, ஊசல், பந்து முதலியன விளையாடி மலர் கொய்து நீராடி மகிழ்ந்து வளர்ந்தாள். இப்பெண்மணிக்குக் கீத வேழிசையும் மற்றைய கல்வியும் பயிற்றினர். சகல கலைகளிலும் சரஸ்வதிக்கொப்பாக விளங்கினாள். அவளுடைய குழந்தைப்பருவம் மெல்ல மெல்ல நழுவலாயிற்று. நூல்களிற் கூறிய இலக்கணங்கள் யாவும் நிரம்பப் பெற்று உருமிக்கயௌவனியாயினள்.

இந்நாளில் நாரத மாமுனிவர் உருக்குமணியையடைந்து ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய எழில்நலத்தையும் வீரச் செயலையும் வியந்தோதி "மலர்ப்பாவாய்! இத்தன்மையை யுடைய அப்பகவான் நின்னை வந்து மணம்புரிவா"னெனக் கூறிப்போயினர். இவ்வார்த்தைகளை யின்பமுடன் செவியிலேற்று அவள்

மேலன்புகொண்டு அவனைக்காணப் பெறாது வருந்திச் சோர்ந்தாள். அதுகண்ட தோழியர் பனிநீர் முதலியன தெளித்து அவளுடைய சோர்வை நீக்கி இதமான பல வாசகங்கள் பேசி அவளைத் தேற்றினர். அரச குமாரி தோழியரை நோக்கி "மடவீர், நாரதமாமுனிவருடைய சொற்களால் என்னெஞ்சம் நிறைந்திருப்பினும் அவனுடைய உருவத்தை யான் காணவிடில் என்னுயிர் இவ்வுடலை நீங்கிப்போம். ஆனமையால், என்னுயிர் பிழைக்க நீவிர் விரும்பின் அதற்கோருபாயமுண்டு. அஃதியாதெனின், கிருஷ்ணருடைய திருவுருவை ஓர் படத்திலெழுதித் தருதலேயாம். இவ்வாறு செய்தால் மாத்திரம் என் உயிர் உடலில் நிற்கும்" என்றாள். இவ்வாசகங்களைக் கேட்ட தோழியருள் ஒருத்தியான மதனவல்லியென்பாள் தான் அவனுருவைத் தீட்டித் தருவதாக வாக்குறுதி செய்து தீட்டுவாளாயினள். கையின் கண் சங்கு, சக்கரம், வேய்ங்குழல் முதலியன விளங்க, மார்பில் இரத்தினுபாணங்களொளிக்க, முகத்தில் புன்முறுவல் திகழ, காதில் குண்டலங்கள் பிரகாசிக்க, மாமை நிறங்கொடுத்துச் சித்திரித்தாள். (இதனால் பண்டைக் கால மகளிர் ஓவியக் கலையிற் றேர்ச்சிபெற்றிருந்தனரென்பது இனிது விளங்கும்) அப்படத்தைக்கண்ட ருக்மணி 'இவனே யென்னுள்ளங்கவர் கள்வ'னெனச் சொல்லி மெய்சோர்ந்தாள்.

இவர்களிவ்வாறாக, அந்தணர் முனிவர் முதலானோர் ஆசிகூற அணிமணியாதனத்திவர்ந்தமரும் விதர்ப்பராசன், இன்று என்னரும் பெறற் செல்வியாகிய ருக்மணியை இம் மணி மண்டபத்திற்கழைத்து வாருங்களெனக் கட்டளையிட்டான். சிலதியர் அப்பணியையேற்று அரசகுமாரிக் கறிவித்தனர். வேந்தன்மகள் அவ்வுரைகேட்டக மகிழ்ந்து . தோழியர் புடைசூழத் தாதையமரு மணிமண்டபத்தையணுகி ஆண்டுள்ளமாதவர் பாதம் பணிந்து தந்தையின்தாளைத் தலைமிசைச் சூடி பின் முன்னோனைவணங்கி அரசனுக் கருகிலிட்ட தந்தவாசனத்தினுட்கார்ந்தாள்.

அதன்பின், அரசன் அங்குள்ளோரை நோக்கி, "சபையோர்களே! எனதரும்புதல்வியைக் கைப்பிடித்தற்குத் தகுந்த

வான் யாண்டுளா'' னெனவினவினன். சபையோர்கள் அவனைநோக்கி புரவல! ஓர்பெண்ணிற்கு அவளுடைய தாய் பாந்த பெரிய செல்வமுடைய வொருவனை நாயகனுக்கவிரும்புவாள். அவளுடைய சுற்றத்தார் நல்ல குலத்திலுள்ள வொருவனை விரும்புவர். தந்தை கல்வி கேள்விகளிற் சிறந்த வொருவனை விரும்புவன். அப் பெண்ணோ அழகிற் சிறந்தவோர் ஆடவனை விரும்பும். ஆதலால் இவ்விஷயத்தில் யாவர்க்கும் திருப்தியுண்டாகச் செய்வது மிகச் சிரமமேயாகும். எனினும், யாதவர் குலத்தில் வசுதேவன் மகனாகிய கிருஷ்ணனென்பான் உருவிலுந் திருவிலும், உத்தம குணங்களிலும் அறிவாற்றலிலும் வீரத்திலும் மேம்பட்டவன். அவனே நின் மகட்குத் தகுந்த கணவனுவான். ஆதலால் நின் மகளை அவற்கே கொடுக்க'' என்றார். அரசனவ்வுரை கேட்டு மகிழ்ந்து அவற்கே கொடுப்பதாகச் சம்மதித்தான். அதையறிந்த அரசகுமாரனுன ருக்மனென்பான் கழிபெருஞ் சிற்றமுற்று நிலமிசைக் கைகளைப்புடைத்து இடியுமஞ்சிப் போகத்தக்கதாக இவ்வாறு கூறத் தொடங்கினன். ''இச்சபையோருடைய புத்தி மிகவும் நன்றயிருக்கிறது. இடையர் சேரியில் தயிர் வெண்ணெய் நெய் முதலியனவுண்டு; பேயுடைய பால் சுவைத்துக் கட்டுண்டு அடியுண்டு காட்டிலுள்ள காய்கனியுண்டு வளர்ந்தவனை; மங்கைய ருடைய வஸ்திரங்களை யெடுத்துச் சென்று குருந்திலேறி யொளித்த கள்வனை, கருணையின்றி மாமனை வதைசெய்த கபடனை, சராசந்தனுக்கு அஞ்சிக் கடல் மத்தியிலுள்ள துவாரபுரியை உறைவிடமாகக் கோண்ட வலியில்லாதவனை, இராச்சியத் திற்கருகனல்லாத யாதவனென்பது மறிந்தும் அந்த இடையனை என் தந்தை பல காலந் தவஞ்செய்து பெற்ற பெண்ணைக் கொடுப்போமென்று சொன்னவருடைய நாவை வாளால் வெட்டி விடுவேன். அமிர்தத்தையொத்த என் தங்கையை, சேதிப் பெருமானுகிய சிசுபாலனுக்கு ஓலையேவி அவன் வந்தவுடன் அவனுக்கே கொடுப்பேனென்றான். அதைக்கேட்டு யாவரும் நடுநடுங்கித் தத்தம் இருப்பிடத்திற்கேகினர்.

உருக்குமணியும் தன் மாளிகையை யடைந்து தம்முன் சொன்ன மாற்றத்தை நினைந்து கண்ணீருகுப்பாளாயினள். என் தந்தையோ வலியற்றவர். தாயினுடைய சொற்படி யொன்றும்

டவாது. என தன்னனே தரும சிந்தனையில்லாத பாவி யென்று சொல்லி வருந்தினள். அவளுடைய துயரத்தைக் கண்டதோழியாகிய மதனவல்லி, "என் கண்மணி! உன் துயரை யொழி. கிருஷ்ணரிங்கு வரும்படி நானொருபாயஞ் சொல்லு கிறேன். உமது குருவாயமரும் அந்தணரைக் கூவி அவரைத் துவரை நாயகனிடத்துத் தூதனுப்புவாயாக." அவ்வுரையை அமிர்தெனச் செவிபாற் பருகிக் குருவைத் தன்னாலயத்திற்கழைப் த்துப் பின் வருமாறு சொல்லத் தோடங்கினள். "நான்மறை யாள! உம்மை இவ்விடத்திற்கு வரவழைத்த காரணத்தைக் கேட்பீ ராக. அண்ணனாகிய ருக்மன் என் மனமொவ்வாத காரிய மொன்றைச் செய்யத் தீர்மானித்திருக்கிறான். ஆதலால் என் இடர் நீங்க நீர் துவராபுரி சென்று வருதல் வேண்டும். அங்கு செல்வதற்குக் காரணம் யாதோ வெனின், ருக்மன் என்னைச் சிசுபாலற்குக் கொடுக்க நிச்சயித்து நாளை வரும்படி ஓலை யனுப்பியிருக்கிறான். என் மனம் அவனை மணக்க இசையாது. துளவ மாலையை யணிந்த கிருஷ்ணனுக்கே என் உடல், பொருள், ஆவி மூன்றையு மர்ப்பணஞ் செய்து விட்டேன். நாரத முனிவருடைய சொல்லை நம்பி யிதுவரையு முயிர்தரித்திருக்கிறேன். துவரை ஈசன் நாளை யிங்கு சமுக மளியாவிடின் என்னுயிரை நீப்பேன். ஆதலால், நீரங்குசென்று என் காதலை யவருக்குத் தெரிவித்து அவருடன் இனியவார்த்தைகள் பேசி நாளை இங்கு வரும்படி செய்வீராக. இவ்வுதவி புரிவீரேல் நானுமக்கு இருநூறு ஊர் களும் ஆடை ஆபரணமும் கொடுப்பேன். நாளை யுதையம் வரைக்கும் மாத்திரம் என்னுயிர் இவ்வுடலில் நிற்கும். நீர் வேகம் பொருந்திய இரதத்தின் மீதுபோய் விரைவில் மீளுவீராகவென்று ஓர் ஓலையையுங் கொடுத்துவிட்டாள்.

அந்தணன் ருக்மணியிடம் விடைபெற்றுக் காடுகளைக்கடந்து துவாரபுரியை யணுகிச்சென்றான். அங்குள்ள வீதிகளில் அழகிய மதில்களும் கோபுரங்களும் மண்டபங்களுஞ் சிறந்து விளங்கின. முரசு முழங்கிற்று, ஓர் சார் கஜரத துரகங்களினாலும், ஓர் சார் பதாதிகளினாலும், ஓர்சார் வீணையொலியினாலும் ஓர்சார் விழா வொலியினாலும் பொலிவுற்றது. இச் சிறப்புகளைக் கண்டுங்

கேட்டும் மகிழ்ந்து மாளிகை வாயிலை யடைந்தான். அச்சமயத்தில் அரசன் நவரத்தினங்களிழைக்கப்பெற்ற அழகியமண்டபத்தில் அரியாசனத்தின்மீது இரத்தினபாரணங்களும் முந்நூலும் புரளுகின்ற திருமார்பும், தாமரையை யொத்த அழகியமுகமும், முத்தையொத்த தந்தங்களும் விளங்க, காதில் குண்டலமொளி செய்ப, புருவங்கள் வில்லையொத்தொளிர, திருவாய் பவளத்தை யொத்து விளங்க, வீரக்கழல் பூமியில் பிரகாசத்தைக் கொடுக்க, வாகுவலயங்கள் தோளிற்றுளங்க, கண்ணிணைகள் பதுமம்போலொளிர, மாகத மலைபோன்று, மங்கையர் பல்லாண்டிசைப்ப வீற்றிருந்தான். இவ்வாறு வீற்றிருந்த காலை, வாயிற் காவலாளர் அந்தணர் வரவை அரசற்கறிவித்தனர். அரசர் பெருமான் அவரையிங்கு கொணர்மின் எனக் கூறினன். காவலாளர் பிராமணரை யாசனுழை யழைத்துச் சென்றனர். உள்ளே சென்ற அந்தணர் சகல வைபவங்களுடனும் வீற்றிருக்கின்ற கிருஷ்ணபகவானின் அழகைக் கண்ணிற்கு விருந்தாக்கி அவர்மீது மலர் சொரிந்து வாழ்த்தி வணங்கினர். அரசன் மறையவரை நோக்கி "அந்தணர! நீரிங்கு வந்ததற்குக் காரணம் யாது? உம்மை இங்கு அனுப்பியவர் யார்?" என்றான்.

அந்—அரசரேறே! குண்டினபுரத்தரசனாகிய விதர்ப்பனென்பான் பெற்ற மங்கை, நிறைந்த மதியையொத்த முகமண்டலத்தையும, பிரகாசம் பொருந்திய நெற்றியையும், வேய்த்தோளினையும், யாழின் மிழற்று மொழியையும், மின்னிடையையும், அன்ன நடையையுமுடைய பெண் ருக்மணியென்பாள். அவளே என்னை யும்மிடத்துத் தூதனுப்பினள்.

அர—புரோகித! அவ்வாசிளங்கன்னி உம்மை யென்பாற் றூதேவியகாரணத்தை விளங்க விரிப்பீர்.

அந்—வேல்போன்ற கண்களையுடைய அம்மாது நல்லாள் உமது உருவத்தின் அழகைத் தன் நெஞ்சினுட்கொண்டு உம்மைப் பெறாது வருந்துகின்றாள். அவளுடைய உள்ளக் கருத்தை யுணராமல் தமையனாகிய உருக்குமனென்பான் அவளைச் சிசுபாலற்குக் கொடுப்பதாக நிச்சயித்து அவனிடம் ஓலையனுப்பியிருக்கிறான். அச்செய்தி கேட்டஞ்சி நடுநடுங்கி, கஞ்சனுயிருண்ட கருணாகர!

என்றுயிர் போமுன்னர் நீரென்னை வந்தாட்கொள்ளுமென்று புலம்பி, என்னையழைத்து உமக்கோர் முடங்கலுமெழுதி என்னிடங் கொடுத்தாளென ஓலையை நீட்டினர்.

அவ்வோலையை அகமகிழ்ச்சியுடன் வாங்கி ஒருவனிடம் கொடுத்துப் படிக்கச்சொல்லி அதனுட்பொருளைக்கேட்டு ஆனந்தப் பெருங் கடலிற்றிளைத்து மறையவனை நோக்கி ஐய! தேவர் மனிதர் முதலியாவரும் என்னுடன் யுத்தஞ்செய்ய வரினும், நான் அவரை யெதிர்த்து வென்று நாளை யுதயத்திற்கு வந்து அப் பெண்ணை மணமபுரிவேன். நீர் இச்செய்தியைச் சொல்லி அவ் வணங்கின் துயரத்தை நீக்குவீரெனத் தன் அகலத்தில் அணிந்திருந்த துளவமாலையைக் கழற்றிக்கொடுத்து, பிராமணருக்கு இரத்தினவடங்களும் முத்தாரங்களுங் கொடுத்து கடுநடைப்புரவி பூண்ட இரதத்திலேற்றி மங்கை வாடுமுன் விரைவில் செல்வீரென விடுத்தார.

(தொடரும்.)

---

# புத்தப் புதிது.

## குட்டிச்சாத்தான்A. B. C. D. E. F. Etc., எழுதியது.

இரவு எழுமணியிருக்கும். அற்புதமாக மந்தமாருதம் வீசியது. அந்த மெல்லிய காற்றில் ஒரு இனிய ஒலி கேட்டது. அது எதுவாக இருக்கலாமென்று கூர்ந்து நோக்கினேன். அது சங்கீதத்துடன் கலந்த ராம நாம பஜனை. வெகு இன்பமாக இருந்தது. எழுந்தேன். வெளியில் வந்தேன். சடைமுடி பலமாக இருந்தது. நெற்றியில் பலமான கோபி. நாவில் ராம நாம பஜனை. அரையில் ஒரு சிறிய கதர் வேட்டி. கையில் ஒரு வீணை. தண்டுகமண்டலம். மடிசஞ்சிப்பை. சுருட்டிய புலித்தோல். இப்படிப்பட்ட திருக்கோலம் என் கண்முன்னே தோன்றியது. உடனே நான் வணங்கினேன். சுவாமி! வருக, வருக என்றேன். அவர் மகிழ்ந்து வீட்டினுள்ளே வந்தார். புலித்தோலை விரித்தார். அதன் மேல் உட்கார்ந்து கொண்டார். நான் நின்றேன். உட்காருமபடி வற்புறுத்தினர். "நான் நிற்கிறேன். பெரியவாள் இருக்கும்

போது நானும் உட்காரலாமா?'' என்றேன். "பாதகமில்லை. உட்காரலாம். எல்லாம் சுதந்திரம்'' என்றார். உட்கார்ந்தேன். பார்த்தால் பரம வைதிகம்! நடவடிக்கை லௌகிகத்தைத் தழுவி நிற்கிறதே என்று கருதினேன். அவர் புன்னகை புரிந்தார். என்னைத் தெரியுமா? என்றார் ரிஷீச்வரர். முன்பு எங்கோ பார்த்தஞாபகமிருக்கிறது. சரியாக மட்டுப்படவில்லை என்றேன். உண்மைதான். தேவலோகத்தில் புத்தப் புதிதாக ஆரம்பிக்கப்போகிற "தேவலோக மித்திரன்'' பத்திரிகையின் வெளியுலக ரிப்போர்ட்டர் நான்தான் என்றார் அப்பெரியவர். எனக்குண்டான ஆச்சரியத்தை இங்கு எழுதி முடியாது. தேவலோகத்தில் பத்திரிகையா! இந்தச் செய்தி வெகு வேடிக்கை! புராணங்களைப் படித்துக்கொண்டு ஆசிரமத்தில் இருக்கும் ஆசாமிகள் பத்திரிகை போடுவது வேடிக்கைதான்! அதிலும் நீங்கள் ரிப்போர்ட்டராயிருப்பது இன்னும் வேடிக்கை! என்றேன். நாங்களெல்லாரும் வைதிகர்கள் தான். இருந்தாலும் காரியத்தோடு கூடிய வைதிகம்! சமயம் போல, காரியத்தைச் சாதித்துக் கொள்ளாவிட்டால் கட்டுமா? பழைய கதைகளுக்கெல்லாம் வர வர மதிப்பில்லை. அவை போனால் எங்கள் பிழைப்பு ஆபத்தாகிவிடுமல்லவா? அதனால் தான் எல்லாரும்கூடி யோசித்தோம். புதிய முறையைத் தழுவி ஒரு பத்திரிகை ஆரம்பிப்பதென்று தீர்மானித்தோம். இதனைப்படித்துப் பாருங்கள் என்று சொல்லி ஒரு காகிதத்தை யெடுத்து என கையில் கொடுத்தார். அது தமிழில் அச்சிடப்பட்டது. முதன் முதலில் அது எங்கே அச்சடிக்கப்பட்டதென்று பார்த்தேன். கும்பகோணத்தில் அச்சிடப்பட்டதாகக் குறித்திருந்தது. படித்தேன். விஷயம் வருமாறு:—

## "தேவலோகமித்திரன்"

இது ஒரு சிறந்த சமாசாரப் பத்திரிகை. இதனை ஒவ்வொருவரும் வாங்கவேண்டியது அவசியமாகும். பூலோகத்திலுள்ள சங்கதிகளைத் தேவலோகத்தாருக்கும், தேவலோக சங்கதிகளைப் பூலோகத்தாருக்கும் தெரிவித்து எல்லோரையும் தேவலோகத்துக்குக் குடியேற்றுவதே முக்கிய நோக்கமாகும். இதில் சாஸ்திர சம்பந்தமான விஷயங்களும்,

மகா பெரிய பழைய ஞானிகளால் எழுதப்படும் கட்டுரைகளும், தேவர்களது பெருமையைப் பாதுகாக்கும் வகைகளும், அதனால் பூலோகத்தாருக்கு உண்டாகும் செழுமையும், உலகத்தில் வாழ்வதற்கு வேண்டிய தந்திர யுக்திகளும், வேறு பல சமாசாரங்களும் இதில் வெளியாகும். இப் பத்திரிகை தோன்றுவதற்கு முக்கிய காரணம் உலக க்ஷேமமேயன்றி வேறன்று. கற்பக விருக்ஷமும் காமதேனுவும் இருக்கும் தேவலோகத்திலிருந்து வெளி வருவதால் இதற்கு ஒரு குறையுமில்லை. உடனே யாவரும் சந்தாதாரராகச் சேர வேண்டுகிறோம்.

மானேஜர்,

தேவலோகமித்திரன் ஆபீஸ், இந்திரபுரி.

இதனைப் படித்தேன். ஆச்சரியமும் சிரிப்பும் ஒன்றாய்த் தோன்றின. அடக்க முடியவில்லை, இந்தப் பழைய கிழங்களெல்லாம் கூடி என்ன பத்திரிகை! இதை அனுப்புவதெப்படி? படிப்பவர் யார்? தேவலோகத்துப் பேர்வழிகளின் பேரை நிலைநாட்டவா? சரிசரி! என்றேன். கிழவருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. "நாங்கள் என்ன செய்வோம்? உலகம் திரும்பி விட்டது. ஒவ்வொரு கூட்டத்திற்கும் பத்திரிகை இல்லாவிட்டால் இனிச் சரிப்படாது! வேண்டியது தான்! கட்டாயம் வேண்டியது தான்! தாங்களும் ஓர் சந்தாதாரராய்ச் சேரவேண்டும்" என்றார்.

நான்:—சுவாமி! உங்கள் பத்திராசிரியர் யார்?

அவர்:—அது—நான் இன்னும் தெளிய—வில்லை. சூதபுராணிகரை வைக்கலாமென்று கேட்டோம். அவர் தாம் சம்மதிப்பதாகவும், ஆனால் தம் பெயரை "போர்ஜரி" செய்து பூலோகத்தார் கெடுத்து விட்டார்களென்றும், ஆதலால் இனி ஒப்பேருதென்றும் கூறிவிட்டார்.

நான்:—பத்திராசிரியர் இல்லாமலே நடத்திவிடத் தீர்மானமோ?

அவர்:—இல்லை. அதெப்படி முடியும்? வேதவியாசரைத் தான் குறிப்பிட்டிருக்கிறோம். இன்னும் கேட்கவில்லை, அநேக

மாக ஒப்புக்கொள்வார்.

நான் :—சுவாமி! தங்கள் பெயரைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

அவர் :—நான்தான் திரிலோக சஞ்சாரி, நாரதர் என்று சொல்லுவார்கள்.

என்னைத்தூக்கிப் போட்டுவிட்டது. நாரத மகா முனிவரும் பத்திரிகை ரிப்போர்ட்டர் ஆகிவிட்டாரா? பேஷ்! நல்ல உத்தியோகம்! இனிக் கலகத்துக்குக் குறைவில்லை! பத்திரிகை யுலகத்தில் நல்ல தமாஷ் நடக்கும்! என்றேன். நாரதர் சிரித்துக் கொண்டிருந்தார்.

நான் :—மிஸ்டர் ரிப்போர்ட்டரவாள்! தங்கள் பத்திரிகை எப்பொழுது வெளிவரும்?

அவர் :—அடுத்த வாரத்தில், அல்லது அடுத்த மாதத்தில், வெளிவரும்.

நான் :—அசே மிஸ்டர்! பூலோகத்தைப் பற்றியாவது இந்தத் தேசத்தைப் பற்றியாவது தமிழ் நாட்டைப் பற்றியாவது தங்கள் கட்டுரைகள் முதல் பத்திரிகையில் வெளிவருமா?

அவர் :—மற்றவைகளைப் பற்றித் தேவலோகத்தாருக்கு அவ்வளவு கவலையில்லை. ஆனல் காந்தி கட்சியைப்பற்றித் தெரிந்துகொள்ள அதிகமாக விரும்புகிருர்கள். தமிழ்நாட்டுச் செய்தி அங்கு வெகு சூடாக இருக்கக்கூடும்.

நான் :—என்ன ஸார்! தமிழ்நாட்டுச் செய்திக்கு அவ்வளவு கிராக்கி வந்தது! சூடான விஷயம் முதற் பத்திரிகையிலேயே வரும்போலிருக்கிறதே!

இதைக் கேட்டதும் ரிப்போர்ட்டர் மடிசஞ்சிப்பையை அவிழ்த்தார். அதிலிருந்த கட்டுரைகளில் ஒன்றை யெடுத்து என் கையில் கொடுத்தார். அதில் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

(தொடரும்.)

———

# இளைப்பாறுவதெப்படி?

(''யூனிடி டெயிலிவர்ட்'' என்ற பத்திரிகையினின்றும் மொழி பெயர்த்தெழுதப்பட்டது.)

உடம்பைத் தளரச்செய்து இளைப்பாறுவது எப்படி என்பதை அனேகர் அறியார். ஒருமையுள்ளம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு உடம்பையும் உள்ளத்தையும் தளரச்செய்து இளைப்பாறப் பழகுவதும் அவசியமாகும். ஒருமை யுள்ளத்திற்குரிய பயிற்சிகளில் மாத்திரம் பழகுவோர், அந்நிலையினின்றும் விடுதலை பெற்று உடம்பையும் உள்ளத்தையும் தளரச்செய்து இளைப்பாறச் செய்யும் பழக்கம் தமக்கு எளிதல்லவென நாளடைவில் காண்பர். புதிய வழியில் உள்ளத்தை ஒருமுகமாக்கி, எண்ணங்களைக் கட்டுப்படுத்த முயல்வதால், உள்ளத்திலும் உடம்பிலும், கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதோர் நிர்ப்பந்த நிலை ஏற்படுகின்றது. இதனால் உடம்பும் உள்ளமும் இளைப்பாறும் சுதந்திர நிலையினை இழந்துவிடுகின்றன.

### இதற்கு என் செய்வது.

அப்போதைக்கப்போது எவ்வளவு அமைதியாக இருக்க வசதி கிடைக்குமோ, அவ்வளவு அமைதியுடனிருந்து, சரீரத்தின் பலவேறுபகுதிகளையும் மனக்கண்முன் கொண்டுவருதல்வேண்டும். இதனால் பரமசுகமாக இளைப்பாறும் உபாயத்தினைக் கண்டுகொள்ளலாம். இதற்காக, ஒரு நாற்காலியில் சுகமாக அமர்ந்து கொள்ளலாம்; அல்லது அவசியமானால் சுகமாகப் படுத்துக்கொண்டு, இளைப்பாறும் சாதனத்தில் பழகிக் கொள்ளலாம்.

### முதலாவது படி.

முதலாவது, மனத்துள் ஒன்றிய கவலைகளை விட்டொழித்தல் வேண்டும். "மனக்கவலை பலக் குறைவு" என்பது மாத்திரமன்று. மனக்கவலையோடு இளைப்பாறுதல் முடியாது. பொருள்களைப் பற்றியோ, மக்களைப்பற்றியோ ஏற்படும் கவலைகளையெல்லாம், ஒருவன் தலைமீதோ முதுகின்மீதோ சுமக்கும் சுமைகளைக் கீழே போடுவதுபோல, மனத்தினின்றும் வீசி யெறிதல் வேண்டும்.

யாரைக்குறித்தாவது உனக்குக் கவலையிருந்தால், "எம்மைக் காக்கும் இறைபருள் அவரையும் (பேரைக் குறித்து) இனிது காப்பதாக!" என்று வேண்டி நம்பிக்கையோடு பிரார்த்தனை செய்தல் வேண்டும். உன் பொருளாதார நிலைகளில் குழப்பம் இருந்தால்—அநியாயம் ஏற்பட்டிருந்தால், "இறைபருளால் நீதியும் நியமமுமே என்றும் நிலவும்" எனும் உண்மையினை மனத்தில் நன்கு பதிய வைத்துக்கொள். எதிர்காலத்தைப்பற்றிய கவலை உனக்கிருந்தால், 'இன்று, இப்போது' என்பதே நித்திய மென்னும் உணர்வுகொண்டு 'சென்றது குறித்தும் சேர்வது குறித்தும் கவலைப்படமாட்டேன்' என்ற உறுதியோடிருத்தல் வேண்டும்.

### கண்களை இளைப்பாறச் செய்வது.

இரண்டாவது, கண்கள் களைப்பின்றி, சிரமமின்றி, உற்று நோக்கும் நிர்ப்பந்தத்தினின்றும் விடுதலைபெற்று இளைப்பாறுவதாகக் கருதுதல் வேண்டும். அநாயாசமாக, அமைதி யுள்ளத்தோடு இவ்வாறு கருதல் வேண்டும். இவ்வாறு நினைக்கும் போது, ஒருமையுள்ளத்தோடு நினைக்க முயலாதே. 'கண்கள் தளர்ந்து இளைப்பாறுகின்றன' என்னும் எண்ணத்திலே சிரமமின்றி, நிர்ப்பந்தமின்றி, உள்ளம் ஈடுபடுவதே போதும். கவலைக்காவது கஷ்டத்திற்காவது அவசியம் இவ்வுலகில் ஒன்றுமேயில்லையென்ற அறிவுகொண்டு, சதைப்பற்றுகளையும் நரம்புகளையும் இளைப்பாறச் செய்துகொள்.

### கழுத்தினை இளைப்பாறச் செய்வது.

உன் கழுத்தினை—முக்கியமாக அதன் பின்புறத்தினை—எல்லா நிர்ப்பந்தத்தினின்றும் விடுதலை பெற்று,—எல்லாவித விறைப்பு, சுளுக்கு, முயற்சி, பிரயாசை, வருத்தம் இவற்றினின்றும் விடுதலையுற்று, முற்றும் இளைப்பாறுவதாகக் கருதுதல் வேண்டும். இவ்வித எண்ணம் எண்ணுவதிலும், எவ்விதமான சிரமமாவது முயற்சியாவது பிரயாசையாவது வேண்டாம்.

### முகத்தினை மலரச் செய்வது.

இனி, முகத்தின் சதைப்பற்றுகளை இளகச்செய்தல் வேண்டும். முகத்திலே, கடினமாகிவிட்ட சதைப்பற்றுகள் அல்லது தசை நார்கள், இளகி இளைப்பாறவேண்டு மெனின், அதற்கு

உபாயம் மிகமிக எளிதாகும். நீ இளநகையரும்புதல் வேண்டும். உன தாடைகளை (அதாவது, பற்கள் நாட்டப்பெற்றுள்ள எலும்புகளை)த் தளரச் செய்து விடுவித்தல் வேண்டும். இச்சாதனம் செய்கையில், பிடிவாதம் அல்லது உறுதியான தீர்மானம் கொண்ட உள்ளம் கூடாது.

### தோள்களை இளைப்பாறச் செய்வது.

உலகச் சுமைகளையெல்லாம் தம் தோள்களில் தாங்குவதாகப் பலரும் கருதுகின்றனர். இச்சுமைகளை உதறித்தள்ளிவிடு. பணக் கவலைகளை—நாளை வேலைகளை இன்று நினைப்பதை—உதறித்தள்ளி விடு. நாள்கள், வாரங்களாக, சிலர்க்குத் தோள்களிலுள்ள சதைப்பற்றுகள் இளகி இளைப்பாறாமலே இருந்துவிடுகின்றன. இத்தகைய விறைப்பினின்றும் விடுபட்டு, தசை நார்கள்(Muscles) இளகி வருகையில், அவை 'கிறீச்' சென்ற ஒலியோடு விடுதலை பெறுவதாகத் தோன்றும்.

### கைகளை இளைப்பாறச் செய்வது.

கைகளை இளைப்பாறச் செய்வதால், மேற்புயம் தானே இளைப்பாறத் தொடங்குகின்றது. கண்களையும் கழுத்தினையும் இளைப்பாறச் செய்தபின்னர் முகத்தினை இளைப்பாறச் செய்தது போல, தோள்களையும் கைகளையும் இளைப்பாறச் செய்தபின், மேற்புயத்தினை இளைப்பாறச் செய்வதே நலம். ஏதாவது ஒன்றைப் பற்றிக் கொண்டிருக்கும் உணர்ச்சியினின்றும் கைகளை விடுவித்தல் வேண்டும். இறுகப் பிடித்த கரங்களோடு வாதத்தால் வருந்துவோர், சில வேளைகளில் தமக்கு உரிமையில்லாத பொருள்களைக் கைப்பற்ற அதிகமாக முயன்றவராகவோ, இஷ்டப்பட்டவராகவோ இருத்தல் கூடும். இதற்காக, மனக்கண்முன், கைகள் முற்றும் இளைப்பாறியிருப்பதாகப் பார்த்தல் வேண்டும்.

### மார்பும் வயிறும்.

மார்புக் கூட்டிலும், வயிற்றிலும் உள்ள உறுப்புக்களையும் சதைப்பற்றுக்களையும் இனி நினைத்தல் வேண்டும். இரைப்பையிலும் அதனை அடுத்துள்ள நரம்புத் தொகுதியிலும் உள்ள விறைப்பு நீங்கி, அவை இளைப்பாறுதல் வேண்டும். மூச்சுப்

பைகளும், மூத்திரப் பைகளும் சுத்தமாய் அமைதியுற்றிருப்பதாக நினைத்தல் வேண்டும்.

## இடுப்பின் பிடிப்பு.

இடுப்பினை இளைப்பாறச் செய்வது அதிமுக்கியமாகும். இப் பகுதியிலுள்ள உறுதியான சதைப்பற்றுகளுங்கூட, சில வேளைகளில் விறைத்துப்போய்க் கெட்டுப்போகின்றன.

## தொடையும் முட்டும்.

பின்னர், தொடைகளும் முட்டுக்களும் இளைப்பாறுதல் வேண்டும். விறைப்பால் முழங்காலில் பலவீனம் ஏற்படுதல்கூடும். இதனால் நிற்கும்போது சிலர்க்கு முழங்கால்கள் ஆடுகின்றன. இளைப்பாறும் சாதனத்தால், முழங்கால்களின் பலவீனம் நீங்கி விடும்.

## கால்கள்.

கால்களை இளைப்பாறச் செய்தல் வேண்டும். கணுக்கால்களின் பின்புறத்திலுள்ள, தசை நார்கள் முக்கியமாக இளைப்பாறுதல் வேண்டும்.

## மூன்று குறிப்புக்கள்.

க. இச்சாதனத்தில் நன்கு பழகிய பின்னர், உடம்பின் எப் பகுதியினையும் நோக்கி 'இளகி இளைப்பாறுவாயாக' என்று சாதகன் கட்டளை இட்ட மாத்திரத்தில் அவை விரைவில் கீழ்ப் படிந்துவிடும். அதிமுக்கியமான அம்சம், உள்ளத்தை இளைப் பாறச் செய்வதேயாகும். ஒருமையுள்ளத்தால் இளைப்பாறும் உணர்வு கெட்டுப்போம்.

உ. நித்திரைக்கு முன் உடம்பினை இங்ஙனம் இளைப்பாறச் செய்து பழகவேண்டும். நித்திரைபோகுமுன் ஒருமையுள்ளத் தோடு விஷயங்களைச் சிந்தித்தல் கூடாது. அவ்வாறு செய்வதால், இரத்தம் மூளைக்குப்பாய்ந்து செல்லுகின்றது. இதனால் உறக்க நிலை கெட்டுவிடுகின்றது. உடம்பு விறைப்பாக இருந்தால் ஒரு வன் சுகமாக உறங்கி இளைப்பாற முடியாது. சுகநிலையில் அமர்ந்து உறங்காவிட்டால் இரத்த ஓட்டம் தடுக்கப்பெற்று, கெட்ட கனவு கள் தோன்றுகின்றன.

௩. மேலே கூறியவாறு உடம்பையும் உள்ளத்தையும் இளைப்பாறச் செய்துகொண்டு, பக்தியுள்ளவர்கள் இறைவனை நோக்கிப் பிரார்த்தனைசெய்து நித்திரை செய்யலாம். உடம்பின் சதைப் பற்றுகளை இளக்கி இளைப்பாறச் செய்வதால், உடம்பிலே புதிய ஜீவசக்தி பிறக்கின்றது. உள்ளத்தை இளைப்பாறச்செய்து அமைதி பெறுவதால் உள்ளத்தில் இன்பமும் உற்சாகமும் பிறக்கின்றன.

---

## சதங்கையொலி.

---

### செடிகளுக்கு உயிருண்டா?

இத் தலைப்பெயரோடு 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' வெளியிட்டுள்ள கட்டுரையின் பகுதி வருமாறு:—செடிகளுக்கு நரம்புகளின் வழியாய் உணர்ச்சி செல்கின்றது என்பதைக்காட்ட வஸு செய்த கருமங்கள் பார்ப்பவர் பிரமிக்கத் தக்கனவாயிருக்கின்றன. உதாரணமாக, தொட்டாற் சிணுங்கியைப் போன்ற செடியைக் கொஞ்சம் வெப்பமான நீரில் வைத்தால் அது தன் மகிழ்ச்சியைக் காட்டுகிறது. குளிர்ந்த நீரில் வைத்தால் நடுக்கமுறுகிறது. அச்செடியின் மீது லாகிரி வஸ்துக்களான சாராயம் அபினி முதலியவைகளின் நெடியை ஏற்றினால், முதலில் கட்குடித்தவன் வெறிகொண்டு ஆடுவதைப்போல் ஆடிப் பிறகு சோர்ந்து விழுகிறது. அம்மயக்கத்தினின்றும் வெளியேற நேரமாகின்றது. இம் மட்டோ? கிளை முதலியவற்றை வெட்டினால் நடுக்கந் தோற்றுகிறது. பொறுக்கமுடியாத நோயுண்டானாற்போல் தத்தளிக்கிறது. செடிகள் அடைவது சந்தோஷமென்பதும் அன்றி பெருந் துக்கமென்பதும் அவர் தமது நுண்ணிய கருவியின் உதவியால் தெளிவாய் அறிந்து கொள்கிறார். மிருகங்களோ அன்றி மனிதர்களோ சந்தோஷமாவது துக்கமாவது அடையுங்காலத்தில் அருகில் வைக்கப்படும் மேற்கண்ட அந்த நுண்ணிய கருவியானது எவ்வித அடையாளங்களையும் மாற்றங்களையும் தோற்றுவிக்கின்றனவோ அஃதே போல் செடிகளிடத்திற் றோன்றும்போதும் அதே அடையாளங்களையும் மாற்றங்களையும் அக் கருவி காட்டுகின்றதாம். தொட்டாற் சிணுங்கியில்தான் மேற்கூறிய குணங்கள் மிக அதிகமாய்க் காணப்படினும், பிறசெடிகளிடமும் இக் குணங்கள் காணப்படுகின்றன வென்பது வஸு அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. கேவலம் சீதோஷ்ணத்தினால் செடிகளிலும் மரங்களிலும்

பல மாறுபாடுகளுண்டாகின்றன என்னும் கொள்கையை வஸு மாற்றி, செடிகளுடைய நரம்புகளினாலேயே, பல மாறுபாடுகள் உண்டாகின்றன வென்பதை உறுதிப்படுத்தினார். தாமரை மலர் சூரியனைக் கண்டு மலர்வதும், சூரியகாந்தி மலர் சூரியனது வெளிச்சம் செல்லும் பக்கமே திரும்பிக்கொண்டிருப்பதும், அவைகளுக்குள்ள சக்தியாலேயே என்பது தெளிவாகின்றது. இப்பெரும் உண்மைகளைக் கண்டுபிடித்த வஸு, தாம் உபநிஷத்துக்களிலே, ஜீவன் எங்கும் உள்ளது, எதனிலும் பரந்துளது என வாசித்தறிந்ததாகவும், இக்காலத்தில் பல நுண்ணிய கருவிகளினுதவியால் அறியும் சாஸ்திர விஷயங்களைப் பல்லாயிர மாண்டுகளுக்கு முன்பே ரிஷிகள் தம் யோகாப்பியாசத்தினாற் கண்டறிந்தனர் எனவும் கூறுகின்றார்.

## தியானம்.

"கல்பக" பத்திரிகையில் 'தியான'த்தைப்பற்றிய சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவை வருமாறு:—(க) தியானம் செய்யும் அறை சுத்தமாக இருக்கவேண்டும். (உ) மௌனம் அவ்வறையில் தனியரசு புரிதல் வேண்டும். (ங) அறைக்கு வெளியே உன் கவலைகளையும் அற்ப எண்ணங்களையும் விட்டொழித்து அகமகிழ்ச்சியோடும் முகமலர்ச்சியோடும் உள்ளே பிரவேசிக்க வேண்டும். (ச) உனது உபாசனா மூர்த்தியை அல்லது தெய்வ லட்சியத்தை உன்மனக்கண்முன் தெளிவாகப் பார்த்து, அங்ஙனம் அகக் கண்ணுக்கு இலக்கான மூர்த்தியின் மீது உன் முழு உள்ளத்தையும் கொஞ்சநேரம் செலுத்துவாயாக. (ரு) உன் உபாசனா மூர்த்தியை உனது ஆதாரத்தலைவனாகவும் ஆன்மநேசனாகவும் அடியார்க்கடியவனாயும் யாதினும் இனிய காதலனாகவும் கருதி பக்தியோடு தியானம் செய்யலாம். (சா) இங்ஙனம் தியானம் செய்து உள்ளத்தில் அலைபட்டெழும் எண்ணங்களை அடக்கி முற்றும் வசமாக்க முயலவேண்டும். (எ) உன்னை நீ ஓர் ஆன்மாவாகவே நினைத்தல் வேண்டும். "நான் சரீரமல்லேன்; உடம்பிற்கும் ஜட உலகினுக்கும் எசமானன்; தெய்வத் தன்மை வாய்ந்த—ஈச்வர அம்சம் பெற்ற—ஆனந்தமயமான ஆன்மா. துச்சமான எண்ணங்களுக்கும் எனக்கும் யாதொரு தொடர்புமில்லை"—என்று தியானித்தல் வேண்டும். இங்ஙனம் தியானம் செய்துவருவோர், தியானவாயிலாக ஆன்ம சக்தியினை அபிவிர்த்தி செய்து கொள்ளலாம். இயன்றவரை, பிரமசரிய ஒழுக்கம் மேற்கொள்ளல் தியான சித்திக்கு இன்றியமையாததாகும்.

## இளைஞரும் தாய்நாடும்.

இத்தலைப் பெயரோடு அறிஞர் வாஸ்வானி புதிய சிறு நூலொன்று வெளியிட்டுள்ளார். இந்தியாவின் நல்லதிர்ஷ்டத்தினையும் தங்களுக்குள்

புதைந்துகிடக்கும் அபார ஆன்மசக்தியினையும் நம்பும் இளைஞரே இன்று தாய் நாட்டின் நன்னலம் கருதி உழைக்க முற்படவேண்டுமென்று இந் நூலில் வாஸ்வானி கூறுகின்றார். இந்தியாவின் பழைய குறிக்கோளினைப் புதிய முறையில் ஆராய்ந்து, இதனோடு புத்தப்புதிய கலைஞானத்தையும் குடியாட்சியின் அடிப்படையான தத்துவத்தையும் உணர்ந்து இவற்றோடு பொருந்தும் புதிய தேசியக்கல்வி முறையினை வகுத்தல் வேண்டும். புதிய ஆரோக்கிய முறைகளையும் உடல்வலிப் பயிற்சி முறைகளையும் பரப்பி, உடம்பினை இறைவன் கோயிலாகவும், ஜடப்பொருளினை இறையொளியின் உறையுளாகவும் கொண்டு, கடவுளைப் புதிய முறையில் ஏழைபங்காளனாக—அதாவது ஏழை மக்களின் பங்காளனாக வழிபடுமாறு நம் கிராமங்களிலுள்ள பெருமக்களைத் தூண்டும் நல்லிளைஞர் திருக்கூட்டமொன்று வேண்டும். ஆடம்பரமற்ற எளிய வாழ்வே அழகிய வாழ்வு என்பது இந்தியா கண்ட லட்சியம். இதனைப் பொன்போல் போற்றும் இளைஞர் வேண்டுமென வாஸ்வானி கூறுகின்றார்.

## ஜெர்மனியில் இளைஞர் இயக்கம்.

இன்று இளைஞர் இயக்கம் ஒன்று ஜெர்மனியில் தோன்றியுள்ளது. அவ் இயக்கத்தில் பல்கலைக் கழகம் உயர்தர வித்யாசாலை தொழில் வகுப்பு—இவற்றைச் சார்ந்த இளைஞர் கலந்துழைக்கின்றார். எளிய இயற்கை வாழ்வெனும் அடிப்படையில் இவர்கள் தம் தந்தையர் நாட்டின் புது வாழ்வினை அமைக்க முயல்கின்றார். இவர்களில் பலர் தொப்பியில்லாத தலையோடும் ஜோடில்லாத வெறுங் கால்களோடும் நாடெங்கும் செல்கின்றார். போகத்தையும் நாகரிக அனுஷ்டான முறைகளையும் இவர்கள் வெறுக்கின்றார். வெட்ட வெளியாகாயமே இவர்கள் விரும்பி வாழும் இடம். ஞாயிற்றுக்கிழமைகளிலும் விடுமுறை நாட்களிலும் இவர்கள் கூட்டம் கூட்டமாக, கிராமங்களுக்குச் செல்கின்றார். கிராமவாசிகளின் கதைகளையும் பாடல்களையும் சேகரிக்கின்றார். குடியானவர்களது உழைப்பிலும் உணவிலும் பங்குகொள்கின்றார். இவர்கள் மதிமயக்கும் மதுவினைப் பருகுவதில்லை; கொள்ளிவாய்ப் புகைச் சுருட்டினைக் கைகொண்டு தொடுவதில்லை. கழுத்துப்பட்டை('காலர்') முதலான நாகரிக விளுடைகளை விரும்புவதில்லை; ஜனங்கள் விரும்பும் கதைகள் வாயிலாக—கீதங்கள் வாயிலாக—இலக்கியங்கள் வாயிலாக, அவர்களுக்கு இவ் இளைஞர் வீர சக்தியினையும் வீர சுதந்திர உணர்வினையும் ஊட்ட முயல்கின்றார். இவர்களே புதிய ஜெர்மனியை நிர்மாணம் செய்யும் சிற்பிகள். புதிய தமிழ் நாட்டினை நிர்மாணம் செய்வதற்கும் இத்தகைய நல்லிளைஞர் திருக்கூட்டமொன்று வேண்டும். இளைஞரும் இளமையுணர்வு பெற்றுள்ளோரும் எளிய வாழ்வின் அறிகுறியான புண்ணி

யக் கதராடை புனைந்து, போகம் வெறுத்துத் துன்பம் பொறுக்கும் ஆன்ம சக்தியாளராய், சத்தியாக்கிரக அஹிம்ஸாதர்ம வீரராய், இயற்கையோடிசைந்த இன்ப வாழ்வு வாழும் சிலராய், நாடெங்கும் சுற்றிவர வேண்டும். தமிழிலக்கிய வாயிலாகவும் இதிகாச புராணவாயிலாகவும், தேசிய கீதங்கள் வாயிலாகவும் நாட்டு மக்களுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தி, நம் கிராமங்களிலே செறிந்து கிடக்கும் அறியாமையிருளினை அகற்றும் இளவீரரை இன்று நம் தமிழ்த்தாய்வேண்டி நிற்கின்றாள். ஆதிதிராவிடரின்—ஏழை மக்களின் இன்பதுன்பங்களில் மனமுவந்து கலந்துகொண்டு, இன்று தலைவிரித்தோடும் சாதிப் பிணக்கெனும் பேயை ஒட்டும் இளந்தொண்டர் வேண்டும். இவர்கள் பிரமசரிய ஒழுக்கத்தோடு உடம்பினையும் உள்ளத்தினையும் ஒருங்கு வளர்த்து, நாட்டிற்கு உரிமையாக்கவேண்டும். உயர்தர வீர லட்சியம் இவர் தம் உள்ளத்தே 'தகதக' வென்று ஜ்வலித்துச் சுடர் வீசுதல்வேண்டும். வீர சௌந்தரியமும் தியாக சௌந்தரியமும் யௌவன சௌந்தரியத்தோடும் கலந்து அகத்தும் முகத்தும் பொங்கித் ததும்ப, இவர்கள் நாடு நகரங்களிலெல்லாம் தாய்நாட்டின் விடுதலைக் காதலைப் பரப்பி வரல்வேண்டும்.

## தமிழகத்தின் உயிர்நிலை.

கடவுள் தம்மைப்போலத் தம் மக்களை உருவாக்கினார்—என்று கிறிஸ்து வேதம் கூறுகின்றது. அது அவ்வளவு சரியல்ல வென்று கருதும் மேலைநாட்டு நாத்திக வாதியர், "மக்கள் தம்மைப்போல் தம் கடவுளை உருவாக்குகின்றார்—எனக் கூறுவாராயினர். யோக்கியனான ஓர் மனிதன் கடவுளின் உயர்ந்த படைப்பு" என்று வெள்ளைக் கிறிஸ்துவர் கூறுவதுண்டு. வெள்ளை நாத்திகர் இதனை மாற்றி, "யோக்கியனான ஓர் கடவுள், மக்களின் உயர்ந்த படைப்பு" என்று கூறுகின்றார். வெள்ளை—ஆஸ்திகர் கூற்றிலும் உண்மையுண்டு. வெள்ளை நாஸ்திகர் கூற்றிலும் உண்மையிருக்கின்றது. ஒவ்வொரு இனத்தாரும் தம்மைப்போலத் தம் கடவுளையும் படைத்து விடுகின்றார். நார்வே ஸ்வீடன் நாட்டார் தங்கள் சுவாமிக்கு கௌரவமான வெள்ளைத்தாடி கொடுத்திருக்கின்றார், ஸிரியன் சாதியார், தங்கள் சாமியை வளைந்த மூக்குள்ளதோர் ஆசாமியாக்கிவிட்டார். நம்மவருள்ளும் தாழ்ந்த இனத்தார், தத்தம் இயல்பினுக்கிணங்க, வீரன், இருளன், காட்டேரி, தொட்டியச் சின்னான், பாவாடை முதலிய மூர்த்திகளைப் படைத்திருப்பது பிரசித்தம். "முண்டாசு கட்டிவரும் நொண்டி வீரப்ப மகாப்பு" -என்று கடவுளைக் கருதி வழிபடுவோர் நாகரிக ஏணியின் தாழ்ந்த படிகளில் நிற்கும் இந்திய இனத்தார். ஆனால் உயர்ந்த படிகளில் நிற்கும் இந்துமக்கள், வாடாத இளமை, அழியாத அழகு, குன்றாத மணம், தூண்டாத ஒளி என்னும்

லட்சியங்களைக் கலந்து தம் கடவுளைப் படைத்து, கண்ணனென்றும், முருகனென்றும் இராமனென்றும் அழைக்கின்றார். வட இந்தியாவின் உயிர்நிலை கண்ணனெனின், தென் இந்தியாவின்—தமிழகத்தின் உயிர்நிலை முருகனே யாகும்.

## இளமையின் தெய்வத்தன்மை.

இளமை தெய்வத்தன்மை வாய்ந்த தென்னும் நம்பிக்கை மக்களுக் குண்டு. இதனாலேதான் என்றும் வாடாத இளமையினை முருகனுக்கி நம்மவர் வழிபடுவாராயினர். முருகன் பொதுவாக மக்களுளத்தே கோயில்கொண்டு விளங்குகின்றானெனினும், சிறப்பாக, நாட்டின் கதியான நல்லிளைஞர் தூய சிந்தையிலே விசேஷ ஒளியோடும் அழகோடும் வளர்கின்றான். இளைஞர் தம் மனப் பண்பால், தம் ஒழுக்க வலிமையால், தம் அசையாத நம்பிக்கையால், தம் அகக்கண்ணுக்கு இலக்காகும் உயர்ந்த தெய்விக லட்சியங்களால், முருகனை வழிபடவேண் டும். ஜப்பான் உயர்ந்ததற்கு அதன் இளைஞரே முதற்பெருங் காரண ராவர். இன்னும் ஜப்பானுக்குப் புத்துயிர் அளிக்க முயல்வோரும் அந்நாட்டு இளைஞரேயாவர். சீனாவின் நிலை இன்று குழப்பமாகவே யிருக்கின்றது, எனினும் இக்குழப்பத்தினூடே, ஒரு புதிய ஒழுங்கினை நாட்ட முயல்வோர் அந்நாட்டு இளைஞரே. இவர்கள் நாட்டுக் காதலோடு, ஆராய்ச்சியறிவினை வளர்த்து வருகின்றார்; சமுதாய வாழ்க்கையிலுள்ள குறைகளை அஞ்சாது கண்டித்து வருகின்றார். இத்தகைய 'சக்தி' தெய்வத்தன்மைவாய்ந்ததன்றோ? இத்தகைய 'சக்திமய'மான நல் லிளைஞர், கன்ப்யூஷியஸ் என்னும் சீன ஞானமூர்த்தியைத் தங்கள் பரமாசாரியனாகக் கொண்டு, காலத்திற்கேற்ற சீர்திருத்தங்களோடு முன்னேற்றமடைய முந்துகின்றார். இங்ஙனம் நம் செந்தமிழின் பரமா சாரியனும் ஞான பண்டித சாமியும் தீபமங்களஜோதியுமாகக் காட்சிதரும் முருகனை, எத்தனை மக்கள்—எத்தனை இளந்தமிழர்—அறிவோடு வழி பட்டு, முன்னேற முயல்கின்றார்? எத்தனைமக்கள் இலக்கிய அறி வோடு, தத்துவ அறிவோடு, தற்கால அறிவோடு, தமிழகத்தின் பாக்கிய மான—உயிர்நிலையான—இளைஞர் பெருமானை, வீர முருகனை ஆராதிக் கின்றார்? முருகா, முருகா என்று வாயால் சொல்வது யார்க்கும் எளிது. எனினும் இளமை யுணர்வுபெற்று முக்கியமாக இளைஞர் உள்ளத்திலும், பெண்கள் உள்ளத்திலும், 'தாழ்ந்தவர்'கள் உள்ளத்திலும் முருகக்கடவு ளைக் கண்டு வழிபடுவதற்கு எத்தனைபேர் முற்பட்டு நிற்கின்றார்?

---

உ

சிவமயம்.

# "குமரன்"



"எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு". —திருக்குறள்.

சதங்கை ௬ } காரைக்குடி
அட்சய ௵ கார்த்திகை ௴ { மணி ௨

## தெய்வக் குழந்தை.

முக்கணெம் பெருமானும், அறம் வளர்க்கும் செல்வியாம் அங்கயற் கணம்மையாரும், சேவலங் கொடிச் செல்வனும் ஆண்டு வளம்படுத்திய பாண்டி நாட்டில் முற்கால முதல் இக்காலம் வரை அரசராலும், அன்பராலும் போற்றிப் புகழப்பட்டுவரும் மதுரை மாநகரின் அருகேயுள்ள ஓர் சிற்றூரின்கண் ஒரு அந்தணர் வீட்டில் ஏதோ பூசல் நிகழும் அரவங் கேட்டது. மாமியானவள் மருகியைத் திட்டிப் புடைத்தாள். பெண் மக்களை—அதிலும் இள மாதர்களான நாட்டுப் பெண்களை—மாமிமார் துன்புறுத்துவதென்பது தென்னாட்டினைப் பிடித்த சாபம் போல் விளங்குகின்றதன்றோ? மாமியானவள் வாய்குளிர வசை மொழிகளைப் புகன்று வெறிபிடித்தவள்போல ஆடினாள். மருகி பயத்துடனும் வாடிய தோற்றத்துடனும் சிவ வேடப் பொலிவுடனும் வணங்கிய முகத்தினளாய் பூமிதேவியை நோக்கி நின்றாள். இன்பப் பசுங் கொடி போலத் துவண்டுநின்ற அவ் இளம்பெண்ணினது கண்ணினின்றும் பெருகிவழிகின்ற நீரானது அழகிய ரோஜா மலரில் ஊற்றப்படும் வெந்நீரைப்போல் உடலில் பட்டுப் பெருக மாமியை நோக்கி மாற்றமொன்றும் உரையாமல் ஒல்கி ஒரு சுவரின் ஓரமாக நின்ற காட்சி, பார்ப்பவர் மனத்தை இளகச்செய்தது. இளமைப் பருவத்தில் வளம்பெற்ற உடலுடன்—இன்ப வாழ்வு வாழ வேண்டிய பெண்மக்களை மாமியார் படுத்தும்பாடு கொஞ்சமோ?

இவ்வளவு அழகிய பெண்—பக்திக்கொரு வித்தாகத் தோன்றி நிற்கும் மாது நல்லாள்—இன்பத் திருவுருவாக விளங்கும் இப் பெண்ணணங்கை என் பிரமன் படைத்தான்? படைத்து என் இப்படிப்பட்ட புலிகள் வாழும் கூட்டிலடைத்தான் என்று பார்த்தவரனைவரும் ஏங்குமாறு அக்காட்சியிருந்தது. இருளும் ஒளியும் போல் மாமியும் மருகியும் நிற்க, அவர்கள் பக்கத்தில் ஒரு செல்வவான் குழவி கிடந்த தோற்றம் ஈண்டெழுதுந்தரத்த தன்று. நல்லதொரு பாண்டிப் பனையோலையினால் கைவன் மகளி ரால் மிடையப்பெற்ற அழகிய தடுக்கில் இடப்பட்டிருந்த தலை யணை யொன்றின்மேல் தலையும், மகளிரது காந்தளங் கரத்தால் நூற்று செய்யப்பெற்ற இளந் துகிலில் உடலுமாக அக்குழவி, கிடந்தது. எழெட்டு மாதங்கள் முற்றியிராத அப்பச்சிளங்குழவி எழுதற்கருமையான பழய வேதமானது சிலம்பாகத் தன் கணைக் காலில் கிடந்து புலம்ப, அன்பர்களது இதயமாகிய அரிய நீரோடையில் மலர்ந்து சிவாநந்தமாகிய தேனைச் சொரிகின்ற தெய்வத் தாமரை மலராக விளங்குகின்ற தனது சிவந்த திருவாயை இருகரங்களாலும் பற்றி வலக்காற் பெருவிரலைப் பிடித்துக் குமுத மென் மலரினும் அழகிய செவ்விதழ்களின் வழியே இன்பவாணீர் ஊறி வடியும் திருவாயில் வைத்துச் சுவைத்துக்கொண்டு, மை யணிந்து அழகு பெற்று அருள் நிறைந்து விளங்கும் திருக் கண் களினின்றும் நீரானது சுரந்தெழ—அழுது கொண்டு கிடந்த அத் தெய்வக் குழந்தையின் பெற்றி ஈண்டெழுதுந் தரத்ததன்று. பக்திக்கடலில் குளித்தின்புற்ற பரஞ்சோதி முனிவர் இக்குழவியின் தோற்றத்தைப் பற்றிக் கூறும் பாடல்கள் வருமாறு:—

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத்
தலம்ப அன்பர் இதய மென்னும்
செழுமலரோ டையில் மலர்ந்து சிவானந்தத்
தேன்ததும்பு தெய்வக் கஞ்சத்
தொழுதகு சிற்றடிப் பெரியவிரல் சுவைத்து
மைக்கணீர் துளும்ப வாய்விட்டு
அழுதுஅணையா டையிற் கிடந்தான்
அனைத்துயிரும் ஈன்றுகாத்து அளிக்கும் அப்பன்.

இப்பாட்டில் பொதிந்து நிற்கும் தமிழ்ச் சுவையும் பக்திச் சுவையும் கண்டு களித்தின்புறத் தக்கனவாகும். குழந்தைகளின் இனிமைகண்டு உளங் குழைவுறாத மனிதன் இருப்பானாயின் அவன் கொலை புரிதற்கும் பின்வாங்குவனோ? பச்சிளங் குழவி களைப்பற்றிப் பல நூலாசிரியரும் பகன்றுளார். எனினும் தெய்வ வான் குழவிகளைப்பற்றி உண்மையான பற்றுளங்கொண்ட பாவலர் வாக்கு மதுதாரம் பொழிகின்றதன்றோ? திருவிளையாடலிலுள்ள இக் கவியின் நலங்கண்டு அன்பர் திளைப்பாராக.

முரு.

---

# காலத்தின் கோலம்.

(பி. ஸ்ரீ.)

I

தமது நண்பரோடு விஜயரங்கம்பிள்ளை சதுரங்கமாடிக்கொண் டிருந்தார். உடனே அவரது சிறுபையன் ஓடிவந்து "அப்பா, அப்பா, தந்தி வந்திருக்கிறது" என்று கூவினான். கிராமங்களில் தந்தி வருவது சாதாரண நிகழ்ச்சியன்று. பெரும்பாலும், தந்திச் செய்திகள் கிராமவாசிகளுக்கு, துக்கத்தையும் துரதிர்ஷ்டத்தை யுமே கொண்டுவருகின்றன.

விஜயரங்கம்பிள்ளை சதுரங்கப் படத்தையும் 'காய்' களையும் எறிந்துவிட்டு அவசரமாக எழுந்தார். வீட்டு வாசல்திண்ணையில் தந்திச் சேவகனைக் கண்டார். பல சிறுவர் சிறுமியர் அவ் 'விநோ தப் பிராணி' யைச் சூழ்ந்துகொண்டிருந்தனர்.

தந்தியைக் கையில் வாங்கினதும், விஜயரங்கம்பிள்ளையின் கை கள் நடுங்கின. ஆனால் தந்தியைப் படித்தபின், அவர் மனம் மகிழ்ந்தது; முகம் மலர்ச்சி பெற்றது; சந்தோஷ ஒளி கண்களில் நிறைந்து ததும்பியது. அவர் வீட்டிற்குள் விரைந்தோடி, கவலை யுற்றிருந்த தம் மனைவியை நோக்கி, "நல்ல சமாசாரந்தான்" என்று சொன்னார்.

“என்ன விசேஷம்?”

“வைத்திய நாதன் வருகிறான்”

“வைத்தி! எங்கேயிருந்து? எப்போது வருகிறான்?”

“அதெல்லாம் தந்தியில் இல்லை. நாளை இங்கே இருப்பான்.”

வைத்திய நாதன் விஜயரங்கம்பிள்ளையின் தம்பி. அவன் சிறுவனாயிருக்கும் போது, இவர்களது தந்தை இறந்து போனார். விஜயரங்கம் பிள்ளையின் மனைவி வைத்திய நாதனைத் தன் சொந்த மகனாகவே கருதி வளர்த்து வந்தாள். அன்பால் அவள் அவனை ‘வைத்தி’ யென்று அழைப்பது வழக்கம். வைத்தி மகா துஷ்டனாக வளர்ந்தான். இவன் துடுக்கை அடக்க, விஜயரங்கம் பலவாறு முயன்றும் பயனில்லாமல் போயிற்று. கோபத்திற்குக் கரையில்லை. ஆகவே ஒருநாள் விஜயரங்கம் தமது தம்பியைச் செருப்பால் அடித்துவிட்டார். இந்த அவமானத்தைப் பொறுக்க முடியாமல், வைத்திய நாதன், அடிபட்ட தினத்திலேயே வீட்டைவிட்டு ஓடிப்போய் விட்டான். ஒருநாள்—இரண்டு நாள்—ஒருவாரம்! வைத்தியைப் பற்றிய ‘தகவல்’ ஒன்றுமே தெரியவில்லை. விஜயரங்கம் பிள்ளை பத்திரிகைகளில் விளம்பரம் செய்து பார்த்தார். வைத்தியைப்பற்றிய “தகவல்” கொடுப்போர்க்கு ரூபா ஐம்பது வெகுமதி யளிப்பதாக வாக்களித்திருந்தும், ஒரு பலனும் கிடைக்கவில்லை. மாதங்கள் ஆண்டுகளாயின. மூன்று ஆண்டுகள் கழிந்தும், வைத்தியைப்பற்றிய விஷயம் ஒன்றும் தெரியவில்லை. அண்ணன் தம்பியை அடித்துத் துரத்திவிட்டு, குடும்ப சொத்தை ஏகபோகமாக அனுபவித்துக் கொண்டிருக்கிறான்—என்று ஊரார் அபவாதம் சொன்னார்கள். “ஊர்வாயை மூட, உலைமூடி யுண்டா?’ விஜயரங்கத்திற்கு வெளியே தலைநீட்ட யோக்கியதை யில்லாமலிருந்தது. எனினும் இப்போது காணாமற் போன தம்பி திரும்ப வருகிறான் என்ற செய்தி கிடைத்துவிட்டது. விஜயரங்கத்தைக் காட்டிலும், அவரது தர்மபத்தினி இச்செய்தி கேட்டு அதிக மகிழ்வெய்தினாள். சந்தோஷ சமாசாரம் காட்டுத் தீ போலப் பரவியது. கிராமவாசிகள் அனைவரும்—விசேஷமாக வைத்தியின் இள நண்பர்களெல்லாம்—ஆவலோடு வைத்தியின் வருகையை எதிர்பார்த்த வண்ணமாக இருந்தார்கள்.

மறுநாள் ஒரு குதிரை வண்டிவந்து விஜயரங்கம்பிள்ளை வீட்டு வாசலில் நின்றது. வைத்தியநாதபிள்ளை சொக்காவும் தொப்பியுமாக வண்டியினின்றும் இறங்கினர். வீட்டிற்குள் புகுந்து அண்ணனையும் அண்ணியாரை (அண்ணன் மனைவி)யும் நமஸ்கரித்துவிட்டு, வைத்திய நாதன், குழந்தைகளோடு கொஞ்சி விளையாடினன். அப்பால் அண்ணியாரிடம் தன் பணப் பெட்டியைக் கொடுத்து "மதினி! இதை நீ பந்தோபஸ்தாக வைத்திரு" என்று சொன்னன். பணப்பெட்டி அதிக பளுவாயிருந்தது. அவள் அதை வைத்துவிட்டு, அதிக ஸந்தோஷத்தோடு, "வைத்தி! இவ்வளவு காலமாக நீ எங்கே போயிருந்தாய்?" என்று வினவினள்.

"நான் கல்கத்தாவிலிருந்தேன்."

"கடைசியாக ஊர் ஞாபகம் உனக்கு எப்படியோ வந்துவிட்டது!"

"நான் என்வேலையை விட்டு எப்படி வருவேன்?"

"என்ன வேலை? என்ன சம்பளம்?"

தான் ஒரு கம்பெனியில் மாதம் முன்னூறு ரூபா சம்பாதிப்பதாக வைத்திய நாதன் சொன்னன். வைத்திய நாதனது அதிர்ஷ்டத்தைக்கேட்டு, அண்ணனும் அண்ணியும் அளவு கடந்த சந்தோஷம் அடைந்தார்கள்.

போஜனம் முடிந்தபின், கிராம வாசிகளும் பழைய நண்பர்களும் கூட்டம் கூட்டமாக 'வைத்தி'யைப் பார்க்கவந்தார்கள். பழைய 'வைத்தி' இப்போது பெரிய மனுஷனுகிவிட்டானல்லவா? முன்னூறு ரூபா சம்பளம்—என்ன லேசானதா? அதே கிராமத்தில் பி. ஏ. பட்டதாரிகள் முப்பது ரூபா சம்பளம் பெறவேண்டுமென்று விண்ணையும் மண்ணையும் அசைக்க முயன்று பகிரதப் பிரயத்தனம் செய்து வந்தனர். எம். ஏ. பட்டத்திற்கும் அதிக மதிப்பில்லாமல் போய்விட்டது. பி. ஏ. பி. எல் கள் எத்தனை பேர் வக்கீல் வேடம்பூண்டு, கேசில்லாமல் திண்டாடுகிறுர்கள்? இப்படிப்பட்ட விபரீத உலகத்திலே, மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் அரை டஜன் தடவை தோற்றுப்போன 'வைத்தி' எதிர்பாராத வண்ணம் முன்னுக்கு வந்து மாதம் முன்னூறு ரூபா சம்பாதிப்பதென்றால், ஆச்சரியப்படாதவர்கள் யார்?

(தொடரும்.)

# விவேகானந்தர்—
# வாழ்க்கையும் உபதேசமும்.



"நான் சொல்லுகிறபடி செய்; செய்கிறபடி செய்யாதே"— என்று உபதேசம் செய்வோர் பெரியோரல்லர். பிறருக்கு முள் நிறைந்த பாதையைக் காட்டிவிட்டு, ரோஜாமலர் பரப்பிய பாதையில் தாம் மாத்திரம் மோட்சலோகம் செல்லலாமென்று கருதுவோர் இவரே. உண்மையான பெரியோர் விஷயத்தில், வாழ்க்கையும் உபதேசமும் ஒன்றுபட்டிசைந்துள்ளன. இத்தகைய பெரியோருள் விவேகானந்தரும் ஒருவராவர்.

விவேகானந்தரது வாழ்க்கை தியாக வடிவாக விளங்கியது. இளவயதிலேயே இவர் உலகவாழ்க்கைக்குரிய சிற்றின்பங்களையெல்லாம் துறந்துவிட்டார். தமது தாய் நாடெங்கும் இவர் சுற்றுப்பிரயாணம் செய்தபின், இமயமலைப் பிரதேசங்களிலும் இமயமலைக்கு அப்பாலுள்ள பிரதேசங்களிலும் இவர் சஞ்சாரம் செய்தார். இத்தகைய பிரயாணங்களில் இவர் அனுபவித்த இன்னல்களுக்கு ஓர் அளவில்லை. பலவகையான கஷ்டங்களால் இவர் வாழ்க்கை உருவாக்கப் பெற்றது. பல வகையான இடையூறுகளையும் வாழ்க்கைப் போரில் வென்று முதுகுகண்ட விவேகானந்தர்பால், அபார மனவலிமையும் சங்கற்ப சக்தியும் சிறந்து பொலிந்தன.

விவேகானந்தர் வங்க நாட்டினரெனினும், இவரது பெருமையினை முதல் முதல் கண்டு பிடித்தது தமிழ் நாடேயாகும். அமெரிக்காவிலுள்ள சிகாகோ நகரில் கூடிய சர்வமத சபையில் இந்து சமயத்தைப் பிரசங்கிக்குமாறு விவேகானந்தரை அனுப்பியவர் சென்னை வாசிகளேயாவர். அமெரிக்காவிலும் விவேகானந்தர் பல பல கஷ்டங்களை அனுபவித்தார். எனினும் இவரது மனவலிமையும் ஆன்மசக்தியும் இவருக்கு எடுத்த காரியம் யாவினும் வெற்றி அளித்தன.

விவேகானந்தர் தாய் நாட்டினின்றும் புறப்பட்டுக் கடல் தாண்டி ஜப்பான் வழியாகச் சென்று ௧௮௯௩-ம் ஆண்டில் சிகா

கோவில் இறங்கினர். அப்போதுதான், இந்தியாவை விட்டு வெளியே செல்லாத இந்தியர் நிலை கிணற்றுத்தவளைகளின் நிலையினை ஒத்திருக்கிறதென்று விவேகாநந்தர் கண்டுபிடித்தார். உலகிலுள்ள சமயவாதியர் நிலையும் இத்தகையதே என்பது இவர் கருத்து. அமெரிக்க சர்வதேச மகாசபையின் கூட்டமொன்றில், விவேகானந்தர் 'கிணற்றுத் தவளை'யின் கதையினையே மதபேதங்களின் காரணங்களை விளக்க உபயோகித்தார். விவேகானந்தரது இந்து சமயம் சர்வசமய சாரமேயாகும். மதவிஷயங்களிலும் பல விஷயங்களிலும் விவேகானந்தர் விரிந்த நோக்கமுள்ளவராக இருந்தார். இதற்குக் காரணம் என்னை? இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் பிரயாணம் செய்து பல சமய நூல்களையும் பதார்த்த விஞ்ஞான நூல்களையும் ஒப்பிட்டு ஆராய்ந்த விவேகானந்தர் விரிந்த அறிவும் உயர்ந்த நோக்கும் பெற்றிருந்தார்.

விவேகானந்தர் அமெரிக்காவில் விதைத்த அபிப்பிராயங்கள் அந்நாளில் ஒருவாறு பயனளித்த போதிலும், அவ்விதைகள் ஆழ்ந்து பதியவில்லையென்பது திண்ணம். சாமானிய அமெரிக்க மக்கள் விவேகானந்தரது ஜீவகாந்த சக்தியாலும் ஜீவ வாக்கினாலும் வசீகரிக்கப்பட்ட போதிலும், நாளடைவில் அவரையும் அவர்தம் அறவுரைகளையும் மறந்துவிட்டார். பண்டிதர்களோ, விவேகானந்தரது உபதேசம் ஆராய்ச்சி முறையில் அமைந்திராததால், அதனை அதிகமாக மதித்துப் போற்றினரில்லை. இங்ஙனம் அமெரிக்காவிற்கு விவேகானந்தரது உபதேசத்தால் விசேஷ நற்பயன் விளையவில்லை. எனினும், வெளிநாடுகளில் அவருக்கேற்பட்ட புகழால், இந்தியா நன்மை அடைந்ததென்பதில் ஐயமில்லை.

விவேகானந்தர் இங்கிலாந்திற்குச் சென்று மாக்ஸ் முல்லரையும், ஜர்மனியில் தாய்சன் பண்டிதரையும் சந்தித்தார். ஸ்விட்ஸர்லாந்திலுள்ள சூரிக் நகரத்தில் நடைபெற்ற தர்ம மகாசபைக்கும் விஜயம் செய்தார். ௧௮௯௭-ம் ஆண்டில் தாய் நாட்டிற்கு மீண்டார். கொழும்பிலே வந்திறங்கி, இலங்கை வாசிகளின் வந்தனோபசாரத்தைப் பெற்றுக்கொண்டு, தாய் நாட்டில் பிரதம உபந்யாசமாக, கொழும்பு நகரத்துச் சபாமண்டபத்தில் ஒரு சொற்பொழிவு

நிகழ்த்தினர். இலங்கையிலிருந்து இந்தியாவிற்குப் புறப்பட்டு, இராமநாதபுரம் வந்து சேர்ந்தார்.

இராமேசுவர தேவாலயத்தில் 'சமய ஒழுக்கம்' என்பதுபற்றி ஒரு சொற்பொழிவு செய்தார். இவர் மேலைநாடுகளின் அங்கீகார முத்திரை பெற்று மீண்டு தாய் நாட்டிலே முதன்முதல் ௧அ௯எ ஜனவரி மாசம் அடிவைத்த இடத்தைக்குறிக்கும் ஞாபக ஸ்தம்பம் ஸ்ரீபாஸ்கர சேதுபதியால் நாட்டப்பெற்றது. அப்போது விவேகானந்தர் பேசுகையில், "நமது தாய் நாட்டின் பொருட்டும் மதத்தின் பொருட்டும் அடியேன் செய்த காரியத்தில் ஏதேனும் ஒரு சிறிது நன்மை யிருக்குமாயின், அதற்காக யாவரும் இராமநாதபுரம் சேதுமன்னருக்கே கடன்பட்டவராவர்" என்று கூறினர். இது கேவலம் பணிவுரையன்று; உண்மையும் இதுவே. விவேகானந்தரை ஈன்ற பெருமைதான் வங்கநாட்டிற்கு உரியது; அவரைக் கண்டுபிடித்த பெருமை தமிழ்நாட்டிற்கே—அதிலும் விசேஷமாக இராமநாதபுரம் ஜில்லாவிற்கே—உரியது. வங்கநாட்டு நரேந்திரநாத தத்தரை, விவேகானந்த சுவாமிகளாக உலகினுக்கும் தாய் நாட்டிற்கும் வழங்கிய வள்ளன்மை செந்தமிழ்த் தென்பாண்டிநாட்டின் பகுதியான இராமநாதபுரம் ஜில்லாவிற்கே உரியதாகும். மேலை நாடுகளில் புகழ்சூடி மீண்ட பிறகும் வங்க நாட்டைப்பார்க்கிலும் சென்னை மாகாணமே விவேகானந்தரது வாக்குவன்மையில் ஈடுபட்டு, அவரதுஉபதேசங்களை அமுதமாகப்பருகியதென்னலாம்.

விவேகானந்தர் மறுபடியும் சீமைக்கும் அமெரிக்காவிற்கும் சென்று, சான்பிரான்ஸிஸ்கோவில் வேதாந்த சங்கம் ஒன்று ஸ்தாபனம் செய்தார். ஆனல் இதற்கு முன்னரே, "இராமகிருஷ்ண மிஷன்' என்ற சங்கம் இந்தியாவில் நிலையிடப் பெற்றது. இச்சங்கத்தார் ஆற்றிவரும் பஞ்ச நிவிர்த்தி முதலிய சமூக சேவைகளை அனைவரும் அறிவர்.

சுவாமி விவேகானந்தர், ௧௯௦௨-ம் வருஷம்—அதாவது இற்றைக்கு சுமார் இருபத்துநாலு ஆண்டுகட்கு முன்னர்—தமது முப்பத்தொன்பதாவது வயதில் காலம் சென்றார். இவர் ஓர் உண்மையான கர்மயோகியாக விளங்கினர். இவர் வாழ்க்கை,

தியாகத்தால் இழைக்கப்பெற்றதோர் அருங்கலமாக விளங்கியது. இவர் ஓர் வீரபுருஷர்—இயற்கை யரசர்—மக்கள் உள்ளத்தை முடிசூடாது ஆண்ட மன்னருள் ஒருவர். இவரது உபதேசமும், வாழ்க்கையைப்போல், தியாகத்தினையே தழுவிப்படர்ந்தது.

இந்துமக்களின் பிராணாதாரம் மதமே என்பதை விவேகானந்தர் நன்குணர்ந்திருந்தார். எனவே இந்து சமயத்தைத்தழுவி, நாட்டுக் காதலும் விடுதலைக்காதலும் தியாக உணர்வும், உயர்ந்த லட்சியங்களும் நமது பண்டித—பாமர மக்களுள் நன்கு பரவுதல் வேண்டுமென்று விவேகானந்தர் விரும்பினர்.

> சமயமென்பது வெளிச் சடங்கன்று. தூய்மையற்ற உள்ளத்தோடு பிறருக்குத் தத்துவோபதேசம் புரிய வருவோரின் கதி துர்க்கதியே. அந்தர்முக உபாசனையும் அகத்தூய்மையுமே உண்மையானவை. இவையின்றி, இவற்றின் அடையாளமாகிய வெளிப்பூசனைகளால் மாத்திரம் பயன் ஒன்றுமில்லை. தீர்த்தமாவது பரிசுத்தப் பொருள்களும் புண்ணிய புருஷர்களும் நிறைந்துள்ள தலம். அயோக்கியர் மலிந்த இடத்தில் ஆயிரம் கோவில்கள் இருந்தாலும், தீர்த்த மகிமை போய்விடும். உபாசனையின் சாராம்சம் சித்த சுத்தியும் பரோபகாரமுமேயாகும். வறியோரிடத்தும், மெலிந்தோரிடத்தும், நோய்வாய்ப்பட்டோரிடத்தும், எவன் சிவபெருமானைத் தரிசிக்கின்றானோ, அவனே உண்மையான சிவபக்தன்.

இங்ஙனம் இராமேசுவர ஆலயத்தில் தாம் செய்த பேருரையில் விவேகானந்தர் கூறியுள்ளார். இதுதான் விவேகானந்தரது இந்துசமயம்—இந்து தர்மம். "ஜாதிமதகுல பேதமின்றி ஏழை மக்கள்பால் சிவ ஸ்வரூபம் கண்டு, பாடுபட்டுப் பணியாற்றுவோரிடத்தில், சிவபெருமானுக்கு உண்டாகும் அன்பைப்போல் திருக்கோயில்களில் மாத்திரம் சிவனைக்காண்பவரிடத்தில் அப்பெருமானுக்கு அன்பு உண்டாவதில்லை." இங்ஙனம் இராமேசுவரத்தில் ஸ்ரீ விவேகானந்தர் கூறிய நல்லுரை பொன்னெழுத்துக்களில் பொறித்துக்கொள்ளத் தக்கது.

பிரிந்து நிற்றலே நம் வீழ்ச்சிக்குக் காரணம். நாம் வெளிநாடுகண்டு விருத்தி அடையவேண்டும். மேற்றிசையிலிருந்து

தொழில்—முயற்சி—நாகரிகத்தின் நல்ல அம்சங்களைக் கைக் கொண்டு, அவர்களுக்கு நமது ஆன்ம ஞானத்தை உபதேசித்தல் வேண்டும். 'உயிர் இருப்பதற்கு அடையாளம் ஓங்கிப்பரவுவதே யாகும். இல்லாவிடில் இருந்த இடத்திலேயே இருந்து வளர்ச்சி யின்றி அழுகி நாற்றமெடுத்து அழியவேண்டியதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை." இவ்வாறு விவேகானந்தர் கூறியுள்ளார். இதுவே விவேகானந்தரது பேருரைகளின் சாராம்சம். "விழிமின்! எழுமின்! எழுந்து வரங்களைப் பெறுமின்! அறிமின்!" என்று முழங்கும் வேதகீத அமுதமே விவேகானந்தரது வாழ்க்கையிலும் உபதேசங்களிலும் ஜீவநாதமாக ஒலித்தது. "அச்சமற்றவனாயிரு. உன் உடல் பொருள் ஆவியினை உன் தாய்நாடு வேண்டி நிற்கின்றது"—என்று இளைஞர்களை நோக்கி விவேகானந்தர் உபதேசம் செய்தார்.

> மிகத்தாழ்ந்த சாதியானும் அறிவிலியும் ஏழையும் எழுத்தறியாதவனும் தெருப் பெருக்குவோனும் பறையனுங்கூட உன் இரத்தத்திற் சேர்ந்தவன் என்பதையும் உன் சகோதரன் என்பதையும் மறவாதே. ஓ வீரனே! தைரியமாயிரு; நீ இந்தியன் என்பதைப்பற்றிப் பெருமை பாராட்டு. "நான் இந்தியன், ஒவ்வொரு இந்தியனும் என் சகோதரனே" என்று சொல்லுவாய். கல்லாத இந்தியனும் ஏழை இந்தியனும் பிராமண இந்தியனும் பறைய இந்தியனும் எல்லாரும் என் சகோதரரே" என்று பறைசாற்று. ............"இந்தியரே என் சகோதரர். இந்தியர்களே என் உயிர். ..............இந்திய ஜனசமூகமே நான் பிறந்து வளர்ந்த தொட்டில், என் யௌவனத்தின் சிங்காரப் பூங்காவனம்; என் மூப்பின் புண்ணிய தபோவனம்"—என்று பெருமையோடு முழக்குவாய். சகோதரா! "பாரத பூமியே எனக்குச் சிறந்த சொர்க்கம்! இந்தியாவின் க்ஷேமமே என் க்ஷேமம்" என்று தியானம் செய்து, "அன்னையே! எனக்கு ஆண்மையருள்வாய்! என் பலவீனத்தைப்போக்கி, என் பேடித்தனத்தை நீக்கி, என்னை ஆண்மகனாக்கு" என்று அல்லும் பகலும் பிரார்த்தனை செய்.

இதுதான் விவேகானந்தர் இந்திய இளைஞர்க்குச் செய்துள்ள தர்மோபதேசம். இவ்வுபதேசத்திலே விவேகானந்தரது ஜீவநாடி துடிதுடிக்கின்றது.

விவேகானந்தரது தேசபக்தியும் மதபக்தியும் சங்கமமாகி ஒரே ஞானகங்கையாக அவரது வாழ்க்கை வாயிலாகவும் உபதேச வாயிலாகவும் பெருகிவருகின்றன. இந்த ஞானானந்த வெள்ளத்திலே மூழ்கி, நம் தமிழ் இளைஞர், தளர்வு நீங்கப்பெற்று, நாட்டுப் பணிக்குரிய உற்சாகமும் ஊக்கமும் பெறுவாராக. (பி. ஸ்ரீ.)

---

# இந்துமக்களின் லட்சியம்.

ஒரு காலத்தில் இந்தியா, உலகத்தின் புண்ணிய பூமியாக இருந்தது. சீனாவிலுள்ள பண்டிதர்கள் இந்தியாவிற்கு வந்து, இந்நாட்டில் வளர்ந்து வந்த அறிவுச் செல்வத்தைப் பங்கிட்டுக் கொண்டு சென்றார்கள். பழைய கிரீசு தேசத்திலிருந்து அறிஞரும் அன்பரும் இங்குவந்து பழைய உலகின் ஞான குருவாக விளங்கிய பாரத மாதாவை வாழ்த்தி வணங்கிப் புதிய உயிரும் புதிய ஒளியும் பெற்று மீண்டார்கள். அந்நாளில் நாகரிகத்திலும் புலமையிலும் இந்தியா இமயமலைபோல் விண்ணில் முடி தாக்க நிமிர்ந்து நிகரற்றதாக விளங்கியது.

பழைய கிரேக்க ஞானியான பிதாகரஸ் என்பார் இந்தியாவிற்கு விசேஷமாகக் கடன் பட்டிருந்தார். பிர்ரோ என்ற கிரேக்க அறிஞர் எகிப்து முதலிய நாடுகளில் பிரயாணம் செய்தார். கிரீசுக்கு மீண்டதும், "உமக்கு இவ்வளவு ஞானம் எங்கிருந்து கிடைத்த"தென்று அவரைக் கேட்டார்களாம். "இந்தியாவிலிருந்து" என்று பிர்ரோ விடையிறுத்தார். இந்தியாவிலே பிர்ரோ, ஓராற்றங்கரையில் தியானத்தில் ஆழ்ந்திருந்த ஒரு சாதுவைச் சந்தித்து, அவரிடம் ஞானம் பெற்றனராம். மகா அலெக்ஸாந்தர் கீழ்நாடுகளில் படையெடுத்தபோது, அரிஸ்டாடல் என்னும் தத்துவ ஞானியார் "இந்தியாவிலிருந்து எமக்கு ஒரு ஞானி கொண்டுவரவேண்டும். இதுவே நான் உம்மை வேண்டுகின்ற பெரும் பொருள்" என்று அலெக்ஸாந்தரை நோக்கிக் கூறினர். இந்தியா பண்டை நாளில் பொருட்

செல்வத்திற்கும் அறிவுச் செல்வத்திற்கும் ஒருங்கே பேர்போனதாக இருந்தது. இந்தியா முன்னாளில் செல்வப் பொருளினும் அறிவுப் பொருளையே சிறந்ததெனக்கருதியது.

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்,
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன் தேசமல்லால் சிறப்பில்லை; கற்றோர்க்குச்
சென்ற இடமெல்லாம் சிறப்பு.

இவ்வுண்மையினை நெடுங்காலமாக இந்தியா அனுபவவாயிலாய் அறிந்திருந்தது. அரசர்கள் அறிஞர்களின் உதவி பெற்று அரசியல் நடத்தினர். முடிமன்னர்களையும் சக்கரவர்த்திகளையும் கண்டித்து அவர்களுக்கு நல்லறிவு கொளுத்தும் அதிகாரம் அறிஞர்களுக்கு இருந்தது. இந்திய நாகரிகம் மகோந்நத நிலையுற்றிருந்த காலத்தில், உண்மையாக நடைபெற்ற ஆட்சி முடியாட்சியுமன்று, குடியாட்சியுமன்று—அறிஞராட்சியே யாகும்.

உலகிலுள்ள நாடுகளெல்லாம் செல்வத்தையும் அதிகாரஆடம்பரங்களையும் பெருக்க முயன்றுவந்தன. இந்தியாவோ ஆன்மசக்தியும் புலனடக்கமுமே அழியாநிதியென மதித்தது. இந்தியாவில் மதமே, அறிவுக்கலைகளுக்கும் இசை சிற்பம் ஓவியம் ஆதிய நுண்கலைகளுக்கும் தாயாக இருந்தது. இந்தியாது தத்துவ சாஸ்திரத்தையும் இலக்கியத்தையும் கல்விமுறைகளையும், அரசியல் துறைகளையும், வாழ்க்கையின் பல வேறுபகுதிகளையும் ஊடுருவி நின்று ஒளிபுறச்செய்தது இந்தியாவின் சமயஞானமேயாகும். "அனைத்துயிரும் ஒன்றே"—என்னும் அடிப்படையிலேயே இந்தியர் தம் வாழ்க்கை முறைகளையெல்லாம் அமைக்கலாயினர். இதுவே இந்து மக்களின் பேரிலக்காக இருந்தது.

இப்பெரிய லட்சியத்தை நாம் இன்று நம்சமுதாயவாழ்க்கையில் எவ்வாறு பயன்படுத்துதல் கூடுமென்று பார்ப்போம். தென் இந்தியாவில் பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் பிணக்கும், வடநாட்டில் இந்துமுஸ்லீம் பிணக்கும் பாரதமாதாவின் பொன் மேனியைப்புண்ணாக்கிவருகின்றன. அரசியல் விஷயங்களிலாவது இந்துக்களும் மகமதியரும் ஒன்றுபட்டு அன்னியாட்சியை எதிர்த்து நிற்க வேண்டுமென்று தேசியவாதிபர் தம்மாலியன்றவரை பொது

மக்களுக்கு உபதேசம் செய்து பார்த்தார்கள். இது பயன் படாமற்போனதோடு, இந்துசமூகத்திலும் அரசியல்—நோக் கோடு பிளவுகள் தோன்றியுள்ளன; உலகமெலாம் ஒருயிராகி நின்ற இறையொளியின் அம்சங்களாகப் பல்வேறு சமயங்களும் கருதப் பெறல் வேண்டும். இந்துசமூகமாகிய இல்லத்தை, எண்ணிறந்த சுவர்களெழுப்பிச் சின்ன பின்னம் செய்யும் பொய்மைச் சாதி பேதங்கள் ஒழிதல் வேண்டும். பார்ப்பன இந்தியன், வேளாள இந்தியன், வைசிய இந்தியன், மகமதிய இந்தியன், கிறிஸ்திய இந்தியன் எல்லா இந்தியரும் ஒரே இறையுயிரின் அம்சங்கள்; ஒரே அம்மையப்பனின் குழந்தைகள்—என்ற சர்வசாதிய சர்வ சமய சமரச நோக்கே ஒற்றுமைபுணர்வின் அசையாத அடிப் படையாக அமைதல் வேண்டும்.

இன்று சுயராஜ்யத்திற்காகப் போராடுகிறோம். இதன் நோக்கம் என்னே? அன்னியன்மீது நமக்கு விரோதமில்லை. வெள்ளைமக்களும் இறையுயிரின் அம்சமேயாவர். வெள்ளை யருள்ளும் ஐரோப்பிய நாடுகளிலே, பரஸ்பரவிரோத உணர்வு காணப்படுகின்றது. சமரச லட்சியமே, தொழிலாளி—முதலாளி மார் சண்டைக்கும், செல்வர்—ஏழையர் பூசல்களுக்குங்கூட மருந்தாகும். (பி. ஸ்ரீ.)

---

# கோமதன்.

## மில்டன் (Milton) என்னும் ஆங்கிலப் புலவராலியற்றப்பட்ட கோமஸ் (Comus) என்னும் வேடக்கூத்தின் (Masque) மொழி பெயர்ப்பு.

### விநாயகர் துதி.

சிந்தா மணியென்னச் சித்திதரும் புத்தமிழ்தே
வந்தே புனைப்பணிபு மாநிலம்—துய்ந்திடச்செய்
குந்தா கராவடியேன் கூற்றுமிகச் செம்மையுறத்
தந்தருள்வா யுன்கமலத் தாள்.

## I. காட்சி.

### இடம், ஒரு மரமடர்ந்த காடு.

### காவற்றெய்வத்தின் வருகை.

அணிநிகழ் கற்பகத் தண்டலை யமுகும்
மணிகளும் பொன்னும் வயங்கொளி சிறக்கும்
மாளிகை யமுதும் பிறவும் மலிந்தே
யிமையா நாட்டத் திமையவ ரானோர்
தமக்குறை விடமாய்ச் சராசர மனைத்து
மின்ப துன்பம் பொருந்துதற் கிடனும்
பூவுல கென்னப் புகலுமிப் பேரிடந்
தன்னின் மேலாய்த் தயங்குபல காவதத்
தப்பா லாகும் பொன்னுல கதிலே
பொப்புயர் வின்றி யொளியுடன் விளங்கு
மிந்திரப் பேரோ னெழில்பெற மேவுஞ்
சுந்தரத் தின்பச் சுடர்பொற் கோயிலின்
வாய்தலின் மாடே மருவசி ரிடமே
யானமகிழ்ந் துறையு நல்லிட மாமால்;
பவம்பல சிறக்குமிப் பாரிடத் தெடுத்த
பவமகன் றதற்பின் பகவன தாணையின்
வாத்தகு பயன்றனை மதித்தில ராகி
யுலக சிந்தனையி னூடுபுக் கழுந்தி
நலந்தவிர் வினைபல நாடொறும் புரிந்தே
தம்வா னுனைத் தாமாய்க் குனரே
யிங்கிவர் தம்முளு மிறைபருள் செய்யும்
பங்கமி லறநெறிப் படர்குவ ராகி
மாசகல் வானின் பதத்திடை மேவுந்
தேசுடை யோருஞ் சில்லோ ருண்டே
யித்தகை நெறிப்பட ரியற்கையி னோர்தமக்
குற்றிடத் துதவு நோக்குட வன்றே
யுயரிய வானத் தும்பரி னீங்கி
மயல்செறி தருமிம் மண்ணிடை வந்தே
னன்றெனில் யானுமென் னுறையுளி னகன்றே

றின்றுபல் பாவத் தொழிற்குறை விடமா
மித்தலத் திடையே யிளிருவ னல்லேன்;
இவ்விடை யென்வர வெற்றுக் கென்னில்
விண்ணுல கென்றும் மண்ணுல கென்றும்
எண்ணுறு பாதலத் துலகம தென்றுஞ்
சொல்லப் படுமித் தொல்லுல கிவற்றைப்
பல்பெருஞ் சிறப்பிற் பாக சாதனனும்
வருணனுந் தர்ம ராசனும் வான்முறை
பிரித்தன ரவருட் பெரும்பெயர் வருணன்
உவர்க்கடன் முதலா யுற்றுள நீரின்
நிலைகளி னரசுமந் நீர்க்கட னடுவண்
விலையிடற் கரிதாய் விளங்குபன் மணியின்
கணநிரைத் தென்ன வமைந்தொளி காலு
மணிபல வயங்குந் தீபத் தரசுந்
தனக்கெனக் கொண்டே தன்கீழ் வாழுஞ்
சிறுசிறு தேவர் தங்கட் கெல்லாந்
திறம்பெற நடாத்து முரிமையுந் தேசுஞ்
செங்கோலும் பிறவுஞ் சீர்பெற வளித்தே
பற்பல கூறாய்ப் பகுத்தனன் கொடுத்தா
னங்கவற் றுள்ளே யழகினிற் றேசிற்
பங்கமி லுயர்ச்சி மிக்க பான்மையில்
அருளி லன்பி லறமது தன்னிற்
பொருவிறந் ததுவாய்ப் புவியினுக் கணியாய்
மாங்கனி நிகர்த்த வடிவுடைத் தாகித்
திகழ்தரு மிந்தத் தீவகந் தன்னை
நெறிதரு நீனிறக் குஞ்சியின் சிறப்பார்
மறுவறு தேவர்க்கு வகுத்தளித் தனனால்
அங்கவ ருள்ளும்,
வீரமுந் தேசும் விளங்குபல் சிறப்புஞ்
சேரப் படைத்துள சீர்மையிற் பலரும்
பிரபுவென் றுரைக்கும் பெரியவன் றனக்கே
கதிரவன் படுதிசைக் கட்பொலி கின்ற

வலந்தரு மாசை மகிழ்வுட னளித்தான்
அந்நகல் லரசன் தந்நகன் மக்கள்
தந்தைதன் மேன்மைத் தகைபெறு நாளின்
விழாவணி காண விரும்புற் றனராய்
வருகுவ ரானா ரவர்வரும் வழிதான்
இருள்செறி யடவியி னிடத்த தாகியும்
நெருங்குபன் மரங்கள் அவன்றி நிறைந்தே
நேர்வழி காண்டற் கரிய தாகியும்
அச்சஞ் செய்புந் தன்மைய தாகியும்
பொருந்திய தவ்வழிப் பொருந்துமிச் சிறியோ
ரின்னிய விளமைப் பாலக ரிவர்தாம்
இவ்வழி யிடையே துன்பம தடைவா
ராதலின் யானு மிந்திர னாணையி
னாதர வவர்க்கே யளித்தலை நாடி
விரைவின் மேவினன் யானுரை செய்யும்
பொருளுரை தேறும் இப்பூவுல கிடையே
கவியி லாயினுங் காதையி லாயினு
மவையி லாயினு மல்லிடத் தாயினும்
காணாக் கேளாக் கற்பனை சொல்வேன்;
அதியி லணிபெறு திராட்சக் கனியிற்
பேதைப ருளமகிழ் வெய்தப் பேணும்
விடஞ்செறி மதுவை விருப்புடன் வடித்த
மடஞ்செறி மனப்பா கேச தேவன் ( Bacchus )
அம்பியிற் சென்றுழி ஆயிடை யுறைவோ
ரயற்புலத் தன்னி லடிமையென் றிவனை
விற்றிட விரும்பின ரங்கதைத் தனது
கற்றறி விஞ்சையிற் கண்டன னாகி
மாயைகள் பலவு மாண்புட னியற்றி
யாயவர் தம்மை நீரிடை யாழ்த்தினன்;
அங்கதன் பின்ன ரம்பியோ டேகிச்
செங்கதிர்ச் செல்வன் றன்மக ளாகி
மாயையின் வலிசேர் மதுவினை யளித்தே
மானிடர் தமக்கு மால்பல வியற்றுஞ்

சரசி ( Circe ) யென்னும் பெண்கொடி சரிக்குந்
திறன்மிகு தேயந் தன்னிடைச் சேர்ந்தான்
அவ்விடைச் சரசியு மாங்கவன் றனது
வதன காந்தியில் மணிநிறக் குஞ்சியில்
மாரனைப் பழிக்கும் வனப்பினிற் றேசின்
மாலுற் றனளா யவன்றனை மணந்தே
தாயினைப் பழித்துந் தந்தையை வென்ற
மாயைக ளுணர்ந்த மைந்தனை யீன்றே
கோமத ( Comus ) னென்னு நாமமுஞ் சூட்டிச்
சீர்மிக வளர்த்தனர் செறிதரு குமாரனுங்
கேல்டிக ( Celtic ) மென்னுங் கிளரொளி நாட்டும்
பல்வளம் பெருகுமை பேரிய ( Iberian ) நாட்டும்
அலைந்து திரிந்தன னாகி யதன்பின்
கலந்து பன்மரங் கஞலிய சூழலின்
இருண்மிகச் செறிந்தே யிடர்மிகு மிந்த
அடவியி னூடே வதிந்தன னாகித்
தாய்தொழி லதனைத் தான்மேற் கொண்டே
வழிவரு வருத்தந் தன்னொடு மாங்கே
வருமவர் தமக்கு மயக்கஞ் செய்யும்
மதுமிக நிறைந்தே வளரொளி பரப்பும்
பாத்திரந் தன்னைப் பாங்குட னளிப்பன்
அவ்விடை நீர்நசை வேட்கையி னலந்தோ
ராதரத் துடனே பருகுவ ரதனைப்
பருகிய வுடனப் பானமுந் தனது
கரும மதனைக் கருத்துட னியற்றும்
ஆங்கது காலை யழகொடு விளங்கும்
பூங்கம லத்தைப் புவிபுகழ் மதியைப்
பொருவிடு மென்றே யான்றவர் புகலுந்
திருமிகு முகமுஞ் சீரில தாகிக்
காடி செந்நாய் கடும்புலி தகரே
யாதிய விலங்கின் முகநிகர் வனவாய்ச்
செறியவு முடலம் முன்போற் றிகழவுந்
தமக்குறு கேட்டைத் தாமுண ராராய்

தமதியற் சுற்றமு நாடுந் தகைமையும்
பிறபல சிறப்பின் பெருமையு மறந்தே
சிறுமை சேர்தரு மின்பந் தன்னை
நச்சி நாடொறு முழல்குவ னன்றே
யாதலி னறநெறிச் சார்புறு மாந்தர்
திதக லாவிந் நெறிவயிற் சேரின்
னனிமிக வருந்துவ ரதனால் யானும்
அனையவர் தமக்கே யாதர வளிக்க
விண்ணிடை நின்றும் வீழ்தரு முற்கையிற்
றோன்றுவ னந்தத் தோற்றம தேய்ப்ப
இவ்விடைத் தோன்றின னென்வர விதுவால்?
இவ்விடைப் பொன்மய மாகவிளங்குந்
தெய்விக வுடையாற் றேசுறு மெனது
வடிவினை மறைத்தே வேய்ங்குழ லதனை
லிசைபல விசைத்தே மாமுங் கல்லுங்
கசிந்துரு கிடவுங் காற்றுந் தனது
பேரொலி தன்னைப் பேணுவ தின்று
யமைதியுற் றிடவுஞ் செய்திடு மந்தக்
கோவைசி யன்றனைப் பொருவுநற் கோலம்
புனைந்தன னுயிப் பொலிவுறு மலையி
லென்றுழி லியற்று மியல்புடை யேன்போ
லிருந்திடல் வேண்டு மன்றெனின் மைந்தர்
ஐயம துறுவ ராதலி னன்றே;
ஆஅங் கவ்விடைப்
பகைசிறந் துள்ளோர் படர்தரு மோசை
செவிப்புலந் தன்னிற் சேர்தலி னியானுங்
கண்ணிடைக் காட்சிக் கருமைய னாகி
யுற்றிட லேயிவ் வுழைச்சிறந் தருவே.

இயற்கை மகவு.



# மந்திர ஜெபம்.



மந்திர ஜெபஞ் செய்தல், சைவசமயிகள் பால், தொன்று தொட்ட வழக்கமாக நின்று நிலவிவருகின்றது. "உலகம் பல விதம்" என்ற கொள்கைக்கிணங்க, நம் நாட்டார் பலரும், மந்திர ஜெபத்தால் பெரும் பயனுண்டென்பாரும், ஒழுக்க நெறியிலேயே வாழ்ந்து வந்தாலே போதும் மந்திரஜெபஞ் செய்வதாற் பிரயோசன மொன்றுமில்லை யென்பாரும், பழைமையாயமைந்த மந்திரங்களையே ஜெபிக்கவேண்டுமென்னும் நியதியில்லை, தாம் விரும்பிய எதையும் மந்திரமாக ஜெபிக்கலாம் என்பாருமாகப் பலதிறப்பட்ட நோக்கமுடையாராயிருக்கின்றனர். இவ்விஷயமாக என் சிற்றறிவுக்கெட்டியதைக் கூறுதலே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

"மந்திரம்" என்னும் பதத்திற்கு நினைப்பவனைக் காப்பது என்பதே பொருளாகும்.

"நிறை மொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப"

என்றார் தொல்காப்பியனார்.

இச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர், "சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்க, சொல்லும் ஆற்றலுடையோராவார் ஆணையாற் கிளக்கப்பட்டு மறைத்துச் சொல்லப்படும்சொற்றொடர்களெல்லாம் மந்திரமெனப் படும்" எனப் பொருளுரைத்திருக்கின்றார்.

ஆகவே மந்திரமானது, சொல்லிய சொல்லின் பொருளைக் குறைவின்றிப் பயக்கும் ஆற்றலும், சொல்லப்படுங்காற் பயனளிக்க வல்ல ஆற்றலும் உடையதாகியும், வசன நடையினவாகிய சொற்றொடர்கள் போலன்றி, கூர்த்த மதிகொண்டு நுணுகி யாராயவேண்டியதான கவித்துவ லக்ஷணம் அமையப்பெற்றதாகியும் இருத்தல் வேண்டுமென்பது துணியப்பட்டது.

குறித்த பொருளைக் குறைவறப் பயப்பது மாத்திரமன்றிப் பிறிது பொருள் பயவாமலுமிருத்தல் வேண்டும். ந, என்னும்

எழுத்து இல்லை யென்னும் பொருளைப் பயப்பது ஆதலால் அதனை முதலில் வைத்து "நமசிவாய" எனப் பஞ்சாக்ஷர ஜெபஞ் செய்யலாகாதென்றும் "சிவாயநம" என ஜெபித்தல் வேண்டுமென்றும் கூறிய ஆன்றோருரையும் ஈண்டுக் கவனிக்கத் தக்கதே.

மந்திர ஜெபமானது, நாவுக்குப் புனிதத்தைக் கொடுக்க வல்லது. இடருற்ற காலத்துதவவல்லது. அச்சந்தவிர்ப்பது. அந்தியகாலத்துறு துணையாயுள்ளது. இங்ஙனமெல்லாம் இருத்தலி னலன்றோ நமது சமய குரவராகிய திருநாவுக்கரசு சுவாமிகளும்,

"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே

என்றும்,

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையால்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே

என்றும்,

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற்பி ராரென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே

என்றும்,

திருவாய்மலர்ந்தருளினர்? மந்திரமென்பது பஞ்சாக்ஷரம் ஷடாக்ஷரம் முதலான மந்திரங்கள் மாத்திரமன்று. நமது தமிழ்வேதங்களிலேயே எத்தனையோ மந்திரங்களை நாம் காணலாம். நமசிவாய என்பது சிவமூலமந்திரமாதலால் நமது சுவாமிகள் அம்மந்திரத்தையே விதந்தோதினர். அதனுள்ளே மற்றைய மந்திரங்களெல்லாம் அடங்குமெனபதான்றவர் கொள்கையாகும்.

மந்திர ஜெபத்திலே சித்திபெற்றோர் மந்திரமாகிய அந்த அமிர்தத்தையே தமக்குத் துன்பம் வந்தகாலத்தும் உபயோ

கித்து நன்மையடைகின்றனர். இதற்கோருதாரணமாகத் திருநாவுக்கரசு சுவாமிகளுடைய தேவாரப்பதிகத்திலுள்ள ஓர் மந்திரத்தையீண்டுவிளக்கிக்காட்டுவாம்.

சமணர்கள் நீற்றறையினுள்ளே, நமது சுவாமிகளை அடைத்த காலையில் அவர் ஈசனைநோக்கி,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீச னெந்தை யிணையடி நீழலே"

என்றுபாடுகின்றார்.

நீற்றறையானது தேகத்தை வதைக்கத்தகுந்த வெப்பம் பொருந்திய ஓரிடமாகும். ஆகவே, அதனுடைய வெப்பத்தை மாற்றுதற்குக் குளிர்ந்த பொருட்களே வேண்டியன.

நமது புராணேதிகாசங்களிற் கூறப்பட்டிருக்கும் யுத்த முறையைக் கவனிக்குங்கால் இதனுண்மை புலனாகும். புராணேதிகாசங்களிலேஇருவீரர்களுடையசண்டையைக்குறிக்குமிடத்து,ஒருவன் நாகாஸ்திரம் விட்டான், அவன்பகைவன் கருடாஸ்திரம் விட்டான், பகைவன் அக்கினி யாஸ்திரம்விட மற்றையவீரன் வருணாஸ்திரம் விட்டான், என்று இந்த முறையாக ஒவ்வொரு அஸ்திரங்களையும் அதற்கு எதிரான அஸ்திரங்களைப் பிரயோகித்து அவைகளின் வலிமையைக் குறைப் பார்களெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதுபோலவே நமது சுவாமிகளும் தமது மந்திரத்தின் வலிமையைக்கொண்டு நீற்றறையின் வெப்பத்தைப் போக்குகின்றார். நீற்றறையாகிய அக்கினியாஸ்திரத்துக்கு ஈசனிணையடி நீழலாகிய வருணாஸ்திரத்தைப் பிரயோகிக்கின்றார். தமது மந்திர சக்தியால் மேலேயெழும்புகின்றார். இந்த நீற்றறையின் வெப்பத்தைத் தமது தேகம் அநுபவியாதிருக்கும்படி ஐம்புலன்களையும் மனதிலே யொடுங்கவைத்து அந்த மனத்தின்வழியாக ஈசனிணையடி நீழலிற் சேர்க்கின்றார். பின்னர் தம் மனோபாவனையால் ஐம்புலன்களும் இன்புற்று நுகரும்படி வீணாகானத்தையும் மாலைமதியத்தையும் வீசும் இளந்தென்றலையும் இளவேனிலையும் காட்டுகின்றார். அந்த நீற்றறையை வண்டினம் சப்திக்குமோர் பொய்கை

யாகப்பாவித்து அதன்கண்ணே இன்பத்துடன் இருக்கின்றார். இதுவன்றோ மந்திர ஜெபத்தின் பெறுபேறு?

இந்த உயரியநிலைமையில் இருப்பதற்கு இவர், உபயோகித்த மந்திரம் பஞ்சாக்ஷரமே! இதனை,

"நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே,"

என்னும் அடுத்த கவியாலினிது உணரலாம்.

இப்பெருந்தகையார் எந்த மந்திரத்தை யுபயோகித்தாலும் இவருடைய மனோபாவனையாகிய "மாசில் வீணையும்" என்னும் முதலையுடைய கவியே எம்போல்வார்க்கு மந்திரமாகுமன்றோ?

மந்திரஜெபமானது புலன்களைப் பொறிவழிச் செல்லவிடாது மனதிலே யொடுக்கி ஏகசிந்தனை யுடனிருந்து செய்யப்பெறுதல் வேண்டும். அன்றியும் பூரண விசுவாசத்துடனும் செய்யப்படுதல் வேண்டும்.

ஹிரண்யனுனவன் (தனது சத்துருவாகமதித்து) ஸ்ரீமந் நாராயண மூர்த்தியையே சதாசிந்தித்துக்கொண்டு இருந்தமையால் உயர்கதிபெற்றனனெனப் புராணங்கூறுகின்றது. ஆகவே, நாமும் ஈசனிணையடிப்போதை மந்திர ஜெபத்தினுல் மறவாது சிந்தித்து வருவோமானுல் நமது தீவினைகள் கதிரவன் முற்பனி போன்று நீங்க நாம் பரிசுத்தர்களாவோம்.

இயற்கை மகவு.

---

# புத்தப் புதிது.

(முன் தொடர்ச்சி.)

## குட்டிச்சாத்தன் A. B. C. D. E. F. Etc. எழுதியது.

## தமிழ் நாட்டின் நிலைமை.

தமிழ் நாடுதான் உலக உற்பத்திக் காலத்தில் முதன் முதலில் தோன்றியிருக்க வேண்டுமென்று தற்கால ஆராய்ச்சியாளர்

கள் கூறி வருகிறார்கள். தவிர மதுரைத் தலபுராணமான திருவிளையாடலில் உலகத்தைக் கடவுள் படைப்பதற்கு முன்னதாக மதுரைமா நகரைப் படைத்து அதிலிருந்து கொண்டு மற்றையுலகத்தைப் படைத்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. அது எப்படியாவதிருக்கட்டும். பொதுவாகத் தமிழ்நாடு ஒரு சிறந்த நாடாக இருக்கிறது. இங்குள்ள செய்திகளை யறிந்துகொள்ள நமது தேவலோக ஜனங்கள் பெரிதும் விரும்புகிறார்கள். ஆதலால் தொடர்ந்து இதைப்பற்றிக் குறிப்புக்கள் எழுதிவரத் தீர்மானித்துள்ளேன்.

## தெய்வ பக்தி.

தமிழ் ஜனங்கள் தெய்வபக்தியை முக்கியமாகக் கொண்டவர்கள். தெய்வ பக்தியினாலேயே எந்தக் காரியத்தையும் சாதித்து விடலாமென்பதைத் தமிழ் நூல்கள் வலியுறுத்திக் கூறுகின்றன. தமிழ் நாட்டிலிருப்பது போல் கோயில்களும் தீர்த்தங்களும் ஐதீகங்களும் வேறு எந்த உலகிலுமில்லை. கோடி ரூபா செலவழித்தாலும் இப்போது கட்டமுடியாத அவ்வளவு பெரிய கோயில்கள் வானத்தை அளாவி எழுப்பப்பட்டிருக்கின்றன. அங்கு வைக்கப்பட்டிருக்கிற விக்கிரகங்கட்குக் கணக்கேயில்லை. தமிழ் நாட்டிலுள்ள கோவில்களைக்கணக்கிட முடியாது. சிவன் கோவில் பெருமாள் கோவில் தாம் பெரிய கோவில்களாக இருக்கின்றன. அவை ஆயிரக்கணக்கு. மாரியம்மன் காளி கறுப்பன் ஐயனார் கோவில்கள் பதினாயிரக் கணக்கில் இருக்கின்றன. பிள்ளையார் கோவில் லட்சக்கணக்கிலும் அடங்காது. இவைகளை விட மடங்களில் இருக்கிற விக்கிரகங்களும் படங்களும் எழுதிமுடியா. வீடுதோறும் படங்கள் பூஜிக்கப்படுகின்றன. சமாதிக் கோயில்கட்கு எல்லையில்லை. மொத்தத்தில் கணக்கெடுத்து பாகம் பிரித்தால் இரண்டுகோடி தமிழ் மக்கட்கும் ஆளுக்கு இரண்டு விக்கிரகம் கிடைப்பது நிச்சயம். இத்தனை தெய்வங்கள் இருந்தும் உண்மையான தெய்வபக்தி பூஜ்யந்தான்.

பெரிய கோயில்கட்கு ஏராளமான நிலங்களுண்டு. நெல் விளைகிற நன்செய் நிலங்களிலிருந்தும் மற்ற தானியங்கள் விளைகிற

புன்செய் நிலங்களிலிருந்தும் நவதானியங்களை ஏரொடு பண்டி யேற்றி இருநிலங்கிழியக் கொண்டுவருகின்றனர். ஆறுகாலம் எட்டுக்காலம் பூஜை நடைபெறுகிறது. நைவேத்தியத்திற்கும், மணியோசைக்கும் குறைவில்லை. இக் கோயில்களுள் வருஷத்தில் லட்சரூபாய் பொதுவாகச் செலவாகக்கூடிய கோயில்களு முண்டு. சில கோயில்களில் தரிசிக்க வருகிற ஜனங்களால் போடப்படும் உண்டியல் பெட்டியில் மட்டும் வருஷத்தில் ஒரு லட்சம் ரூபாய்க்குமேல் விழுவதுண்டு.

தமிழ் நாட்டு ஜனங்கள் தங்கட்குவருகிற கஷ்டங்கள் யாவற்றுக்கும் காரணம் தெய்வக்கோளாறுதான் என்று நம்புகிறார்கள். தலைவலி, காய்ச்சல் முதலிய சிறு நோய்கூடத் தெய்வத்தின் கோபத்தினால் தான் வருகிறதென்று எண்ணுகிறார்கள். அதற்காகக் கோவிலுக்குப் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார்கள். ஏறுக்குமாறாகச் சாப்பிட்டுவிட்டு வயிற்றுவலி தோன்றினால் அது தெய்வ குற்றம் என்று கருதி ஐந்துரூபாயை உண்டியலில் போடுவதைச் சாதாரணமாகக் காணலாம். இப்படியே தொழில் செய்தாலும், வியாபாரம் செய்தாலும், வேறுவகையில் பொருள் தேடவிரும்பினாலும், குழந்தை வேண்டுமானாலும், சுருக்கமாகச்சொன்னால் தேவைப்பட்டதற்கெல்லாம் கோயிலுக்குக் காணிக்கை போடுவார்கள். அபிஷேகம் செய்வார்கள். அர்ச்சனை செய்வார்கள். நைவேத்தியம் செய்வார்கள். திருவிழா நடத்துவார்கள். திருடச்செல்பவன்கூடத்திருட்டு வெளிப்படாதிருக்கும் பொருட்டுக் கோயிலுக்குப் பிரார்த்தனை செய்து கொள்வான். இத்தனையும் தெய்வத்தொடு வியாபாரமாக முடிகின்றனவேயன்றி அன்புக்காக—பக்திக்காகத் தெய்வத்திற்குச்செய்யும் காரியங்களாக இருக்கவில்லை. பணஞ்செலவாகிறது. கஷ்டப்படுகிறார்கள். என்றாலும் உண்மையான பக்தி பூஜ்யந்தான்.

இந்தக் கோவில்களைக் காத்துக்கொண்டு பலரிருக்கிறார்கள். இங்கு சில மடங்களிருக்கின்றன. அவைகட்கு இந்தக் கோயில்கள் சர்வ சுவாதீனம். கோவில்கள் அரசர்களால் கட்டப்பட்டுப் பரிபாலிக்க இந்த மடாதிபதிகளை ஏற்படுத்தினார்கள். இப்போது கோவில் சொத்துக்களும் வரும்படியும் இவர்களின்

ஆடம்பர வாழ்வுக்கு உபயோகப்படுகின்றன. இவர்களுடைய நடவடிக்கை தேவலோகத்திலுள்ள போக மக்களுக்குங் கிட்டாது. அவர்கட்குக் கற்பகவிருக்ஷம் கொடுப்பது போல இவர்கட்குக் கோயில் வரும்படி கொடுத்துக்கொண்டிருக்கிறது. தேவலோகத்தில் கிடைக்கின்றதைவிட நயமான போகம் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். பஞ்சமகாபாதகங்கட்குத் தாய்வீடாக இருக்கிற மடங்களும் இல்லையென்று சொல்லமுடியாது.

இரண்டாந்தரக் கோயில்களுக்குப் பலர் தருமகர்த்தாக்களாக இருக்கிறார்கள். தருமகர்த்தர்களாக இருப்பதற்கு முக்கிய காரணம் கௌரவமாக இருக்குமென்பதுதான். பரதெய்வபக்தி மேலீட்டினால் தருமகர்த்தராக விரும்புவது மிகக்குறைவு. தருமகருத்தர்கட்கு எந்த உத்தியோகஸ்தருக்கு எப்படி மரியாதை செய்து அவர்கள் தயவைப் பெறலாமென்பது முதற்கவலை. பின்னர் கோயிலிலுள்ள வேலைக்காரரை உபயோகப்படுத்திக் கொள்ளுதல் பிரசாதஞ் சாப்பிடுதல் முதலியன. சிலர் இந்தச் சில்லரை விஷயங்களை விரும்பாமல் டம்பமாகத் திருவிழா நடத்தி வருபவர்க்கு டம்போபசாரஞ் செய்வதில் முனைகிறார்கள்.

மூன்றாந்தரம் முழுமோசமானது. காளி கறுப்பன் முனியன் சாமுண்டி பேச்சி நொண்டி முதலிய எண்ணித் தொலையாத, எழுதிமுடியாத தெய்வங்கள் இந்த நாட்டின் மூலைமுடுக்கெல்லாம் நடப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கு அடிமைக் குடிகள் எண்ணற்றன. சிவாலய விஷ்ணுவாலயங்களைவிட இவற்றிற்குத்தான் மதிப்பதிகமிருக்கிறது. இவைகள் தாம் கண்கண்டதெய்வமென்று கருதுகிறார்கள். படிப்பில்லாத ஜனங்கள் தமிழ்நாட்டில் மிகுதியாதலால் இந்தச் சாமிகட்கு ஏற்றம் அதிகமாக இருக்கிறது. பக்தி சம்பந்தமான விஷயங்கள் பலவுண்டு. அவை பின்னர் தொடர்ந்து எழுதுவேன். (தொடரும்.)



# எல்லாவிடத்துங் கொலை தீது.



இந்தப் படத்தில் ஒரு ஆட்டுக்குட்டி பசும்புல்லை மேய்ந்து கொண்டிருக்கிறது. அதனைப் பலர், பல விஷயங்களுக்காக உயிர்க்கொலை புரிய விரும்புகின்றார்கள். ஒருவர், "யாகத்திற்கு வேண்டும்" என்று ஏட்டை விரித்துக்காட்டுகிறார். மற்றொருவர், "இதற்கு" என்று வயிற்றைத் தொட்டுக்காட்டுகிறார். வேறொருவர், "படைப்புக்கு" என்று பேழையைத் தூக்கிக் கொண்டு நிற்கிறார். இன்னொரு சுவாமியாடி, "சுவாமிக்கு" என்று அரிவாளை உயர்த்திக் கொண்டு நிற்கின்றார். இவ்வாறு இந்நால்வரும், முறையே, தேவ திருப்திக்காக யாகஞ் செய்ய வேண்டுமென்றும், மனித திருப்திக்காக அறுத்து அவித்துத் தின்ன வேண்டுமென்றும், பிதிரர் திருப்திக்காக வெட்டிப் படைக்க வேண்டுமென்றும், தெய்வ திருப்திக்காக உயிர்ப்பலியிடவேண்டுமென்றும்

"எனக்கு. உனக்கு" என்று சண்டையிட்டுக் கொள்ளுகிறார்கள்.

புலாலுண்போர்:—அன்பர்களே! நியாயமாக இந்த ஆட்டுக்குட்டி எனக்குத் தான் கிடைக்கவேண்டும். ஏனெனில், நீங்கள் எல்லோரும் வேறாகவுள்ள தெய்வம், தேவர், பிதிரர் முதலியவர்கள் பெயரைச் சொல்லிவிட்டு, அதை வெட்டி அவித்துத் தின்னப் பார்க்கிறீர்கள். ஆனால் நான் வஞ்சகமில்லாது நேரே, "வயிற்றுக்கு" என்று கேட்கிறேன். ஆதலால் அது நியாயமாக வஞ்சகர்களாகிய உங்களுக்கு உரியதல்ல.

படைப்பவர்:—நண்பர்களே! எல்லாத் தெய்வங்களுக்கும் தேவர்களுக்கும் மேலானவர்கள் நமது பிதிரர்களே யாவார்கள். நாம் நேரே வெட்டி அவித்துத் தின்பதைக் காட்டிலும், அவர்களுக்கு அவித்துப் படைத்துத் தின்பது மஹா விசேஷம். ஆகவே, இது எனக்கே உரியதாகும்.

சுவாமியாடி:—ஏ! மனிதர்களே! நீங்கள் மஹா வஞ்சகஸ்தர்கள். விழித்தது விழித்தாற் போலிருக்கையிலே, என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்களே! சபாஷ்!! நீங்கள் நல்ல பேர்வழிகள். தேவர்களும் பிதிரர்களும் சுவாமியினுடைய காலடித் தூசிக்கு ஆற்றுவார்களா? மேலும் சுவாமி பெயரைச் சொல்லி வெட்டிவிட்டு நீங்கள் தானே அதைப் புசிப்பவர்கள். ஆதலால் இது சுவாமிக்குத்தான் உரியதாகும்.

யாகஞ் செய்வோர்:—ஐயோ! காலம் கலிகாலமாய்ப் போன படியினாலேயே நீங்களெல்லோரும் இப்படிப் பேசுகிறீர்கள். உங்களுக்கு உண்மை விளங்கவில்லை. சிறுதெய்வங்களையும், பிதிரர்களையும் நமது வயிற்றப்ப தேவனையும் திருப்தி செய்வதைக் காட்டிலும், தேவர்களைத் திருப்தி செய்வோமானால் நாட்டிற்குப் பெருத்த க்ஷேமமுண்டாகும். ஆதலால் இது எனக்கே உரியதாகும்.

இஃதிவ்வாறாக, ஆட்டிற்கு முன்னர் நிற்கும் சிவனடியார் இந்நால்வரையும் நோக்கி, "எல்லாவிடத்துங் கொலை தீது" என்று இயம்பி, எந்தக்காரணத்தை முன்னிட்டும் எதற்கும் கொலை செய்

யக்கூடாது; கொலைத் தொழிலைப் போன்ற கொடிய செயல் வேறொன்றுமில்லை; எனவே, நீங்களெல்லோரும் இனிமேல் கொலைத் தொழிலினைக் கனவினுங் கருதாதீர்கள்; இந்த ஏழை ஆட்டுக்குட்டியைத் தொந்தரவு செய்யாது விட்டு விட்டுப் போங்கள்'' என்று உபதேசித்து, அவர்களைத் தத்தம் வீடுகட்கு அனுப்புகின்றார்.

(காரைக்குடி காரைச் சிவனடியார் திருக்கூட்டத் துண்டுப் பிரசுரம்.)

---

## கால-சக்கரம்.

தற்கால நாகரிகத்திற்கும் அருளொழுக்கத்திற்கும் விசேஷமான தொடர்பில்லை. அரசியல் முறைகள், கொலை தண்டம் ஆதியவற்றையே தழுவிப் படர்கின்றன. வாணிப முறைகள் தொழில் முறைகள், ஏழை மக்களையும் தொழிலாளரையும் இம்சித்துச் சிலர் கையில் குபேர சம்பத்தைக் கொட்டிக் கொடுக்கின்றன. கல்வி முறையோ அறிவை வளர்ப்பதே யொழிய, ஒழுக்கத்தை வளர்ப்பதில்லை. சமயமோ, பாமர மக்களிடம் மூட பக்தியாக மாறி, மதக் கொலைகளையுங்கூட ஆதரிக்கின்றது. படித்த வகுப்பினர், கொள்கையிலோ அனுஷ்டானத்திலோ இரண்டிலுமோ, நாத்திகராகி இம்சை நெறியினையே கைக் கொண்டுள்ளார்.

ஃ ஃ ஃ

"மன்னர்க்கு நீதி ஒரு வகை; பிற மாந்தர்க்கு, நீதி மற்றோர் வகை"—என்று துரியோதனன் கூறினான். இதுவே தற்கால நாகரிக அரசினர்தம் கொள்கையாகவுமிருக்கின்றது. ஒருவனைக் கொலை செய்தால், சட்டம் கொலையாளியைக் கொடுமையாகத் தண்டிக்கின்றது. ஆயிரம் பேரைக் கொல்பவனோ கொலையாளியல்லன்; போர் வீரனாகின்றான், முடி மன்னனாகின்றான். சாதாரண மக்கள் வஞ்சித்தால், அது வஞ்சனை தான். ஆனால் அரசினர், அமைச்சர், அதிகாரப் பெருந் தெய்வங்கள் இழைக்கும்

'வஞ்சனை' 'இராஜ தந்திரம்' என்னும் கௌரவமான பெயர் பெறுகின்றது. ஈன வயிறு படும் பாட்டில், ஒருவன் செய்யும் களவு, களவு தான். ஆனால் முடி மன்னர் 'நிலப்பசி' கொண்டு செய்யும் 'களவோ' திக்விஜயமாகின்றது.

ஃ ஃ ஃ

பிறநாடுகளின் சுதந்திரத்தை அபகரிக்கும் வல்லரசுகள், தற் சுதந்திரமிழந்த நாடுகளின் நன்மைக்காகவேதான், தாங்கள் ஏகாதிபத்திய இச்சை கொண்டுள்ளனவாம். இந்தியாவை நாக ரிகமாக்க வேண்டு மென்றே கருணைகூர்ந்து இங்கிலாந்து தனி முடி கவித்துத் தனியரசு புரிவதாகக் கூறுகின்றது. 'வெள்ளை மனிதனது தலைச் சுமை' இந்தியாவைப் பரிபாலிப்பது—என்று கிப்ளிங் என்னும் கவிஞன் சொல்லுகிறான். ஆளப்படுவது கறு ப்பு மனிதன் தலைவிதியென்று நம்மவரில் பலரும் நம்புகின்றார்.

ஃ ஃ ஃ

மேலை நாட்டார் ஜட உலகத்தை நம்புகின்றார். பொருளே இவர்களது பரம்பொருள். இயந்திரமே மனிதனைப் பார்க்கிலும் மேலானது; ஆன்மா இல்லாத—பரமான்மா இல்லாத, உயிரற்ற இயந்திரமே உலகம்—என்று மேலைப் புது நாகரிகம் கூறுகின் றது. இந்துக்களோ மறு உலகத்தை நம்புகின்றார். எனினும் இவ்வுலகின்மீதும் ஆசைதான். நிலையாமையே நிலை பெற்ற தத் துவம் என்றும், பொருளற்றது பொருள் என்றும் வாய்—வேதாந் தம்—நின்னை வேதாந்தம்—பேசுகின்றார். இத்தகைய ஆஷாட பூதிகளுக்கும் நவ நாகரிக நாத்திகர்களுக்குமிடையே நெருக் குண்டு சமயம் மூச்சு முட்டிச் சாவடைகின்றது.

ஃ ஃ ஃ

"ஒரே கிறிஸ்தவர் தான் உலகில் இருந்தார். அவர் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே உயிர் துறந்தார்"—என்று கிறிஸ்திய நல்லறிஞருள் ஒருவர் கூறியுள்ளார். கிறிஸ்து இன்று மேலைநாடுகளுக்குச் செல்வாரெனின், 'கறுப்பன்' என்று இகழ்ந் தொதுக்கப் பெறுவார் என்பதில் ஐயமில்லை. இவ்வண்ணமே சமயங்களெல்லாம் வீழ்ச்சி நிலையுற்றிருக்கின்றன. இன்று திரு

வள்ளுவ நாயனரும் நந்தனரும் நமது நாட்டிற்கு மீண்டும் வந்தால், அன்னர் பஞ்சமரென ஒதுக்கப் பெறுவரன்றோ? ஆலயத்தில் பிரவேசிக்க யார் இவர்களுக்கு இடம் கொடுக்கப் போகிறார்?

ஃ ஃ ஃ

ஒரு இந்திய கனவான் ஜப்பானுக்குச் சென்றார். 'இந்தியாவைப் பற்றி நான் பேசப் போகிறேன்' —என்று சொன்னர். "இந்தியாவா? அது உலகின் மயானமன்றோ?"—என்று சில ஜப்பானியர் கூறி நகையாடினராம். இப்பழம் பெரும் பாரத பூமியில் உயிர் எங்கே யிருக்கிறது? ஏழு கோடி மக்களைப் புலையராக்கிய நாட்டைச் "சுடுகாடு" என்று கூறியதில் குற்றம் என்ன? சென்ற ௫0 ஆண்டுகளுக்குள், இம்மக்களில் சுமார் பத்து லட்சம் பேர் கிறிஸ்து சமயம் புகுந்துள்ளார். உயர் வகுப்பினரான இந்துக்களின் இம்சையே இந்நிலைமைக்குக் காரணமாகும்.

(பி. ஸ்ரீ.)

---

## சதங்கையொலி.



### கொலை கொலைதான்.

"ஆடு மாடு முதலிய ஜீவப்பிராணிகளை வதைப்பது பாதகமில்லை, மனிதக்கொலைதான் கூடாது." என்று கூற முன்வருகின்றனர். எந்தப் பிராணியையாவது கொலை செய்ய முயலுபவன் நாளடைவில் பெருங் கொலைகாரனுவது திண்ணம். இதனுல்தான் நமது நூல்கள் எந்த உயிர்க் கொலையையும் பலமாக மறுத்துரைக்கின்றன. இதற்கு நிதரிசனமான உதாரணமாகக் கோயமுத்தூர் ஜில்லா நிற்கிறதெனத்தெரிகிறது. "இந்தியாவில் மிருகபலி" எனும் புத்தகத்தில் "எருமை, ஆடு, கோழி முதலிய பிராணிகளைக் கொன்று தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்யும் பழக்கம் மற்ற இடங்களைவிடக் கோயமுத்தூர் ஜில்லாவில் அதிகம்" என்று எழுதப்பட்டிருக்கிறதாம். இப்போது சென்னை அரசாங்கத்தார் தங்களுடைய உ௬—உ௭-ம் வருஷ அறிக்கையில் இந்த மாகாணத்தில் ௬0௩ கொலைகள் நடைபெற்றிருப்பதில் அதிகப்படியாக நிற்பது கோயமுத்தூர் ஜில்லாவேயாகுமென்று கூறியுள்ளார். ஒழுக்க ஈனமும் இரக்க மின்மையுமே

கொலைக்குக் காரணங்களாகு மென்பதை மறந்துவிடலாகாது. ஆட்டைப் பற்றி மாட்டைப்பற்றி மனிதனைப்பற்றுவது இயல்பாகும்.

## தெய்வத்திற்கா?

மக்களுடைய அறியாமை காரணமாகவே தெய்வங்கட்கென ஆடு எருமை பன்றி கோழி முதலிய எளிய வாயிலாப்பிராணிகள் வதைக்கப் படுகின்றன. தெய்வத்தால் படைக்கப்பட்ட பிராணிகளை அதற்கு முன்னர் நிறுத்தி உடலாடிக் காலாடி உளமாடித்துடிக்கும் போது கொஞ்சமும் இரக்கமின்றி வெட்டிவீழ்த்துவார் மனம் கல்லா? இரும்பா? இப் பகுதியில் நடைபெறும் கொலைவிழாக்கள் எண்ணிமுடியுமோ? ஊர் தோறும் இவ்விழா நடைபெறுகின்றது! ஆங்காங்குள்ள இரக்கமுடையார் சிறிது சிறிது முயற்சி செய்து தடுத்து வருகின்றனர். செய்யும் முயற்சிக்குத்தக்க அளவு சிறிது பயன்கிடைத்துக் கொண்டிருக்கிறது. தமிழ்நாட்டில் இந்த அஹிம்சா தருமம் தழைத்தோங்கப் பெரியதோர் இயக்கம் தோன்ற வேண்டியது மிக அவசியமாகும்.

## அருளே அறத்தின் வேர்.

அருளொழுக்கமே நல்லறத்தின் வேராகு மென்பது இந்து சமயத்தின் சாராம்சமான கொள்கையாகும். இறையுயிர் ஒன்றே எங்கும் கரந்து பரந்துள்ளதாதலின், எவ்வுயிரிடத்தும் அருள் சுரந்து அன்பாயிருத்தல் வேண்டும். எத்தகைய மக்களிடத்தும்—முக்கியமாக ஏழை மக்களிடத்து—அருளோடு, அன்போடு ஒழுகுதல் வேண்டும். அவ்வண்ணமே மிருகங்களிடத்தும் கருணை காட்டுதல் வேண்டும். இது, வேதோபநிடதங்களின் தேர்ந்த கொள்கை. ஜீவகாருணிய ஒழுக்கத்தை முக்கியாம்சமாகக் கொண்டு, சிவபெருமானை முழுமுதற் கடவுளாக வழிபடும் சமயமே சைவ சமயமாகும். சைவ சித்தாந்தத்தைப் போல, வைணவ சித்தாந்தம் ஜீவகாருணியத்தை அவ்வளவு அதி முக்கியமானதாகப் போற்றாவிட்டாலும், அருளொழுக்கம் அவசியமானதென்றே வைணவர்களும் வற்புறுத்துகின்றார். ஆனால் பௌத்த ஜைன சமயிகள் ஜீவகாருணிய தருமத்தையே ஒரு மதமாக்கிவிட்டனர். பண்டை இந்தியாவில், ஏழைகளுக்கும் கஷ்டப்படும் பிரயாணிகளுக்கும் தரும வைத்தியசாலைகள் இருந்தன. அவ்வண்ணமே மிருகங்களுக்கும் தரும வைத்தியசாலைகளிருந்தன. மிருகங்களும் நம்முடைய இளைய சகோதரர்களே—என்னும் உண்மையினை நம்மவர் முன்னாளில் நன்குணர்ந்திருந்தார். எனினும் ஜீவகாருணிய இயக்கம் பல வகுப்பினருள்ளும் இந்தியாவில் மெதுவாகவே பரவிவந்தது.

## ஜீவகாருணியமும் சமூக வாழ்க்கையும்.

ஒரு மனிதன் நல்லொழுக்கம் பெறுவதற்கு ஜீவகாருணியம் அவசியமாவதுபோல், சமூக வாழ்க்கைக்கும் அது அவசியமாகும். மக்கள் ஒருவரோடொருவர் தோழமை பூண்டு, இறைவனோடும் இயற்கையோடும் ஒன்று பட்டு வாழ வேண்டுமென்பது பண்டை இந்தியா கண்ட உண்மையாகும். 'வாயிலாப் பிராணிகள்'பால்—பலவீனர்பால், அருள் பூண்டு ஒழுகும் சமூகமே இறையருளுக்கு இலக்காகும். மிருகங்களைக் கொலை செய்வது பாவமாவதுபோலவே, மிருகங்களைப்பட்டினி போட்டு நன்கு பரிபாலியாமல் இம்சிப்பதும் பாவமேயாகும். மிருக உலகோடு ஜீவகாருணியம் அடங்கிப்போவதாக நமது வைதிக வகுப்பினரும் வேதாந்த சித்தாந்திகளும் கருதுகின்றார். இவர் தாழ்த்தப் பெற்ற வகுப்பினரைக் கழுதைகள், பன்றிகளைக் காட்டிலும் இழிந்தவராகக் கருதி யொழுகுகின்றார். கழுதை செல்லும் தெருக்களில் பஞ்சமர் செல்லக்கூடாதென்று தடுப்போர் சமூக வாழ்க்கையில் ஜீவகாருணிய ஒழுக்கத்தை மறுப்போரேயாவர்.

## பெண்களுக்கு ஆன்மாவில்லையா ?

இந்து மக்கள் ஏழுகோடி மக்களைப் புலையர் என்று ஒதுக்கி வைத்திருப்பதுபோல, சமூகத்தில் சரிநிகர்சமானரான பெண் மக்களையும் இழிவு செய்துள்ளார். இதுவும் ஜீவகாருணிய தருமத்தோடு முரண் படுவதேயாகும். "சூரியனைப் பார்க்கிலும் பேரொளி வாய்ந்ததாய், பனியைப் பார்க்கிலும் பரிசுத்தமானதாய், ஆகாயத்தினும் அதிநுட்பமானதாய், மக்களுள்ளத்தில் கோயில்கொண்டுள்ள ஆன்மா விளங்குகின்றது"— என்று ஆதி மறைகள் முழக்குகின்றன. ஏழு கோடி மக்களைப் புலையராக்கி, சமூக உடம்பில் பாதியான பெண்மையையும் இழிவு செய்யும் மடமை'ஆன்மா'வை அவமதிப்பதன்றோ? இவர்கள் 'கருணையங் கோயில்' கடவுளின் கோயில் என்பதையும் அறியார். இளமை—மணம் என்னும் பலி பீடத்தில் குற்றமற்ற ஆடு கோழிகளைப் போலவே பலியிடப் பெறும் சிறுமியர் எத்தனை பேர்? விளையாட்டுச் சிறுமியருள் விதவையரென்று அழைக்கப் பெறுவோர் எத்தனைபேர்? குழந்தை—மனைவியர், கன்னி—விதவையர் என்றழைக்கும் விநோதப் பிராணிகள் எத்தனை நம் நாட்டில் கண்ணீரும் கம்பலையுமாக இருக்கின்றன! கிறிஸ்தவர் மிருகங்களுக்கு ஆன்மா இல்லையென்று வாய் கூசாது கூறுகின்றார். நம்மவர்கள் பெண்களுக்கும் ஆன்மா இல்லையென்று அனுஷ்டான வாயிலாகக் காட்டத்துணிகின்றனரா ?

---



சுவாமி சிரத்தானந்தர்.

உ
சிவமயம்.

# "குமரன்"

எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.



சதங்கை ௯ } காரைக்குடி
அட்சய௵ மார்கழி௴ { மணி ௫

## கிழவன் குமரனானான்.

வீட்டின் கதவு பூட்டிடப்பட்டிருந்தது. அவ்வில்லத்தின் முன்றிலில் தன்னந்தனியாகத் தன் தலை விதியை நினைந்து வருந்தி வருந்தி யெண்ணமிட்டுக் கொண்டிருந்த இளமென் மாதுநல்லாள் 'சிவனடியாரைக்கண்டு பன்னாளாயிற்றன்றே! காணக் கிடையாக் கண்கள் கண்களாமோ'வென எண்ணியெண்ணி யேக்கமுற்றனள். அவ்வமயத்து ஓர் அரும்பெருந் தொண்டுகிழவர் சிவவேடமிட்ட தேகத்தோடு தோன்றுவாராயினர். நரைத்த மயிரும் திரைத்த கழுத்தும் ஆடிய தலையும் கூனிய உடலுமுடையாயிருந்தனர். பன்னாட் பசியுடையார்போற் காணப்பட்ட அப்பழுத்த கிழவர் இவ்விள மாதுநல்லாள் வீற்றிருக்கும் வீட்டின் அருகணைந்தார். சிவவேடத்தையும் வயதின் முதிர்ச்சியையுங்கண்ட அப்பெண் மணி 'சுவாமி இங்கெழுந்தருளிய காரணமென்னை?' யென வினவினாள். 'பசிக்கிறது வந்தேன்' என்றார் சுவாமி. என்செய்வாள் அப்பெண்ணணங்கு! வீடு திறந்து சமையல் செய்யும்படி சுவாமியார் இட்ட கட்டளைப்படி அகம்புகுந்து அடிசில் சமைத்தாள். விருந்தினராக வந்திருக்கிற தொண்டுகிழவரை அழைத்துத் தண்ணீர்கொடுத்துக் கைகால் சுத்திசெய்த பின்னர் ஆதனத் தமரச் செய்தனள்.

அன்றலர்ந்த நறுமலர்களைக்கொண்டு அவரை யருச்சித்து இலையைக்கழுவியிட்டுத் தூய்மையான முல்லையரும்பை யொத்து

நிறம் விளங்கிய பாற்சோற்றினை வெள்ளிமலையென்று கூறுமாறு படைத்து, அதன் உச்சியில் தங்கச்சிகரம் வைத்தாற்போல, தூய பருப்பினை இட்டு, அதன்மேலிருந்து அருவியோடி வழிவதுபோலப் புத்துருக்கு நெய்யினை வார்த்தாள். மற்றைய பொரிக்கறியும் பிறவும் பெருமலையைச் சுற்றிச் சூழ்ந்து கிடக்கும் சிறுமலைகள் போன்றிடப்பட்டன. பலகார வகைகளையும் படைத்தாள். இத்தனையும் செய்த அப் பெண்ணணங்கு, தனது சிவந்த திருவாயினால் இனிய அமுதம் போன்ற புகழ்ச்சியுரைகளைக் கிழவாது செவியின்வழி இடையிடையே ஊட்டினாள். காப்பணிந்த தனது மெல்லிய திருக்கரத்தினால் தன்னால் தேர்ந்து சமைக்கப்பெற்ற ஆறுசுவையோடுங்கூடிய அமிர்தத்தைக் கிழவாது வாயின்வழியே ஊட்டினாள். இவ்வாறு ஊட்டவே தளர்ச்சியுற்ற உடலையுடைய அக்கிழவர் அமிர்தமுண்ட தேவரைப் போல மூப்பினை யகன்றவராகிப் பூ வில்லினையும் தேன்பொதிந்த மலர் வாளிகளையும் உடைய மன்மதனை யொப்ப இளமைப்பருவ மிக்க வாலிபனது உருவத்தைப் பெற்றார். இதனைப் பரஞ்சோதியார் இரண்டு பாட்டாற் கூறுகின்றார். அவை வருமாறு:—

நகைமலரிட் டருச்சித்து நல்லபரி கலந்திருத்தி
நறுவீ முல்லை
முகையனைய பாலடிசில் வெள்ளிமலை யெனப்பருப்பு
முதுகிற் செம்பொற்
சிகரமெனப் பல்வேறு கருனைபுறந் தழீஇக்கிடந்த
சிறுகுன் றிட்ட
வகையெனநெய் அருவியெனப் படைத்தனைய சிற்றுண்டி
வகையும் பெய்து

செய்யவாய் இடையிடையே முகமனுரை இன்னமுது
செவியில் ஊட்டத்
தையலாள் வளைக்கையறு சுவையமுது வாயூட்டத்
தளர்ந்த யாக்கை
ஐயர்தாம் திருவமுது செய்தமுதுண் டவரெனமூப்
பகன்று பூவில்
கையதே மலர்வாளிக் காளைவடி வாயிருந்தார்
கன்னி காண.

கிழவனை இளைஞனாக்குவதும் இளைஞனைக் கிழவனாக்குவதும் பெண்மக்களால் ஆகக்கூடியனவே யாகுமன்றோ? அன்புடன் அட்ட இன்னமுதினை—அது கூழாக இருப்பினும் கஞ்சியாக இருப்பினும்—அகமும் முகமும் மலர்ந்து அன்பினைக்கலந்து இன்னுரையோடு வேளைதோறும் ஒரு பெண்ணணங்கு ஊட்டிவருவாளாயின் கிழத்தனமும் வருமோ? கிழவனும் குமரனாக ஏன் மாறமாட்டான்! அறுசுவை யுணவேயாயினும் அன்பின்றி அகமும் முகமும் நெருப்புப் பொரிபறக்க வண்டதன்மையினளாக நின்று தொலைக்கும் சோற்றுக்கடன் உடலில் ஒட்டுமோ? அவன் சின்னாளில் மனமொடிந்து கோபத்திற்கும் அயாத்திற்கும் கவலைக்கும் தன்னை அடிமையாக்கி மனந்தளர்ந்து உடல் தளர்ந்து நரைத்துத் திரைத்துக் கிழவனாகி மாண்டு மடிந்து மண்ணாவது திண்ணம்.

முரு.

---

# உணவு முறை.

நமது நாட்டு மக்களிற் பலர் உணவு முறையை நன்கு உணராதவர்களாக இருக்கின்றனர். ஒவ்வொரு நாளும் அதிக முறையும், அதிக அளவும் கொள்ளுவது பலருக்கு வழக்கமாக இருக்கிறது. இவ்வாறு உட்கொள்ளுவோரில் உடலால் ஒரு உழைப்பும் செய்யாது இருப்பவரும் உண்டு. இவர்களுக்கே பானைபோல் வயிறு பெருத்துவிடுகிறது. அஜீரண நோயே பலர் ஆயுளைக் குறைத்து, உயிரை மாய்த்துவிடுகிறது. உயிர் வளர்ச்சியின் பொருட்டே உணவு உட்கொள்ளுகின்றோம் என்பதை மறந்து, ஆசை காரணமாகப் பேருணவு உட்கொள்ளுவது உயிருக்கே ஆபத்தாக வந்து விடுகிறது.

“உயிர் வாழ்வதற்காக உண்பவர் சிலர்;
உண்பதற்காக உயிர் வாழ்பவர் பலர்”

என்று ஒரு பழமொழியுண்டு. பலமுறை அளவு கடந்து உண்டு விடும்பொழுது, வயிறே வெறுப்புக்கொண்டு புளித்த ஏப்பத்

னுடன் பெரிதும் சிரமப்படுகின்றது என்பதும், குறித்த நேரத்தில் அளவுடன் புசிக்கும் பொழுது ஆவலுடன் வயிறு உணவைப் பெற்று இன்புறுகிறது என்பதும் அனைவரும் உணர்ந்ததே. எனவே, ஆசை காரணமாகவாவது, பிறர் வற்புறுத்துவதன் பொருட்டாவது அமிதஉணவு உட்கொள்ளக் கூடாது. இளைஞர்கள், காலை ஏழு மணிக்குச் சிற்றுண்டியும், பகல் பன்னிரண்டு மணிக்கும், இரவு ஏழு மணிக்கும் ஆகாரமும் எடுத்துக்கொள்ளுதல் நலம். வயது முதிர்ந்தவர்கள் காலை யுணவை விடுத்து இருவேளை போஜனமட்டும் செய்தால் போதும். ஒவ்வொருவரும் உடலுழைப்புக்குத் தக்கவாறும், உடல் நிலைக்கு ஏற்றவாறும் உணவின் அளவை ஏற்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். குழந்தைகளுக்குச் சிறு அளவே கொடுத்தல் வேண்டும். சில குழந்தைகள் எப்பொழுதும் ஆகாரங்களைச் சாப்பிட்டுக்கொண்டே யிருப்பதால், வயிறு விரியப்பெற்று, அஜீரண நோயால் பெரிதும் வாடித் துன்புறுகின்றன. ஆகாரத்தைக்கண்டு குழந்தைகள் அழுது கத்துகின்றன என்று பெற்றோர்கள் அளவிலா ஆகாரத்தைக் கொடுத்து உடல் வளத்தைக் கெடுப்பது சரியன்று. குழந்தையினிடத்தில் உள்ள பிரியத்தால் சிலர் அதிக உணவை ஊட்டி அதனை ஆபத்திற் குள்ளாக்குகின்றனர். நோயாளிகளுக்கு வைத்தியர் கட்டளையிடும் பத்தியத்தையே கொடுத்தல் வேண்டும். கண்டபடி ஆகாரங்களைக் கொடுக்கக்கூடாது. ஆகாரமில்லாவிட்டால் நோயாளி இறத்தல் கூடும் என்றும், நோயாளி ஆசைப்படுகிறார் என்றும், சிலர் ஆகாரத்தை முறைதெரியாது கொடுத்து நோயை அதிகப்படுத்துகின்றனர். கையில் கிடைத்ததை எந்த நேரத்திலும் புசித்தல் என்பது மிகக் கொடிய வழக்கமாகும். இவ்வாறு புசிப்பதால், ஆகாரம், ஒருசிறிதும் ஜீரணமடையாது குடலில் அசுத்தமுடையதாக நின்று தேகாரோக்கியத்தைக் குறைக்கிறது. நாளடைவில் அஜீரண நோயின் விளைவாக உயிர் போகின்றது. பரிதாபம்! நேரங்கடந்து புசிப்பதும் வயிற்றுக்குத் துன்பமாகவே முடிகிறது. குறித்த நேரத்தில் குறித்த அளவு உட்கொள்ளுவது, எப்பொழுதும் பசித்துப் புசிப்பதற்கு ஏதுவாக இருக்கும்.

மாதத்திற்கு ஒரு முறையாவது பட்டினியிருப்பது குடல் சுத்தி யடைந்து ஓய்வு பெறுதற்கு ஏதுவாகும். உணவு முறையானது பழக்கத்தில் வந்துவிட்டால் யாதொரு சிரமமும் ஏற்படாது. நீண்டநாள் வாழவேண்டும் என்பது பலருடைய விருப்பமாதலால், இதனை அலக்ஷியஞ்செய்ய இடமில்லை. உணவு வகையையும், ஜீவ சத்தையும் கவனித்து ஆகாரங்களை ஏற்படுத்திக் கொள்ளுதல் மிகப்பொருத்தமுடையதாகும். சோற்றைமட்டும் அதிகம் சாப்பிடுவது சரியன்று. கீரைகள், கிழங்குகள், பழம், காய்கறிகளையும் தகுதியுடன் உட்கொள்ளுதல் வேண்டும். தான்யங்களில், அரிசியை உபயோகிப்பதோடு, பிறவற்றையும் தத்தம் விருப்பத்திற்கும் வேலைக்கும் ஏற்றவாறு கொள்ளலாம். அழுகியும், ஊசியும்போன கெட்டபதார்த்தங்களையும், பழங்கறிகளையும் உபயோகப்படுத்துதல் கூடாது. ஒழுங்கான நல்ல ஆகாரம் அமிர்தமாகும். கெட்ட ஆகாரம் விஷமாகி விடுகிறது. ஆகாரத்தைப் பக்குவஞ்செய்யும் பொழுது சுத்தமாகச் செய்யவேண்டுவதும் அவசியமாகும். பக்குவம் செய்வோரின் அஜாக்கிரதையினால், ஆகாரம் புனிதமற்று விடுகிறது. வேண்டாத பொருள்கள் தெரியாமல் ஆகாரத்துடன் கலந்துவிட்டால் ஆபத்தாய்முடிகிறது. பக்குவம் செய்த ஆகாரத்தை மூடிவைக்க வேண்டுவதும் அவசியமாகும். ஆகாரமானது உயிரை வளர்ப்பதாதலால், அவ்விஷயத்தில் நாம் பெரிதும் ஜாக்கிரதையுடனேயே இருக்கவேண்டும். ஒழுங்குபடுத்த முடியவில்லை என்பதன் காரணம் பழக்கப்படுத்திக் கொள்ளாததேயாகும். சில மாதங்கள் சிரமப்பட்டேனும் ஆகாரத்தை ஒழுங்குபடுத்திக்கொள்ளுதல் தேகாரோக்யத்தை அபிவிருத்தி செய்து கொள்ளுதற்குச் சிறந்த வழியாகும்.

ஒருபோது யோகியே ஒண்தளிர்க்கை மாதே!
இருபோது போகியே யென்ப—திரிபோது
ரோகியே நான்குபோ துண்பான் உடல்விட்டுப்
போகியே யென்று புகல். —நீதிவெண்பா.

சுந்தரன்.

---

# சில குறிப்புக்கள்.

புனவில் நடந்த பெண்கள் மகாநாட்டில் பரோடா மகாராணியார் தலைமை வகித்தார். அப்பொழுது அவர் பெண் மக்கள் முன்னேறுவதற்குச் சில வழிகள் காட்டினர். "சிவாஜியைப் போல, சுக சரீரமும் புனிதமான ஆத்மாவுமுள்ள குழந்தைகளைத் தாய்மார்கள் உற்பத்தி செய்யவேண்டும். சரியான சமூகத்தில்தான் இது சாத்தியப்படும். பெண் மக்களை நம் நாட்டில் மிகத் தாழ்த்தியிருக்கின்றனர். ஆனால் இந்து மதத்தில் பெண் மக்கட்கு உயர்வு கொடுக்கப்பட்டிருக்கிறது" என்று இராணியார் கூறுகிறார். சிவாஜி மாதிரி பிள்ளை தென்னாட்டில் பிறந்து பல நூற்றாண்டுகளாகிவிட்டன. தமிழ் நாட்டில் பன்னெடு நாளாக ஏன் ஒரு உன்னதமான குழந்தை பிறக்கவில்லை என்பதை ஆராய வேண்டும். தமிழ் நாட்டில் தினந்தோறும் குழந்தைகள் பிறக்கின்றன; வளர்கின்றன; மடிகின்றன. ஆனால் மனித வர்க்கத்தின் கனிபோன்ற குழந்தை யொன்றைக் காணவில்லை. கம்பன் எனனும் கவிபாசர், இராமானுஜர் என்ற பேரன்பர் ஆகிய இவர்கட்குப் பின்னர் எவர் தோன்றினர். இதற்கிடையில் பேரறிஞர், பேரன்பர், பெருங் கவிஞர், பெருஞ்செல்வர் முதலிய இனத்தில் தமிழ் நாட்டில் பிறந்தவர் யாவர்? ஒரே ஒரு பாரதி கவியுலகில் தோன்றினர். ஆனால் தேடுவாரற்ற சாவு அவருக்கு நேர்ந்தது. பேரன்பாாக ஒரு இராமலிங்கர் தோன்றினர். அவரையும் ஜனங்கள் படுத்திய பாடு கொஞ்சமல்ல காந்தி, திலகர், கோகலே, தாதாபாய், லஜபதி, சிரத்தானந்தர், மாளவியா, தாஸ், இராமகிருஷ்ணர், விவேகானந்தர், ராஜாராம், அரவிந்தர், பி. ஸி. ராய், ஜே. ஸி, போஸ், தாகூர், சரோஜனி போன்ற பேரறிஞர்கள் கூட்டத்தில் தமிழனுக்கு இடமுண்டோ? உண்டு. ஆனல் அக்கூட்டத்தில் கலக்கும்படியான மக்கள் தமிழ் நாட்டில் பிறக்கவில்லை. தாய்மார்கட்கு அறிவும் பலமும் கொடுக்க வேண்டுமென்று பரோடா மகாராணியார் கூறுவதை, தமிழர்கள் பொன்னேபோற் போற்றுவாராக.

ஃ ஃ ஃ

"பால்ய விவாகம் கல்வியையழிக்கிறது. பெண்கள் விளையாட்டுப் பொம்மைபோல் விவாகம் செய்யப் பெறுகின்றனர். பாலப் பருவத்தில் குழந்தைகளைப் பெற்றெடுக்க நேருகிறது. திடமான குழந்தைகளைப் பெறவாவது, அந்தக்குழந்தைகளை உத்தமமான குழந்தைகளாகச் செய்யவாவது அவர்களுக்குச் சக்தியிருப்பதில்லை. பாலப்பருவத்தைக் கொள்ளை கொடுத்துவிடுவதால் கல்வியின்பத்தை யனுபவிக்க முடியவில்லை. பிரசவமும், குழந்தையுமே எப்போதும் ஞாபகத்திலிருக்கின்றன. தங்களுடைய சந்துஷ்டிக்கும் குழந்தைகளுடைய சந்துஷ்டிக்கும் அவசியமான குணங்கள் ஏற்படமுடிவதில்லை. இந்திய மக்கள் திடசரீரிகளாயிருக்கவேண்டுமானல், தாய்மார்கள் திடசரீரிகளாகவும் முற்றியவர்களாகவுமிருக்கவேண்டும். இதற்கு பெண்கள் பதினெட்டு வயதடையுமுன் விவாகம் செய்யக்கூடாது. முதலில் சிறிதுகாலம் இது கஷ்டமாகத் தோன்றலாம். ஆனல் ஆயுள் பரியந்தம் துன்பமின்றி யிருத்தல்கூடும்." இது மகாராணியார் வாக்கு. வீதியில் விளையாடித்திரியும் குழந்தைகளுக்கு மணஞ்செய்வது கொலை செய்வதாகவே நமக்குத் தோன்றுகிறது. குழந்தைமணம் புரியும் வகுப்புக்களில் பெண்கள் மூன்றரையடி நாலடி உயரந்தான் வளருகின்றனர். ஆறடிக்கு அதிகமாக வளரவேண்டிய மக்கள் உடல், கூனிக்குறுகி சிலநாளில் தளர்ந்து மெலிந்து நோய்க்களஞ்சியம் ஆகிவிடுகிறது. நோய் வாய்ப்பட்ட மக்கள் பெறுங் குழந்தைகள் நோய்ப்பிண்டமாக விருக்கின்றன. பல குழந்தை பெற்று, பல நாளிருந்து, பலவகை இன்பத்தைத் துய்க்கவேண்டிய மாதர்கூட்டம் ஒரு குழந்தைக்கும் உட்கார்ந்தழுது அங்குமிங்கும் அலைந்து கர்ப்பமுற்ருல் பிரசவகாலத்தில் கைலாசம் செல்லும் பரிதாபம் பெரிதாகி வருகிறது. மலருமுன்னர் கனி விரும்பும் பேதைமக்கள் குழந்தைகட்குக் கல்யாணம் செய்து அதற்குக் குழந்தை பிறக்கவேண்டுமென்று பித்துப் பிடித்தலைகின்றனர்.

ஃ ஃ ஃ

பால்ய விவாகத்தினல் மனிதசமூகம் அழிந்துவருகின்றது. பெண்மக்கள் பெண் குழந்தைகள் பூப்படைந்தவுடன் கணவர்களை நாடுவது பெரும்பாதகமாகும். சில ஆண்டுகளாவது தனித்

திருப்பார்களாயின் உடலுறுப்புகள் பலமடைவதோடு கருப்பையும் அதைச்சுற்றிய உறுப்புக்களும் வலியுறுகின்றன. அதன் பின்னர் எத்தனை குழந்தைகளைப் பெற்றாலும் அவர்கள் உடல் களைப்படைந்து அழிவுறாது. இக்காரணம் பற்றியே மகாராணியார் பதினெட்டாண்டுகட்குப் பிறகு விவாகம் செய்தல் வேண்டுமென்று குறிப்பிடுகிறார். முற்காலத்து நிகழ்ந்த கன்னிமாடத்துய்த்தலும் காவற்செறித்தலும் நோக்கத்தக்கனவாகும். பெண்மக்களது பருவகாலமான பதின்மூன்றும் ஆண்டு முதல் ஐந்தாண்டுகள்வரை பெண்மக்களைப் பாதுகாத்தல் சிரமமென்று தோற்றலாம். படிப்பில் பெண்மக்களது புத்தி நுழைக்கப்பட்டால் அக்காலம் மிக எளிதாகவும் இன்பமாகவும் செல்லும். அக்காலத்தில் அடங்கியிருக்கப் பழகுதல் பிற்காலத்தில் பெரும் பயனை விளைக்குமன்றோ? ஒருவாறு கஷ்டமாக விருப்பினும் பின்வரும் நன்மையை எண்ணிப் பொறுத்திருப்பது அறிவுடைமையாகும்.

ஃ ஃ ஃ

இந்தியா தேசம் முழுமையும் மொத்தமாகக் கணக்கிட்டால் ஆயிரம் பெண்களில் இருபத்தொரு பெயரே படித்திருக்கின்றனர். பெண்மக்களுள் அறிவுக்கண் திறந்தவர் இருபத்தொன்றும் அறிவுக்கண் திறவாதவர் தொள்ளாயிரத்து எழுபத்தொன்பதின்மருமாவர். அறிவுக்கண் திறக்கப் பெறாத பெருந் தொகையான மாக்களிடையில் அறிவு பெற்ற மிகச் சிலருடைய கல்வியறிவும் மழுங்கிப் போவதைக் காண்கிறோம். கல்வி யறிவு விளக்கமின்மையால் நாடு அஞ்ஞானத்தில் கிடந்து உழல்கிறது. ஞான ஒளி குன்றவே, நிலையிலாப் பொருளில் பற்றும், வீண் டம்பங்களில் மோகமும், பொய்மை வாழ்க்கையின் வளர்ச்சியும், அடிமைப் புத்தியும், வறுமையும் களைகளாக முளைத்து வளர்கின்றன. அடக்கம், தன்னம்பிக்கை, சுயமரியாதை, சுதந்திரம், ஒழுக்கம் முதலிய உயர் குணங்கள் மழுங்குகின்றன. உடல்வலியும் மனவலியும் குன்றி நசித்து வருவதை யெங்கும் காணலாம். இவற்றிற்குக் காரணம் “மாதர் தம்மை யிழிவு செய்யும் மடமை’யே யாகும். நலல குழந்தைகளைப் பெறுவது பெண் மக்கள் நன்னிலையடைந்தாலன்றி முடியாத காரியம். நீர் வளமும் நில வளமும் நிறைந்த செய்யில் தோன்றும் பயிரே நல்ல பலனளித்தல் கூடும். வரண்ட உவட்டு நிலத்தில் சம்பா நெல் பயிராகிப் பலனளிப்பது முடியாத காரியமன்றோ?

# நாட்டுப் பொது நலன்.

நமது நாட்டை ஒரு உடம்பென்று உவமித்தால், நாட்டில் வாழும் உயிர்களை அதன் பலகிளை, உறுப்புக்கள் என்னலாம். எல்லாவுயிர்களும் இன்புற்று வாழ்ந்தாற்றான் நாடு செழிப்புற்றோங்கும். நாட்டில் வாழும் மக்கட்பகுப்பினரில் எல்லாச் சாதியினரும் எல்லாச் சமயத்தினரும் நாட்டுப் பொதுநலன் நாடுவோராய், ஒன்றுபட்டவாழ்வை விரும்புவோராய் இருத்தல் வேண்டும். நமது நாட்டுப் பொது நலனை வளரவொண்ணாதபடி தடுத்துக்கொண்டு பெரும் முட்டுக்கட்டைகளாக இருப்பன சாதிப்பகைமையும், சமயப்பகைமையுமேயாம். இதனாலேயே தேசிய உணர்வுடையார் பலர் சமயப்பொறுமையும், சாதிச் செருக்கின்மையும் யாண்டும் பரவுதல் வேண்டும் என்ற நோக்கத்துடன் கிளர்ச்சிகள் செய்துவருகின்றனர்.

* * *

இவ்வுண்மையை உணராதாரிற் பலர், கிளர்ச்சிக்காரர்கள் நமது பழையவாழ்வைக் குலைக்கிறார்கள் என்று வீண்பயங்கொண்டு எதிருரை வழங்குகின்றனர். சமரச நோக்கம் நாட்டில் பரவுதல் கூடாது என்று கருதுகின்றனர். இது எதைக்காட்டுகிறது? இன்னும் நம்மக்கள் அடிமைத் தளையினின்றும் விடுபடவிழைகின்றாரில்லை என்பதையன்றோ புலப்படுத்துகிறது! அந்தோ! பரிதாபம்.! "சுயராஜ்யவாழ்வு கூடத்தேவையில்லை! சாதிக் கொடுமை சமயக்கொடுமை நிலைத்திருந்தாற்போதும்." என்று கருதுவோரும் சிலர் உளர். எனில் நாட்டுப் பொது நலன் எவ்வாறு உருக்கொள்ளமுடியும்? நாட்டுமக்கள் சுயநலத்தையும் செருக்கையும் விடுத்து, அன்பும் பொறுமையும் ஆண்மையும் உடையோராய் "நாம் அனைவரும் இந்நாட்டு மக்கள்" எனும் நல்லுணர்வுடன் வீறுகொண்டு எழுந்தாலன்றோ நமது நோக்கம் நிறைவேறும்?

* * *

ஒன்றையும் ஆலோசியாது பழம்பாட்டுப் பாடிக்கொண்டு எதிருரைகள் வழங்கிக்கொண்டு சோம்பேறிவாழ்வு வாழ்ந்தால், சுயராஜ்ய வாழ்வு எவ்வாறு கிட்டும்? நம்மைநாமே நல்லுணர்

வுடன் ஆளுந்தகுதியுடையவர்கள் ஆக்கிக் கொண்டாலன்றோ, பிறருடைய தளையிலிருந்தும் நம்மை விடுவித்துக்கொள்ளும் ஆற்றல் நமக்குக்கிடைக்கும். சாதிப் பகைமை, சமயப்பகைமை எனும் திரைகளைப் போட்டு மறைத்துக்கொண்டே வந்தால் ஒன்றுபட்டவாழ்வு எவ்வாறு அரும்பும்? இப்பொழுது நாட்டில் நிகழ்ச்சியில் இருந்து வரும் மாறுபட்ட தீய உணர்வுகளெல்லாம், நீண்ட நாட்களாக முன்னோர்களாலும் சில நூல்களாலும் ஆதரிக்கப்பட்டு வருவன என்று பேசி மகிழ்வுறுவதனாற்பயன் யாது?

* * *

ஒதுக்கப்பட்டுள்ள வகுப்பார்க்குப் பொது உரிமைகளை வழங்குதல் வேண்டுமென்று கூறினால், நந்தனார் திருப்பாணாழ்வார் போன்ற பக்குவிகளுக்குத்தான் நல்கமுடியும் என்பது நகைப்பிற்கிடமன்றோ? "எமது இறைவன் பெரியவன்; உமது இறைவன் சிறியவன் என்று பூசல் இடுதல்வேண்டாம். அன்புநெறியை வளர்த்தல் வேண்டும்" என்றால் சமயநெறி தளரப்போகின்றது என்று என்னுவது ஆச்சரியமன்றோ? குறுகிய நோக்கம் என்பது நமது நாட்டில்தான் குடிகொண்டிருக்கிறது என்று கூறுவது மிகையாகாது. தாராள சிந்தை யென்பது பொருத்தமற்றதாகக் காணப்படுகிறது. காலநிலைக் கேற்றவாறு சமூக சீர்திருத்தம் செய்து கொள்ளுதல் வேண்டும் என்ற உணர்வே பலருக்கு இல்லை. இப்பொழுது நாட்டில் பல குறைகள் மலிந்துள்ளன என்பது சமூக சீர்திருத்தக்காரர் கண்ணுக்கு நன்கு புலனாகும். ஆனால் பொது ஜனங்களிற் பலர், "இறைவன் திருவருள் நிலைக்கேற்பவே எல்லாம் நடைபெறுகின்றன. நம்மால் எதைக்கூட்டவும் குறைக்கவும் கூடும்?" என்று கருதிவாளாவிருக்கின்றனர். "இடைக்காலத்து அமைப்பெல்லாம் மிகச்சரியானவை. நமது சமூகவாழ்விற்குப் புதியதோர் அமைப்புத் தேவையில்லை." என்று என்னுவோரும் பலர் உளர். இவ்வாறு சோர்வுற்று நாடியிழந்த நிலையில் இருக்குங்கால் நாட்டின் பொதுவாழ்வு ஜனங்களுக்குப் புலனாகாமலிருப்பது வியப்பில்லை. ஆனால் புதிய பொது வாழ்வின் தேவையை உணரும் அன்பர்களும் இளைஞர்களும் பலருளர் என்பதே நாட்டுப் பொதுநலனை நாடுவோருக்கு ஒரு சிறிது மகிழ்ச்சியளிக்கும். தேசிய உணர்வும் சமரச சன்மார்க்கமும்

அன்புநெறியும் கிராமங்கள் தோறும் யாண்டும் பரவும் வண்ணம் செய்யவேண்டுவது இளைஞர்களுடைய கடமையாகவேயிருக்கின்றது.

அரு. சோம.

---

# புறவுலகில் நமது ஆதிக்கம்.

மக்கள் யோகநெறி பயிலுதலால் ஆன்மசக்தியில் முழுநம்பிக்கையும், அறிவு நுண்மையும், நற்கொள்கைகளினின்று நழுவாமையும், மனவமைதியும், புலனடக்கமும், உடற்றூய்மையும் அடைகின்றனர். ஒழுக்க நூல்கள் யாவும் இவ்வகைபடக்கிளத்தலானும், யோகநெறி பயில்வார் அநுபவ வாயிலான் உணர்தலானும் எவரும் இதனை மறுக்கத் துணியாரென்ப தொருதலை. மக்கள் வாழ்க்கைக் கின்றியமையாதன உடல்வலியும் புலனடக்கமும் ஆன்ம மலர்ச்சியுமாகும். இம்மூன்றையும் சமப்படுத்தி ஒருங்கே வளர்க்கும் நெறியினை யோகமென்பர். மனத்தைச் சிதற விடாது ஆராய்ந்து துணிந்து ஒரு நெறிப்பட ஒழுகுதலே யோகமாகும். யோகமென்னும் பெயர் கேட்குமளவையான் பலர் நிடுக்கிடுகின்றனர். இஃது எமக்குரித்தன்று; இல்லந் துறந்தார்க்கும் காடேகித் தனித்துறைவார்க்கும் பிறர்க்குமாமென்பர். இல்வாழ்வாரும் பிறரும் தம்மையறியாமலே நாடோறும் யோகநெறிக்கண் செல்கின்றனர். ஒழுக்கநூல்கள் விதிப்பன, வாழ்க்கைக் கின்றியமையா தியற்றுவன யாவும் யோக நெறிகளேயாகும். யோகநூல் வழி உணர்ந்து செல்வார்க்குச் சில உயர்படிகளுமுண்டு; அதனை மறுப்பாரில்லை. யோகமென்னும் பெயரைக் கேட்டு அஞ்சவேண்டாம். சில வடசொற்களைக் கேட்பதால் மயங்கவேண்டாம். மிகவுயர்வுடையதென்றும் உரித்தன்றென்றும் கருதிவிட வேண்டாம். எதுவாயினும் உறுதிகொண்டு உள்நுழைந்து மனக்கண்ணால் ஆராய்ந்திடுமின்! உண்மை காண்மின்!!

பிறந்தநாள் தொட்டே யோகநெறியில் பயில்கின்றோம்; வாழ்க்கை நடாத்துகின்றோம். ஒழுக்க நெறிகள் யாவும் யோக

நெறிகளேயாம். ஆனல் அவற்றை உணர்வதில்லை. பெயர்கேட்டால் அஞ்சுகின்றேம். அவற்றை உணர்ந்து முறைபடச் செய்தல் வேண்டுமென்பதே இக்கட்டுரையின் நோக்கம். தன்னலத்திற்கும் சமூகவளர்ச்சிக்கும் இறைபடி சார்தற்கும இதுவே சிறந்த நெறி. இவ்யோகநெறியின் முதற்படிகளை இயமம் நியமம் என்பர். இவை அஹிம்சை, சத்யம், அஸ்தேயம், ப்ரஹ்மசர்யம், அபரிக்ரகம், சௌசம், சந்தோஷம், தபம், ஸ்வாத்யாயம், ஈச்வரப்ரணிதானமென்று பகுத்து வடமொழியில் கூறுவர். தமிழில் கொல்லாமை, உண்மைகடைப்பிடித்தல், வீரியங்காத்தல், புலனடக்கம், அகப்புறத்தூய்மை, மனக்களிப்பு, முயற்சி, அறிவுப் பயிற்சி, இறைவழிபாடென்பர். இவை ஒழுக்கநெறியில் வாழ்க்கை நெறியில் அமைகின்றனவா, அன்று என்பதோர்க. இவற்றல் வடமொழியைக் கண்டு மயங்க வேண்டுவதில்லையாதல் காண்க. இவைகளே யோக நெறியின் முதற்படி. இவற்றைச் செயலில் கொணர்வார் முறையே பிறபடிகளில் செல்லுதல் கூடும். உண்மை இறைவழிபாட்டிற்கும் இவைகளே துணைநிற்பன.

இந்நெறிபட ஒழுகுவார் தத்தம புறநிலைகளை ஆராய்தல் வேண்டும்; அநிக்கம் அடைதல் வேண்டும். இவை குறித்துச் சிலரே ஆராய்கின்றனர். புறநிலைகளுக்கேறபத் தமது உரிமைகளைக் காத்தற்குப் பல இடத்தும் யோகநூல்கள் குறிப்பிடுகின்றன. அவை மறை சொற்களால் வழங்கப்படுகின்றன. அவற்றை யாவரும் உணர்தல் அரிது. சிறுபான்மை இக்கட்டுரையில் விளக்குவாம்.

## அஹமிந்த்ரோ நபராஜிஹ்வயே.

இருக்கு வேதம், க0-சஅ-ரு.

"நான் இந்திரன்; தோற்கடிக்கப்படேன்." இஃது உண்மைச் சித்தாந்தம். ஆன்மா இந்திரன், அதற்குந் தோல்விகிடையாது. அகத்துறையும் இந்திரன் இந்திரியங்களைத் தன்வயப்படுத்திப் பகைவரோடு போர் தொடுக்கின் ஐயமின்றி வெற்றியடைவான். ஆனல் இவ்வேளையில் இந்திரியங்கள் செருக்கடைகின்றன. புலன்களின் சிறைக் கோட்டத்து இந்திரன் அடைபட்டுக்கிடக்

கின்றான். அவன் மனதில்தோன்றியவாறு ஆன்மா வினைநிகழ்த்து கின்றது. இவ்வான்மா தற்சுதந்தரமின்றி நிலவுகின்றது. புலன் களின் அடிமையாகச் சிறைக் கோட்டத் துறைகின்றது. அவற் றின் விருப்பிற்கேற்ப ஊழியம் புரிகின்றது. இந்திரியங்களின் அதிகாரத்திற்குட்பட்டு, அவற்றின் ஆணைவழிச் செல்கின்றது. இதற்குமாறாக இந்திரியங்கள் ஆன்மவயப்பட்டுத் தத்தம் தனி நிலையுணர்ந்து அடங்கி ஆன்மாவிற்கு உறுதி நல்குமாயின், தத்தம் ஆற்றல் வழிநின்று பகைவரோடு பொருதுமாயின் அன்றே வெ ற்றி! அன்றே விடுதலை!! ஆன்மா இந்திரியங்களைத் தனவயப்படுத் திச் செந்நெறிக்கண் செலுத்தி வாழ்க்கையில் எதிர்த்தெழும் பகை வர்களைப் போக்கி வெற்றியடையுமாயின் அதுவே முக்தி! அதுவே சுதந்தரம்!!

இந்திரன் யாவன்? இந்-பகைவரை; த்ர-அலுவகவிடாது ஓட்டுபவன். பகைவரைத் தோற்கடிக்கும் திறன் வாய்ந்தோன இந்திரன். இந்திரன் இதயத்தினகத் துறைகின்றான். அவன் பகைவர் புறத்தே சூழ்ந்து நிற்கின்றனர். பகைவரால் முற்றுகை யிடப்பட்டிருக்கின்றான். இந்திரனது பகைவன் பெயர் "விருத் திரன்" அல்லது சூழ்ந்து நின்று போர்தொடுப்பவன். அல்லன புரிவோன் மாற்றான். நல்லன புரிவோன் நண்பன். உண்மையாக ஆராய்ந்தால் இந்திரனுக்கு எவரும் பகைவரல்லர். இந்திரன் தனது ஆற்றலை ஆராய்ந்துணர்ந்து வளர்க்காதவரையில், பிற ஆற்றல்களனைத்தும் அவனுக்கு மாறானவற்றையே புரிகின்றன. எனவே, இந்திரனென்னும் இந்திரியங்களுக்கு அரசனாகிய ஆன் மாவைத் தம் மகத்துடையா ரெவரும் தத்தம் ஆற்றலை உணர்ந் திருத்தல் வேண்டும். தத்தம் ஆற்றலை யுணர்த்தி வளர்க்கும் உண்மைநெறி யோகநெறி யாகும். யோகப் பயிற்சியால் ஆன்ம சக்தி வெளிப்படுகின்றது. புலன்களனைத்தும் ஆன்ம உயர்ச்சிக் காகவே படைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை ஆன்ம உயர்ச் சிக்கு மாறுபட்ட செயல்களாற்றி இன்புறுகின்றன. மாறுபட்ட செயல்களால் ஆன்மாவிடத்துப்பகைமைபூண்டு போர் தொடுக்கின் றன. எனவே, ஆன்மாவிற்கு மாற்றார் ஏற்படுகின்றனர். அம்மாற் றார்-(க) விபரீத புத்தி (உ) தாழ்ந்த மனம (௩) குறுகிய புலன்கள்

(ச) பிறர்க்கடிமைப்பட்ட உடலம் (ரு) வேறுபட்ட குடும்பநிலைமை (சு) இனத்தாரின் இழிநிலை (எ) நாட்டின் தாழ்மை (அ) மாறு பட்ட இல்வாழ்வு (கூ) கூட்டவமைப்பின் இழிநிலை (கo) அறநெறி யல்லாக் காற்று மண்டிலம் என்பனவாம். இவற்றிடையே நின்று வெற்றிபெற்று ஆன்மா புகழ்படைத்தல் வேணடும். ஆதனப் பயிற்சியால் உடல் வயப்படுகின்றது. பிரத்தியாகாரப் பயிற்சியால் புலன்கள் வயப்படுகின்றன. ஒருவகைப்பட மூனைந்து நிற்றலால் மனம் வயப்படுகின்றது. அடிக்கடி தூயவற்றைச் சிந்தித்தலால் தூய்மை பெறப்படுகின்றது. இவ்வகையாக உடலின் உட்புலன் களை வயப்படுத்தலாம். இத்தகைய வருணனைகள் பற்பல விடத் தும் கூறப்படுகின்றன. இவற்றின உட்பொருளை உணராதும், உணர்த்தாதும் "இந்திர விருத்திரன் கதை" பொய்யென்பாரும் மெய்யெனபாருமாக புரான கற்பிதங்களை யோராது போராடு கின்றனர். இத்தகைய பல கதைகளும் புராணங்களில் பரந்து கிடக்கின்றன. புரான கதைகள் நிகழ்ந்தனவாம்; கற்பிதங்க ளன்று என்று கூறுவார்க்கு ஓர் சான்று கூறுதும்:—

" அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரம் செற்றன னென்பர் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே" என்னும்

திருமந்திர வாக்கான் "திரிபுர தகனக் கதையின்" உட்கோ ளுணர்க. விரிவஞ்சி விடுக்கின்றும். பிறவுமன்ன. புறநிலைகளுக் கேற்ப ஆற்றலைப் பெருக்கித் தன்வயப்படும் தன்மையினைக் குறித்து ஆராய்வாம்.

தட்ப வெப்ப நிலைகளால் காற்றின் மிகுதி குறைவிற்கேற்பக் குளிர்மிகின் சீதநோயும் சூடுமிகின் வெப்பநோயும் உடலில் தோன்றுகின்றன. இந்நிலை மிகக் கெடுதி. குளிர்வெப்பம் மழை பனிபாதியவற்றைத் தாங்குந் தன்மையில் உடலைப் பழக்குதல் வேண்டும். குளிர்காற்று வீசினும், வெயில் மிகக் காயினும், மழையில் நனையினும் உடம்பில் நோய் தோன்றுதல் கூடாது. உலகில் தட்பமும் வெப்பமும், குளிரும் சூடுமாகிய மாறுபட்ட நிலைகள் பலவுண்டு. இவற்றை தகர்த்து வெற்றிபெறுதல் வேண்

டும். சீதமும் வெப்பமும் பிறவும் தாங்கும் வலிமை உடலில் மிகுதல் வேண்டும். சாதாரண மக்கள் குளிர்மிகின் கம்பளிகளைப் போர்த்திக்கொள்கின்றனர். வெயில்பட்டால் நிழலைத் தேடுகின்றனர். இதனால் உடம்பின் மேற்றோல் மென்மை யடைகின்றது. தத்தம் நிலைமைக்கேற்பத் தட்பவெப்பந் தாங்குமாற்றல் மிகுதல் வேண்டும். நம்முள் சிலர் சதா ஆடையின்றி வெயிலில் நின்று நாடோறும் வேலை செய்யக் காண்கின்றோம். அவர்க்கு எவ்விதத் துன்பமும விளைவதில்லை. எனவே, குளிர் வெப்பமாதி மாறுபட்ட நிலைமைகளைத் தங்கள் உடல்வலிக் கேற்பத் தாங்குமாற்றல் பெருக்கிப் புறப்பொருட்களினின்று தங்கள் உரிமைகளைக் கோடல் யாவர்க்கும் இன்றியமையாததாம்.

இனி, உறைவிடம் உள்ளும் புறமும் தூய்மையாக இருத்தல் வேண்டும். வீட்டில் ஒவ்வொரு அறைகளும் சுத்தமாக இருக்கத்தக்கன. நமது உடைகளை நாமே நாடோறும் தோய்த்துக் கட்டுதல் வேண்டும். ஆடைகள் தோய்ப்பதற்கு அதிகச் செலவு பண்ணுதல் கூடாது. பலர் தங்கள் அறைகளில் புழுதிபடிய விட்டுவிடுகின்றனர். தரையில் துடைப்பம் பட விடுவதில்லை. மிதியடியின் கீழ் தெருவிலுள்ள தூகளெல்லாம் குவிந்துகிடக்கும். அது வீடெல்லாம் பாவி பல நோய்க் கிருமிகளை உடலிற் புகுத்திப் பல பிணிகளைத் தோற்றுவிக்கின்றது. எப்பொழுதும் சுத்தமாக விருப்பதால் நோய்கள் அணுகுவதில்லை. இதுவும் யோக நெறியே. யோகப் பகுதிகளாகிய இயமநியமங்களில் தூய்மையும் ஒரு உட்பிரிவாகு மென்பதை மேலே விளக்கினோம். அறைகளில் பொருட்களை அழகுபெறவும் எளிதில் எடுக்கத்தக்கவாறும் வைத்திருத்தல் வேண்டும். ஒவ்வொரு பொருட்களையும் குறித்த இடத்தில் குறித்தவாறு அமைத்தல் வேண்டும். இங்ஙனம் செய்தலால் காலச்சுருக்கமுமுண்டாம். இவ்வொழுங்கு நமது அறையிலும் வீட்டிலும் வீட்டின் புறத்தும் அமைத்தற்குரித்தாம்.

நாம் தங்கும் அறையும் வீடும் சூரிய வெளிச்சமும் தூய காற்றும் தங்கு தடையின்றி வீசத்தக்கவாறு அமைத்தல் வேண்டும். கதிரவனொளியும் தூயகாற்றும் படுதலால் ஆயுட் பெருக்க

மூன்டாம். இது மறைகளில் பல இடத்தும் குறிக்கப்படு கின்றது. இரண்டொன்று காட்டுதும்.

(1) தீர்கம் த ஆயு: ஸவிதா க்ருணோது. அதர்வம் 14-1-47.

(2) வாத ஆவாது பேஷஜம் சம்பு மயோபுவோ
ஹ்ருதெ. ப்ராண ஆயூம்ஷி தாரிஷத் இருக்கு 10-186-1

"கதிரவன் நமது ஆயுளைப் பெருக்குகின்றான்; காற்று மருந்துப் பொருட்களைச் சுமந்து போந்து அமைதியும் இன்பமும் விளை வித்து ஆயுளைப் பெருக்குகின்றது"—என்பதாம். நீண்ட ஆயுள் பெறுதற்பொருட்டு உறைவிடங்களில் சூரியவொளியும் நல்ல காற்றும் வீசத்தக்க இடம் அமைத்துக்கொள்ளல் வேண்டும். அவை நாடோறும் உடம்பில் படிதலும் வேண்டும்.

இறைவழிபாட்டின் பொருட்டு அமைதியாக உட்கார்ந்து சிந்திக்கத்தக்க தனியறை யொன்று அமைத்திடல் வேண்டும். அவ்வறையில் வைத்திருக்கும் பொருட்கள் அமைதி தருவன வாகவும் பிற எண்ணங்களைத் தூண்டாதவைகளாகவு மிருத்தல் வேண்டும். அவ்வறையினுட் புகுந்த வக்கணமே புறத்தே பின் தொடர்ந்து போந்த அமைதியின்மை பறந்தோட, அமைதிக் காற்று—மண்டிலத்தில் மூழ்கித் திளைத்தல் வேண்டும். இத்த கைய இடமே இறைவனைத் தொழுதற்கும் உளங்கலந் தோதற் கும் உருகிக் கரைதற்கும் உரியதாகும். இறைவணக்கம் புரிந்த பின்னர் சிறிதுநேரம் இனிய நூல்களை உளங்கலந்தோதல் வேண் டும். ஓதற்குரிய நூல்களும் பிறவும் ஆண்டே நிரல்படுத்தி வைத் திருக்கத் தக்கவை. உள்ளமொடுக்கி இறையை வழிபட்டு இனிய நூல்களோதி உள்ளத்தெழும் புதிய கற்பனைகளை ஆண்டே வரைந்திடல் வேண்டும். இது நித்தநியதியன்று. உள்ளம் உவந் தெழும் கொள்கைகளைச் சிதறவிடாது அவ்வக்காலத்தே பொறிக் கப்படின் பெரும் பயனுடைத்தாம். புறத்தே போந்தபின் பின்னர் அவை கலந்து நினைவிற்கு வருதல் அரிதாகும். அங்ஙன மாயின் பிழைபடுதலுங் கூடும். சிற்சில நேரங்களில் இத்தகைய உயர்ந்த எண்ணங்கள் தோன்றுதலியல்பு. எனவே, இக்குறிப்பு தரப்பட்டது.

(தொடரும்.)

# திருப்பாணாழ்வார் வரலாறு.

( பாண் பஞ்சமர் பக்தியினாலே உயர்குலம் பெற்றது. )

( மகர பூஷணம் பி. ஏ. எழுதுவது. )

தமிழ்நாட்டிலே சங்ககாலத்திற்குப் பின்னர் கி. பி. ஆறுவது ஏழாவது நூற்றாண்டுகளில் பக்தி மார்க்கம் வெகுவேகத்துடன் பரவ ஆரம்பித்தது. பௌத்தர்களும் ஜைனர்களும் தங்கள் புகழைத் தமிழிலக்கியத்திலே நிலைபெறச்செய்து விட்டு, அலை யெறிந்து கரைபுரண்டுவரும் பக்திப் பெருங்கடலைத் தடுக்கலாற் றாது நசித்துப் போயிருந்தனர். சைவம் தழைத்தது; வைணவம் வளர்ந்தோங்கியது. சைவசமய குரவர்களும் ஆழ்வார்களும் தங் கள் பக்திப் பெருங்காதலின் பயனாக எழுந்த அமுத கீதாஞ் சலியிலே தமிழருக்கு ஆத்ம சாம்ராஜ்யம் தந்தனர்.

இவ்வாறு நம் நாட்டிலே தமிழொடு பக்திப் பயிரை வளர்த்த ஆழ்வார்களில் ஒருவர் சோழர் தலைநகரான ( திருச்சிராப்பள்ளிக் கடுத்த ) உறந்தை ( உறையூரி ) யிலே, பாணர் சேரியில் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்தனர்.

பாணர்கள் ஆழ்வார் காலத்திலும் தீண்டாத வகுப்பென்று காலக் கொடுமையினால் ஒதுக்கப்பட்டுப் பறையரின் உட்பிரி வொன்றாகக் கருதப்பட்டுவந்திருக்கின்றனர். ஆனால் இவர்கள் பண்டைத் தமிழர் வாழ்விலே பேருறுப்பாகக் கருதப்பெற்று, அவர் இயற்கை வாழ்வை ஒளியும் மணமுமுறச் செய்தவர். ‡ தேன் பெய்து அமிழ்து பொதிந்து துளிக்கும் நரம்புகொண்ட சிறிய யாழை இடப் பக்கத்திலே தாங்கித் தமிழரசர் வீரத்தையும் தமிழ் வள்ளலார் ஈகையையும் தமிழ்ப் பண்களாலே வியந்து நாடெங்கும் கானம் செய்து திரிந்துவந்தனர்.

சிலப்பதிகாரத்தில்

குழலினும் யாழினும் குரல் முதலேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும் பாணிருக்கை

‡ சிறுபாணாற்றுப் படை.

என்று இவர் போற்றப் பெறுகின்றனர். இன்னும் புறநானூறு, பத்துப் பாட்டு முதலிய சங்க இலக்கியங்களிலும் சிறப்பித்துச் சொல்லப்பட்ட பெரும் பாணரின் "அரும் பெறல் மரபு" கால கதியிலே தீண்டல் வகுப்பாகக் கருதப்பட்டு வருவது தமிழகத்திலே நடைபெற்ற அநீதப் புரட்சிகளிலே மறக்க முடியாத தொன்றாகும்.

இத்தகைய புகழ்ப் பரம்பரை பெற்றிருந்த தமிழ்ப் பாணர் மரபிலே தோன்றிய ஆழ்வார், தம் காலத்திலே நாடெங்கும் பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருந்த பக்திப் பெருக்கிலே தம் இதயத்தைப் பறிகொடுத்துக் கொஞ்சதூரத்திலே ஸ்ரீரங்கத்தில்

"விரிதிரைக் காவிரி வியன் பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்"

என்று இளங்கோ அடிகள் வியந்து பாடிய அரங்கநாதனிடத்தே காதல் செலுத்தலானர். தீண்டாத வகுப்பாகக் கருதப்பெற்று வந்த தம்மாபை யுன்னி இரண்டாற்றுக்கும் நடுவிலே காலெடுத்து வைக்காமல், தினம் தோறும் தென்னாற்றின் தென்கரையிலே சந்நிதியை நோக்கி நின்றுகொண்டு மணிவண்ணனின் திருச் சோதியில் உள்கலந்து பாண்மரபின் குலதனமான * "அமிழ்துறழ் நரம்பின் நல்யாழை" மார்பிலே தாங்கிப் பரந்தாமனின் அருள் புகழைக்கல்லும் புல்லும் கனிந்துருகுமாறு பலபடப் புனைந்துபாடி

"சிந்திக்கும் தேறும் கைகூப்பும் திருவரங்கத்
துள்ளாய் என்னும்
வந்திக்கும் ஆங்கே மழைக் கணீர் மல்க வந்திடாய்
என்றென்றே மயங்கும்"

என்றபடி யெல்லாம் பக்தி செய்து வந்தார்.

இவ்வாறு வழக்கம்போல் பாணர்பெருமகன் பக்திப் பேரின்பத்திலே மெய்ம்மறந்து அமுதகானம் செய்து கொண்டிருக்கையில், ஒரு நாள் பெருமாள் திருமஞ்சனத்துக்காக ஸகல வைபவங்களுடனும் காவிரி ஆற்றுக்கு வந்த ஸ்ரீலோக சாரங்க முனிவர் என்னும் பிராமணர் பாணரைப் பார்த்ததும் ‡ "சாதி

---

* சிந்தாமணி. ‡ திருவாசகம்.

குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறித் திண்டல் நேர்ந்து விட்டதாக எண்ணி மதியிழந்து சீற்றங்கொண்டார். முனிவரின் பக்கத்திலே நின்ற ஒருவன் அவர் குறிப்பைத் தெரிந்து கொண்டு பாணரைக் கல்லால் எறிய அவரும் கண் விழித்துப் பார்த்துத் தாம நினைவின்றித் திண்டும் அண்மையிலே வந்து விட்ட தம் குற்றத்தை மன்னித்திடுமாறு வேண்டிக்கொண்டு அந்தப் பிராமணர் கூட்டத்தை விட்டு விலகிக்கொண்டார்.

ஆழ்வார் மேனியில் கல் பட்ட மாத்திரத்தே அடியாரையன்றித் தனக்குப் பிறிதொரு சரீர மில்லாதவனான பகவான் அரங்கநாதனுடைய திருமேனியிலே புண்பட்டு இரத்தம் பாய்ந்தது. இந்த விபரீதத்தைப் பார்த்து யாவரும் நடுநடுங்கிப் போய் செய்வ தொன்றறியாமல் சித்தம் திகைத்து நிற்க; ரங்கநாதனும் லோக சாரங்கனின் கனவிலே தோன்றி அடியார் பக்கலில் அபராத மிழைத்த மகத்தான பாவத்துக்குப் பரிகாரமாகப் பாணர் பெருமானை எவ்வாற்றானும் சந்நிதிக்கு இட்டு வரவேண்டுமென்று ஆக்ஞாபித்து மறைந்தருளினர்.

ஸ்ரீலோகசாரங்க முனிவர் கண் விழித்து,

“ அமரவோ ரங்கம் ஆறும்
வேதமோர் நான்கும் ஓதித்
தமர்களில் தலைவராய
சாதி அந்தணர் களேனும்
நுமர்களைப் பழிப்பாராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகருளானே !”

என்னும் வாசகத்தை உள் நினைந்து தாம் அறியாமையினால் இழைத்துவிட்ட பெரும் பாவத்தை உன்னி உள்ளம் பதறித் திருப்பாணாழ்வாரைத் தேடிக்கொண்டு ஓடிவந்து பாணரின் கால்களிலே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கித் தம்மை மன்னித்தருளி, சந்நிதிக்கு வரும்படி உள்ளன்புடன் வேண்டிக் கொண்டார். பாணரும் வெகு எளிதிலே தாமே மன்னித்து விட்டுக் ‘குலங்களாய ஈரிரண்டின் ஒன்றிலும் பிறந்தி’ லாதவரான தாம்

புண்ணிய பூமியான ரங்க பூமியிலே காலெடுத்து வைப்பது கூடாது என்று மறுத்துவிட்டார். லோக சாரங்கமுனிவர், சிறிதும் தயங்காமல் பூமியிலே கால் படாதவாறு தம் தோள்களிலே எடுத்துச் செல்லக் காத்திருப்பதாகச் சொல்லி ஆழ்வார் மறுத்தும் விடாமல் ஒரே பிடிவாதமாய் அவரைத் தம் தோள்களிலே ஏற்றிக்கொண்டு ஸ்ரீரங்கநாதன் சந்நிதியை அடைந்தார்.

பிராமண முனிவரின் தோள்களிலே பாணர் திகழ்ந்த அந்தக் காட்சியை என்னவென்று சொல்வது! பக்தர் கோஷ்டியிலே தொண்டர் திருக்குலம் என்பது ஒன்று தவிரச் சாதிப் பிரிவினைகளுக்கு எங்கே போவது?

“குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படு துயராயின எல்லாம்
நிலம்தரஞ் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... நாராயணா என்னும் நாமம்”

என்றும்

“குலம் தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலம்தானிலாத சண்டாள
சண்டாளர்கள் ஆகிலும்
வலம்தாங்கு சக்கரத் தண்ணல்
மணிவண்ணற்கு ஆளென்றுஉள்
கலந்தார் அடியார்தம்
அடியார்எம் அடிகளே”

என்றும் திராவிட வேதம் முழக்கவில்லையா?

அன்றியும் ஞானசம்பந்தரின் திருப்பாசுரங்களை மனைவியும் தாமுமாக யாழிலே இசைத்துக் கானம் செய்துவந்த நீலகண்ட யாழ்ப்பாணரைச் சிவபெருமானின் ஆக்ஞைப்படி கோவிலுக்குள் அழைத்து வந்து தங்கப்பலகை யிட்டு வீற்றிருக்கச் செய்ததாகப் பெரிய புராணம் கூறவில்லையா? இத்தகைய வேற்றுமை யோராச் சிறப்பு நிகழ்ச்சிகளே பக்திப் பெருமார்க்கத்தின் உயிரும் ஒளியுமாய் விளங்கித் தமிழகத்திலே சைவ வைணவ சமயங்களை நிலைபெறச் செய்தன.

முனிவாகனரான பாணாழ்வார் ரங்கநாதன் சந்நிதியைச் சேர்ந்து, திருவரங்கப் பெருநகருள் பள்ளிகொண்டிருக்கும்

"கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டென்
கண்ணிணைகள் என்று கொலோ களிக்குமாளே?"

என்று தாம் இதுவரை ஏங்கித் தூரத்திலே நின்று தம் அகக்கண் முன்னே சித்திரித்து உருவகப்படுத்திப் பாடிப் பக்திசெய்து வந்த செல்வ ரங்கனைக் கண்படைத்த பாக்கியம்பெற்றுக் கண்களாலே கண்டு தரிசித்து "அமலனாதிபிரான்" என்ற திருப்பதிகம் செய்து அவனுடைய ரூபலாவண்யங்களிலே பாதாதிகேசமாக ஈடுபட்டுத் துதி செய்து வாழ்ந்துவந்தார்.

நாலாயிரப் பிரபந்தத்திலே திருப்பாணாழ்வார் பாடியவாய்க் காணப்படுவன "அமலனாதிபிரான்" என்று தொடங்கும் பத்துப் பாசுரங்களேயாகும்.

"அரங்கத்தம்மான் திருக்கமல பாதம் வந்
தென் கண்ணி னுள்ளன ஒக்கின்றதே!"

என்று தொடங்கி ஒன்பது ஆசிரியத் துறைகளாலே பாதாதிகேசமாக ஈடுபட்டு வியந்து பாராட்டிக் கலிவிருத்தம் ஒன்றினால்

"கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோன் அணியரங்கன் என்னமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!"

என்று மேலேசொல்ல இயலாதவராய் அரங்கனின் திருப்புகழ்ப் பாசுரத்தைப் பேரழகுடன் முடித்து விடுகிறார். "அரங்கத்தம்மான் அரைச்சிவந்த ஆடையின் மேற்சென்ற" தம் சிந்தையைத் திருப்பி "திருவயிற்றுதர பந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே!" என்றும்

"கோர மாதவம் செய்தனன் கொல்? அறியேன் அரங்கத்தம்மான் திரு
ஆர மார்பதன்றோ அடியேனையாட் கொண்டதே!"

என்றெல்லாம் பாடிப் பரவிவந்தவர் பகவானின் சர்வ சக்தியையும் தம் எளிமையையும் அவன தம்மை யாட்கொண்ட சௌலப்பியத்தையும் நினைத்தவுடன்

"அண்ட ரண்ட பகிரண்டத்தொடு மாநிலம் எழுமால் வரை முற்றும்
உண்டகண்டம் கண்டீர் அடியேனை ஆட்கொண்டதே!"

என்று அவர் கவிதையிலே காம்பீரியம் பெருகிவிடுகிறது. பக்தி மேலீட்டினால் பெருமிதம்கொண்ட ஆழ்வார்

"செய்ய வாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே." என்றும்,

"கோல மாமணி யாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோர் எழில்
நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே!"

என்றும் தம் இதயத்தைப் பார்வை மாத்திரையிலே, பகவானின் பேரெழில் நலங்களுக்குத் திறைகொடுத்துவிட்டு அழகுதாங்காது ஆற்றுகிறார். பெருமாளின் திருக்கண்களின் அழகை அநுபவிக்கத் தொடங்கியவர்

† "வதனம் மைதீர் கஞ்சத்தின் அளவிற்றேனும்
கடலினும் பெரிய கண்கள்" என்றபடி,

அடித்தலங் காணமுடியாத அக் கண்களிலே அமிழ்ந்து மீள வழியின்றித் திகைத்துப்போய் விடுகிறார். படிப்படியாக வளர்ந்து வந்த அவர் கவிதையும்

"கரிய வாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே!"

என்னுமிடத்து அழகு நிறைந்து உணர்ச்சி பெருக்கெடுத்து உயர்வெய்தி ஒளிவிடுகிறது. விசேஷமான கலைத்திறமாவது கல்விப் பயிற்சியாவது திருப்பாணாழ்வார் கவிகளிலே காணப்படவில்லை. ஆனாலும் பக்திப் பெருங்காதல் மேலீட்டினால் கடவுளின் எல்லையில்லாத அழகுத் தோற்றத்திலே திளைத்துக் கவியுள்ளம்பெற்ற அவர் பாசுரங்கள் குறிப்பிட்ட இடங்களில் மிக உயர்ந்த கவிதையாகப் பரிணமித்துவிடுகின்றன.

திருப்பாணாழ்வாரின் பெருவாழ்வும் பக்திப் பெருங்கவியும், பண்டைத்தமிழ் மாலுமிகளுக்கு நடுக்கடலிலே தனித் துணையாக மிளிர்ந்த துருவநட்சத்திரங்கள் போன்று, தமிழர் புதுவாழ்விலே உய்ந்நெறி வழிகாட்டியாக ஒளிருமாக!

---

† கம்பராமாயணம்.

# உருக்குமணி.

பண்டிதை—சு. பாலாம்பிகை அம்மாள்.

(உ0-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவ்விடத்தில் ருக்மணி மறையவனைத் தூதனுப்பிவிட்டு அவர் வரவை யெதிர் நோக்கிக்கொண்டிருந்தாள். நாழிகைகள் பல கழிந்தன. வரவில்லை. அவள் கண்ணும் மனமும் ஒருங்கு களைப்புற்றன. அவ்வாயாசத்தை நீக்குவான் ஓர் பூஞ்சோலையை யடைந்தாள். ஆண்டுள்ள சந்திரகாந்த மண்டபத்தின்கண் தோழியாலுண்டாக்கப்பட்ட புட்ப சயனத்தின்மீது உட்கார்ந்தாள். சிறிது நேரத்திற் பகலவனும் மேற்றிசையை யடைந்தான். இறைவனை யறியாதா ருள்ளத்தைப்போல இருள் பரந்தது. உருக்குமணியின் செயலைக் காணவேண்டி சமுத்திரத்தின்மீ தமர்ந்து நோக்கிய பூமிதேவியின் திருமுகத்தை யொத்துச் சந்திரன் உதயமானான். வெண்ணிலவைக் கண்டு வருந்தி யிவ்வாறு கூறுவாள். என்னாலனுப்பப்பட்ட வேதியன் வேதமோதும் பொருட்டு வழியில் தாழ்ந்திருந்தானோ? துவாராபுரியைச் சூழ்ந்துள்ள சமுத்திரத்தைக் கண்டஞ்சிப் பின்வாங்கினானோ? தேவர், முனிவர், பிராமணர் ஆதியோர் நெருங்கியிருக்கின்ற வாயிலைக் கண்டஞ்சினானோ? அன்றி அவர்கள் நெருங்கியிருத்தலினால் எனது செய்தியைக் கிருஷ்ண பகவானுக்கு சொல்ல இயலாது விட்டானோ? எக்காரணம் பற்றியோ அம்மறையவன் வரவை யின்னும் காணவில்லையே! சிசுபாலன் வருமுன்னம் அக்கினியில் விழுந்திறப்பதே நலமென்று சொல்லி அத்திசை நோக்கி வருந்திக்கொண்டிருந்தாள்.

அச்சமயத்தில் சஞ்சீவியைக் கொண்டுவந்த அனுமானைப் போல, துளவமாலையுடன் அந்தணன் விரைவில் வந்தான். வந்து தன்மீது மலர்சொரிந்து வாழ்த்திய பிராமணனை நோக்கி, கிருஷ்ணருடைய வருகையைப்பற்றிய செய்தியைக் கூறுவாய் என்றாள். அவர் இதோ வந்துவிட்டார். நானங்கு சென்று அவரைக் கண்டு நின் காதலையுந் தெரிவித்து நின்னோலையையுங் கொடுத்தேன். அவர் நின் வாசகங்களுக் குகந்து நின்னை மணம் புரிவதாகச்

சொல்லி இம்மாலையையுங் கொடுத்தார் என்றான். அரச குமாரி அம்மாலையை வாங்கிக் கண்களிலொற்றிச் சிரசிலணிந்து மகிழ்ந்து அந்தணர்க்குப் பொன்னும் பொருளு முதவி நன்றியறிதலான பல வாசகங்கள் கூறி யவரை யனுப்பிவிட்டு இன்பமுட னிருந்தாள். நிற்க,

உருக்மன் ஏவிய தூதுவர் சிசுபாலன் மாளிகையையடைந்து அவனை வணங்கி நின்றார்கள். அவன் அவர்களை நோக்கி உம்மை யிவ்விடத் தனுப்பியவர் யார்? உம்முடைய அரசனுடைய பெயர் யாது? அவர் ஊர் யாது? என வினவினன். அவர்கள் அக் கேள்விகளுக்கேற்ற விடைகூறி உருக்மனாற் கொடுக்கப்பட்ட ஓலையைக் கொடுத்தார்கள். அதை அங்குள்ளார் வாசித்தனர். சிசுபாலனறிவது:—என் தங்கையை நானுனக்குக் கொடுக்க விரும்புகின்றேன். ஆதலால் நீ சதுரங்க சேனையுடன் நாளையுதயத்திற்கு வரக்கடவாய். இம்மொழிகளைக் கேட்டு சிசுபாலன் தன் படைகளை முந்திப் புறப்படும்படி முரசறைவித்தான். அவனேவலின்படி படைகள் முந்தி நடந்தன. பல ஊர்க்குறிகளுடன் சிசுபாலனும் ரதத்தின் மீதேறி குண்டினபுரத்தை யடைந்தான். சேதிப்பெருமான் அடைந்த செய்தியைத் தூதுவர் ருக்மனுக் கறிவித்தனர். அவன் சிசுபாலனை யெதிர்கொண்டு சென்று ஓர் மண்டபத்தி லிருத்தினன். சராசந்தன், தந்தவக்கிரன், சாலுவன் முதலியோரும் வந்து சேர்ந்தனர். சிறிதுநேரஞ் சென்றபின் சிசுபாலன் மணக்கோலம் பூண்டான். அக்கோலத்தின் அழகைக் கண்டிறுமாப்புற்று, உருக்மன் தன் தாயிடஞ் சென்று தங்கையைக் கொண்டுவரும்படி சொன்னான். கோப்பெருந்தேவி அவ்வுரையில் வெறுப்புற்று மகள் உறைந்த சோலையை யடைந்தார். அவ்விடத்தில் ருக்மணி கிருஷ்ணர் வராமையாலும் சிசுபாலன் வந்ததனாலு முண்டான துயரத்தால் வருந்திக்கொண்டிருத்தலைக் கண்டு அவளருகிற் சென்று அவளை முத்தமிட்டு செந்திருவே! இந்நகருறையுந் துர்க்கா தேவியானவள் வேண்டுவார் வேண்டும் வரங்கள் யாவும் உடனளிக்குங் கருணையையுடையவள். அவளிடம் யாம் வரம்பெற்று மீள்வோம். விரைவி லெழுவாய் என்றாள். உருக்மணி பூசைக்கு வேண்டும் பொருள்கள் யாவையுங்கொண்டு

வரும்படி தோழியருக்குக் கட்டளையிட்டு, தாயின் ஏவலின்படி புனல்படிந்து பூம்பட்டாடை யுடுத்து அணிகலனணிந்து தன் அன்னையுடன் ஓர் சிவிகையிலேறி நதிக்கரையில் அமர்ந்த கோயிலை யடைந்தாள். நிற்க,

உருக்மணி திருமணத்தன்று கண்ணபிரான் துயிலுணர்ந்து நீராடி காலைக்கடன்களை முடித்து போர்க்கோலம் பூண்டுவந்து தன் தமையனாகிய பலராமனை நோக்கி "முன்னோனே, விதர்ப்பராசனுடைய புத்திரி வருந்துருவண்ணம் நானங்கு சென்று அவளை யழைத்துவரல் வேண்டும். ஆண்டு யுத்தம் நிகழினும் நானவர்கள் யாவரையும் வென்று பெண்ணுடன் மீளுவேன். நீரும் அங்கு விரைவில் வருதல் வேண்டும்" என்றார். அச்சமயம் நாரதமாமுனிவர் வந்து "அரசே, சிசுபாலனவளை மணப்பதற்காக முன்னரே சென்றுவிட்டான். ஆதலால் நீர் தாமதியாது விரைவில் செல்லும்" என்றார். அவ்வுரை கேட்டுத் தன் தேரை யழைப்பித்து அதன்மீதாரோகணித்துக் குண்டினபுரவீதியை யடைந்தார். ஆண்டு மகரதோரணங்களும், பூரணபொற்கும்பங்களும், தீபங்களும் நிரைநிரையாக விளங்கிச் சிறக்க, அம்மண்டபங்களிலிருந்து மாதர்கள் வெளிவருதலையும், கூந்தலிலுள்ள மலர்கள் சிதறிப் போகக் குதிரைகளின் முதுகின்மீது சவாரி செய்தலையும், மதிமுகங்களில் வியர்வை தோன்ற தூசுந்தழலுமசைய, வாசனை பரிமளிக்க ஊசலாடுகின்ற மகளிருடைய பொலிவையும், வீணையுடன் பாடும் பாடலையும் ஆடலையுங் கண்டு மகிழ்ந்து அப்பாற் சென்றார். அங்கு தந்தவக்கிரன் முதலியோர் அமர்ந்திருத்தலையும் சிசுபாலன் மணக்கோலத்துடன் வீற்றிருத்தலையுங் கண்டு, அந்நகரிலுள்ள மற்றைய பல வளங்களையும் நோக்கி இது அமராபதியிலும் மேம்பட்ட நகரெனத் தன்னுள் நினைந்து மறுபுறந் திரும்பினன். அங்கு உருக்மணியின் சேடியர் நீராடி பூசைக்கு வேண்டும் மலர், பழம் முதலிய பொருள்களை யேந்திக்கொண்டு கோயிலை யணுகிவந்தனர். அதுகண்டு ருக்மணியும் அவ்விடத்திருப்பாளென்றெண்ணி கண்ணபிரான் தன்னிரதத்தை கோயிலை நோக்கிச் செலுத்தினன். அங்ஙனம் அவனங்கு சென்றபொழுது ருக்மணி தேவி அம்பாளை தூயநீரால் மஞ்சனமாட்டி மலரணிந்து பலவகை நைவேத்தியங்கள் வைத்து தீபாராதனை புரிந்து வணங்கிக்கொண்

டிருந்தாள். அவள் அன்னை, "அம்மை பவானியே, என்னுடைய புதல்வியைத் துவாரபுரி யமர்ந்த தூயோன் மணம்புரியும்படி வர மருளல் வேண்டும்" என பிரார்த்தித்தாள். தாயானவர் இவ்வாறு வணங்க அரசகுமாரி கண்களில் நீர் தாரைதாரையாக வடிய தீயி லிட்ட மெழுகுபோல மனம் கசிந்துருக, உடல் தடுமாற அம் பிகா தேவியின் பாதங்களில் விழுந்து வணங்குகின்றாள். "தாயே, நீயனுகிய சிசுபாலன் மணிமுடி சிதற மடையனுகிய என் அண்ணனுடைய எண்ணம் பிழைபட என்னுயிர் நீங்குமுன் உலகளந்த மாயவன் என்னை மணம் செய்யும்படி நீர் வரமருளல் வேண்டும்" எனத் துதித்தாள். இத்தருணத்தில் கண்டோர் யாவரும் வியப் புற, இந்திரவில்லுடன் நீலமேகம் நிலமிசையிழிந்தாற்போல கிருஷ்ணமூர்த்தி இரதத்தை விட்டிறங்கிவந்தார். அவர் வரவைக் கண்ட உருக்மணி அமிர்தபானஞ் செய்தவரை யொத்து உடலம் பூரிக்க உள்ளங்களித்தாள். அவ்வாறு களித்தும் அக்களிப்புப் புறத்தே தோன்றுதவாறு நாணந்தடுப்ப, மந்தகாசந் தவழ்ந்த முகத்துடன் தோழியர் குழாம் புடைசூழச் சிறிதகலச்சென் ருள். அரசர் பெருமாட்டிகண்ணனைக் கண்குளிரக்கண்டு இவனே என் மகட்கேற்ற நாயகனென நினைந்து அவனருகிற்சென்று "யாதவகுமாரா! உன்னையன்றி என் மகள் வேறொன்றையும் நினைக் கின்றாளில்லை. ஆதலால் நீயே அவளுடைய நாயகனுருக. ஸ்ரீமகா லட்சுமியை யொத்த இப்பெண்ணுக்கு நீயே மணாளனுகி ஊழி காலம் வரைக்கும் வாழ்வாயாக. உன்னையன்றி வேறொன்றுமறி யாத என் ஆருயிரனைய மங்கையை நீ காத்திடல் வேண்டும்" என நன்மையான பல வாசகங்கள் கூறி தன் மகளை யழைத்து அவளு டைய கரத்தைப் பிடித்துத் திருமால் கரத்தில் கொடுத்தாள். கொடுத்த வளவில் அரசகுமாரி ஸ்ரீ கிருஷ்ணபகவானின் செஞ்சே வடியில் விழுந்து பணிந்தாள். பணிந்தவளை, தம் இணைக்கரத்தா லெடுத்துத் தேரிலேற்றிச்சென்றார்.

(தொடரும்.)



# இரங்கற் பாக்கள்.



ஸ்வாமி சிரத்தானந்தர் மீது
திருச்சி, "நச்சினார்க்கினியன்" பத்திராதிபர்
பண்டித ஸ்ரீ: ம. கோபாலகிருஷ்ணையர் இயற்றியவை.

பல்வளமுஞ் செறிந்தஎழிற் பாஞ்சாலம் செய்ததவப் பயனா வந்து
மல்குகலை அறிவுநடை மிக்கு வக்கீ லாய்ச்செல்வ வளம் வாய்ந்
[தென்றும்,
ஒல்வகைபல் அறவினைகள் ஓவாதே செல்வகை செய்(து)
[உலகுபோற்ற
இல்லறநன் னிலைக்கணிருந் தாழி, "லாலா முன்ஷீ ராம்"
[எனும்பேர் உற்றோய் !

[ஒல்வகை &c.—'ஒல்லும் வகையால்' என்ற குறளின் கருத் தமைப்பு.]

ஊரத்தானந் தமருயத்தன் உபதேசம் பொருள் ஆவி உடலமர்ந்து
சிரத்தானம் வகித்ததனால் சிரத்தானந் தம்கொண்ட சிரத்தானந்த !
நரத்தானந் திடும்ஒருவன் நடலையினால், கதுமென ஓர் நஞ்சு
[தோய்த்த
சரத்தானந் தொருகலைமான் சாய்ந்ததுபோற் சாய்ந்தனையே
[தரணி மீதே !

[ஊரத்தால் நந்தமர் உய்ய—விவேகம் வலிமை ஊக்கம் முதலிய வற்றால் நம்மவர்கள் உயிர்வாழ. சிரத்தானம்—தலைமை ஸ்தானம். சிரத்தானந்தம்—சிரத்தையும் ஆநந்தமும். நரத்தால் நந்திடும்—மனிதப்பிறவிக்குரிய குறைகளால் சீரழிந்து வருந்தும். நடலை—வஞ்சகம், கதுமென—திடீரென எவரும் எதிர்பாராதபடி, சரத்தால் நந்து ஒரு—பாணத்தால் அழிந்த ஒப்பற்ற.]

உத்தம ! நின் சேதிமலை நாட்டுச்சே திச்சேதி ஒருவாரெருக்கும் :
புத்திவிசா லம்பெறு 'மெய்ப் பொருள் நாயனார்' எனவே
[பொலிந்தாயால் நீ

'முத்திரா தனைப்போன்றா னல்கோழை 'அப்துல் ரஷீத்'
[மோச நெஞ்சன்
'தத்தன்'எனத் தத்தொழிக்க முயன்றுநின்றா னல்நினது
['தர்மசிங்கே'.

[நின்சேதி—உன்னைப் பற்றிய விஷயம். மலைநாட்டுச் சேதிச் சேதி—மலயமா நாட்டின் தலைநகரான சேதி நகரில் நிகழ்ந்த செய்தி. தத்து ஒழிக்க—துன்பத்தை நீக்க. சேதி நகரில் நிகழ்ந்த செய்தி விவரத்தைப் பெரிய புராணத்தில் மெய்ப்பொருள் நாயனார் சரித்திரத்திற்கண்டு கொள்க.]

பல்லவர்நல் அமெரிக்கர் இந்துமதம் தழுவ, மனம் பதறி, முன்ஓர்
புல்லியன் 'ஸான் பிரான்ஸிஸ்கோ' புனிதஇந்துஆலயத்தே
[புகுந்து யாரும்
சொல்லரிய நிஷ்டையிலார் 'ஸ்வாமி திரிகுணாதீத'த் தூயோன் மீது
வல்லவெடி குண்டெறிந்து வதைத்ததுபோல் நினைஇவனும்
[வதைத்திட்டானே!

[ஸ்வாமி திரிகுணாதீதர்—ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ ஊழிய சங்கத்திற் சேர்ந்த பெரியாரில் ஒருவர். விவேகாநந்த ஸ்வாமிகளின் சகபாடி. அமெரிக்காவில் உள்ள பல கிறிஸ்தவ வெள்ளையர்களை இந்து மதத்தில் திருப்பி, அவர்களுடைய பெரும் பொருளைக் கொண்டே பஸிபிக் மகாசமுத்திரக் கரையில், 'ஸான்பிரான்ஸிஸ்கோ' என்ற இடத்தில் ஒரு பரிசுத்த இந்து ஆலயங்கட்டிய பரமதீரர். ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள பரிசுத்த கிறிஸ்தவாலயங்களும் கட்டிடங்களும் சமீபத்திற் றோன்றிய பூகம்பத்தால் அழிவுற்ற காலத்தில் தம் நிலையைப் பற்றி அஞ்சி வருந்தியோர்க்கு "நமது ஆலயமும் நானும் சிஷ்ய கோடிகளும் க்ஷேமமாயுள்ளோம்" என்று தந்தி அனுப்பியவர். இவரது புகழ்கண்டு சகியாப் பித்தன் ஒருவன், இவரை மூர்க்க வஞ்சகத்துடன் வதைத்த வரலாறே இங்குக் குறித்த விஷயம். இவனை அக்கணமே கொல்லத் தயாராயிருந்தோரைத் தடுத்து, ஸ்வாமிகள் அவன் பித்தனேயாதலின், அவனை எதும் செய்யாது விட்டுவிடுமாறு வேண்டியதையும், அவனை இரங்கி ஆசிர்வதித்தனுப்பியதையுமட்டும் இப்பொழுது நினைப்பூட்டுகிறோம். ஸ்வாமி சித்தானந்தரும், கோமுக வியாக்ரம்போல் வந்த அப்துல் ரஷீதை அவ்வாறேசெய்திருக்கக் கூடுமென்பதே மகாத்மா காந்திபோன்ற அறிஞர்களின் துணிபு.]

ஆற்றல்அளித் திடுசத்பாக் கிரகஇயக் கம்உச்சத் தார்ந்த அந்நாள்,
நாற்றிசையும் எத்திசைகொள் நினைஇஸ்லா மியர்வலிந்து நன்கு
[போற்றி,
மேற்படுதம் குருமாரே மேவவல்ல மசூதி உயர் மேடைமீது
வீற்றிருக்க நினைவிரும்பி நினதுதிரு வாக்கு நலம் மேற்
[கொண்டாரே.

[அந்நாள்—பல உயிர்வதைகள் பழிக்கஞ்சாப் பாவிகளால் நிகழ்ந்த 1919-ஆ. மசூதி—டில்லியிலுள்ள ஜம்மா மஸ்ஜித் பள்ளிவாசல்.]

ஒன்றுமனத் தினராஅன் றுனைமதித்த அவர்களிலே ஒருவன்
[அந்தோ!
இன்றுனைக்கொன் றிட்டதெனே! அம்மதஉத் தமர் யாரும்
[இடியே றுண்டோர்
என்றெவரும் இசைப்பமதி கலங்கித்தா யினைஇழந்த இளங்கன்
[றென்னக்
கன்றிஅழு தவன்செயலைக் கடிந்திகழின் நின்தூய்மை கழறற்
[பாற்றே!

[ஒன்றும் மனத்தினரா—அபிப்பிராய பேதமில்லாராய். அம்மத உத்தமர்—இஸ்லாமிய சிரேஷ்டர்களான மௌலானா மகமதலி ஷவுகத் அலி ஜின்னா முதலியோர். கன்றி—வருந்தி.]

சிதமிகுத்த நினைவதைத்த கதமிகுத்த காதகனோர் தீமை சான்ற
மதமிகுத்த் வெறிபிடித்த மதியிலியால் மதவெறிதான் மன்னி
[யோனே.
பதர் நிகர்த்த இவன்இழைத்த பழிநினைத்துப் பிறமதத்தர்
[பண்பு போற்றும்
இதமிகுத்த எழில்குணத்த எமதிஸ்லாம்சோதரரை இகழ்கி
[லேமால்.

[சிதம்—விவேகம். கதம்—கோபம். மதவெறி மன்னியோன்—உடற் கொழுப்பும் வீண்பைத்தியமும் வாய்ந்தவன்; மதஉணர்ச்சியோ, அதனாலுற்ற ஆவேசமோ மேலிட்டோன் அல்லன்: மத உணர்ச்சி இம்மியும் இருப்பின், இஸ்லாமியமதம் இத்தகைய ஈனப் படுகொலைக்கு இடந்தரா தென்பதே உண்மை மகமதியர் துணிபு.]

உள்ளத்தாற் பொய்யாதே ஒழுகியநிற் கிரங்கிலம்பாம் உலகத்
[துள்ளார்
உள்ளத்துள் எல்லாம் நீ உளன்ஆனுய்; நீமரணம் உற்றேன்
[இல்லை.
கள்ளத்தால் நினைக்கொன்ற காதகனே கற்பாந்த காலம் யாரும்
எள்ளத்தான் பழிபாவப் படுகுழியில் வீழ்ந்தமைக்கே இரங்கி
[னேமே!

['உள்ளத்தாற்—உளன்'—என்பது, குறள் வாக்கின் அமைப்பு.]

ஏழுவரு டங்களுக்கு முன்சத்யா க்ரகத்திருநாள் இயன்றகாலை
பாழியகூர்க் கப்படைஞர் ஜனத்திரளைச் சுடவருங்கால்,
[பயப்படாமல்,
'வாழியநீர்! எனைச்சுடுமின் முதலில்' என்றுமார்காட்டி
[வாய்மைகூறி,
வேழமென நின்றவரைச் சொல்வலியால் செயலறச்செய் வீரதீர!

[இயன்றகாலை—1919-ஆம் மகாத்மா காந்தியால் விதிக்கப்பட்ட போது. பாழிய—வீரமும் பெருமையுமிக்க. வாய்மை—இந்திய சகோதாரின் தன்மை, அவர்களிடமிருந்து எதிர்பார்க்கும் கடமை, பொருந்தாச் செய்கைகளின் புன்மை முதலியவற்றைப் பற்றிய உண்மை. உருக்குருகக் கல்லுருகக் கன்னெஞ்சர் மனமுருக இவர் கூறிய மொழிகளையும் மூர்க்கமிக்கு வந்த கூர்க்கப்படைஞர் நாணி, இம்மியும் திக்கிழையாது திரும்பிச்சென்ற அதிசயத்தையும், அக் காலப் பத்திரிகைகளிற் கண்டுணர்ந்தறிக. வேழமென நின்றவரை—'யானைபோல் மதர்த்து நின்று சுடவந்த கூர்க்கரை' என்றும்; வயோதிகத்தும் இறுமாந்து யானைக்கன்றுபோல் தான் நின்று, அக் கூர்க்கர்களை—என்றும் பொருள்படும்.]

அருமைமிகு நின்பொருள்முற் றளித்துக்கங் கைக்கரையில்
[அரித்வாரத்தில்
இருமையினும் நலம்புரியும் குருகுலம் ஒன்றினைநிறுவி இலங்கச்
[செய்தாய்
பெருமையுடன் இலகுமதற் கைம்பதினா யிரம்வெண்பொன்
[பெற்ற நின்றன்
உரிமைபெறு நூனிலயம் ஒன்றளித்தும் பலர்க்குநலம்
[உதவினையே.

[குருகுலம்—ஆரிய ஸமாஜத்தை ஸ்தாபித்த ஸ்வாமி தயாநந்த சரஸ்வதிகளின் விருப்பு நிறைவேற ஸ்தாபிக்கப்பட்டது இது. வெள்ளிபோன்—ரூபாய். நூனிலயம்—புத்தகசாலை.]

செம்மைசெய்இக் குருகுலஐ யையாண்டுத் ஸவம் விரைவில்
[சிறப்பாச் செய்ய
அம்ம! நினைந் தாய், அதற்குள்இவ்வுலகை விட்டகன்றாய்
[அந்தோ ! அந்தோ !
எம்மனிதர் உளம்வருந்தார்? எவர் விழியேநீர் வடியா
[திருக்கும் கூறாய்
நம்மவர்சொல்குயவன்தடி காரனுக்காம் பழமொழிபோல்
[நடந்ததென்னே !

[ஐயையாண்டு உத்ஸவம்—Silver Jubilee என்ற 25-வது வருடத் திருநாள். விரைவில்—பிப்ரவரி-மீ குயவன் தடிகாரனுக்காம் பழமொழி—குயவனுக்குப்பல நாள்வேலை; தடிகாரனுக்குக் கால் நாழிகை வேலை.]

திக்கறுநம் இந்துமதம் தழையஇரு தினசரிக்கா சிரியனும்
தக்கநலம் பிறர்க்கியற்றச் சமயத்தொண்டினைப் புரியச்
[சங்யாஸத்திற்
புக்கும், உளம் பூரித்த நினைப்போன்ற புண்யரெவர்
[பூலோகத்தே ?
ஒக்கஉயர் உருவமுடன் உயர்நடையும் உயர்குணமும் ஒருங்குற்
[றோனே.

[இருதினசரிகள்—தம் வயோதிகத்தும் தாம் ஆசிரியராய் நின்று ஸ்வாமிகள் நடத்தி வந்த 'தேஜஸ்' 'அர்ஜுன' என்ற தினசரி இந்தி உருதுப்பத்திரிகைகள். இவற்றைத் தவிர 'Liberator' என்ற ஆங்கில வாரப் பத்திரிகையும் சுவாமிகள் தம் உயிர்பிரியும் வரை நடத்திவந்திருக்கிறார்.]

மணமலிந்த சிலமலர், வேர் மடிவுறினும் மறைவுறினும்
[மணமே வீசும்!
வணமலிந்தரோஜாசன் பகம் வருளம் வேரிஇவை வல்ல
[சான்றாம்.

குணமலிந்த நினதுடலம் குலைவுறினும் குற்றமிலை: கோறில்
[மக்கள்
கணமலிந்த எவ்வுலகும் நினதுபுகழ்ச்செயலென்றும் கமழும்
[கண்டாய்

[வணம் மலிந்த—அழகு மிக்க. வதுளம்—மகிழம்பூ. வேரி—வெட்டிவேர். வல்லசான்று—பலத்த சாக்ஷி. கணம்—கூட்டம்.]

'அக்ஷயம்'என் பதில்அகரம், பண்டறிகுட் டாய்'க்ஷயமார்
[ஆண்'டென் றும், நின்
வக்ஷமதை வஞ்சன்வெடி கழித்தமதி 'மார்கழிப்'பேர் வாய்ந்த
[தென்றும்,
பக்ஷமற'வருத்திநோ ளேகுருநாள்' என்றும், நீ பாரைநீத்த
'அக்ஷய'ஆண் டின்பொருள், 'மார் கழி' மாதப் பொருள்,
['குருநாள்' அர்த்தம் ஓர்ந்தேம்.

[அக்ஷய—யாரும் எளிதில் உணரவல்ல சீரழிவு விளக்கும் வருஷம். வக்ஷம்—மார்பு. துரு—வருத்தம். துருநாள்—வருத்தம் விளக்கும் தினம்.]

நின் உயிர்போல் நீவளர்த்த குருகுலம் பத் திரிகையெலாம்
[நிலவிவாழி!
நன்னர்நிறு வியநினது கன்யாவித் யாலயமும் நாளும்வாழி.
தந்நிகரில் நின்தனயர் குலத்தவரா நியர் என்றும் தழைத்து
[வாழி!
மின்னுபுக ழொடுநின்தா பனம் பிறவும் மேதினிக்கண்
[விளங்கிவாழி!

[கன்யாமகா வித்யாலயம்—ஜலந்தரில் ஸ்தாபிக்கப்பட்ட பெண்கள் வித்யாலயம். தநயர்—போதகாசிரியரான இந்திராணுதியோர். பிற ஸ்தாபனங்களிற்சில—இந்திரப்பிரஸ்தம் கான்பூரில் இருக்கும் கல்வி நிலயங்கள், வேறு வடஇந்தியக் கல்லூரிகள் முதலியன.]



உ
சிவமயம்.

# "குமரன்" KVC0009

எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௬ } காரைக்குடி அட்சயஹூ தை மீ { மணி ச

## பாஞ்சாலத் தெய்வம்.

வணங்காமுடியனென துரியோதன மன்னன் அரசு வீற்றிருந்தான். அம் மாமணி மண்டபத்தினிடையே அவையின் அங்கத்தினர் பல்லோர் குழுமியிருந்தனர். ஒருபால் மன்னர்க்குரிய உடலலங்காரத்தை நீத்து வாடியமுகமும், சோர்ந்த கண்ணும் கறுவிய நெஞ்சமுமுடையரான நான்குசகோதரர்கள் பின்னிற்க, அரச உடையிழந்து காடுநோக்கும் பெற்றியையுடைய தர்மராஜன் நின்ற நிலை கணடோர் கண்ணில் நீரைப் பெருக்குவதாயிற்று. அவைக்களத்தில் அரவ மெதுவுமின்றி அடக்கம் குடிகொண்டிருந்தது. அப்பொழுது திணிந்த உடலும் கரியநிறமும் கொழுத்த மீசையும் கொடுமை நிறைந்த கண்ணும் இருளடைந்த மனமும் இவற்றைச் சார்ந்த பிற குணங்களும் ஒருங்கே சார்ந்து ஆண்டுநின்ற துச்சாதனனைத் துரியோதனன் நோக்கினான். 'நீலோற்பலம் போன்ற விழியையுடைய அப்பெண்ணை இந்த அரசவைக்கண் அழைப்பாயாகவென உத்தரவிட்டான். ஆண்டிருநதகன்று துச்சாதனன் அந்தப்புரத்தையணுகி ஒப்பாரு மிக்காருமற்று உடல்வலிக்கும் சிலை வலிக்கும் ஒருவனே யெனும் பெற்றிபெற்ற அருச்சுனனது விற்றழும்பேறிய திருக்கரங்களால் பின்னப்பட்டு, மணம்பொருந்திய பன்னிற மலர்களால் அழகுபடுத்தப்பெற்ற பாஞ்சாலியின் கூந்தலைப்பற்றி யிழுத்தான் படுபாவி துச்சாதனன். நகரத்துறையும் ஆடவர் மடவார் அனைவரும் கன்கலங்கி, உடல்கலங்கி, உயிர்

கலங்கி வருத்தக்கடலுள் கிடந்திளைப்ப, நறும்பூங்கொடியனைய துரோபதையை இழுத்துவந்து அரசவையில் நிறுத்தினன். இக்கோலத்தைக் கண்டு வீமன் கதைமேல் கைவைத்தான். விஜயன் காண்டீபத்தை நோக்கினன். நகுல சகாதேவர் கோபத்தீக்கொண்டனர். தருமன் அவர்களைப் பொறுக்குமாறு பணித்தான். அவைக்கணிருந்த, ஆற்றலும் அறிவும் மிக்க பெரியோர்பலரும் ஆண்டான் துரியோதனனது ஆணையில் அடங்கிக்கிடந்தனர். கொடும்புலிகள் வாழும் பாந்தளங்காட்டில் தனியே அகப்பட்ட சின்னஞ்சிறு மானை யொப்ப உய்யும்வழிகாணுப் பாஞ்சாலப்பாவை நின்றுதவிப்பாளானள். இவ்வமயத்துக் கண்ணிலான் மகனுன துரியோதனன் இரக்கமற்ற துச்சாதனனை நோக்கி, ஈண்டு நிற்கின்ற கிள்ளைமொழியுடைய இப்பெண்ணின் துயிலை உரிதியென இடி இடித்தாற்போற் கூறினன்.

துச்சாதனன் ஆனந்தக் கூத்தாடிக்கொண்டு அம் மாதுநல்லாளின் ஆடையை யுரிவான் அடர்த்தபோது திக்கற்ற அம் மெல்லியலாள் செய்யக்கிடப்பதென்னை? அரசனும் அநுசனும் ஆடையுரிய முந்துகின்றனர். அவைக்கணிருந்த வீட்டுமன், விதுரன், துரோணன், கிருபன் முதலிய பெரியோரும் உயிர்ப்பிணங்களாக ஆண்டு உறைவாராயினர். மனவினை யாற்றிய மன்னர்மக்களான நாயகன்மாரைவரும் சங்கிலியால் யாக்கப்பட்ட யானை யெனத் திறலற்று நிற்பாராயினர். ஈண்டு இவர்களிடையே அகப்பட்ட மெல்லிய இப் பெண்மான் செய்யுங்காரியமென்னை? கொடியோன் ஆட்சி வயப்பட்ட இவ் வவை எளிய பெண் கொடிக்கு நியாயம் நல்குமோ? இதனை யுணர்ந்தாள் பாஞ்சாலப் பசுங்கொடி. கையற்ற நேரத்தில் காக்குங் கடவுளான கண்ணபிரானுடைய திருவடியில் அவளுடைய மனத்தைப் பொருத்தினள். ஆற்றின் வெள்ளம் போல இரண்டு விசாலமான அஞ்சனந்தீட்டிய கண்களும் வெப்பம் பொருந்திய நீரைக்கொட்டின. பாவிகையா லிழுக்கப்பட்ட கூந்தலானது சோர்ந்து கிடந்தது. தன்னுடலினின்றும் வேறுகும் ஆடையைப்பற்றிய கையானது தளர்ந்தது. உடல் இளைத்தது. கோவிந்தா! கோவிந்தா!! என்று கூறுவதன்றி வேறொரு வார்த்தையுங் கூறினளில்லை. உடலெலாங் குளிர்ந்து ஊறுதத்தேவாமிர்தமானது நாவின்கண் ஊறிற்று. உடலானது மயிர்க்கூச்செறிய

உள்ளமும் உருகிநின்முள் அப் பாஞ்சாலச் செல்வி. இதனைப் பற்றி வில்லிபுத்தூரார் கூறும் பாட்டு வருமாறு:—

ஆறுகி இருதடங்கண் அஞ்சனவெம்
புனல்சோர அளகஞ் சோர
வேமுன துகில்தகைந்த கைசோர
மெய்சோர வேறோர் சொல்லும்
கூறுமல் கோவிந்தா கோவிந்தா
என்றரற்றிக் குளிர்ந்து நாவில்
ஊறுத அமிழ்தூர உடல்புளகித்து
உள்ளமெலாம் உருகி னளே.

மூரு.

## உருக்குமணி.

பண்டிதை—சு. பாலாம்பிகை அம்மாள்.

(௬0-ம் பக்கத் தொடர்ச்சி.)

இச்செய்தியைத் தூதுவர் ருக்மனுக்கறிவித்தனர். அதையறிந்த ருக்மன் கடுஞ்சினமுற்று சொல்லுகிறுன். எங்கள் குலத்தின் பெருமையைக் கெடுத்து என் தங்கையை வலிந்திழுத்து தன் இரத மேற்றிச் செல்லுகின்ற இடையனுடன் யுத்தஞ்செய்து அவனை நையப்புடைத்து அவன் கரங்களைக் கட்டுவேன். தேவர் வந்து விலக்கினுலும், மும்மூர்த்திகள் வந்து என்னைக் கொன்றுலும் கடும்போரில் இக்கள்வனை வெற்றிகொண்டு மீள்வேன். அரசர்களே, அவனுடைய வில்லை முறித்துத் தூத்தி என் தங்கையை இதோ கொண்டுவருகிறேன் பாருங்கள். யாதவனை முறியடித்து ருக்மணியைக் கொண்டுவாராவிடில் நான் இந்நகர்க்குத் திரும்பேன். கார்வண்ணனைப் புறங்காட்டச் செய்யாது இந்நகர் புகுந்தால் அறங்கெடுத்து அருளைக் கொன்று மறத்தைக் கைப்பிடித் தொழுகும் பொய்யனுக யான் மாறுவேன். கண்ணனை வென்று என் தங்கையைக் கொண்டுவாராவிடில் பரதாரம் விரும்பிச் செல்லுமொருவன் விழுகின்ற நரகத்தை யானுமடைவேன். பெண்ணை

மீட்காவிடின் செய்நன்றி கொன்ற பாதகனாகுவேன். கோவலனைப் புறங்காட்டச்செய்யாதுஇங்குவந்தால் பொய்ச்சான்று சொல்வோரெய்தும் நரகத்தை நானுமடைவேன். மங்கையை மீட்காவிடில் நான் அந்த யாதவனுக்கு அடிமையாகுவேனெனச் சபதமிட்டான். இவ்வெவ்வுரைகளைக் கூறிக் கோபத்துடன்நின்ற ருக்மனை நோக்கி, எனக்கஞ்சி நீர் மத்தியிலுள்ள துவாராபுரியை உறைவிடமாகக் கொண்ட தனியனாகிய கண்ணனை யான் பிடித்துச் சிறை வைப்பேனெனச் சராசந்தன் கூறினான். யான் தனியே சென்று அவனை வெல்வேனென்று தந்த வக்கிரன் சாற்றினான். அவனைக் கட்டுவேனெனச் சாலுவன் மொழிந்தான். கோபம் பொருந்திய மனத்தையுடைய சிசுபாலன், நான் அந்த யாதவனுடைய தேரை வீட்டி அவனைப் பிடித்துக் கொண்டுவந்து நின்முன்னிலையிற் கட்டுவேன் பார் என்றான். இவர்களுடைய வீரமொழிகளால் ருக்மன் முன்னையிலும் பன்மடங் கதிகமாக உற்சாகங் கொண்டு தன் படைகளை நோக்கி இடையன் பெண்ணைக்கொண்டு போகுமுன் நீவிர் சென்று அவனைத் தடுங்களெனக் கட்டளையிட்டான். அவன் ஏவலின்படி சதுரங்க சேனைகளும் புறப்பட்டெழுந்து வந்து ருக்மணியுடன் இருக்கின்ற கிருஷ்ணரைக் கண்டு ஆரவாரித்து அம்புகள் சொரிந்து நெருங்கி எங்கள் அரசிளங் குமரன் சிங்கத்தைப்போலக் கர்ச்சித்து உன்னை வந்துகொல்லுவான். அதற்குமுன் நீ பெண்ணை விட்டுவிட்டுச் செல்லெனக் கூறின. இவைகள் நெருங்கி வருவதைநோக்கி ருக்மணி சிறிது அச்சங் கொண்டாள். அதைக்கண்டு திருமால் புன்னகைசெய்து நீ அஞ்சாதே யெனத்தேற்றி வில்லில்நாணேற்றிப் பகழி தூவி அச்சேனை முழுவதையுஞ்சங்காரஞ்செய்தார். அதுகண்டுபவுண்டரனென்பான் இரதத்தைச் செலுத்தி முன்னணிக்குச் சென்று மொய்யமர் புரிந்தான். கோபாலன் அவனுடைய சரங்களைப் பார்த்து நகைத்து அவன் வில்லை யொடித்துத் துரத்திப் புறங்காட்டச் செய்தபின், சாலுவன் தந்தவக்கிரன் மகதராசன் முதலியோர் முறை முறையே சமர்புரிந்து வெந்நிட்டனர். அதன் பின் சிசுபாலன் யானைமேல் வந்து தோன்றி தேவேந்திரன் முதலான எந்தத் தேவர்களாயினும் என் அம்பிற்றுடைந்தோடுவதல்லது ஒருகாலமேனும் என் முன்நில்லார். இப்பெயர்ப்பட்ட என்முன்

இந்த இடையனே நிற்கவல்லுநன் என்று மொழிந்து மற்றைய வர்களைப் போகாமல் தடுத்துத் தான் சில வீரருடன் சென்று தாக்கினான். கண்ணபிரான் சரமாரி பொழிந்து அவ்வீரர்களைக் கொன்று குவித்துச் சங்கை வாயில்வைத்தூதினான். அதுகண்டு பொறுனாய் சிசுபாலன் கிருஷ்ணன் மீது கடியபாணங்களைப் பிர யோகித்தான். கண்ணன் அவைகளை வெல்லத்தக்க பாணங்களை முறைமுறையாக விடுத்துக் கடைசியில் சிசுபாலன் ரதத்தையும் வில்லையும் ஒருங்கேவீட்டி அவன் மார்பிலுந் தோளிலும் தொடை யிலும் வாளிகளைப் பிரயோகித்தான்.

அவைகளைப் பொறுக்கமாட்டாது உடல் முழுவதும் இரத்த வெள்ளம் ஆறாய்ப் பெருகத் தரையில் சோர்ந்து விழுந்தான். உருக்குமணி உவகை மேலீட்டினால் பெருநகை செய்தாள். படை களும் ஓட்டம் பிடித்தன. ருக்மன் இவ்வீரர்கள் யாவரும் அஞ்சி யோடியதைக்கண்டு வெகுண்டுஆர்ப்பரித்து சங்கைவாய்வைத்தூதி எண்ணற்ற வீரர்களுடன் வந்து கண்ணனை யெதிர்த்தான்.

கிருஷ்ணமூர்த்தி அவ்வீரர்களைத் தம் அம்புகள்கொண்டு தாக் கிச் சின்னாபின்னப் படுத்தினர். ஒற்றைத் தேரின்மீது ஓர் விற் கொண்டு இவன் இவ்வளவு வீரர்களையுங்கொன்று குவிப்பது மிக வும் நன்றாகவிருக்கின்றதெனநகைத்துத் தன்இரதத்தைஎதிர்த்துச் செலுத்தி மாயவனை நோக்கிக் கூறுவான். வெண்ணெய் திருடித் திரிந்த கள்வனே! தோலுங் கயிறுங்கொண்டு காட்டிலுள்ள புற் றரையிலுழன்று திரிந்த இடையனே! என் னுயிரை யொத்த தங் கையைக் களவிற்கொண்டு செல்லுங் கள்வனே; நீ பிழை செய்து விட்டாய். நீ என் தங்கையை விட்டுவிட்டுச் செல். அல்லாவிட் டால் உன் வில்லை யொடித்து இருகரங்களையும் கட்டிவிடுவேன். அங்ஙனம் செய்யாதொழிவேனேல், நான் நின் அடியவருடைய கால் தூசுக்கொப்பாவேன் என்றான். அவ்வுரைகேட்ட வாசுதே வர் இளநகை யரும்பி, அறிவில்லாய்! சுத்த வீரர்களுக்குரிய சில வாசகங்களைப் பேசிவிட்டாய். உன் தேருங்கொடியுஞ் சிதை ந்து வில்லும் முறிந்துபோகத்தக்க பாணங்கள் உன்னைக் கிட்டிச் சேருமுன் விரைவில் நீங்கித்து நின்னுறைவிடம் சேர்வாயாக என் றார். ருக்குமனுக்கு கண்களில்அக்கினிப்பொறி பறந்தது. பல்வகை

அஸ்திரங்களைப் பிரயோகித்தான். இருவரும் உரைகடந்த பெரும் போர்புரிந்தனர். மாயவன் ருக்மன் அஸ்திரங்களை முறை முறையாக விலக்கி, அவனுடைய நெஞ்சை யூடுருவிச் செல்லத்தக்க பாணங்கள் சிலவற்றை விடுத்தான். அவ்வாறு விடுத்த பாணங்கள் மெய்யைத் தொளைத்ததனால் குருதி நீரூற்றெடுப்ப ருக்மன் ரதத்தின்மீது சோர்ந்துவிழுந்தான். கண்ணபிரான் தேரைத் துவராபுரியை நோக்கிச் செலுத்தினன். குண்டினபுரத்தை நோக்கிவந்த பலராமர் தன் தம்பி மங்கையுடன் வருவதைக்கண்டு மகிழ்ந்தார். கிருஷ்ணர் பலராமரைத் தன் விரதத்திலேற்றிச் செல்கின்றார்.

அத்தருணத்தில் ருக்மன் களைதெளிந்தெழுந்து கிருஷ்ணர் மாதுநல்லாளுடன் சென்றுவிட்டாரெனக் கேள்வியுற்றுச் சாலச் சினந்து அந்த இடையன் அற்றம்பார்த்துச் சென்றுவிட்டான். அவனை உதைத்துத் தள்ளுகிறேனெனப் பின்தொடர்ந்து சென்று தடுத்தான். அவனுக்குத் துணையாக சிசுபாலன் முதலியோருஞ் சென்றனர். இவர்கள் யாவரையும் ஒரு கணப்பொழுதிற் கொன்று தள்ளுவேனெனப் பலராமர் எழுந்தார். அவரைச் சிசுபாலன் முதலியோர் ஒருங்கு சேர்ந்தெதிர்த்தனர். முன்னையினும் பன்படங்கு வேகமாகப் போர் நடந்தது. எண்ணற்ற வுயிர்கள் தத்தம் உடலைவிட்டு நீங்கின. ருக்மன் கண்ணனுடைய சேனைகளை யதிகமாகக்கொன்று தள்ளிவிட்டான். எஞ்சியோர் புறங்காட்டி யோடினர். அதுகண்டு சகியானுப் பலராமன் கலப்பைகொண் டெதிர்த்துச சிசுபாலன் முதலியோரைப் பின்வாங்கச் செய்து ருக்மனிடஞ்சென்றார். அவன் தன்னிடமிருந்த அஸ்திரங்கள் யாவையும் பால்வண்ணனாகிய பலராமன் மீது விடுத்தான். அவரும் அவைகளைக் கலப்பைகொண்டு தாக்கி ருக்மனுடைய தேரையு மொடித்து விழுத்தினர்.

அரச குமாரன் நிலமிசைக் குதித்துத் தண்டுகொண்டு தாக்கினன். பலராமர் தண்டை முறித்தெறிந்து ருக்மனுடைய கைகளைப் பிடித்துநெரித்து மார்பில் பலமாக அடித்துக் கிரீடமணிந்த தலையைத்திருக முயற்சித்தார். அச்சமயத்தில் உருக்குமணி தன் தமையன் இறந்துபோவானென்னு மெண்ணத்துடன் நீர்வடிகின்ற கண்களோடு கிருஷ்ணருடைய பாதகமலங்களில் விழுந்து

வாசுதேவ, என் அண்ணன் இறந்துபடுமுன் நீர் விரைந்துசென்று கலப்பை தாங்கிய வீரனை விலக்கி யருளல்வேண்டும் என்றாள். நாயகியினுடைய வேண்டுகோட்கிணங்கி தன்முன்னேனைநோக்கிப் புகல்கின்றான். இந்திரன் முதலான தேவரும் நின்னுடன் சமர் செய்துவெல்ல வல்லவரல்லர். சிறப்பில்லாத இந்த ருக்மனேடு போர் செய்தல் நின் வலிமைக்கிழுக்காகும். நின்னடியிற் றாழ்ந்து கிடக்கின்ற இவனை நீர் உய்யக்கொண்டருளல் வேண்டும். தம்பி யாருடைய வேண்டுகோளின்படி ருக்மனைச் செல்ல விடுத்தார். அவன் தன் தேரைநோக்கி யோடினான். பலராமர் ஆர்ப்பரித்து ஏ நீ போகாதே நில்லென்று கூவி அவன் ரதத்தின்மீதும் பரிகள் மீதும் பாகர்மீதும் கணைமாரிபொழிந்து யாவையுஞ் சிதைத்தான். அதன்பின் ருக்மன் வாளாயுதத்துடன் வந்துதோன்றினான். கிருஷ் ணருடைய ஒரு கணையினால் அவ்வாள் துண்டந் துண்டமாகவிழுந் தது. இனி நாம் மல்யுத்தஞ்செய்வோமென்றெண்ணி மாயவனு டைய தேரின்மீது பாய்ந்து அவரை நெருக்கித் தழுவினான். அவ்வாறு தழுவிய ருக்மன் கரங்களைப் பிடித்துத் தேர்க்காலிற் கட்டி ருக்மணி நாணி யொதுங்க நின்று நகைத்து அவனுடைய சிகையை வாளாலரிவித்தான்.

என்னைவென்று உன்தங்கையை மீட்பேனென நீமுன்புகூறிய சபதமொழிகளே இன்று உன்தலையை முண்டிதமாக்கியது. அரச குமாரியே! இன்று உன்அண்ணனுடைய ஆண்மையைப்பார்என்று கூறி நகைத்தார். இச் செய்கையைக்கண்டு பலராமர் வாசுதேவரை யணுகி துளவமணி மார்பா! இன்று நீ யறநெறியினின்றும் பிழை த்துவிட்டாய். உன் தேவியின் தமையனென் றெண்ணாது நீ யவனுடைய தலையை மழித்துவிட்டால் அவன் துட்டனாயிருந்தா லும், துன்மதியை யுடையவனாயிருந்தாலும் அப்பெண்ணுக்காக நீ யவனை விடுத்துச்செல் எனக் கட்டளையிட்டார். அதன்பின் ருக்மனை நோக்கி அரசிளங்குமர, நீ யவன்செய்த மானபங் கத்தை நினைந்து வருந்தாதே. உன் தங்கைமணாளனென நினைத்து அதைப் பொறுத்துக்கொண்டு உன் நகரத்திற்குப்போகக் கடவா யெனச் சொல்லி விடுத்தார். ஸ்ரீ கிருஷ்ணபகவான் உருக்குமணி தேவியுடன் துவராபுரியை யடைந்தார். ஆண்டு ருக்மணி தன் நாயகனுடன் இன்புற்று வாழ்ந்திருந்தாள்.

# புறவுலகில் நமது ஆதிக்கம்.

(த. இராமகிருஷ்ணன் வேதமாணுக்கன்.)

அ௦-ம் பக்கத்தொடர்ச்சி.

இறைப் பற்று, அறத்தில் நேர்மை, உண்மை தவருமை, பழிக்கஞ்சுதல், ஆன்மதிருப்தி, சுய மரியாதை விருப்பு, முயற்சி, மகிழ்வு, தன்னம்பிக்கை, நினைத்த வளவில் பணியாற்றுந்துணிபு. புகழுடையிலும் அன்ருயினும் கணக்காது திரும்பத்திரும்ப வெற்றியடையும் வரையில் வினையாற்றுதல், வெற்றிபெற வேண்டுவது குறிக்கோளாயின், தக்கவாறு ஆராய்ந்து அடிக்கடி சிந்தித்துப் பண்புக்களைப் பண்படுத்திப் பயனுற எளிதில் முயன்று முன்னேறுத லாதி நல்லியல்புகளை படைத்தல் வாழ்க்கைக் கின்றியமையாதவைகளாகும். உள்ளம் முதலிய அகப்புலன்களின் எவ்விதக் குறைபாடும் கிடையாது. நன்கு ஆராய்ந்து துணிந்து அமைதியாக அவற்றைப் பயன்படுத்தினுல் உயர்வடைந்து புகழ்பெறப் படும். எனவே, நமக்குக் கிடைத்திருக்கும் துணைக்காரணப் பொருட்களைக்கொண்டு, நன்ருகச் சிந்தித்துப் பயன்படுத்தினுல் வெற்றியடைதல் திண்ணம். நமது வெற்றியும் தோல்வியும் நம மகத்தே நிலவுகின்றன.

எப்பணி நிகழ்த்தினும் உள்ளக் களிப்புடன்செய்க. மகிழ்ந்து செய்வன மகிழ்வாக முடிகின்றன. அல்லாதன அல்லாதொழிகின்றன. எஞ்ஞான்றும் எந்நிலையிலும் உள்ளக் களிப்புடன் முயலுதலே சாலச்சிறந்தது. எந் நிகழ்ச்சிகளுக்கும் உரிய சாதனங்களின்றி வினைநிகழ்த்துவதற்கியலாது. எனவே, நமது முற்போக்கிற்குரிய சாதனங்களை—உயரிய சாதனங்களை—நமது நிலைமைக்கேற்ப கைவரும் சிறந்த சாதனங்களை அடைய முயலுதல் வேண்டும். உயரிய சாதனங்களால் உயிர்பேறு அடைதல்கூடும். உயர்ந்த சாதனங்களை யடைதற்கு மிகுதியாகப் பாடுபடுதல் வேண்டும். பாடுபடுதல் வீண் போகமாட்டாது. சீரிய கூறிய கருவிகளை யுடையவன் திருத்தமாக வினைநிகழ்த்துவான். பிற தொழில்களுக்கும் இவ்வாறேபாம். யோக சாதனங்களையும் இங்ஙனமே கோள்க.

எம்மிடம் இவ்வாற்றல் இல்லையே யெனப் பலர் இரங்குவர். எவ்வகை யாற்றலும் நினைத்தவுடன் கை வருவனவன்று. பழக்கத் தாலும் மன வொருமைப்பாட்டாலும் பெறப்படுவனவாம். இடை யறாது தொடர்ந்து நன்முறைகளில் பயின்று மாறுனவற்றை யொழித்துச் சோர்வின்றி முயலுதலால் எஞ்ஞான்றும் வெற்றி பெறப்படும். சில பொழுது காரியங்கள் நிகழ்த்தத் தலைப்படின் செவ்வனே இயலாதொழியும். அஞ்ஞான்று சில நிமிடங்கள் பிற இடஞ் சென்று இரண்டொரு (யோக) ஆசனங்க ளியற்றிப் பிரா ணயாமம் புரிந்து மனதை ஒருநிலைப்படுத்தின், புதியதோர் உயிர்ச் சக்தி தோன்றிக் காரியமும் செவ்வனே நிறைவுறும். அவ்வா றன்றி வினையாற்றாது வறிதே பொழுதுபோக்குதலான் நற்காரி யங்கள் செய்வதற் கியலாதுபோம்.

சிந்தனாசக்தியை ஒவ்வொருவரும் அடிக்கடி யெழுப்புதல் வேண்டும். அன்றேல், மனம் செவ்வனே காரியங்கள் நிகழ்த்த மாட்டாது. இவ்வெழுச்சி உயர்நூல்களைக் கற்றலானும், பெரி யார் சரிதங்களையும் அவர் சிந்தனைகளையும் பயில்வதாலும், நமது சிந்தனாசக்தியில் தாக்கிச் சுழற்சிபெற்று எழுச்சியடையும். ஒவ் வொருவருக்கும் தங்கள் முயற்சிக்கேற்ப அறிவுப் பயிற்சி முறை யும் வேறுபடும். அறிவர் தத்துவ நுட்பங்கள் உணர்த்தும் நூல் களை விரும்புவர். மறவர் வீரசரிதங்களைப் படிப்பர். வணிகர் பெரும் வியாபார நுட்பங்களை ஆராய்ந்திடுவர். தொழிலாளர் கைபோய தொழிற்றிறன்களைக் கூர்ந்தாய்ந்திடுவர். எனவே, ஒவ் வொருவரும் தங்கள் தொழிற்றுறைகளில் திறமை படைத்திடல் முறைமையாகும். அத்துடன் பிறவற்றிலும் சிறுபான்மையாவது அறிவுபெறுதல் வேண்டும். எண்ணங்களும் இவ்வழியே இயங்கத் தக்கன.

நூல்கள் படிப்பனவும் தொழில்களாற்றுவனவும் சீர்தூக்கி யாராய்ந்து உயர்வுடையனவே கொள்ளத்தக்கன. உயிர் வளர்ச்சி யளிப்பனவும் உள்ள உணர்ச்சி சிதைக்காதனவுமாக இருத்தல் வேண்டும். நினைவுக் காற்று மண்டலத்தில் வீற்றிருப்பாரும், உயர்ந்த எண்ணங்களையே புறத்தே தோற்றுவிப்பாருமாகிய நண் பர்களோடு கூடிக் குலாவுதல் சாலச்சிறந்தது. தங்கீழ் வினைக

ளாற்றுவாரும் எண்ணங்களை மாற்றுதவர்களாக--இரட்டிக்கத் தக்கவர்களாக--தாழ்த்திவிடாதவர்களாக அமைத்தலும் வேண்டற்பாலதாம். தத்தம் நிலைமைக்கேற்ப எத்துணை சாலுமோ, அத்துணை வினைகளாற்றுதலும் ஆற்றுதொழிதலும் முற்போக் கடைதலும் இழிதலும் ஆராய்ந்து துணிந்திடுக. தத்தம் நிலைமைக் கேற்ப இன்புற்று வாளாவிருத்தலன்று; தலைவனாய் நின்று பிறர்க்கு வழிகாட்ட வேண்டுவதாமென்ப தோர்க. இன்புறுதலால் உயர்வடைய வியலாது. சுதந்திரனாக தலைநிற்றலால்—தலைமை தாங்குதலால் உயர்வடைய முடியும். அறநெறி நிற்றலே சுதந்திரப் பேறும். இதனை யாண்டும் மறவற்க.

அறம் பொருள் இன்பம் வீடென்னும் நாற்பொருளும் நம்முன் நிலவுகின்றன. செயல்கடன்களை முறையே யாற்றுதல் அறமாம். அறநெறியே முயன்று சேர்ப்பன பொருளாம். ஈட்டிய முயற்சிக்கேற்ப நுகர்தல் இன்பமாம். இவ்வகைக் கட்டுகளினின்று விடுதலை யடைதல்—சுதந்திரமடைதல் வீடுபேறும். தம்மைக் கட்டுக்களினின்று விடுவித்துக்கொள்வதே வீடுபேறு—முத்தி—சுதந்திரமாம்.

இத்தகைய விடுதலை ஒருவனுக்கு உரித்தாதல் போன்றே; சமுதாயமும் இனங்களும் நாடும் மாகாணங்களும் உத்யோகங்களிலுமாகப் பலதிறப்படுகின்றன. ஒருவன் விடுதலை பெறுதலோடு அடங்கிநிற்றல் முறைமையன்று. அவன் சார்ந்து நிற்கும் சமுதாயம் சாதி தேசமும் விடுதலையடையப் பாடுபடுதற்குக் கடமைப்பட்டிருக்கின்றான். நாட்டின் உறுப்பினராகிய ஒவ்வொருவரும் விடுதலைப்போரில் எழுச்சியுற்று தியாகம் புரிந்தாலொழிய சுதந்தரம் அடையவியலாது. எனவே, தனிப்பட்டார் நிறைவெய்திய பின்னர் சனசமுதாயத்திற்காகப் பாடுபடுதல் வேண்டும். சமுதாயம் நிறைவெய்தினாலன்றித் தனிப்பட்டார் நிறைவு நிறைவாகமாட்டா. இக்காலத்திய புறநிலைகளுக்கேற்பத் தலைமைதாங்கி நின்றியங்குதல் தனிப்பட்டார்க்குச் சிறப்புடையதாம்.

தமது வீட்டின் நிலைமைகளுக் கேற்பத் தலைமை தாங்கி நின்றியக்குதல் முன்னர் விளக்கினும். வீட்டின் உட்புறமும் புறவெளியும் தூய்மைப் படுத்தலால் இடமாளுந்திறன் பெறப்படு

கின்றது. என்ஞான்றும் களிப்புடனும் பிறர்பால் அன்பு பாராட்டுதலானும் தம்மைச் சார்ந்தார் பலரும் துணைநிற்கின்றனர். தட்ப வெப்பங்களாதி மாறுபட்ட நிலைமைகளில் பயிலுதலானும் நீர் காற்றுகளின் ஆதரவாலும் இறைவழிபாடு தியானம் முதலியவற்றாலும் எல்லாத் துறைகளிலும் உள்ளம் ஒரே தன்மைத்தாக மலர்ச்சி யடைகின்றது. ஒவ்வொரு சமயத்திலும், தமது நன்னிலையும் உயர்வும் தூய்மையும் சமுதாய நலன்நாடும் முற்போக்கான புத்தப் புதிய எண்ணங்களும் நூதன வழிகளும் நாடோறும் உள்ளத்தெழுகின்றன. பணிசெய்தல் நமது கடன்; பயனளித்தல் திறனுடைஇறை. அவன் செப்பமுடையான், தண்ணளியன், யாவுங் காண்பவன், யாவற்றிற்கும் நலன் புரிகின்றான் என்ற நம்பிக்கை உள்ளத்தில் பதித்தலால் சிரத்தையாகிய ஒளி நம்மகத்துப் பெருக்கெடுத்து மிளிர்கின்றது. மாறுன நிலைகளில் நிகரற்ற உறுதி ஏற்படுகின்றது.

வீட்டின்நிலையை இவ்வாறு உடன்படுத்திக்கொண்ட பின்னர், ஊரின்நிலை முற்படுகின்றது. கிராமங்களைச் சீர்படுத்தி முற்போக்கிற்குரியன யாவுஞ்செய்தலால் ஒத்த நிலையடைந்து கட்டுப்பாடேற்படுகின்றது. கிராமங்களில் வேற்றுமையற்ற பொதுக் கழகங்களமைத்து யாவரையும் சங்கவளர்ச்சிக்காகத் தக்கமுறையில் முயற்சியெடுத்துக்கொள்ளுமாறு செய்தலால் கிராமநிலைமைக் கேற்பத் தலைமை பெறப்படுகின்றது. தற்சீர்திருத்தக் காலங்கடந்து சமூக சீர்திருத்தக் காலம் அடுத்து வருகின்றது. கிராமங்களின் அமைப்பிற்கேற்பக் கிடைத்த நிலைகளைக்கொண்டு ஒவ்வொருவரும் நாடோறும் சமுகசேவை செய்யவேண்டுவது மிக மிக அவசியமாக ஏற்படுகின்றது. எத்துணை யளவு சமுகம் (கழகம்) வலுவடைகின்றதோ, அத்துணை சமாஜசக்தி ஆதிக்கம் பெற்று பெருக்கமடைகின்றது. இத்துறைபற்றியே சாதிய தேசிய நிலைகளிலுங் கொள்ளுதல் வேணடும். நமது சாதி, நமது நாடு, நமது நிலைமை யாவற்றிலும் உயர்வடைய வேண்டுமென்ற பெருவிருப்பம் யாவருள்ளத்திலும் பொங்கி யெழுதல்வேண்டும். ஒவ்வொருவரும் தங்களுக்கிணங்கிய துறையில் முயலுதல் இன்றியமையாததாம்.

இவ்வாறு ஆராய்ந்தால் தத்தம் நிலைமைகளுக்கேற்ப ஒவ்வொரு துறைகளிலும் ஆதிக்கமடைய வேண்டுவது இன்றியமையாததாம். உயிர்க் குறுகண் செய்யாமை, உண்மை கடைப்பிடித்தல், பிறர்பொருள் விரும்பாமை, புலனடக்கம், வள்ளன்மை, தூய்மை, களிப்பு, முயற்சி, ஆராய்ச்சி, இறைவழிபாடு முதலியவற்றால் சகல துறைகளினும் ஆதிக்கமடைதல் கைகூடும். சுருங்கக் கூறின், தமக்கும் சமுகத்திற்கும் ஏற்றவகையில் ஆதிக்கம் செலுத்தல் நலன் பயப்பதாம். இதுவே யோகநெறியின் துவக்கம்; முதற்படியாம். யோகப் பழக்கத்திற்குப் புறநிலைகளோடு எத்துணைத் தொடர்பிருக்கின்றன வென்பது இதனால் புலனும். யோகப் பழக்கம் ஒருவருக்கு மட்டிலும் உரித்தானதன்று. நாட்டிற்கும் இனங்களுக்கு மேற்ப மேற்கூறிய நெருங்கிய தொடர்புகளுண்டு. எனவே, யோக நூல்களில், 'தார்மிக தேசத்தில்'—அறங்காக்கும் நாட்டில் யோகநெறி செலுத்தப்படுமெனப் பகர்கின்றன. யோகநெறி பயில்வார் தங்கள் நாட்டின்நிலை, பிற்காலத்திய மக்கள் வாழ்க்கைகளுக் கிணங்க, அந்நெறி பரப்பிப் பயன்படத்தக்கவாறு முற்போக்கடைவித்தல் இன்றியமையாததாம். நாட்டில் அறநெறிக் காற்றுமண்டிலம் உயர்வடைதலால் பெரும் பயன் விளையும். இத்துறையில் அன்பர் முயல்வாராக.

---

# கோமதன் வருகை.

கோமதன், ஒரு கையில் மாந்திரிக தண்டமும், மற்றக்கையில் மதுநகர்பாத்திரமுங்கொண்டு, மனித உருவமும், பலவிதமான காட்டுமிருகங்கள் போன்ற முகங்களுமுடைய ஒரு ஒழுங்கற்ற கூட்டத்தார் கைப்பந்தங்களுடன் ஒழுங்கற்றசத்தத்தையுண்டாக்கிக்கொண்டு தன்னைச் சூழ்ந்துவர வருகின்றான். இவர்களுடைய உடைகள் பிரகாசிக்கின்றன.

இராகம்—பியாகு. திரிசிரஜாதி—ஏக தாளம்.

துலங்கு கானின் மேயு மான்கள்
தொழுவி னூடு போதலைப்
புலங்கொ ளச்செய் மாலை மீனும்
போய தச்சி வானிலே. 1.

ஆழித் தேரின் மேவு வெம்மை
யாற்ற வெண்ணி யருணனும்
ஆழ மேவு பச்சி மச்சி
ராழி யூட மிழ்ந்தியே. 2.

சுடர்கொள் வெங்க திர்கள் யாவுந்
துருவன் தன்னை நோக்கவே
யிடங்கொள் திசை மண்ட பத்தி
னெய்த வேவி னைந்தனன். 3.

இந்த நல்ல வேளை தன்னி
லின்ப மே! சந் தோஷமே!
வந்த னங்கள் தந்தோ நாமு
மருவு நீவி ரிங்ஙனே. 4.

மருவு சாம மாகு மிந்த
வளங்கொள் வேளை தன்னிலே
யருமை சேரு மின்பந் தன்னோ
டாடு வோநாம் பாடுவோம. 5.

மதுவி னுடல் களிபின் பாடல்
மருவு வோநாம் மருவுவோம்!
மதுவி னுடல் களியின் பாடல்
மருவு வோநாம் மருவுவோம்: 6.

நீலக் குஞ்சி தன்னில் வாச
நிமிர மாலை சூடுமின்
சீல மேவுகந்த வர்க்கஞ்
சிந்து நீவிர் மதுவொடே. 7.

கடின சித்தன் பள்ளி யூடு
கன்வ ளர்வ தாயினன்
வடிகொள் புத்தி மாறு முக்ர
வன்ம னத்தி னோது மே. 8.

மூதுமை யோன்ற னோடு சேர்ந்து
மூடு கன்வி ழிக்கிலார்

வதியு மின்பத் துயிலி னூடு
    வைகு வார்க ளாயினர். 9.

சுத்த மேவு தழலி னுகித்
    துலங்கு மெய்ப்ப டைத்துளோம்
சத்த மேவு மிருளி னூடும்
    நாடி யாண்டு மதியுமே. 10.

வழுவ தின்றி முறையின் மேவ
    வழிந டத்து கின்றசீர்க்
குழுவின் வான மீன ராசி
    கூறு பாட லிசையையே 11.

நேர நாமு மகிழ்வி னோடு
    நின்று பாடி யாடுவோம்
சீரின் மேவு மீன வேலை
    நிகழு மிந்த தன்மனொடே. 12.

ஆட வாட மணலின் மீதும்
    அகன் கரைம ருங்கினும்
பீடு சேர ணங்கி னங்கள்
    பிணைந்து பாடி யாடுமே. 13.

நீனி றத்த கூந்த லூடு
    நிரம்பு வாச மலர்பிணைந்
தூன மின்றிச் சூர்க ளாடு
    ஓடு மாற்றின் கரையிலே. 14.

ஆடு வாரும் பாடு வாரு
    மாகி யாரு மகிழ்வுற
நீடு மின்ப மேவு மிந்த
    நிசியி னூடு துயில்வதேன். 15.

இருளின் மேவு நிசி யெவர்க்கு
    மின்ப மேய ளிக்குமால்
மருளின் மார வேளு நேச
    மங்கை யைய ளிக்கிறான். 16.

சமது கிரியை தனை நடத்த
காடி யோடி வாருமின்
பவம தாகும் பகல தென்னிற்
பாவ மேநிங் கிரவினே. 17.

நன்று மிம்ம ரத்தி னீழல்
சொல்ல வல்ல வாகுமோ
அன்று! நாமு மின்பந் தன்னொ
டாடு வோநாம் பாடுவோம். 18.

இருளி னூடு மருவி வாழு
மிரவின் கொற்றத் தெய்வமே
மருவு நாமு நின்னை நோக்கி
வந்த னங்க டந்தோமே. 19.

நாகி னூடு மேவு மிந்த
நல்லி ருளின் கூட்டமே
விரவு நேரந் தன்னி லன்றி
விளிக்கி லோநாம் நின்னையே. 20.

காரி ருட்டின் தெய்வ மேநீ
கருணை யோடு சாரிசெய்
நேர மீது சீரின் மேவு
நீல வாச னத்தையே. 21.

வடிவி னோடுன் கிரியை யாவு
மாசி லாதி யற்றிட
அடிய ராமெ மக்கு முன்னே
யன்பு டன்த ரித்திடாய். 22.

இன்ப மேவு காலை யெங்கள்
இனிய செய்கை தனையறிந்
தன்ப நின்றிக் குறளை சொல்லு
மலரி யோனி டத்திலே. 23.

உரைக்கு முன்னர் வாரு மென்னோ
டுற்ற தோழர் நீவிரே

விரைவின் வந்து கரம்பி ணைந்து
வீறு டாடி மகிழுமின். 24.

அழகின் மிக்க தூவை சிரி
ஓடு நீவி ராடுமின்
மகிழ்சி றக்க ஆடும் நீவிர்
மகிழ் சிறக்க ஆடுமின். 25.

இயற்கைமகவு.

(தொடரும்.)

---

# இரண்டு காதற் பாட்டுகள்.

பி. ஸ்ரீ.

பாரதியார் பாடல்களில் தேசிய நோக்கோடு பாடப்பட்டவைகளே தலைசிறந்து விளங்குகின்றன என்பது பலர் கொள்கை. ஆனால் இதுமுற்றும் உண்மையன்று. காதல் தெய்வமான கண்ண பிரானுக்கு நம் தேசபக்தகவி சூடிக்கொடுத்த பாமாலைதான், தேசீயக் கவி மலர்கள் மணம் குன்றி வாடியபின்னரும், நிலைபெற்று ஒளியும் மணமும் வீசி என்றும் வாடாத தெய்விக அழகோடு விளங்குவதாகும்—என்பது கவிச்சுவைக் கடல் உண்டு களிக்கும் ரசிகர் துணிபு. கண்ணன் பாடல்களெல்லாம் காதற் பாக்களேயாகும். இப்போது பாரதியின் விலையிலா முழுமணியான கண்ணன்பாடல்களை நாம் ஆராய்ச்சிக்கெடுத்துக்கொள்ளவில்லை. தேசபக்திச் சுவைகாணும் அறிஞரும் இன்கவிச் சுவைகாணும் ரசிகரும் சாதாரணமாக ஒதுக்கிவிடும் சில காதற்பாக்களையே நாம் இப்போது ஆராய்ச்சி செய்யப்போகிறோம்.

பாரதிபாடல்களில் பொதுவாக, காதலைப்பார்க்கிலும் வீரமே அதிமுக்கியமான ரசமாகக் காணப்படுகின்றது. கண்ணன் பாட்டிலுங்கூட வீரரசம் காதற்சுவையோடு சில சமயங்களில் 'போட்டி' போடுகின்றது. வீரமும் தேசபக்தியும் பாரதியாரது ஜீவநாடி. காதலின் செல்வமான பெண்ணையும் பாரதியார் வீரப்பெண்ணு

கவே கருதுகின்றார். "கரும்புத் தோட்டத்திலே" என்று தொடங்கி 'கண்ணற்ற' பிஜித்தீவினிலே பஞ்சை மகளிர் படும் பாடுகளைச் சித்திரிக்கும் சோகமயமான பாட்டும் வீரவெறியோடு முடிவுறுகின்றது. கைகளும் கால்களும் சோர்ந்து நெஞ்சம்புழுங்கி விம்மி யழவும் திறங்கெட்டுப்போன மெல்லியலார்தம் துன்பங் களைப் படிப்படியாக வாசகர் மனக்கண்முன் சித்திரித்துக்காட்டும் பாட்டின் முடிவைப் பாருங்கள்.

நெஞ்சம் குமுறுகிறார்—கற்பு
நீங்கிடச்செய்யுங் கொடுமையிலே யந்தப்
பஞ்சை மகளிரெல்லாம்—துன்பப்
பட்டுமடிந்து மடிந்து மடிந்தொரு
தஞ்சமுமில்லாதே—அவர்
சாகும் வழக்கத்தை இந்தக்கணத்தினில்
மிஞ்சவிடலாமோ?—ஹே,
வீரகாளி, சாமுண்டி காளீ. (கரும்புத் தோட்டத்திலே)

புதுமைப் பெண்ணென்னும் அபூர்வமான கவிரத்தின மொன்று பாரதியார் நமக்கு வழங்கியுள்ளார். இப் பெண்மணி நாரதன் வீணையென—நம்பிரான் வேய்ங்குழலென—காதல் தோய்ந்த குரலில் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் மோகனப் பசுங் கிளியாக நம் கண்முன் பறந்து வருகின்றாள். எனினும் புதுமைப் பெண்பால் காதலைக் காட்டினும் வீரமே மேலோங்கி நிற்கின்றது. சுதந்தர பேரிகை சாற்றிவரும் நவீன மாதாசு அடிமைச் சுருளைத் தீயிலிட்டுப் பொசுக்கிட வேண்டுமென்று ஆடவர்க்கு ஆணை தருகின்றாள். நிமிர்ந்த நடை, நேர்கொண்ட பார்வை, அஞ் சாத ஆண்மை, திமிர்ந்த ஞானச்செருக்கு இவற்றோடு ஒருவரை யும் மதியாது வரும் உதய கன்னி 'நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்' என்று சொல்லும்போது, இதுபெண்மைக்கிசைந்த பேச்சாகுமோ? என்று நமது உள்ளம் திடுக்கிட்டுத் தடுமாறு கின்றது. புதுமைப் பெண், கூட்டில் வாழும் காதற்கிளியாக விருப்பதைப் பார்க்கிலும் 'விலகி வீட்டிலோர் பொந்தில் வளர் வதை' ஒழித்த வீரப்பெண்ணாக வருகின்றாள். காதலின் வடிவ மான பெண்மையினை பாரதியார் சக்தியின்வடிவமாகவே நமக்குக் காட்டுகின்றார்.

குழந்தைகளுக்காக எழுதப்பட்ட 'பாப்பா' பாட்டிலும் வீரமே முக்கிய ரசமாக இருக்கிறது.

பாதகம் செய்பவரைக் கண்டால்—நாம்
பயம்கொள்ள லாகாது பாப்பா
மோதி மிதித்துவிடு பாப்பா—அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா
தேம்பியழுங் குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா.

இவ்வடிகளை வாசிக்கும் போது நமது கவி, மகாத்மாவின் அஹிம்சா தர்ம வரம்பினை எங்கே கடந்துவிடுகின்றனரோ என்று பலர் கவல்கின்றனர். காதலின் செல்வமான பெண்மையிலும், காதலின் கனியான 'பாப்பா'விலும் வீரம் ததும்புகின்றது. சுருங்கக் கூறுமிடத்து, பாரதியார் காதலுக்கும் பாரதியார் வீரத்திற்கும் விசேட வேற்றுமையில்லை. வீரத்தின் தாயகமாகவே பாரதியார் காதலை வர்ணிக்கின்றனர்.

நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே.

காற்றிலேறி அவ்விண்ணையும் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே.

காதல் வீரத்தை வளர்க்கும் என்பதற்காகவே நம் கவி காதலைக் காதலிக்கின்றனர். இங்ஙனம் நம் தமிழ் நாட்டின் வீரமுரசாக ஒலி செய்வது பாரதி வாக்கு. காரணம் என்னை? எண்ணிறந்த துன்பங்களுக்கிடையே—பொருட் பஞ்சம் அறிவுப் பஞ்சங்களுக்கிடையே—ஆயிரம் ஆயிரம் மூட நம்பிக்கைகளுக்கிடையே அஞ்சி அஞ்சிச் சாகும் பஞ்சைமக்களான நம்மவர், மாணத்திற்கு முன் ஏற்படும் 'கோமா' என்று சொல்லும் ஒருவகை மயக்க நித்திரைக்கு உட்பட்டிருந்த தருணத்தில், நம் பாரதியார் தோன்றினர். கொல்லும் நோய்க்கு மருந்து செய்யும் மருத்துவன்போல நம்மவரை மாண நித்திரையினின்றும் விழிக்கச் செய்யவேண்டுமென்ற ஆவேசத்தோடும் கவிதாசக்தியோடும் பாரதியார் தோன்றுகின்றனர். இதனாலன்றே பாரதிவாக்கு ஆச்சரியமானதோர் இரணபேரிகையாக முழங்குகின்றது. இப்போர் முழக்

சுத்திற்குக் காதலும் பிறவும் தூண்டுகோலாக அமையவேண்டுமே யொழிய வேறுவழியில்லை; வேறுவிதியில்லை.

'காலைப்பொழுது' 'அந்திப்பொழுது' என்ற இரண்டு தலைப் பெயர்களோடு, நாம் ஆராயப்போகும் இரண்டு காதற்பாக்களும் அமைந்துள்ளன. முதற்பாட்டில் காதலைப்பார்க்கிலும் அரசியல்—குறிப்பே அதிகமாக வெளியிடப் பெறுகின்றது. 'அந்திப் பொழுது' என்னும் பாட்டே, உண்மையான காதற் பாட்டாகும். இப்பாட்டிலுங் கூட பாரதியாரது வீரமுரசு, மௌனமுற்றிருக்க வில்லை: இதனை முதற்கண் ஆராய்வோம்.

மனோகரமான மாலைவேளை. கருநிறக்காக்கையும் கண்ணுக் கினிய அழகுபெறும் அந்திப்பொழுது. மாலையின் செவ்வொளி யிலே செல்வப் பசுங்கிளிபோல், காகம், பருந்து, முதலிய பறவை களும் அழகுபெறுகின்றன வன்றோ?

காவென்று கத்திடும் காக்கை—என்றன்
கண்ணுக்கினிய கருநிறக் காக்கை
மேவிப் பல கிளை மீதில்—இங்கு
விண்ணிடை யந்திப் பொழுதினைக் கண்டே
கூவித் திரியுஞ் சிலவே—சில
கூட்டங்கள் கூடித் திசைதோறும் போகும்.
தேவி பராசக்தி யன்னை—விண்ணிற்
செவ்வொளி காட்டிப் பிறை தலைக் கொண்டாள்.

தென்னை மரக்கிளை மீதில்—அங்கோர்
செல்வப் பசுங்கிளி கீச்சிட்டுப் பாயும்
சின்னஞ் சிறிய குருவி—அது
'ஜிவ்'வென்று விண்ணிடை ஊசலிட்டேகும்.
மன்னப்பருந்தோ ரிரண்டு—மெல்ல
வட்டமிட்டுப் பின் நெடுந்தொலை போகும்.
பின்னர் தெருவிலோர் சேவல்—அதன்
பேச்சினிலே 'சக்தி வேல்' என்றுகூவும்.

கா, காவென்று கத்திக்கொண்டு காகங்கள் அந்தி வானத்தின் செவ்வொளியிலே மூழ்கி, கண்ணுக்கினிய பளபளப்பான கரு நிறம்பெற்று, பல மரக்கிளைகளிலும் பறந்து வந்து அமர்கின்றன.

இவற்றுட் சில, வான வீதியே வரும் அந்திப் பொழுதினுக்கு நல்வரவு கூறுவனபோல் காணப்படுகின்றன. வேறு பல காகங்கள் கூட்டங் கூட்டமாகத் திசைதோறும் பறந்து செல்லுகின்றன. அதோ ஒரு தென்னைமாக் கிளைமீது, மோகனப் பச்சைக்கிளி பொன்று கீச்சுக் கீச்சென்று கூவிப் பாய்கின்றது. சின்னஞ்சிறு குருவி உயர உயரப் பறந்து செல்லுந் தோற்றம் வானவெளியிடையே ஆதாரமின்றி 'ஜிவ்' என்று ஊஞ்சலாடுவதை ஒக்கின்றது. இராஜபட்சிகளான பருந்துகள் மெல்ல வட்டமிட்டுப் பின்வர் நெடுந்தொலை போகும் காட்சியும் தெருவிலுள்ள சேவல் 'ஓம் சக்திவேல்' என்று பக்தர்கள் பொருள் கொள்ளுமாறு தன்சேவல்பாஷையில் கூவும் காட்சியும் அந்திப் பொழுதினை அழகு செய்கின்றன. இத்தகைய இயற்கை வருணனையை சங்கக்காலத்திற்குப்பின் விசேஷமாக நாம் தமிழிலக்கியத்தில் பார்க்கும் பேறு பெறுகின்றோமில்லை. சமீபகால ஆங்கில இலக்கியத்திலே—வேட்ஸ் ஓர்த், ஷெல்லி முதலான மகாகவிகளிலே—இத்தகைய வருணனைகள் எண்ணிறந்தன காண்கின்றோம்.

அந்திப் பொழுதினை அழகுபெற வருணித்தபின், பாரதியார் நிலவினை வருணிக்கின்றார். அந்திவானின் செவ்வொளி மறைகின்றது. வெண்ணிலவின் தண்ணொளி பொங்கிப் பரந்து வெள்ளமிடுகின்றது. இவ்வமயத்தில் அந்திவானத்தின் அழகோடு, ஆசைக்கதிர் மதியின் அருமைத் திருமுகம் தாங்கி, காதலி வருகின்றாள். இயற்கை யன்னை சிரித்து விளையாடுகின்ற தருணமாகிய நிலா வேளையில் கவிகள் காதலைச் சித்திரிப்பது மரபு. நமது பாரதியார் எவ்வளவு அழகாக மாலை வெண்மதியத்தையும் இனிய காதற் சுவையினையும் கலந்து இசைத்துள்ளார் பாருங்கள்.

செவ்வொளி வானில் மறைந்தே—இளந்
தேசில வெங்கும் பொழிந்தது கண்டீர்
இவ்வளவான பொழுதில்—அவள்
ஏறிவந்தே யுச்சி மாடத்தின் மீது
கோவ்வை யிதழ் நகை வீச—விழிக்
கோணத்தைக் கொண்டு நிலவைப் பிடித்தாள்
செவ்விது, செவ்விது; பெண்மை—ஆ!
செவ்விது, செவ்விது, செவ்விது காதல்.

காதலால் உயிர்ச்சக்தி சுடர்விட்டெரிகின்றது. வீரசக்தி பொங்கிப் பெருகுகின்றது. அறிவின் அபார சக்தியும் காதலால் வனப்புற்று வளமுறுகின்றது. "காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்" என்று பாரதியார் கூறுவது ஓர் அருமருந்தன்ன மகா வாக்கியமாகும். காதலியின் கையைப்பற்றி "அற்புதம் என்று இரு கண்ணிடை யொற்றி" இருந்தேன்; கரைபுரண்டோடும் காதல் வெள்ளத்திலே கவலைகள் துன்பங்கள் வேதனைகள் எல்லாம் கரைந்து போயின— என்று கவிகூறுகின்றார்.

வீணைக் குரலில் காதலி பாடுகின்றாள். காதலியின் பாட்டு காதலின் தத்துவத்தை இனிது விளக்குகின்றது. காதலைப்பற்றிய உயர்ந்த கவியுளத்தை இது ஒருவாறு வெளியிடுகின்றது. இப் பாட்டு வருமாறு:—

கோல மிட்டு விளக்கினை யேற்றிக்
கூடி நின்று பராசக்தி முன்னே
ஓல மிட்டுப் புகழ்ச்சிகள் சொல்வார்
உண்மை கண்டிலர் வையத்து மாக்கள்
ஞால முற்றும் பராசக்தி தோற்றம்
ஞான மென்ற விளக்கினை யேற்றிக்
கால முற்றுந் தொழுதிடல் வேண்டும்
காத லென்பதோர் கோயிலின் கண்ணே.

உலகமெல்லாம் பராசக்திமயமாக விளங்குகின்றது. இவ் வுண்மையினை நன்கு உணராதார் ஒரு கோயிலிலே ஒரு விக்கிரகத்தில் மாத்திரம் மகாசக்தி விளங்குவதாகக் கருதி வழிபாடு செய்கின்றார். கோலமிடுகின்றார். திருவிளக்கேற்றுகின்றார். கூடிநின்று 'அம்மன்' சந்நிதியிலே ஓலமிடுகின்றார். "தேவியே! உன் கண்கள் தாமரை; திருமுகமும் தாமரை; மெல்லடிகளும் தாமரை. நீ அழகின் கடல்; ஆனந்தத்தின்வெறி; அருளின் ஆலயம் பெண்மையின் வெற்றி! என்று இவ்வாறு புகழ்ச்சிகள் சொல்லி, எண்ணமின்றிப் பழம்பாடல்கள் பாடுகின்றார். மந்திரங்களை 'மிணமிண' வென்று முணு முணுக்கின்றார். இங்ஙனம் ஆலயந்தொழுவோர் காதலின் வடிவமான மகாதேவியின் உண்மைகண்டிலர்— என்று பாரதி கூறுகின்றார். உலக முற்றும் சக்தியின்தோற்றம் என்னும் உண்மை கண்டு வாடா மணிவிளக்காகிய ஞானச் சுடர்

விளக்கினை நெஞ்சகத்தே ஏற்றிக் காதலென்பதோர் கோயிலின் கண் நாடோறும் தொழுநிடல் வேண்டும். இதுவே உண்மை வழிபாடு. இத்தகைய காதல்—தத்துவமே பாரதியார் காதற் பாக்களின் அடிப்படை யுண்மையாக விளங்குகின்றது.

பாரதியார் பாடிய காதற்பாக்கள் பல. காதலின் பயனாகிய ஒற்றுமை யுணர்வின் மேன்மையினைக் குறித்து இவர் பாடிய பாட்டு ஒன்றை மாத்திரம் இனி ஆராய்ந்து இக்கட்டுரையினை முடித்துவிடுவோம். இப்பாட்டு 'காலைப்பொழுது' என்னும் தலைப் பெயர் கொண்டமைந்துளது. 'அந்திப்பொழுது' என்னும் காதற் பாட்டில் அந்திமாலை சித்திரிக்கப்படுவதுபோல், 'காலைப்பொழுது' என்னும் பாட்டில் ஆனந்தமான காலை வேளையின் படத்தை நம் கவி நமக்கு வழங்குகின்றார்.

காலைப்பொழுதில் கவியும் சில அன்பரும் கண் விழித்துக் கொள்கின்றார். மேல்மாடத்தின் மேல்நின்று நீலச்சுடர் வானை நோக்கி நிற்கின்றார். கீழத்திசையில் இருளைக் கிழித்துக்கொண்டு இளஞ் சூரியன் தன் பொற்கிரணங்களைப் பரப்பி எழுகின்றான். பார்த்த வெளியெல்லாம் பகலொளியாய் மின்னுகின்றது. இவ் இன்பப் பொற்சுடர் வெள்ளத்திலே, இயற்கைப் பொருள்க ளெல்லாம் பொன்முலாம் பூசப்பெற்றனபோல் காண்கின்றன. தென்னை மாத்தோப்பு, ஒரே பசும்பொற்சுடர் வெள்ளமாகக் காணப்படுகின்றது. பருந்தொன்று, வீரசிங்காதனத்தே மணி முடி புனைந்து வீற்றிருக்கும் மன்னனைப்போல் செந்நக்கொடு தென்னைமாக் கிளைமீது வீற்றிருக்கின்றது. மாக்கிளையிடையே புகுந்துவ நம் தென்றலஞ் செல்வன் மன்னப்பருந்தினுக்கு மாலை யிட்டுச் செல்கின்றான். ஒருவன் சிங்காதனத்தே முடிமன்னனாக விளங்க, மற்றொருவன் சிந்தனையிலே ஆழ்ந்துகிடக்கின்றான். எனி னும் சிந்தனையற்ற சிங்காதனத்தைப் பார்க்கிலும், சிந்தனைகளுக் கிடையே அமைந்துள்ள காதலெனும் குடிலே இனிதன்றோ?

தென்னை மரத்தின் கிளையிடையே,
தென்றல் போய்
மன்னப் பருந்தினுக்கு மாலையிட்டுச்
சென்றதுவே.

தென்னை மரக்கிளைமேல் சிந்தனை
யோடோர் காகம்
வன்னமுற வீற்றிருந்து வானை
முத்தம் இட்டதுவே.

தென்னைப் பசுங்கீற்றைக் கொத்திய வண்ணமாக, சின்னஞ்சிறு காகமொன்று, காலை யிளவெயிலில் பளபள வென்று நீலரத்தினம் போல மின்னும் தென்கடலை நோக்கி விழிக்கின்றது.

வன்னச் சுடர்மிகுந்த வானகத்தே
தென்திசையில்
கன்னங் கருங்காகக் கூட்டம் வரக்
கண்டதங்கே.

இனி, ஓர் சின்னஞ்சிறு பாட்டுக் குருவி, கன்னங்கருஞ்சிறு காக்கைக்கு எதிரே வீற்றிருக்கின்றது. காக்கையும் குருவியும் கத்திக் கொண்டிருக்கையில் பச்சைக்கிளி யொன்று, தன் மாகத மேனி 'பளபளக்க' வந்து கீச்சிடுகின்றது. அப்போது அன்னமொன்று தென்திசையினின்று மகிழ்வோடு வந்து கூவுகின்றது. சிறிது நேரத்தில் புட்களெல்லாம் எங்கேயோ பறந்து மறைந்து விடுகின்றன.

காலைப் பொழுதினிலே இக்காட்சி யின்பத்தினை நமது கவியும் நண்பர்களும் பருகி இன்புறுகின்றார். இக்காட்சியின் உட்பொருளை, நம் கவி, தம் கற்பனைக் கண்கொண்டு காண்கின்றார். பட்சி ஜாலங்களின் பரிபாஷைகளெல்லாம், கற்பனைக் கண் திறக்கப்பெறாத சாமானியர்களுக்கே பொருளற்ற கூச்சலாகவும் கீச்சிடலாகவும் கத்துதலாகவும் தோன்றுகிறது. மனோதர்மம் மிகுந்த கவியுள்ளத்தே, பறவைகளின் பேச்சும் பாட்டும் ஓர் அழகிய 'இதிகாச'மாக விளைகின்றன.

பாரதியார் காலைவேளையில், பட்சி ஜாலங்களினிடையே கண்ட ஆனந்தச் சுடர்க்கனவான இதிகாசம் எது? சுருக்கமாக இதனைக் கூறிவிட்டு, எடுத்த விஷயத்தை ஒருவாறு முடித்துவிடுதல் கூடும்.

தென்திசையை நோக்கி விழித்துக்கொண்டிருந்த சிறு காக்கை அத்திசையில் காகக்கூட்டமொன்று வரக்கண்டதென்று

கூறப்பட்டதல்லவா? கூட்டத்தைக் கண்டு அது என் செய்தது? இங்கேதான் இயற்கைக் காட்சி, கவியின் மனோபாவத்தின் வாயிலாக இதிகாசமாகி விடுகின்றது. கூட்டத்தைக் கண்டு சிறு காக்கை கும்பிட்டதாகவும் அருகே யுள்ள பாட்டுக் குருவியினைப் பார்த்து நகைத்ததாகவும் கவி கற்பனை செய்கின்றார். சிறு குருவி கீதம் போன்ற இனிய சிரிப்போடு ஆங்குவந்து காக்கை கண்ணெதிரே ஓர் கிளைமேல் வீற்றிருக்கின்றது. அப்போது மனோகரமான தோர் சம்பாஷணை சிறு காக்கைக்கும் சிறு குருவிக்கும் இடையே நிகழ்கின்றது.

குருவி சொல்லுகிறது:— "கிக்கிக்கி காக்காய்!(மகா-ள-ள-ஸ்ரீ காக்காய் அவர்களே என்பது பொருள்) நீ விண்ணிடையே கும்பிட்டு எதை நோக்குகின்றாய்? கூட்டம் அங்கே போவதன் காரணம் என்னே?" என்று வினவியது. உடனே காக்கை பதில் சொல்லுகிறது:— "என் தோழா! காக்கைகளின் பேரவைகண்டு மனமகிழ்ந்து போற்றுகிறேன்" என்றது. இங்ஙன மிருக்கையில் பச்சைக்கிளி மின்னொளி வீசும் தன் மரகதமேனியோடு விஜயம் செய்து பின்வருமாறு வினவுகின்றது:—

"நட்புக்குருவியே ஞாயிற்
றிள வெயிலில்
கட்புலனுக் கெல்லாம் களியாகத்
தோன்றுகையில்
தம்மை மகிழ்ச்சியுடன் நோக்கி
யிங்கு வந்திட்டேன்
அம்மவோ! காகப் பெருங்கூட்ட
மஃ தென்னே?"

இங்ஙனம் வினவக் குருவி பதில் கூறுகையில் 'கற்றறிந்த காக்கை' யிடம் இதனை அறிந்துகொள்ளவே தானும் வந்ததாகக் கூறியது. அப்போது காக்கை, விஷயத்தை விளக்கலாயிற்று.

"காக்கை யுலகில் சில நாளாக நேர்ந்த செய்திகளைக் (பத்திரிகை வாயிலாகக், கேட்டும் அறியீரோ? கூட்டத்தைக் கண்டீர்; மன்னவனைக் காணீரோ? அவன் ஓர் மகாத்மா, மகாஞானி. அறிவால் கடவுளாவான். இத்தகைய மகாபுருஷன் ஒரு வாரத்திற்கு

முன் தனி முடிசூடிக் காக்கை யுலகின் தனி யரசனுனன். காக்கை மகாராஜா நீடூழிவாழ்க வென்று வாழ்த்தாத நாவில்லை. எங்கள் வருத்தமெல்லாம் பறந்துவிட்டது. சோற்றுப் பஞ்சமில்லை, அறிவுப் பஞ்சமுமில்லை. போரில்லை வேறு தொல்லைகளில்லை. போற்றத்தரிய புதுமன்னன் வாழ்க!'' இங்ஙனம் காக்கை யுலகில் நேர்ந்த அரசியல் புரட்சியினை, உருவில் சிறியதும், அறிவில் பெரியதுமான காக்கை வாக்குவன்மையோடு பிரசங்கம் செய்தது. அப்போதுதான் விஜயம் செய்த அன்னம் சிரித்துக்கொண்டு, துணைவரை வாழ்த்தி 'காலையிளவெயிலில் காண்பதெலாம் இன்பமன்றே?' என்ற மந்திரத்தோடு சூரியதரிசனம் செய்தபினனர், காக்கையின் வாயிலாக நேர்ந்த புதுமைகளை யெல்லாம் அறிந்து கொண்டது. தலை மனமார வியந்தது. "மன்னர் அறம்புரிந்தால் வையமெல்லாம் மாண்புபெறும்'' என்று கூறி அறமெனும் திருவுடை மன்னர்க்கே இராஜபக்தி உரியதென வற்புறுத்தியது. பிறகு காதலால் விளையும் ஒற்றுமைப் பயிரின் விளைவினைக்குறித்துப் பின்வருமாறு பேசியது;—

"ஒற்றுமையில் மேன்மை யுண்டாம்
ஒன்றை யொன்று துன்பிழைத்தல்
குற்றமென்று கண்டால் குறைவுண்டோ
வாழ் வினுக்கே ?''

இங்ஙனம் சொல்லி அன்னம் பறந்தேகியது. பறவைகளெல்லாம் மன்று கலைந்து மறைந்தன. ஆனந்தமான காலை வேளையின் மோக வலையில் சிக்குண்ட கவியும் கற்பனை யுலகச் செய்திகளாகிய இந்நிகழ்ச்சிகளை மானச—தந்தி வாயிலாக அறிந்து பாட்டாக இசைத்து உலகறிய வழங்குகின்றார்.

'காலைப் பொழுது என்னும் மகுடம் தாங்கிய பாட்டை ஓர் காதற் பாட்டென்று துணிந்துகூற வழியில்லை' இது உண்மையில் ஓர் அரசியல்—குறிப்பினைத் தன்னகத்தே கொண்டெழுந்த பாட்டு. குடியாட்சி நன்றா? முடியாட்சி நன்றா?—என்று வினவுவோர்க்கு "அறிவாட்சி''யே இரண்டினும் சிறந்ததெனக் காட்டுவது இப்பாட்டின் பொருள். எனினும் காதல் மயமான உலகில் மக்களிடையே—குடிகளுக்கும் அரசனுக்குமிடையே, ஒற்றுமை

வளர்ந்தோங்குவதால் ஒற்றுமை பலத்தினைக் குறித்த இவ் அாசியல்—பாட்டினையும் ஓர் காதற் பாட்டென்று கூறுவது இழுக்காகாது.

'காலைப் பொழுது' 'மாலைப் பொழுது' என்ற மகுடம் புனைந்து வரும் இவ்விரு பாடல்களையும் வாசகர்கள் 'செவியுள் நாவின் சுவைகொண்டு' பருகி இன்புறுவாராக.

---

# இளைஞர் உலகம்.



## சிறந்த நூல் எது?

ஆரிஸன் ஸ்வெட் மார்டன் என்ற ஓர் ஆசிரியர் அமெரிக்காவிலிருந்தார். இவர் இளைஞர்க்கேற்ற சில அரிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். இவற்றுள் 'முன்னேற்றத்திற்கு வழி' அல்லது 'இடையூறுகளுக் கிடையே வெற்றி' யென்னும் தலைப்பெயரோடு எழுதப்பட்டுள்ள சிறுநூலும் ஒன்றாகும். தன் முயற்சியால் தம்மைத் தாமே உயர்த்தவேண்டு மென்று பாடுபடுவோர்க்கெல்லாம் இச் சிறுநூல் இன்னமுதமாகின்றது; அருந்துணையாகின்றது.

ஃ ஃ ஃ

'முன்னேற்றத்திற்கு வழி' யென்னும் புத்தகத்தைப் பற்றிய கதை யொன்றுண்டு. பல்லாண்டுகளாக ஆசிரியர் குறிப்புக்கள் சேகரித்து, இன்னும் பல்லாண்டுகளாக இந்நூலை எழுதிமுடித்தார். கையெழுத்துப் பிரதி முழுமையும் தீக்கடவுளுக்கு விருந்தாயிற்று. கிரந்த தகனத்தோடு குறிப்புக்களும் வெந்து நீறாயின. 'குயவனுக்குப் பலநாள் வேலை; தடியனுக்கு ஒரு நிமிஷ வேலை யன்றோ?' பன்னெடுங்காலமாக அரிதின் முயன்று பெற்றெடுத்த அறிவுக் குழந்தை அநியாயமாக அகாலமாணம் உற்றதென்றால், வருந்தாதார் யாரோ? ஆனால் நமது ஆசிரியர் பல இன்னல்களுக் கிடையே, இடையூறுகளுக் கிடையே மீண்டும் முயன்று வெற்றி

கூடினர். புத்தகம் மீண்டும புதியபிறப்பெடுத்து வந்தது. "இடை யூறுகளுக்கிடையே வெற்றி" யென்னும் மகுடத்திற்கு இந்நூலே ஓர் உதாரணமாயிற்று.

ஃ ஃ ஃ

முதலாண்டிலேயே இந்நூல் பன்னிரெண்டு பதிப்பாகவெளி வந்துலவியது. 1912-ம் ஆண்டிற்கு முன்னரே இப்புத்தகத்தின் நூற்றுக் கதிகமான பதிப்புக்கள் வெளியிடப்பெற்று விலையாயின. இங்ஙனம் புத்தகங்களைப் பொன்னெனை மதித்துப் போற்றும் சுபாவம் மேலைநாட்டினர்பால் அமைந்துளது. இத்தகைய அறி வுத்தாகம நம்மவர்க்கும் ஏற்பட்டாலொழிய நமது முன்னேற்றத் திற்குரிய வழி நன்கு திறக்கப்படாமலேதான் இருக்கவேண்டிய தாகும்.

ஃ ஃ ஃ

தமிழில் உபயோகமற்ற பல புத்தகங்கள், நாவல்கள், ஆபாசக்கதைகள், சுவையற்ற பாக்கள் முதலியன ஆண்டுதோறும் குவிந்துகொண்டிருக்கின்றன. ஆனல் 'முன்னேற்றத்திற்குரிய வழி' என்ற அருமைச் சிறுநூல் போன்றவை வெளிவாராதது வருந்தத்தக்கதே. மார்டன் புத்தகங்கள் உலகமெங்கும் உலாவி வருகின்றன. தமிழ்நூல்கள் தமிழகத்திலும் தமிழர் தங்கிவதியும் வெளிநாடுகளிலுமாவது உலாவிவருதல்வேண்டாமா? உலகத்தின் பல பகுதிகளிலுமிருந்து பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் ஆயி ரம் ஆயிரம் நிருபங்களின் வாயிலாக மார்டன் புத்தகங்களால் விளைந்த நன்மைகளை ஆசிரியருக்கு நன்றியறிதலோடு எடுத்துக் காட்டியுள்ளனராம். உலகத்திலும் வாழ்க்கையிலும் ஆசையற்றுச் சோம்பிக் கிடந்தவருக்கு ஆசை ஊட்டும் அருமைநூல்கள் மார்டன் புத்தகங்களாகும். இன்பமில்லாது இலக்கில்லாது உலக யாத்திரை செய்வோர்க்கு இன்பம் பயப்பதோர் இலக்கினைக் காட் டுவது மார்டன் புத்தகம். இத்தகைய புத்தகங்கள் தமிழிலும் எழுதப்பெறல் வேண்டும்.

ஃ ஃ ஃ

'முன்னேற்றத்திற்கு வழி' யென்னும்புத்தகம்ஆங்கிலமொழி யில் எழுதப்பட்டிருப்பினும் அன்னியமொழிகள் பலவற்றிலும்

மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. ஜப்பான் தேசத்தில் பல்லாண்டுகளாக அரசாங்கக் கல்லூரிகளில் இப்புத்தகம் இதன் ஆங்கில உருவிலும் ஜப்பானிய மொழிபெயர்ப்பிலும் உபயோகிக்கப்பட்டு வருகின்றது. நமது நாட்டில் இப்புத்தகமாவது, இத்தகைய புத்தகங்களாவது பாடங்களாக ஏற்படவில்லை. காரணம் என்னே? அரசாங்கம் அன்னிய அரசாங்கம்; சொந்த அரசாங்கமன்று. உலகின் பல பகுதிகளிலுமுள்ள கல்விப் பயிற்சி நிபுணர்கள் இத்தகைய புத்தகங்கள் பள்ளிக்கூடங்களில் கற்பிக்கப்படவேண்டுவது அவசியமென்று அபிப்பிராயம் கொடுத்துள்ளார். கலாசாலைகளிலுள்ள புத்தகாலயங்களிலும் மேலை நாட்டினர் இத்தகைய புத்தகங்களைச் சேகரித்து வைக்கின்றார். எனினும் அறிவுத்தாகத்தையும் சுதந்திரதாகத்தையும் எழுப்பத்தக்க புத்தகங்களுக்கும் நமது கல்விச்சாலைகளுக்கும் விசேஷமான தொடர்பிருக்கிறதாகத் தெரியவில்லை.

ஃ ஃ ஃ

இளைஞர்க்கேற்ற புத்தகம் எப்படி இருக்கவேண்டும்? ரெய்னல்ட்ஸ் நாவல்கள் மதனகாமராஜன்கதை போன்ற ஆபாசக் கதைகளையும் அபத்தக் காதல்களையும் இளைஞர்களும் மாணவர்களும் படித்தலாகாது. வாழ்க்கையின் கொடுமைகளையும் சிற்றின்பக் காட்சிகளையும் ரெய்னல்ட்ஸ் எனபான் இரத்தத்தில் பேனவைத் தோய்த்து எழுதிக்காட்டுகின்றான். வாசகர் நரம்புகள் சோர்வுற்று உள்ளம் முழுமையும் தான்வருணிக்கும் அநியாயங்களிலும் ஆபாசங்களிலும் ஈடுபட்டு முழுகிவிடுமாறு, ரெய்னல்ட்ஸ், கள்வெறிகொண்டு இடிக்குரலில் கதைத்துச் செல்லுகின்றான். இத்தகைய கதைகளை மொழிபெயர்த்தும் வேறுவிதமாகப் பெயர்த்தெழுதியும் வேறு பிழைப்பறியாத சிலர் நமது நாட்டிலே நம் தமிழ்மக்களிடையே பரப்ப முயல்கின்றார். இவற்றைக் காட்டிலும் மக்களைக் கெடுக்கக்கூடிய ஆபாசங்கள் எந்தப் புராணத்திலுங்கூட இல்லை என்று கூறிவிடலாம். இளைஞர்க்கு உள்ளக் கிளர்ச்சி தரும் நூல்கள் அத்தகைய கிளர்ச்சியை நல்வழியில் திருப்பிச் செலுத்துதல்வேண்டும்.

ஃ ஃ ஃ

அமெரிக்கப் தகாதவரும் 'நான் ஓர் மனிதன். நானே

அரசன். பரம்பொருளின் அருமைத் திருமகவு' என்ற திடவுள்ளம்கொண்டு வாழ்க்கையாகிய குருக்ஷேத்திரத்தில் விரைந்து முற்படுமாறு தூண்டுவதே நன்னூலாகும். வாழ்க்கையில் எனக்கென்னவேலை யிருக்கிறது. சாவுதான் என் தோழன்! என்று சோர்வுற்ற உள்ளத்திலே 'நானும் இவ்வுலகில் ஒரு பெருநோக்கத்தோடுதான் பிறந்துள்ளேன்' என்ற உணர்ச்சியினை யெழுப்புவது உயர்ந்த நூலாகும். இளைஞரின் மனப்பசிக்கு நல்லுணவு தருவோரே நல்லாசிரியராவர். வீர சரிதங்களில், பெரியோர் திருக்கதைகளில், வெற்றிமுழக்கம் செய்வோர் செயல்களில், இளைஞர் உள்ளம் எளிதில் மாண்டுவிடுகின்றது. உலக யாத்திரையில் நல்லிளைஞர்க்கு நற்றுணை புரியும் ஒளி விளக்கங்களாக மிளிரும் பெரியோர் சரிதங்களிலேதான் வெற்றியின் மர்மம் இலை மறைகாய்போல் இனிது புலனாகின்றது. இத்தகைய மர்மத்தினையெடுத்துக் காட்டும் நூலாசிரியன் இளைஞர் உலகின முடிமன்னனாக விளங்குவான்.

ஃ ஃ ஃ

நீ பொய் சொல்லாதே என்று கூறுவதைக் காட்டிலும் "பதியிழக்கினும் கட்டுரை யிழக்கிலேம்" என்று கூறிய அரிச்சந்திரன் கதையினை எடுத்துக் காட்டுவதே நலமாகும். தத்துவங்களையும், ஒழுக்க முறைகளையும் கணித சாஸ்திரவிதிகளைப்போல எடுத்துக் காட்டாமல் கதைகளோடு பின்னிப் பிணைந்து வருமாறு சித்திரிப்பதே இளைஞர்க்குச் சிறந்த நன்னயம் பயப்பதாகும். "குணமென்னும் குன்றேறிநின்ற" பெரியோர் கதைகள், மாணவர் இளைஞர் ஒழுக்கத்திற்கு வழிகாட்டுகின்றன. இளைஞர் உள்ளம் விவகரித்து உண்மை காண்பதைப் பார்க்கிலும் வீரத் திருக்கதைகளில் வெறிகொண்டு எளிதில் உண்மையோடு ஒன்றுபடுகின்றது.

ஃ ஃ ஃ

சென்றது மீளாது. எனவே இறந்த காலத்தை யெண்ணியெண்ணி யேங்குதல் வேண்டாம். நாளை யென்பது நம்முடைய நாளா? நமனுடைய நாளா?—என்பதை யறியோம். எனவே, 'நாளை! நாளை!' யென்று வீண் கனவுகாணுதல் வேண்டாம். எடுத்த காரியத்தை யின்றே யிப்போதே தொடுத்து முடித்தல்வேண்டும்.

இங்ஙனம் நம் இளைஞர் ஒழுகுமாறு கற்பிக்கப்படல் வேண்டும். சூரப்பிள்ளைகளுக்கு ஒவ்வொரு நாளும் திருநாள்—ஒவ்வொரு நாளும் நன்னாளே. வீரஉள்ளம், நாளும் நட்சத்திரமும் பார்ப்பதில்லை. "சோதிடம் தனை இகழ்" —என்ற புது மொழியை இளந் தமிழர் இனி ஓர் பழமொழியாக்குதல் வேண்டும். விதியினை மதியால் விதித்துக்கொள்வதே முறையாகும். "விதிக்கும் விதியாகும் என் வில்தொழில்" காண்பார்!—என்று வீர இலக்குவன் சொன்னான். இதுவே நம் தமிழ்இளைஞர் கொள்கையாக விளங்குதல் வேண்டும்.

ஃ ஃ ஃ

சாதி சமயங்கள் இனி ஒருவனது முன்னேற்றத்திற்காவது சமூக முன்னேற்றத்திற்காவது இடையூறாக அமைதல் கூடாதென்பதை இளைஞர் நன்கு அறிதல் வேண்டும். பட்டவேட்கை, பதவிவேட்டை, உத்தியோக மோகம் ஆதியவற்றில் இளந் தமிழர் தம் உளத்தினைப் பறியவிடாது, அறப்பற்றும் தியாக உணர்வும் விடுதலைக்காதலும் அறிவுத்தாகமும் கைங்கரிய நோக்கும் உடையாராக வளர்தல் வேண்டும். சாதி பெரிதன்று, சமயம் பெரிதன்று, செல்வம் பெரிதன்று, அதிகாரம் பெரிதன்று, அறிவு பெரிது, அறிவிலும் பெரிது ஒழுக்கம். குபேர சம்பத்தைப் பார்க்கிலும் குணமெனும் மலைவிளக்கே அறிவு காட்டி, அறம் காட்டுவதால், மேன்மக்களது நன்மதிப்பிற்குரியதாகும். செல்வமில்லாமல் ஒருவன் சீமானாகலாம். பதவியில்லாமல், பட்டம் இல்லாமல், ஒருவன் பாக்கியனாகவும் சிலாக்கியனாகவும் இருக்கலாம். விளம்பரம் செய்துகொள்ள வெள்கி, ஒருவன் உயர்புகழ் சூடி வாழலாம். வெற்றியின் மர்மம் ஒழுக்கத்திலேதான் காணப்படுகின்றது. இத்தகைய நல்லுணர்ச்சிகளை யிளமை யுள்ளத்தில் விதைப்பதே நல்ல புத்தகம். இத்தகைய புத்தகங்கள் பல, மார்டன்போன்ற அறிஞர் பலரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. இவை தமிழ் மொழிவாயிலாக நம் தாய்நாட்டிலும் பரவுதல் வேண்டும்.

---

# அறிஞரின் அமுதமொழிகள்.

கற்புள்ளஸ்திரீ, தன் புருஷனுக்குக் கிரீடம்போல் உயர்வு கொடுக்கக்கூடியவளா யிருக்கிறாள்; புருஷனுக்கு இழிவை யுண்டு பண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கியா யிருக்கிறாள்.

—பைபிள்.

சூரியன் உலக முழுமைக்கும் வெளிச்சத்தையும் உஷ்ணத்தையும் கொடுக்கிறது; ஆனால் மேகம் அதன் கிரணங்களை மறைத்துவிட்டால் அது அவ்வாறளிக்க முடியாது. அதுபோல் மனதில் அகங்காரம் உள்ளவரையில் ஈசுவரப் பிரகாசம் அதில் தோன்றாது.

—ஸ்ரீராமகிருஷ்ணர்.

கொலைசெய்து ராஜபதவிக்கு வருவதை விட்டுவிடு; மனிதர் மீது ஈவிரக்க மில்லாமலிராதே.

—கிரே.

உலகமே நாடகமேடை; அதிலிருக்கும் ஆடவர்களும் ஸ்திரீகளும் வெறும் நடிகர்கள்; இந்நடிகர்கள் அம்மேடையில் தோன்றுவதும் மறைவதுமா யிருக்கிறார்கள். (அதாவது ஆண்களும் பெண்களுமாகிய மனிதர்கள் உலகத்தில் பிறப்பவர்களும் இறப்பவர்களுமா யிருக்கிறார்கள்.)

—ஷேக்ஸ்பியர்.

சூரியன் மேகத்தை ஊடுருவிச் செல்கிறது; அதேபோல உண்மையும் (மேகத்தைப்போன்று மறைக்கக்கூடிய அநேகம்) சூழ்ச்சிகளையும் கடந்து செல்லுகிறது; அந்தச்சூரியனைப்போலவே பிரகாசிக்கிறது; அதைப் போலவே நிலை நிற்கிறது.

—நெப்போலியன்.

ஏ சுதந்திரமே! சுதந்திரமே!! உன்பேரால் எவ்வளவு ஏமாற்றங்களாகிய குற்றங்கள் செய்யப்படுகின்றன.

—மாடெம் ரோலன்ட்.

(மரணத்தால் அரசருடைய) செங்கோலும் கிரீடமும் நிலை தளர்ந்து விழுந்துவிடவேண்டியவைகளே; மண்ணில், ஏழைகளுடைய அரிவாள்களோடும் மண்வெட்டிகளோடும் அவை சமமாக்கப்படுகின்றன. (அதாவது மரணமடைந்தபின் அரசர்களும் ஏழைகளும்) சமமே.

—ஜே. ஷேர்லி

# சதங்கை யொலி.



## வீரப்பெண்ணரசி.

'சாந்த் பீபி' என்ற பெயர் வாய்ந்த வீரமாதின் சரிதம் இடைக் காலத்திலும் கூட இந்திய ஸ்திரீகள் எத்தகைய வீரவாழ்க்கை வாழ்ந்தனரென்பதை நன்கு விளக்கிக் காட்டுகின்றது. இவள் "ஜீயர்" வகுப்பைச் சேர்ந்த முகம்மதியமாது. இவள் பெண்மை யரசாக விளங்கியதோடு ஆமது நகரத்தின் முடியரசியாகவும் விளங்கினள். மொகலாயர் இவளது கோட்டை கொத்தளங்களைப் பிடிக்கவிரும்பினர். அக்பரது தளபதி இவளது இராஜ்யத்தை அடிமைப்படுத்தப் பெருமுயற்சிசெய்தான். 'சாந்த் பீபி' ஆணுடை தரித்துக் கடும்போர் புரிந்தாள். அவள் தன் போர்வீரர்களை நோக்கி அதிகமாகப் பேசவில்லை. "வீரர்களே உங்களையும் உங்கள் மனைவி மக்களையும் வீடுவாசல்களையும் காப்பாற்றிக்கொள்ளுங்கள். அஞ்சா நெஞ்சோடும் அறப்பற்றோடும் கடவுளை நம்பிப் போர்புரியுங்கள். படைகளைப் பார்க்கிலும் மன உறுதியே மிகச் சிறந்த ஆயுதம்" இங்ஙனம் அவள் பேசினள். அப் பேச்சினைக்கேட்ட ஒவ்வொரு வீரனும் மௌனமாக நின்று தீப்பொறி பறக்கும் கண்களோடு எதிரிகள் மீது விழுந்து போர் செய்தார்கள். அரசி போர்வீரனைப்போல் உடைதரித்து, தலைக்குமேல் கத்தியைச் சுழற்றிக்கொண்டு தன்படைகளை நடத்திச்சென்றாள். இப் பெண்ணரசிக்காக உயிர்கொடுக்கும் பேறு கிடைத்ததே! என்று போட்டி போட்டுக்கொண்டு, 'நான்முற்பட நான்முற்பட' என்று ஆமது நகரத்துவீரர்கள் முன்னேறி விரைந்தார்கள். இத்தகைய சுத்த வீரத்திற்குமுன், மொகலாயர் படைகளும் சூழ்ச்சிகளும், கதிரவனைக் கண்ட பனிபோல் பறந்து போயின. இங்ஙனம் 'சாந்த்பீபி' என்னும் பெண்ணரசி வீரம்விளைத்துத் தன் நாட்டைக் காப்பாற்றிய செய்தி இந்துதேச சரித்திரத்தில் நவரத்ன எழுத்துக்களிலே சித்திரிக்கத் தக்கதாகும். ஆனால் இத்தகைய வரலாறுகளை உணர்ந்து வீர வெறிகொள்ளாது, நம் மாணுக்கர் பரீட்சைகளில் தேறிவருவது பெரிதும் வருந்தத் தக்கதன்றோ? பெண்மையே ஒரு நாட்டின் பெருமைக்கும் காரணமாகுமென்பது ஒருதலை. ஒரு சமூகத்தில் பெண்களும் இளைஞரும் திருந்தி வீரவாழ்வு வாழத்தலைப்பட்டால் அச் சமூகம் தெய்வ சமூகத்தினை ஒக்கும் என்பதிலையமில்லை. இத்தகைய வாழ்வினுக்கு 'சாந்த் பீபி'யைப்போன்ற வீரப்பெண்மணிகளின் சரிதம் ஓர் அரும் பெரும் அண்டுகோலாக அமைவதாகும்.

---

உ
சிவமயம்.

# "குமரன்"

எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

KVC0009

சதங்கை ௬ } காரைக்குடி அட்சயஹு மாசிமீ { மணி ௫

## அழகு வேண்டுமோ?

இதே தலைப்பில் ஐப்பசிமாத இதழில் சில குறிப்புகள் எழுதப்பட்டன. இயற்கைப் பொருள்களில் அழகுத் தெய்வம் தோற்றுமிடங்கள், இளமை, வளமை, தூய்மை, திறமை எனும் நாற்குணமும் பொருந்திய இடங்களேயாகும். இயற்கை வனப்பிற்கு ஒப்பற்ற சான்றாக நிற்கும் மக்கள்யாக்கை இக்குணங்களால் அழகுத் தெய்வத்தின் உறைவிடமாகின்றது. உடலின் இளமையும், வளமையும், தூய்மையும், திறமையும் எப்படிப் புறத்தே அழகுக்கிருப்பிடமாக இருக்கின்றனவோ, அப்படியே யாக்கையின் உட்புறமும் நின்று அழகு செய்கின்றன. ஒருவனுடைய உடலானது இளமைப்பருவத்தில் நின்றுகுதிகொள்ளும்; குறைவற்ற வளமையும் பொருந்திநிற்கும்; அழுக்கின்றிப் பரிசுத்தமாகவும் வைக்கப்பட்டிருக்கலாம்; அவ்வுடலினது அங்கங்கள் நேராக அமைக்கப்பட்டிருத்தலும் கூடும். இந்நான்கும் புறத்தேயமையினும், முகமானது அழகின் ஒளியிழந்து நிற்பதைக் காண்கிறோம். புறத்தேகாணப்படும் உடலினது இளமையும், வளமையும் அகத்தை நோக்கி அழகுவேண்டி இரந்து நிற்கின்றன. அகத்தில் இளமை யொளியில்லையேல் முகத்தின் இளமை உடலற்ற உயிராக நிற்கின்றது; அகத்தில் வளமையில்லையேல் புறத்தில் நிற்கும் உடலினது வளம் ஒளிமழுங்கிவிடும்; அகத்தின் கண் தூய்மையின்றேல் புறத்தூய்மை யென்செய்யும்? திறமையற்றமன

முடைய ஒருவனுடைய அங்க அமைப்புக்கள் நேராக விருப்பதால் பயனென்?

ஊக்கமும், உரமும், ஆண்மையுங்கொண்ட புதிய எண்ணங்களும் எழுச்சியுமில்லாத மனத்தையுடைய உடல் ஆண்டினுல் இளமையுற்றிருந்தும் வனப்புறுவதில்லை. அன்புநீர் தேங்கி வளமுருது கவலைமுதலிய வெம்மை நிறைந்த அகமுடையாருடைய உடலின் புறவளம் அழகின்வெற்றியைப்பெறுமோ? மனத்துக்கண் மாசின்றி நிற்பாரன்றோ உலகினை வசியஞ்செய்யும் பேரழகுடையராவார். பொறுமை வஞ்சம் முதலிய அழுக்குப்பிடித்த மனத்தினரது முகத்தில் மூதேவியன்றோ வாசஞ் செய்கின்றுள். ஆண்டு அழகுத்தெய்வம் உருக்காட்டுவதில்லை. சாதுரியமும் சாமர்த்தியமுமின்றிப் பேதையுள்ளம்படைத்த ஒருவனுடைய ஏமாந்தமுகத்தில் உண்மையெழில் காணக்கிடைப்பதில்லை. அவருடைய கண்கள் பரிதாபக்குறியையன்றோ காட்டிநிற்கும்? எனவே புறத்திலுள்ள இயற்கை வனப்பானது அழகுப் பெருங் கோயிலாகத் திகழ்தற்குக் காரணமாக நிற்கும் இளமை வளமை தூய்மை திறமையெனும் நாற்குணங்களும் அகத்திலும் பொருந்தி யொளிசெய்தல் வேண்டும். இன்றேல் புறஅழகு ஒளிமழுங்கி விடுகின்றது. உள்ளும் புறமும் ஒத்த அழகினரே உலகை வசியஞ்செய்யும் ஆற்றல் படைத்தவராகின்றுர்.

புறவழகு சிறிதுமிலாத சிலரைக்கண்ட பொழுதே பலர் தன் வசமிழந்து அவர் வசமாகின்றுர். புறவழகில்லாத ஒருவர் பால் பிறர் வசப்படுவதாயின் அன்னரது அகத்தில் அழகுத் தெய்வம் நல்லுருப் பெற்றுத் திகழ்கிறதென் றுணரல்வேண்டும். உடலால் ஒருவர் கிழவராக இருக்கலாம். மொழுமொழென்று வளர்ந்த வளமின்றி வாடிய நிலையில் அவரது உடல் காணப்படலாம். அழகடைந்து அங்கங்கள் குறைவுபட்டுமிருக்கலாம். ஆனல் உலகினரெல்லாம் அவர் காலடியில் விழுதற்குமிடமுண்டு. அவரது உள்ளம் பரிசுத்தமாயும், உலகை ஆளும் சாதுரியம்வாய்ந்ததாயும், புதுப்புது எண்ணங்களை ஊக்கத்துடன் காணக்கூடியதாயும், அன்பு நிறைந்ததாயும் இருக்குமாயின் அன்னரது முகத்தையே அழகுத்தெய்வம் தனது வாழ்க்கைப் பூங்கோயிலாகக் கொள்

கின்றது. அன்புநிறைந்த உள்ளம் அழகுநிறைந்த உள்ளமன்றோ? அதனை உடையமுகம் அழகுக்கடலாகுமன்றோ? தூய்மையுள்ள மனம்—அதனையுடைய முகம் உலகையே வசீகரிக்கும் அழகுத் தெய்வத்தின் இருப்பிடமாகின்றது.

முரு-

---

# சாத்விக உணவு.

(கி. லக்ஷ்மண சர்மா, பி. ஏ., பி. எல்., எழுதுவது:)

மனிதப்பிறவியில் பெறக்கூடிய பெரும் பயனுவது சிவானுபவம். அது பக்தியினுல் கிடைக்கும். பக்தியும், நல்ல அறிவினுலும் நல்லொழுக்கத்தினுலும் பலிக்கும். இந்த அறிவானது நமக்கு வேண்டுமானுல், நமக்குச் சுத்தமான மனம் ஏற்பட வேண்டும். சித்தசுத்தியில்லாதவருக்கு உள்ளபடி அறிவுண்டாகாது என்பது பெரியோர் வாக்கு.

மனமானது நமக்குத் துணையாயும் விரோதியாயும் ஆகிறது. நன் மனம் துணையாகிறது. தீபமனம் விரோதியாகிறது. இதனுல் தான் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸதேவர் :—"ஒருவனுக்கு ஈசுவர கிருபையும், ஸத்குருவின் கிருபையும் இரண்டு மிருந்தும், தன் மனதின் கிருபையில்லாதிருக்குமானுல், அவன் கடைத்தேர மாட்டான்," என்று உபதேசித்தார். இதே கருத்தைக் கொண்டு தீக்ஷிதர் அவர்களும் மானஸோபதேசம், என்ற காவியத்தில் மனதைப் பார்த்து, தன் நன்முயற்சிகளுக்கு இடையூறு செய்யாதிருக்கவேண்டிப் பிரார்த்திக்கிருர்.

மனதை நேரில் ஒருவன் திருத்தமுடியாதென்பது அனுபவ முடிவு. அது பலாத்காரத்தினுல் அடங்குவதல்ல. ஆனுல் அதை எளிதில் அடக்கும் வகை வேறுண்டு. மனதின் வளர்ச்சிக்கு ஆதாரமாயுள்ள தத்வத்தை அறிந்து, அதன் வழியாய் மனதை நம்மிஷ்டப்படி மாற்றிக்கொள்ளலாம்.

மேலும் தேகத்திற்கும் சுத்தியென்பது வேண்டும். தேகத்தின் அம்சங்களாகிய தாதுக்கள்—நாடிகள், தசைகள், இரத்தம்

முதலியவை—அசுத்தமாயிருப்பதனால், இடையிடையே நாம் நோய்க்குள்ளாகிறோம். இந்நோய்கள் மருந்துகளால் தீருவது போல் நமக்குத் தோன்றுகிறது. உண்மையில் அவை தீருகிறது கிடையாது. எக் காரணத்தினால் நோய் உண்டாயிற்றோ, அதன் வழியேதான் நோயைக் களையவேண்டும். தாதுக்களில் சேர்ந்திருக்கும் அசுத்தங்களைக் களைவதே அதற்கு எற்ற முறை. வேறு வழி கிடையாது.

தேகம், மனம் இரண்டிற்கும் உணவே ஆதாரமாகிறது. அதாவது இரண்டும் உணவினால் ஆக்கப்பட்டிருக்கின்றன. மனமானது உணவினால் ஆக்கப்பட்டிருக்கிறதென்று நமக்கு வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆனால், இதன் உண்மையானது சாந்தோக்கிய உபநிஷத்தில் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

உணவில் மூன்று தரமான அம்சங்கள் அடங்கியுள்ளன. அவை முறையே, ஸ்தூலம், மத்திமம், ஸூக்ஷ்மம் எனப்படும். ஸ்தூலமான அம்சம் மட்டில்தான் மேல்நாட்டு ரஸாயன பண்டிதர்களால் சோதித்தறியப்பட்டிருக்கிறது. அதையும் பூர்ணமாய் இன்னும் அறிந்தபாடில்லை. மற்றவை நுட்பமாகையால் சோதித்தறிய சாத்தியமில்லாதவை. ஸூக்ஷ்மமான அம்சம்தான் மனமாகின்றது, என்பது உபநிஷத்தின் கற்பனை.

பிராணன் என்பது உணவின் ஒரு அம்சத்தினாலும் சக்தி பெறுவது கிடையாதென்றும், அதற்கு சக்தியளிக்கும் பொருளானது தண்ணீரே, என்றும் அதே உபநிஷத்து கூறுகின்றது. தண்ணீரும் மேற்கண்டவாறு மூவகை அம்சங்களடங்கியதென்றும், அதன் சூக்ஷ்மமான அம்சமானது பிராணனாக மாறுகிறதென்றும் இவ்வுபநிஷத்தின் கற்பனை.

இவ்விரண்டு முடிவுகளுக்கும் நிரூபணமாகப் பதினைந்து நாளைப்பட்டினியானது நடத்தப்பட்டு, அதன் மூலமாய் இந்த முடிவுகள் நிலைநிறுத்தப்பட்டனவென்று இவ்வுபநிஷத்தில் காணப்படுகிறது. பட்டினிகாலத்தில் அடிக்கடி தண்ணீரை உட்கொண்டு வந்ததனால் பிராணனுக்குக் குறைவுண்டாகவில்லையாம். ஆனால் உணவை நிறுத்தியதால் மனதின் சுறுசுறுப்பு மழுங்கி, ஞாபக

சக்தியும் மறைந்ததாம். பிற்பாடு, படிப்படியாக உணவை உட்கொள்ளவும், சில நாளைக்குள் முன்போன்ற ஞாபகசக்தி முதலியவை திரும்பிவந்தனவாம்.

ஆகையால் உணவின் சுத்தமே, தேகம், மனம் இவ்விரண்டின் சுத்தத்திற்குக் காரணம். அசுத்தமான உணவு அசுத்த மனதையும் நோயுள்ள தேகத்தையும் தரும். சுத்த உணவாலேயே நோயற்ற தேகமும், சுத்த மனதையும் திரும்பப்பெறலாகும்.

உணவானது மூவகைப்படுகின்றது. சாத்விகம், ராஜஸம், தாமசம், என்பன. இதில் கடைசியானது அசுத்தமான உணவு. இவ்வகையில் தான் உணவல்லாத பொருள்களாகிய, புகையிலை, கள், சாராயம், மாமிசம், வெண்காயம், வெள்ளைப்பூண்டு முதலியவை சேர்ந்திருக்கின்றன. இவற்றை உபயோகிப்பவர் தாமசர்களாவார்கள். இவர்கள் தேகம் அசுத்தமாகவும், மனம் இருள் அடைந்ததாகவுமிருக்கும்.

ராஜஸ உணவு, உப்பு, உறப்பு, அதிகத்தித்திப்பு, காரல் முதலிய சுவையுள்ளவை. இவ்வுணவுகள் சுவைக்காகவே சாப்பிடும் உணவுகளாகும். பசியில்லாதபோதும் சாப்பிட இடந்தரும். அதிகமாய் சாப்பிடவும் தூண்டும். இதனாலேயே இவை துன்பம், மனச்சோர்வு நோய், இவைகளைப் பயக்கும்' உணவுகள் என்று பகவத்கீதை கூறுகின்றது.

சாத்விகமான உணவானது சுத்தமுள்ளது. இதனுள் பழங்கள், பால், கீரைகள், காய்கறிகள், தேங்காய், தானியங்கள் இவை அடக்கம். தான்யங்கள் கடைசித்தரமுள்ள ஆகாரம்—ஸாத்விகப் பகுதியில் பழம், பால், இவை உயர்தரமானவை. இவற்றைப் பசித்தவேளையில் இயற்கைவைத்தியநூல்களில் காணப்படும் விதிகளின்படி மிதமாய்ச் சாப்பிட்டுவந்தால் சுத்தசாத்விக குணமும், நோயின்மையும், நீண்ட ஆயுளும், மன உற்சாகமும், சந்துஷ்டியும், தேகபலமும் வளரும், என்பது கீதையின் உபதேசம்.

உணவில் நுட்பமான அம்சங்கள் நஷ்டமாகாதிருக்கும் பொருட்டு அவற்றை யியற்கை நெறியின்படி உபயோகிக்க வேண்டும். செயற்கை வகைகளால் தயாரித்தவை நஞ்சாகின்றன. என்பது சகல சாஸ்திரங்களாலும் முடிவான விஷயம். இந்த

நிபாயத்தை ஒத்து, மில்அரிசி, வெள்ளைச்சக்கரை, (அதாவது சுவாத்து முதலியவை) நீர் வடித்த காய்கறிகள் இவை நோயை வளர்க்கும் என்பது இக்காலத்து அறிஞர்களால் வற்புறுத்தப் படுகிறது. வீட்டில் குத்திய அரிசியைத்தான் உபயோகிக்க வேண்டும். அதையும் தண்ணீரில் களையாமலும், கஞ்சிவடிக்கா மலும், அவிஸ் அல்லது பொங்கல் என்னும் முறையில் பக்குவம் செய்யவேண்டும். இது பூர்ணம் புஷ்டிதரும் உணவாதலால் இதை மிதமாகத்தான் உண்ணவேண்டும். வயிறு நிரம்ப உண்ணக் கூடாது. இதற்கும் சரியளவு காய்கறிகள், அல்லது கீரைகள், சேர்த்தே உண்ணுவதுமுறை. நோயகற்றும் சத்துக்கள் இவற் றிலேதான் மிகுதி. இவ்வித உணவினால் இரத்தசுத்தியும், நோ யின்மையும், மனத்தெளிவும் ஏற்படும். மலச்சிக்கல், அதன் பொருட்டு சுருட்டுப்பிடித்தல் இவை சில நாளில் மாறும்.

காய்கறிகள் சமைப்பதில், சாத்விகமான முறையைப் பின் பற்றவேண்டும். இதன் விவரங்களும்—மற்ற வைத்திய நுட்பங் களும்—"மருந்தில்லா வைத்தியம்" என்னும் என் விரிவான நூலில் விரிக்கப்படுகின்றன. சுருக்கமாய்ச் சொல்லுகையில், "பொரியல்" என்னும்பக்குவமானது சத்துக்களைப் பாழாக்கும் முறையென்றும், "கூட்டு" என்பது நல்லதென்றும் காணுக.

உணவை உண்ணும் வேலையும் அதை சாத்விகமல்லாத தாகச்செய்யலாம். சாத்விக உணவையும் நற் பசியின்றி உண்ணு வதால் அது தாழ்ந்ததான தாமசத்தன்மை பெற்று, தீங்கே விளைவிக்கும். இதன் விவரங்களும் மேற்குறித்த நூலிலேயே காணப்படும். முக்கியமாய், காலை வேளையில் உண்ணுவது தவறு. குறைந்த பக்ஷம் கo மணி வரை தண்ணீரையே பலதடவை உட்கொள்ள வேண்டும். உணவு கொள்ளுதல் நோய்க்கேதான். உண்டால், ஜீரணக் கருவிகளுக்கு இளைப்பாற்றம் இல்லாமல் போகிறது. இதற்கு வேதங்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும் ஆதாரங்கள் உண்டு. யுக்திக்கும் அனுபவத்துக்கும் இதுவே ஒத்தது. இவற்றை யிங்கே விரிக்க இடம் போதாது. ஆரம் பத்தில் இரவு போஜனத்தை மட்டுப்படுத்திப், பின்னால் காலை உணவைக் குறைத்தாவது, பொழுதைத் தள்ளிவைத்தாவது, கடைசியில் காலை உணவை ஒழிக்கவேண்டும்.

இவ்வித பல நியமங்களையும் நாம் இக்காலத்தில் மீறிவருவதால்தான் நோய் அதிகமாகி வருகிறது. இயற்கை வைத்தியமாகிய மருந்தில்லா வைத்தியமானது, இவ்வுண்மை கண்டு பட்டினி, பத்தியம் என்ற இரண்டையும் முக்கிய மருந்துகளாகக் கொண்டிருக்கிறது. சுத்தமாகவும், ஓட்டமுள்ளதாகவு மிருக்கும் வாயு, சூரியவெப்பம், தண்ணீர் இவற்றைப் பக்கபலமாக உபயோகிக்கின்றது. தண்ணீரின் உபயோகமே அதிகமாகக் கியாதி பெற்றுவிட்டதால், இயற்கை வைத்தியமானது 'ஜலவைத்தியம்' என்றும் பேர் பெற்றது.

நோய் வந்தக்கால், அதை இயற்கை முறைகளாற்றான் தீர்த்துக்கொள்ளவேண்டும். மருந்துகளால் தீர்த்துக்கொள்ளுவது நன்மையல்ல. இதற்கு அநேக நியாயங்களும் பிரத்தியக்ஷ ருசுக்களுமுண்டு. முக்கியமாய் ஒன்று: வேறு வைத்யமுறைகளாலேயே பலமுறை வைத்தியம் செய்துகொண்டு வந்தவர்கள், பின் ஒருகாலம்—அம்மருந்துகளின் கொடுமையாலேயே—மருந்துகளால் தீராத நோய்களை அடைந்து, அப்பால் மருந்தில்லா வைத்தியத்தினாலேயே குணம் பெற்று, எதிர்பாராத ஆரோக்கியமும் சக்தியும் பெற்று வாழ்கின்றனர். இப்படிப்பட்ட சிலரே இவ்வைத்தியத்தை இவ்வுலகில் பரவச்செய்து வருகிறார்கள்.

இவ்வைத்தியமானது நோய்வாராதபடி காத்துக்கொள்ளும் ஒழுக்கங்கள், வந்தபின் செய்யும் வைத்தியமுறைகள், இவ்விரண்டு பகுதிகளும் அடங்கியது. யாவரும் இதைக் கற்று, நோய்ப்பட்டிருந்தால், இதன்படி சொஸ்தமடைவது சுலபமாயுமிருப்பதும் தவிர, இப்படிச் செய்வதே மனிதர் கடமையென்று சொல்லுவேன். இதைப்பற்றி விசாரிக்க வேண்டுவோர் நேரிலாவது, கடிதமூலமாவது தெரிந்துகொள்ளலாம். கடிதத்துடன் பதிலுக்காக ஒரு அணு தபால் தலை அனுப்பவேண்டும். இப்போது தங்கியிருக்கும் இடம்; கோட்டையூரில் அ. க. மடம்.

---

# சிறுவர் உலகம்.

## இளைஞரும் நாட்டுப்பற்றும்.

(பி. ஸ்ரீ.)

நாட்டு வளர்ச்சியின் அளவுகோல் பெண்மையெனின் அவ் வளர்ச்சிக்கு இன்றியமையாத வனமும் வளப்பும் தருவது ஒரு நாட்டின் இளமையேயாகும். எனவே இளமைப் பருவம் நன்கு பண்படுத்தப் பெறவேண்டுமென்பது எடுத்துக் காட்டாமலே எவர்க்கும் இனிது விளங்குவதாகும்.

நமது நாட்டிலுள்ள இளைஞர் தக்க மனப் பண்பினை அடையும் நெறியில் பயிற்சி பெறுகின்றாரில்லை. ஆன்மாவில்லாத, உயிரற்ற, இயந்திரம் போன்ற ஒருவிதக் கல்விப் பயிற்சி இளைஞர்க்கு அளிக்கப்படுகின்றது. இவர்கள் தலை நிமிர்ந்து கம்பீரமாக நிற்க முடியாததோர் கூட்டில் அடைக்கப்பட்டுள்ளார். அக்கூட்டில் சுதந்திர ஒளி உலாவிச் செல்வதில்லை. ஆராய்ச்சி யென்னும் சுத்த ஆகாயம் நுழையக்கூடாத நிலையில் அக்கூடு 'பந்தோபஸ்து' செய்யப்பட்டிருக்கின்றது. எத்தகைய உயர்ந்த பதவியினையும் இந்நாட்டில் நாம் வகித்தல் கூடும் என்ற நம்பிக்கை நம் இளைஞர்க்கு இல்லை. பயிற்சியாலும் முயற்சியாலும் அரசியல் உலகிலும் சமூக உலகிலும் எத்தகைய செயற்கரும் செயல்களையும் செய்து விடுதல் கூடும் என்ற மன வலிமையும் இவர்களுக்கில்லை. சிருஷ்டி, உற்சாகம், கற்பனைத்திறமை, இவையும் நம் வாலிபர்பால் காணப்படவில்லை.

கல்விப் பயிற்சி முறைகளின் பெருங் குறைகளிலொன்று தாய்மொழி வாயிலாக நமது இளைஞர் அறிவு பெறாததாகும். தாய்மொழிப்பற்று முளையிலேயே கிள்ளியெறியப்படுவதால் அந்நிய மொழிப் பயிற்சியே வாழ்க்கையின் புருஷார்த்தம் என்ற கொள்கை மாணவருள்ளத்தில் குடிகொண்டுள்ளது. மொழிப் பற்றில்லாது வளரும் மாணாக்கர் நாட்டுப்பற்றுமின்றி வறண்டுயர்ந்த பாலைவனம் போன்ற வறுமையுள்ளத்தோடு வளர்ந்து வருகின்றார். பரீட்சை தேறும் இயந்திரமாகக் காணப்படும் மாணாக்கர்களுக்கு மனத்துணிவேது? செயல் திறமேது?

அடிமை யுணர்வு என்னும் கரியமில வாயுவை சுவாசிப்பதால் இவர்களுக்கு உயிர்ச்சக்தி மிகமிகக் குன்றிப்போகின்றது.

துள்ளித் திரிகின்ற இளமையினை நமது கல்விச்சாலைகளும் கலாசாலைகளும் சிறைசெய்துவிடுகின்றன. உள்ளத்திற்கும் இதயத்திற்கும் சிறந்த நல்லுணவு நமது ஆங்கிலக் கல்லூரிகளில் பெரும்பாலும் கிடைப்பதில்லை. 'நான் தமிழன்' 'நான் இந்தியன்' என்ற பெருமிதம் இளைஞர் உள்ளத்தில் ஊறி உதிரத்தில் கலந்து என்பிலே தோய்ந்து வாழ்க்கையில் லயித்து விடுமாறு நமது கல்விப் பயிற்சிமுறை இன்னும் அமைக்கப்பெறவில்லை. சுருங்கக்கூறுமிடத்து தேசபக்தியென்னும் அமுதினை மாந்தி நம் இளைஞர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கவில்லை யென்பது நமது வெட்கத்திற்கும் வெளிநாட்டாரது பரிதாபத்திற்கும் உரியதோர் விஷயமாகும்.

இளமை உள்ளத்திலே உயர்ந்த லட்சியங்களை விதைத்தல் வேண்டும். கள்ளம் கவடற்ற நல் விருப்பங்களையும் தன்னலமற்ற பெருங் கொள்கைகளையும் ஏற்று வளரும் இளமை உள்ளமே பின்னாளில் தாய்நாட்டின் தனிப் பெருநலனுக விளைதல் கூடும். இத்தகைய விருப்பங்களும் லட்சியங்களும் அரசியல் நெறியில் மாத்திரம் படர்ந்து செல்வது போதாது. நமது சமூக வாழ்வினையும் இவை தழுவிப் படர்தல் வேண்டும். தாய் நாட்டின் தற்சுதந்திரம் நமது பிறப்புரிமைதான். எனினும் பெண் மக்களையும் சில வகுப்பினரையும் தாழ்த்தி வைத்து, சாதி சமயப் பூசல்களிடும் மக்கள் சுதந்திரம் வேண்டுமென்று கேட்கும்போது, சுதந்திர தேவியே அவர்களை இகழ்ந்து நகையாடுகின்றனளன்றோ?

இந்திய வாழ்க்கையில் பல குறைகள் உண்டு. இவற்றுள் முக்கியமானவை மூன்று என ஸி. எப். ஆண்ட்ரூஸ் துரைமகன் கூறுகின்றார். குழந்தை மணம் என்னும் கொடுமைக்கு இந்நாகரிக உலகில் நிலைக் களமாக விருப்பது நமது நாடன்றோ? இதனோடு கட்டாய வைதவ்யமென்னும் அநியாயத்தையும் நாம் நம் பெண் மக்கள் மீது சுமத்துகின்றோம். மெல்லியலார்பால் இத்தகைய கொடுமை செலுத்தும் மக்களுக்கு எத்தகைய நற்கதியுண்டு? இம் முதற் பெரும் குறையை நாம் முதற்கண் துடைத்தல் வேண்டும்.

இதற்கு நாட்டுப்பற்றுள்ள நல்லறிஞர் விரைந்து முற்படல் வேண்டும்.

பெண்மையைத் தாழ்த்தும் கொடுமையோடு நாட்டு மக்களில் சில வகுப்பினரைத் தாழ்ந்தவரென்றும் தீண்டாதாரென்றும் பழிதொழிலும் இழிகுலமும் படைத்தவரென்றும் நாம் ஒதுக்கி ஒடுக்கி வைத்திருக்கும் கொடுமையும் சேர்ந்து இந்திய அன்னையின் இருகால்களிலும் இட்டுள்ள விலங்குகளாகின்றன.

இரண்டு கால் விலங்குகளோடு இந்திய அன்னையின் கைகளிலும் விலங்குகள் பூட்டப்பெற்றுள்ளன. இவ் விலங்குகளே சாதி சமயப் பூசல்களாகும். இந்து முஸ்லீம் வேற்றுமைகளும், பார்ப்பனர் பார்ப்பனரல்லாதார் சச்சரவுகளும் இந்திய அன்னையின் கைவிலங்குகளாகும்.

என்றெமதன்னை கை விலங்குகள்போகும் ?
என்றெமதின்னல்கள் தீர்ந்துபொய்யாகும் ?

என்று ஏங்கி ஏங்கிக்கரையும் உள்ளத்திலே சாதிசமய வேற்றுமைகளெல்லாம் கரைந்துருகிப் போகின்றனவன்றோ ?

பெண்மையின் இழிவு, தீண்டாமை, சாதி சமயப்பிளவுகள் இம்மூன்றுமே நமது சமூக வாழ்வின் முப்பெருங்குறைகளாகுமென ஆண்ட்ரூஸ் பெருமான் சுட்டிக்காட்டியுள்ளார். இக்குறைகளை நிறைசெய்ய நாட்டுப்பற்றுள்ள இளைஞர் விரைதல்வேண்டும். குறைகளை வைத்துக்கொண்டு "எல்லாம் சரிதான், சுதந்திரம் வேண்டும்; உடனே வேண்டும்" என்று பிதற்றுவோர் புண் பொதிந்து முடிவைப்போரை நிகர்ப்பர். இத்தகைய "தேசபக்தர்" நடிப்புச் சுதேசிகளேயாவர். தேசபக்த ஆஷாடபூதிகளின் பிரார்த்தனை சுதந்திரதேவியின் செவியில் விழுவதில்லை.

சுதந்தரதேவி கும்பகருணனைப்போல் உறங்குகின்றாளில்லை; இறந்தொழிந்தாளில்லை. நமது நாட்டின் மீது வெறுப்புற்று விலகி நிற்கின்றாளில்லை.

மாசதவீரர் மலிந்த நன்னாடு
மாமுனிவோர் பலர் வாழ்ந்த பொன்னாடு
நாரதகானம் நலந்திகழ் நாடு
நல்லன யாவையும் நாடுறுநாடு

பூரணஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரதநாடு பழம்பெரு நாடே
பாடுவம் இஃதையெமக்கிலை ஈடே."

என்று பாடிக்களித்து முழக்குவதால் மாத்திரம் பயனில்லை.

இந்தியனென்ற சொல்லே நவீன வெள்ளையர் அகராதியில் அடிமை யென்ற பொருள் தருகின்றது. காரணம் என்னை? நமது பலவீனம் நமது ஒற்றுமை யின்மை, இவையன்றோ நம்மைத் தாழ்த்திவிட்டன? பறையரைத்தாழ்த்திய மக்கள் அனைவரும் வெள்ளையர் கண்களில் பறையராகவேகாணப்படுகின்றனர். இதில் என்ன ஆச்சரியம் இருக்கின்றது? விதியின் விளைவன்றோ இது! தாயைப் பேயாகவும் நாயாகவும் கருதும் சமூகத்திற்கு நாகரிக உலகில் என்ன மதிப்பிருக்கின்றது? புழுக்கள் தம்மை நெட்டைப் புழு, கட்டைப்புழு, உருண்டைப்புழு, ஊதாப்புழு, மங்கலமான மஞ்சட்புழு, நீசமான கரும்புழு என்று பாகுபாடுசெய்து கொள்வதுபோல நாமும் நம்மைப் பார்ப்பனரென்றும், சூத்திரரென்றும் வணிகரென்றும், வேளாளரென்றும், பஞ்சமரென்றும் பிரித்துக் கொண்டு இன்னல் புரிகின்றோம். இத்தகைய மானிடப்புழுக் களுக்கும் தன்னரசு வேண்டுமோ?—என்று நாகரிக உலகம் நகையாடுகின்றது.

மேலேகுறித்த குறைகளை யெல்லாம் துடைப்பது இளைஞர் கடனாகும். வயது முதிர்ந்தவர்களைப் பார்க்கிலும் இளைஞர்களே மனத்துணிவோடு பணி ஆற்றும் பேறு பெறுவோராவர். ஒவ்வொரு நாட்டிலும் இளைஞர் செய்த பெருஞ் செயல்களுக்கு உலக சரிதம் சான்று தருகின்றது. இந்திய நாட்டிளைஞர்க்கு இவ் உலக சரித்திரத்தில் இடமில்லையா? அன்னை கண்ணீர் துடைக்கவேண்டுமென்னும் ஆத்திரம் இவர்களுக்கில்லையா? தேசநேச நெருப்பு இவர் தம் உள்ளத்தில் கொழுந்துவிட்டெரிய வில்லையா?

வீரபுருஷர் பிறக்கின்றார்; ஆக்கப்படுகின்றாரில்லை—என்று கூறுவது முற்றும் உண்மையன்று; காலம் பக்குவமாக விருக்கின்றது. சந்தர்ப்பமும் பொருத்தமாகத்தான் அமைந்துள்ளது. தமி

மூர் புதுவாழ்விற்கு—தமிழ்மொழியின் புதுவளர்ச்சிக்கு—உழைக்க வேண்டுமென்னும் உயர்ந்த லட்சியத்தோடு சமூகத்திலுள்ள சிறு குறைகளையும் மூடக்கட்டுகளையும் தகர்த்தெறியமுற்பட்டு நிற்கும் வீர இளைஞர் வேண்டும். இவர்களே தமிழகத்தின் எதிர்கால வாழ்விற்கு அடிப்படை அமைக்கும் சிற்பிகளாவர்.

---

# தேசபக்த மும்மணிகள்.

( பி. ஸ்ரீ. )

தசரதன் மந்திராலோசனை மண்டபத்தை அடைந்து இராமனுக்கு முடிசூட்டவேண்டுமென்று தன் மந்திரிக்கிழவரோடுகலந்து ஆலோசனை செய்கின்றான். அப்போது மூப்படைந்துள்ள சக்கரவர்த்தி தனது நிலையினைக் குறித்து வருந்திப்பேசுகிறான். போர்க்களத்தில் தன் உயிர்போயிருந்தால் அது நலமாயிருந்திருக்குமே; அத்தகைய வீர மரணம் தனக்குக் கிடைக்கவில்லையே என்று வருந்துகின்றான். உயிரைக்கொடுப்பதுதான் தியாகமா? சில சந்தர்ப்பங்களில் உயிரைக்கொடுப்பது தியாகமாகுமெனின், நெருக்கடியான பலவேறு சந்தர்ப்பங்களிலும் உயிரை வைத்துக்கொண்டு பணிசெய்வதே தியாகமாகுமன்றோ? இன்னும் சில சமயங்களில் உடைமைகளைத் துறக்கும் தியாகம் இன்றியமையாததாகும். எனவே, மூன்றுவகையான தியாக மூர்த்திகள் உலகில் காணப்படுகின்றார். பெருஞ்செல்வத்தைப் பட்டினத்தடிகள்போல்——புத்தர் பெருமானைப்போல் துறந்துவிடும் தியாகபுருஷர் உண்டு. உயிரையே துறந்துவிடும் தியாக மூர்த்திகளும் உண்டு. உடல் பொருள் ஆவி மூன்றினையும் ஓர் பெரும் பணிக்கே உரிமையாக்கிவிடும் தியாகமூர்த்திகளும் உண்டு. தியாக புருஷர்களின் இம் மூன்று வகுப்பில்தான் ஒன்றிலும் சேரவில்லையே என்று தசரதன் மனமுளைகின்றான்.

ஒட்டிய பகைஞர் வந்துருத்த போரிடைப்
பட்டவரல்லரேல், பரமஞானம் போய்த்
தொட்டவரல்லரேல், செல்வம் ஈண்டென
இட்டவரல்லரேல், யாவர் வீடுளார்?

இங்ஙனம் தசரதன் தன் அமைச்சர்களை நோக்கி வினவுகின்றான். வீடு அல்லது மோட்சலோகத்திற்கு மூன்று வாசல்களே யுண்டு என்பது வீர புருஷர்களின் கொள்கை. மூன்று வாசல்தான்; நான்காவது வாசலில்லை. போர்க்களத்தில் முன் வைத்தகாலைப் பின் வாங்காது பட்டு வீழ்தல் ஒன்று. வாழ்க்கையாகிய களத்தில் உயிரை வைத்துக்கொண்டே ஞான வாளேந்தி நற்பணி புரிய முற்படுதல் மற்றொன்று. செல்வம் முதலானவை யிவ்வுலகத்திற்கே பயன்படும் என்ற உண்மை கண்டு அவற்றை நல்வழியில் வரையாது வழங்குதல் மூன்றாவது வழியாகும். இம் மூன்று வாசல்களாலுமே—வீரர்கள் துறக்கம் அடைகின்றார்.

'ஒட்டிய பகைவர்' என்று கூறுவதால் சண்டையை நாம் வீணாக இழுத்துத் தலைமேல் போட்டுக்கொள்வது தவறாகும். அநியாயமாக எதிரி ஒரு நாட்டின் கற்பினையொத்த சுதந்திரத்திற்குப் பங்கமிழைக்க வந்தால், அந்நாட்டின் தற்காப்பை முன்னிட்டு எழும் சுதந்திர யுத்தத்தில் உயிரைக் கொடுப்பது பெரும் புகழோடு பெரும் புண்ணியமுமாகும். உண்மையில் இதுவோர் சொர்க்கவாசலாகுமென்று தசரதன் கருதுகின்றான். போர் வெறிகொண்டு உயிரைக் கொடுப்பதுதான் வீரமாகுமா? எனவே, போர்பெறாத சமாதான காலங்களில் வாழ்க்கையினையே போர்க்களமாகக்கொண்டு தெளிந்த மேலான ஞானமென்னும் படைதாங்கி ஒரு துளி இரத்தமும் சிந்தாது அறப்போர் புரியும் அறி வீரமும் துறக்கவாசலேயாகும். இதுவும் தசரதன் கருத்தே. இவ் இரண்டு வாசல்களோடு துறக்கத்திற்கு இன்னொரு வாசலும் இருக்கின்றது. செல்வம் இவ் உலகத்திலே தான் 'செல்லும் காசா'கும். மரணத்தின் பின்னர் இது தொடர்ந்து செலவதன்று. "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே." வெறும் கையோடு இவ்வுலகிற்கு வந்தோம்; வெறும் கையோடு இவ் உலகைவிட்டுப் போகின்றோம். இவ் உண்மை கண்ட நல்லறிஞர், செல்வம் இவ் உலக வாழ்விற்கே பயன் தருவதோர் சாதனமாகுமெனக் காண்பர். இங்ஙனம் கண்டு ஓர் உயர்ந்த லட்சியத்தின் நிமித்தம ரூபா சம்பத்தையும் துணிந்து தியாகம் செய்து விடுவர். இத்தகைய மூன்று வாசல்

களால் துறக்கம் அடைவதைத்தவிர, வேறு வழியில் யாவர் வீடு கண்டுளார்?

எக்காலத்திலும் தசரதன் கூறிய மூன்று சொர்க்கவாசல்களும் திறந்து வைக்கப்பட்டுள்ளன. தற்காலத்திலும் சிலர் இவ்வாயில்களினூடே புகுந்து வீடுபெறுகின்றார். இவர்களில் மூவரைக் குறித்துப் பேசுவதே இச் சிற்றுரையின் நோக்கமாகும். உயிரைக்கொடுத்த தியாகமூர்த்திகளில் சிரத்தானந்தரது திருப்பெயர் இன்று நமது ஞாபகத்தில் பாய்ந்து வருகின்றது. இவர் உண்மையான போர்வீரன். பாயும் படுக்கையுமாகச சாவது வீர தருமமன்று என்று கருதியே, விதி இவருக்கு எவரும் வியந்து புகழ்ந்தோதும் வீர மரணத்தை அருளியதென்பது எமது கருத்து. இந்து தருமத்தின் கவசமாக நின்ற இவ்வீரன் சமயத்திற்காகவே உயிர் கொடுத்துப் பெரும்புகழ் சூடினர். இவரது புகழுடம்பு நமது மக்களிடையே என்றும் நின்று நிலவும் என்பது திண்ணம். "ஒட்டிய பகைவர் வந்து உருத்த போரிடைப்பட்டவ"ரைக் குறித்து, தசரதனுள்ளத்தில் பொறாமை பொங்கியது. அவ்வண்ணமே இந்து தருமத்திற்கு உயிர் கொடுத்த வள்ளர் பெருமகனை சிரத்தானந்த மூர்த்தியை நினைக்கும்போதெல்லாம நமது இளைஞர் உள்ளத்தில் வீரம் பொங்குவதோடு பொறாமையும் சிறிது பொங்கவேண்டுமன்றோ?

சிரத்தானந்தரைப் போல் உயிரைக் கொடுப்பது மாத்திரமே தியாகமென்று கருதுதல் வேண்டாம். உயிரை வைத்துக்கொண்டே, கற்றோர்க்கு வாம்பாகும் பரமஞானத்தோடு தெளிவெய்தி நாட்டிற்காக அறப்போர் புரிந்து வரும் நம் சத்தியாக்கிரக—அஹிம்சாதர்ம மூர்த்தியாகிய காந்தியடிகளது வீரமும் தியாகமும் சிரத்தானந்த சுவாமிகளது தியாகத்திற்கும் வீரத்திற்கும் ஒரு சிறிதும் குறைந்தனவாகுமா? சில சமயங்களில் உயிரை விடுவதைப் பார்க்கிலும் உயிரை வைத்துக்கொண்டு பணிபுரிவதே போராண்மையாகும். இத்தகைய போராண்மையன்றோ மார்வாடி காந்தியை மகாத்மா காந்தியாகப் பரிணமிக்கச்செய்தது! சிரத்தானந்தரைப்போல் உயிரை விடவேண்டும்; அல்லது காந்தியடிகளைப் போல் உயிர்வாழ வேண்டும். இவ் இரு நிலைகளும் வீரசூளாமணிகளான தியாகமூர்த்திகளின் நிலைகளேயாகும்.

இனி, கடைசியாக உடைமைகளைத் துறந்த நவீன புத்தரெனத்தகும் தேசபந்து தாஸரைக்குறித்து ஒருவார்த்தை சொல்லி இக் கட்டுரையை முடித்து விடுவோம். உயிர் துறந்த வீரம் சிரத்தானந்தர்பால் காணப்பட்டதெனின்—உயிர் வாழும் வீரம் காந்தியடிகள்பால் காணப்படுகின்றதெனின், ஏராளமான இராஜ சம்பத்தைத் தீவினையென்ன நீத்து நாட்டுப்பணியிலே தன்னை முழுக்க இழந்த பெருவீரம் தாஸர் பெருமான்பால் காணப்பட்டதென்று துணிந்து கூறிவிடலாம்.

இந்து தேச சரித்திரத்தில் சிரத்தானந்தர், காந்தியடிகள், தாசர் பெருமான் என்னும் மும்மைப்பெரும் பெயர்களும் என்றும் அழியாது நிலைபெற்று நிற்கும் என்பதில் ஐயமில்லை. இம் மூன்றும் தசரதன் குறித்துள்ள மூன்றுவகையான தியாக நெறிகளை இந்நாளில் நமக்கு நன்கு நினைப்பூட்டுகின்றன. உயிரை இழக்க நேரிடுமென்பதை சுவாமி சிரத்தானந்தர் நன்கறிவர். எனினும் அவர் அதைப்பற்றி ஒருவிதமான கவலையும் கொள்ளவில்லை. சத்தியாக்கிரக நெறியில் வாழ்க்கையைச் செலுத்துவோர்க்கு எண்ணிறந்த இன்னல்கள் விளையும் என்பதை மகாத்மா நன்கறிவர். எனினும் கவலையற்ற குழந்தை யுள்ளத்தோடு இவர் நம் பாரத நாட்டிற்குத் தொண்டு பூண்டுழைத்து வருகின்றார். தேசபந்து தாசருடைய துறவு அரிச்சந்திரன், புத்தன், பட்டினத்தடிகள் முதலானவரது தியாகத்திற்கு எட்டுணையும் இளைத்ததன்று. "பதியிழந்தனம், பாலனையிழந்தனம், படைத்தநிதியிழந்தனம்," என்று கம்பீரமாக முழக்கிய அரிச்சந்திரமன்னனைப்போல் தேசபந்துவும் பொருளை இழந்தார்; போகத்தை இழந்தார்; இம்மட்டோ! தன் மனைவியையும் ஏகபுத்திரனையும் பாரதமாதாவின் பெரும்பணிக்கே உரிமையாக்கினர். இவரது உடைமைகளெல்லாம் இந்திய அன்னையின் பலிபீடத்திலே அர்ப்பணம் செய்யப்பட்டன. எனினும் இவருக்கு யாதொரு கவலையுமில்லை. இத்தகைய பெரும் தியாகத்தைக் குறித்து இவர் பிரமாதமாக நினைக்கவுமில்லை. 'அந்தோ! என் செய்வேன்' என்ற அனுதாப உணர்ச்சி அவர்பால் ஒரு சிறிதும் காணப்படவில்லை. கலைக்கடலாக விளங்கிய தாசர் பெருமான் தியாகத்தின் கரைகாணாக் கடலாகவும் விளங்கினர்.

இளைஞர்களே! நமது தேசபக்த மும்மணிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்யுங்கள். இவர்களது வாழ்க்கையின் ஜீவநாதங்களை ஆராய்ந்து பாருங்கள். இம் மும் மணிகள் நமக்கு விளக்கிக் காட்டும் வள்ளற் பெருநெறி பிடித்து ஒழுகுவதே நாட்டிற்கு விடுதலை நாடுவதாகும்.

---

# அங்கும் இங்கும்.

நெல்லை நேசன்.

எத்தனையோ நூற்றாண்டுகளாக மனிதன் உடலிலும் உள்ளத்திலும் திருந்தி வருகின்றானென்று உயிர்நூலார் கூறுகின்றார். விலங்கோடு விலங்காக வாழ்ந்த மக்கள் இன்று மனித நீர்மை பெற்று விளங்குகின்றார். நாளை இவர்கள் தெய்வ வாழ்க்கை வாழும் புனிதர்களாகப் பரிணமித்தலும் கூடும். ஆனால் அறிவுப் பயிற்சிமாத்திரம் போதாது. ஆராய்ச்சி அறிவு இவ்வுலகில் வளர்ந்தோங்கி வருகின்றது. ஐம்பெரும் பூதங்களின் நுட்பங்களை ஸயன்ஸ் அறிவுக் கண்கொண்டு ஆராய்ந்து வருகின்றது. அறிவு வளர்கின்றது, பொருள்வளர்கின்றது எனினும் நாகரிகம் வளர்ச்சிகுன்றி அழிகின்றது—என்றகவலை மேலைநாட்டு மேதாவியர்களுக்கு உண்டாகிவிட்டதாம். தொழில் முயற்சி, கட்டுப்பாடு, அபிவிருத்தி, செயல்திறம்! ஆனால் எங்கணும் குழப்பம்! காரணம் என்னை? பொருளையும் போகத்தையும் தேடும் வெள்ளைமக்கள் ஆன்ம சம்பத்தை ஒரு பொருளாக மதிப்பதில்லை. இதுவே மேலை நாகரிகத்தின் சாபக்கேடு.

ஃ ஃ ஃ

ஆன்மாவா? அது எங்கேயிருக்கிறது? உடலைப் பார்க்கின்றோம்; உலகத்தைப் பார்க்கின்றோம்; பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்களை ஸயன்ஸ் வாயிலாகப் பார்க்கின்றோம். ஆன்மாவை யார் பார்க்கின்றார்? ஆன்மாவும் கடவுளும் மூடஉலகத்தின் உடமைகளன்றோ? இவ்வாறு கூறும் நாஸ்திகர் மேலைநாட்டில் உண்டு. மெழுகுவர்த்தி விளக்கை ஊதி அவித்துவிடுகின்றோம். அப்பால் அவ் விளக்கொளி எங்கே? இவ்வண்ணமே மரணம் உயிர்த்தியை

அவித்துவிடுகின்றது. அப்பால் பரலோக மேது? மோட்சவாழ் வேது? இத்தகைய நாஸ்திகம் ஒரு காலத்தில் மேலைநாடுகளில் தலைவிரிகோலமாக தாண்டவமாடி வந்தது.

ஃ ஃ ஃ

கடவுளில்லை என்று பிராட்லா வாய்கூசாது கூறினர். அவ்வளவு துணிவு வேண்டாம். அந்த ஆசாமியைச் சந்தேக ஜாபிதாவில் சேர்த்துவிடுவோமென்று டார்வின் பண்டிதர் சொன்னார். கடவுள் உண்டென்று கூறுவது மூடத்தனமென்றால் இல்லையென்று ருசுப்படுத்த முயல்வது முழுமூடத்தனமன்றோ என்று ஹக்ஸ்லி வினவினர். இன்று ஸர் ஆலிவர் லாட்ஜ் போன்ற பேர்பெற்ற விஞ்ஞான சாஸ்திரிகள் கடவுள் உண்டென்றும் சித்தாந்தம் செய்யத் தொடங்கிவிட்டனர். இவர்களது திருக்கூட்டம் சிறிது சிறிதாகப் பெருகிவருகின்றது.

ஃ ஃ ஃ

இரசாயனசாஸ்திரி சொல்லுகிறான்:—இரசாயனப் பொருள்களை ஆராய்ந்து பார்த்தேன். இரசாயனப் பொருள்களில் பரம்பொருளில்லை. இரணவைத்திய சாஸ்திரி சொல்லுகிறான்:—நுண்ணிய கருவிகள்கொண்டு உடம்பை யறுத்துச் சோதித்துப்பார்த்தேன்; உடம்பின் உள் உறுப்புக்கள் எங்கள் கத்திகளுக்கு இலக்காயின. ஆன்மாவைக் கண்டேனில்லை. இயற்கை விதிகளே இவ்வுலக இயக்கத்துக்குப் போதுமானவை. அப்படியிருக்க ஆண்டவன் வேண்டுமா? அறியாமை இருள் மூடியிருந்த காலத்தில் ஆண்டவனிருந்தான். இவ்வளவு பெருநாகரிகத்தில் அவன் பிழைத்திருப்பானா? ஆண்டவன் மாண்டொழிந்தான்! இங்ஙனம் பேசும் நாத்திகரிடையே ஸர் ஆலிவர் லாட்ஜ், ஸர் ஆர்தர் கோனன்டாயில் போன்ற பெரியோர்கள் சூக்கும ஞான விளக்கினை ஏற்றி வைத்திருக்கின்றார். இம் மெய்த்தீபம் நாளடைவில் வான் சுடர்ச்சோதிவெள்ளமாக வளர்ந்தோங்குமென்பது எமது துணிபு.

ஃ ஃ ஃ

சென்ற மகாயுத்தகாலத்தில் நடந்த ஒருநிகழ்ச்சி இப்போது நினைவிற்கு வருகின்றது. ஒரு கடிதத்தின் மேல்விலாசம 'பர்மண்டல நாதனாகிய எனது அருமைப் பிதாவுக்கு' என்றிருந்தது. ருஷியாவிற்கும் ஜெர்மனிக்கும் நடுவேயுள்ள ஓர் சந்திப்புநிலத்

தில் ஒரு ஜெர்மன் தபாலதிகாரி (போஸ்டுமாஸ்டர்) இருந்தார். அவர் இக் கடிதத்தின் விலாசத்தைப் பார்த்தார். ஐரோப்பியர் களிலெல்லாம் மகா பண்டிதர்களாக விளங்குவோர் ஜர்மானியர் என்பது பிரசித்தம். ஜர்மன் தபால் அதிகாரியும் ஸயன்ஸ் முதலிய நூல்களில் நன்கு பயிற்சிபெற்றிருந்தார். இவர் பின்வருமாறு அவ்விலாசத்தின் கீழே ஓர் குறிப்பெழுதிச் சேர்ந்தார். அது வருமாறு: "பரமபதநாதனுகிய பரமபிதாவிற்கு ஜர்மனியில் வேலையில்லை. விலாசதாரன் ஒரு வேளை அநாகரிக மயமான ருஷியாவில் காணப்படுதல்கூடும்" இது ஐரோப்பிய மேதாவியாது மனநிலையாக யிருந்தது; இப்பொழுதுதான் ஒருவாறு சூக்கும சாஸ்திர பரிசீலனைகளால் இந்நிலைமை மாறிவருகின்றது.

ஃ ஃ ஃ

ஒரு நாத்திகன் ஒரு பாதிரியார் ஒருவரைச் சந்தித்தான். ஐயா! பாதிரியாரே' உமது கடவுள் சர்வ வல்லமையுள்ளவரா? என்று கேட்டான். ஆம், ஆம். சர்வவல்லமை யுள்ளவர்தான் என்று பாதிரியார் சொன்னர். அப்படியானல் அவர் தற்கொலை பண்ணிக்கொள்ளுதல் கூடுமா? என்று வேறெரு கேள்விகேட்டான். பாதிரியார் பாடு திண்டாட்டமாயிற்று. கடவுள் தற்கொலை செய்துகொள்ளக் கூடுமாயின் ஏனவர் அவ்வாறு செய்து காட்டுதல் கூடாது? தற்கொலைசெய்ய முடியாதென்ருல் சர்வ வல்லமை எங்கே போய்விட்டது. இவ்வாறு விதண்டாவாதம் செய்த போலி அறிஞரிடையே—போலி ஆராய்ச்சியாளரிடையே சில நல்லறிஞர் தோன்றி நல்லறிவுச்சுடர் கொளுத்தி நன்னெறி காட்ட முயல்கின்ருர். இறை ஒளிக்கும் இறைபருளுக்கும் சான்று தர முயல்கின்ருர். இவர்தம் பெருமுயற்சி இனிது நிறைவேறுவதாக!

ஃ ஃ ஃ

கடவுள் எங்கேயோ பரமண்டலத்தில் இருப்பதாகப் பாதிரிமார் கூறி வந்தனர். பாமரஜனங்கள் பரமண்டலம் என்ருல் மேகமண்டலத்துக்கப்பால் வானமண்டலத்தில் அது இருக்கலாமென்று நம்பி வந்தனர். புதிதாக கிறிஸ்தமதம் தழுவிய கள்ளிலன் ஒருவனை நோக்கிப் பாதிரியார் பிரார்த்தனை செய்யுமாறு வற்புறுத்தினராம், "பரமண்டலத்திலுள்ள எங்கள் பரம

பிதாவே" என்று அவர் அடியெடுத்துக் கொடுக்கும்போது, கள்வில்லைன் நாவில் நீரூற, 'பன மண்டைக்குள்ளிருக்கும்' என்று சொல்லத்தொடங்கினனும். கடவுள் எங்கேயோ ஓர் பன மண்டைக்குமேலோ, மேகமண்டலத்துக்கு மேலோ, வான மண்டலத்திற்கப்பாலோ இருக்கின்றுரென்று கொள்வது மூட பக்தி. அவர் இல்லை என்று சாதிப்பதும் மூட பக்திதான். கடவுள் எங்கும் இருக்கின்றுர்; அணுவிலும் இருக்கின்றுர்; மலையிலும் வாழ்கின்றுர். பரம்பொருளில்லாத பொருளேயில்லை. நமது உள்ளமாகிய கோயிலில் என்றும் வளர்கின்றுர். இதுவே சமயங்களின் உண்மையான தெய்விகஞானமாகும். ஸயன்ஸ் காட்டும் உண்மைகளைக் காட்டிலும் கடவுள் எஙகும் உண்டென்ற உண்மை மிகமிகப் பெரிய உண்மையாகும்.

ஃ ஃ ஃ

கடவுள் அன்புமயமானவர். இறைவுயிர் ஒன்றே பலவேறு உலகங்களையும் உயிர்களையும் சகோதரமாக்குவது! அழகே இறைவனது ஒளியுரு. யாண்டும் கண்களாகி, யாண்டும் செவிகளாகி நிமிரும் எம் இறையை 'இல்லை' யென்று மறுக்கும் மூடமதியை என்னென்று கூறுவது?

ஃ ஃ ஃ

இவ்வுலகமாகிய சந்தையின் பேரிரைச்சல் களி கள்களுக் கிடையே கண்ணனது குழலிசை கேட்கப்படுவதில்லை. எத்தனை கவலைகள் மனித உள்ளத்தைப் பாழாக்குகின்றன. ஜ்வரவேகத்தோடு ஒடியோடிப் பொருளையும் போகத்தையும் தேடும் போலி மக்களுக்கு இறைவனை நினைப்பதற்குச் சாவகாசமேது? பித்தனைப்போல், குடியனைப்போல், வீணுக அங்குமிங்கும் அலைந்து திரிவதை நிறுத்தி, ஆத்திரமின்றி ஆலோசனை செய்து பார்த்தல் வேண்டும். சப்தமயமான உலகிலே மோனத்திற் சென்று ஒடுங்கப்பழகுதல் வேண்டும். ஒரு நாளில் சில நிமிஷ நேரமாவது மௌனம் வேண்டும் இடையிடையே உண்ணுவிருதமும் பேசா விருதமும் கொண்டு உண்மை வாழ்க்கை வாழ்வோர் இறையொளி காண்பர் என்பதில் ஐயமில்லை.

ஃ ஃ ஃ

நவ நாகரிக மின்சார வெளிச்சம் ஞானக்கண்ணை மழுக்கிவிடுகின்றது. மோட்டார் எமன், மண்ணெண்ணை எமன் முதலிய

புதிய நாகரிக எமன்கள் தோன்றி மனித வாழ்க்கையின் சாரத்தையும் அழகினையும் கொள்ளை கொள்ளுகின்றன. ஆடம்பர வாழ்விலும் விளம்பர வாழ்விலும் தாழ்ந்த உள்ளம் எளிதில் களைப்புறுகின்றன.

தனிமை கண்டதுண்டு—அதிலே
சாரமிருக்குதம்மா

என்னும் உண்மையினை நவநாகரிகம் உணர்ந்துகொள்ளத் தவறிவிட்டது.

ஃ ஃ ஃ

தியான வாயிலாக ஒருவனுகவோ பலரோடு கூடியோ ஆன்ம வுண்மைகளை உணர்ந்தொழுக முயலுதல் வேண்டும். ஆசைகளைப் பெருக்கிக்கொண்டே போவதால் ஆனந்தம் கிடைப்பதில்லை. ஆசைத்தீயில் விழுந்து சாகும் மனித விட்டில்கள் இந்நாளில் மலிந்துள்ளார். இதனாலன்றோ நவ நாகரிகம் ஒருவாறு அரக்கர் நாகரிகத்தை ஒத்துளது என்று கருத ஏது இருக்கின்றது. மௌனத்தாலும் தியானத்தாலும் இறையொளியில் மூழ்கியெழுந்து, அப்பால் வெளியுலகம் கண்டு பணியாற்ற விரைதல் வேண்டும்.

---

## நீண்டநாள் வாழ்க!

த. ராமகிருஷ்ணன்.

பன்னெடு நாட்களாக "ஆயுஷ்மாந் பவ" என்று பெரியோர்களால் வாழ்த்தப்பட்டு வருவதைப் பலரும அறிவர். பெரியார் வாய்மொழியால் அவ்வாழ்த்தினைப் பெறுவதால் மட்டும் ஆயுள் நீடிப்பதில்லை. இவ்வாழ்த்தின் பொருள் "நீண்ட ஆயுளை ஆக்கிக் கொள்க" வென்று கட்டளை யிடுவதை யொக்கும். செயலாலன்றி "ஆகுக" என்னும் சொல்மாத்திரையான் எவையும் ஆவதில்லை யென்பது கண்கூடாம். இவ்வாறு வாழ்த்தத் துவங்கிய நாள் தொட்டு நமது சமயநெறிகளில் "நீண்ட ஆயுள் படைத்தல்" மக்கள் முயற்சியால் ஆக்கப்படுவதென்பது துணிபாயிற்று. எச்செயலையும் முயன்று செய்யமாட்டாது, வாயினால் கூறுவதால் மட்டும் பயனடைய முடியாது. பெரியோர் அறிவுறுத்துவன

கேட்போர் தன்மைக் கேற்பவேயாகும். எனவே, நீண்ட ஆயுள் படைத்திடுக அல்லது ஆக்கிக் கொள்வதற்கு முயன்றிடுக வென்பது பண்டு தொட்டே வழங்கி வருவது. ஆயுளைப் பெருக்கு தலும் குறுக்குதலும் மக்கள் வயப்பட்டிருக்கின்றன வென்பது தெளிவாம். இதனை—

சதம் வர்ஷாணி ஜீவது
சாம மந்தரப்ரா, க—உ—க.
சதம் சரத ஆயுஷோ ஜீவஸ்வ
கௌசீதகி ப்ரா, ரு—உ—கக
சதம் ஜீவேம சரத: ஸர்வவீரா:
அதர்வமவேதம். ரு—கஉ—௬.

இத்தொடர்களின் கருத்து இம்மனிதவுலகில் நூறாண்டுகள் நிறைய உயிர்வாழ்த்தல் வேண்டுமெனபதாகும். உயர்ந்த தத்துவ ஞானிகளும் ஆசார்யர்களும் இத்தொடர்களால் நூறாண்டுகள் நிறைய வாழ்வதற்கு முயலுகவென்று இக்காலத்தவர்க்குப் புகட்டுதல் வேண்டும். அவரவர் ஆயுளை வளர்த்தலும் குறைத்தலும் அவரவர் செயலாலாகும். நெறிப்பட ஒழுகுவார் ஆயுட் பெருக்க மடைவர். ஒழுக்கங்குன்றினோர் வாழ்விற் குன்றுவர்.

ஆயுஷாயுஷ்க்ருதாம் ஜீவாஆயுஷ்மாங் ஜீவ மா ம்ருத்தா
ப்ராணேநாத்மங்வதாம் ஜீவ மா ம்ருத்யோருதகாத்வசம்.
அதர்வம். க௯—உஎ—அ.

(க) ஆயுள் நீட்டிப்பாரை யொப்ப வொழுகி ஆயுள் பெருக்கி வாழ்க (உ) நல்லாயுள் படைத்து வாழ்க்கை நடாத்துக (ரு) இறத்தலாகா, காலந்தவறி இறத்தலாகா (ச) உயிர்வளிச் சக்தியாலும் ஆன்ம சக்தியாலும் ஆயுள் பெருக்கி வாழ்க (ரு) அகாலத்தில் இறப்பின் வயப்பட்டுச் செல்லற்க.

சனாதன வைதிக சித்தாந்த நெறிப்படி இம்மந்திரம் "தன் முயற்சியால் ஆயுள் பெருக்குதல் கூடுமென்பதை" வலியுறுத்தல் காண்க. அன்றியும் இச்செய்யுளில் "ஆயுஷ்க்ருத்" என்னும் சொல்லால் ஆயுளை ஆக்குகின்றவன் அல்லது தன் முயற்சியால் ஆயுள் பெருக்கிக் கொண்ட சான்றோன் என்பது குறிக்கப்படு

கின்றது. அச்சான்றேன் ஒழுகும் நெறியே சென்று பிறரும் ஆயுள் வளர்த்திடுகவென்பது முதற்பகுதி. இரண்டாவது, ஆயுள் சிறக்கச் செய்து வாழ்க்கை நடாத்தல். எவ்வகையினும் வாழ்தல் விரும்பத்தக்கதன்று. வேண்டற்பாலது, உயர்வு படுத்தி ஆயுள் சிறக்க உயிர்வாழ்தல். மூன்றாவது, எவரும் காலந்தவறி வருகின்ற மாணத்தில் இறத்தலாகாது. தம்மாற் கூடிய அளவு தவறாது முயன்று உணவு உறக்கம் முதலியவற்றில் மிகுந்த கவனத்தோடு செல்லுதல் வேண்டும். அகால மாணத்திற்கு ஏதுவாகாமல் முன் கருதலோடு வாழ்க்கையை முறைப்படுத்திக் கொள்ளல் வேண்டும். நான்காவது, ஆன்ம ஆற்றலுடையார் ஆன்ம வலிமையால் வாழ்தல் போன்று ஆன்மசக்தியை வளர்த்து ஆயுள் நீட்டிக்க முயலுதல் வேண்டும். கடைசியாக, இவ்வகை நன்னெறிகளிலொழுகி நன் முயற்சியால் ஆயுள் பெருக்கி அகால மாணத்திற்கு இலக்காகாமல் வாழ்தல் இன்றியமையாததாகும்.

சநாதன வைதிக சித்தாந்த நெறிவுடையார் இஞ்ஞான்று இவ்வுண்மை புணாமாட்டாது, காலந்தவறி நிகழும் மாணத்திற்குத் தலைவிதி காரணமென்று புலம்பிடுவர். சுகாதார நெறியுணர்ந்து ஒழுகாது ஆயுளை நீட்டிக்கப் புரோகிதச சடங்குகள் பல புரிந்திடுவர். சடங்குகளால் பயன்படவில்லையாயின் தலைவிதியின்மேல் சாக்கிடுவர். இது நெறியின்மை. "மக்கள் தத்தம் முயற்சியால, ஒழுக்கத்தால் ஆயுளைப் பெருக்கலாகு" மென்பதே வைதிக சித்தாந்தம். சித்தர்களும் முனிவரும் இவ்வார்த்தைகளையே புகன்று வந்தனர். தங்கள் செய்கையால் ஆயுள் பெருக்கி வாழ்ந்தனர். அவர்கள் கண்கூடாகக் கண்டவற்றையே பகர்வர். அவற்றை நாமும் செய்து அநுபவத்திற் காணலாகும். நமது பழக்க வழக்கங்கள், உணவு, உறக்கம் முதலியன தக்கவாறு அமைத்து முறையே செயலில் கொணரின் ஆயுட்பெருக்கமுண்டாம். முயறசியால் முடிக்கப்படும் செயலுக்கும் தலைவிதிக்கும் யாது சம்பந்தம்? "மக்களிடையே முயற்சி குன்றிய காரணத்தான் தெய்வ வாதம் பெருகியது." சுகாதார நெறிமுறை யுணர்ந்தொழுகிய முனிவர் சித்தர்களின் வழித்தோன்றல்களாகிய நாம் இன்று வலிமைகுன்றி தெய்வத்தின் மேல் பழி போடுகின்றோம். பலங்குன்றியவரிடையே பலதெய்வ வாதமும் நம்பிக்கையும் பெருகியது. அம்மை வைசூரி

முதலிய வெப்பநோய்களுக்கு தெய்வத்தின் பெயரையே சூட்டி விட்டோம். அந்தோ! பரிதாபம். அறியாமையால் மிகும் இச் செயல்களுக்கு மிகுதியும் இரங்கவேண்டியதாயின்றது. நம்மவர் தாழ்விற்கும் நாட்டின் அடிமைத்தனத்திற்கும் இவ்வறியாமையே மூலகாரணமென்பதை எவரும் உள்ளத்தில் பதித்தல் வேண்டும். வீரங்குன்றி, ஆண்மை குன்றி, அறிவுகுன்றி, சுயமரியாதையின்றி எதற்கும் மந்திரம் சாத்திரம் புரோகிதம் கோடங்கி யென்று பல தெய்வங்களின் பெயர்களைச் சொல்லிக்கொண்டு பாசாங்கு செய் யும் மூடர்களின் வயப்பட்டுக் காசை யழித்து அந்தோ! நலிவுறு கின்றனர் பலர். பரிதாபம்! பரிதாபம்!!

வைதிக சித்தாந்தம் இவ்வடிமை வாழ்க்கையை, பேடிவாழ்க் கையை, பலதெய்வ வழிபாட்டை, புரோகித மதத்தை, மக்களில் சமவுரிமை யின்மையையா அறிவுறுத்துகின்றது? அன்று. அன்று. வீரவாழ்க்கையை, போகவாழ்க்கையை, தியாக வாழ்க்கையை, சமஉரிமையை, சுதந்தரத்தை, யாண்டும்பரந்து நிலவும் பேரறிவு பேராற்றல், பேரொளி யொன்றின் நேர்முகமான வழிபாட்டை யன்றோ உணர்த்துகின்றது. அந்நெறியே மக்கள் பயின்றாலொழிய பண்டைய உயர்தர வாழ்க்கையை அடைதலரிது. இன்ப வாழ்க் கையே ஆயுட் பெருக்கத்திற் கடிப்படையாகும்.

கஸ்யே ம்ருஜாநா அதியந்தி ரிப்ரமாயுர் ததாநா: ப்ரதரம் நவீய:
ஆப்யாயமாநா: ப்ரஜயா தநேநாதஹ் ஸ்யாம ஸுரபயோ க்ரஹேஷு

அதர்வம். கஅ—௩—கஎ

“ ஆன்ம ஆற்றலால் தூய்மை யடைந்து, புதுவதோர் நீண்ட ஆயுள்பெற்றுத் தத்தம் இடுக்கண்களைக் களைந்திடுக. மக்களையும் பொருளையும் பெருக்கித் தத்தம் இல்லங்களில் நன்மணங் கமழச் செய்திடுக.”

இந்த மந்திரத்தில் நாடோறும் புதிய ஆயுள் பெறுமாறு கற் பிக்கப் படுகின்றது. இதனை மிகைபட விளக்கவேண்டுவதில்லை நாடோறும் ஆயுள் பெருகத்தக்க நியதிகளில் செல்லுவோமாயின் தினமும் புதிய ஆயுள் பெறப்படும். கைதேர்ந்த வணிகனொருவன் நாடோறும் தொழில் புரிந்து தக்கமுறையில் பொருள் சேர்ப்பதை யொப்ப தினமும் ஆயுள் வடிவான பொருளைச் சேர்த்தல்வேண்டும்.

மேற்குறித்த செய்யுளில் நாடோறும் ஆயுளை நீட்டிப்பதற்கு நான்கு வழிகள் கூறப்படுகின்றன. (க) ஆன்ம ஆற்றலால் உள்ளம் உரை செயல் மூன்றையும தூய்மைப்படுத்தல். (உ) முன்னேற்ற வழிகளில் தோன்றும் இடைஞ்சல்களை அகற்றுதல். (ங) மக்களை யும் செல்வத்தையும் பெருக்குதல். (ச) வீட்டில் நன்மணங் கமழச் செய்து இன்புற்றிருத்தல்.

இந்நான்கு முறைகளாலும் மக்கள் ஆயுளும் உடல்நலமும் பெறுதும். உடல், உள்ளம், உரை மூன்றும் தூய்மைப் படுவதால் ஆயுள் வளரும். ஆன்மவலி மிகுதலாலேயே ஆயுட் பெருக்க மடைதல் இயல்பு. உடலளவில் குறைந்தவர்கள் கூட ஆன்ம சக்தியால் பலசாலிகளைவிட நீண்டநாள் வாழ்கின்றனர். தீயொ ழுக்கமுடையானிலும் நல்லொழுக்கமுடையான் நீண்டநாள் வாழ்கின்றான்.

முன்னேற்ற வழிகளில் இடையே தோன்றித் தடைப்படுத்து கின்ற இன்னல்களை அகற்றுதலால் உயர்வடைதலோடு, சாதாரண மாக நாட்டில் எல்லா மக்களுக்கும் ஒருள்ளக் கிளர்ச்சியையுப் தோற்றுவிக்கும். உள்ளக்கிளர்ச்சியாலும் ஆயுள் பெருகுகின்றது. சுதந்தர நாட்டில் மக்களனைவரும் உள்ளக்கிளர்ச்சியோடு வாழ் தலால் நிறைந்த அயுளுடையோர்களாக விருக்கின்றனரென்று சாதாரணமாகக் கூறப்படுதலுங் காண்க. பிறர் வயப்பட்டிருக்கும் நாடுகளில் வாழும் மக்கள் உள்ளக்கிளர்ச்சியின்றி இளமையில் தளர்வுற்று மூப்படைந்து எளிய நிலையில் அற்ப ஆயுளுடையா ராகப் பெருக்கமடைகின்றனர். அரசியல் அடிமைத்தனத்தாலும், சமூகக்கட்டுப்பாட்டின் அடிமைத்தனத்தாலும், தன்முகப்பட்ட அடிமைத்தனத்தாலும் மக்களின் ஆயுள்விருத்தி தடைப்படுதல் ஆராய்க. எனவே, சுதந்தர வாழ்க்கையால் உள்ளக்கிளர்ச்சியும், உள்ளக்கிளர்ச்சியால் ஆயுட்பெருக்கமு முண்டாமென்பதாயிற்று.

மக்கட்பேறும் செல்வப்பேறும் அடைதலும் ஆயுள் விருத் திக்கு ஒரு வழியாகும். சந்ததியும் சம்பத்தும் நிறைந்த வீட்டில் இன்பவாழ்வு பெறப்படுகின்றது. உடல், உரை, மனத்தூய்மை யால் இக்குடும்பத்தார்க்கு ஆன்மசக்தி மிகுகின்றது. தமக்கும், சமூகத்திலும், அரசியலிலும் அடிமைத்தனம் விலகுகின்றது.

சந்ததியும் செல்வமும் பெருகுகின்றது. இத்தகையார் நீண்ட ஆயுள் படைக்கின்றனர். இக்கருத்தினை, "யாண்டு பலவாக" என்னும் புறநானூற்று செய்யுளோடு ஒத்து நோக்குக.

இனி, தத்தம் இல்லங்களில் நன்மணங் கமழச் செய்தல். கெட்ட வாடைகளை மாற்றுதல். நன்மணங்கமழுமிடம் யாவரையும் வலிந்திழுக்கும். நன்மணப் பொருட்களை யணிதலால் மனம் மலர்ச்சி யடைகின்றது. பல்வகையிலும் சிறப்புடையாரிடத்துப் பலரும் சென்றடைவர். பலநலன்களையும் சிந்தித்தலால் உள்ளம் மகிழ்ச்சி யுறுகிறது. மனமகிழ்ச்சியால் ஆயுள் பெருக்கமுண்டாகின்றது. மேற்குறித்த நான்கு முறைகளையும் பிழைபாடின்றி, நெறியே யியற்றுவார்க்குத் தடையின்றி ஆயுள் பெருக்கமுண்டாம்.

(க) உள்ளம் உரை செயல்களில் தூய்மையின்றி ஆன்ம சக்திக்குறைவாலும் (உ) தீயவழிகளில் சென்று தடைப்பட்டு விருப்பங்குன்றுதலாலும் (ங) செல்வமும் மக்களும் அழிதலாலும் (ச) கூட்டங்களில் தீநாற்றம் பரவும்படி வாழ்வதாலும் ஆயுள் குறைவடைகின்றது. அரசியல் நோக்கால் காணின் பிறர்வயப் பட்ட நாட்டில் மேற்குறித்த நான்கு தீமைகளும் பரவியிருக்கும். சுதந்தர நாட்டில் இந்நான்கு நற்செயல்களும் பரவியிருக்கும். பண்டைத் தமிழ்வேந்தர் காலத்துத் தமிழ்நாட்டை உற்றுநோக்கு வார்க்கு நூறுண்டு வாழ்ந்த முதியோர் பலர் தென்படுவர். இஞ்ஞான்று அற்ப ஆயுள் வாய்ந்தவர்களே மலிந்திருக்கின்றனர்.

---

## * தன்மதிப்பும் தன்னம்பிக்கையும்.

சா. நா. சா. அருணசலச்செட்டியார்.

தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையுமன்றே. —அப்பர்.

"தன்மதிப்பு சமய உணர்வினுக்கு அடுத்தபடியாய் தீமை களிற் புகவிடாது காக்கும் அதிமுக்கியமான சாதனமாகும்."

—பேகன்.

* ஆரிசன்ஸ் வெட்மார்டனைத் தழுவியது.

"தன் மதிப்பு, ஒழுக்க மென்னுங் கட்டிடத்திற்குரிய அடிப்படையாகும்." —ஜான் ஹெர்ஷேல்.

"நமது பலவீனத்திற்கு முக்கியகாரணம் தன்னம்பிக்கையில்லாமையே. வலி யிருக்கிறதென உறுதியாக நம்பினால் வலியிருக்கிறது. தம்மிடத்தும் தமது சக்திகளிடத்தும் நம்பிக்கையில்லாத பலர் வலியராயிருந்தும் அவரே எல்லாரினும் மெலியராக இருக்கின்றார்." —போவி.

ஸ்காத்லந்தைச் சேர்ந்த ஓர் நெசவுகாரன் தன்னைப்பற்றித் தான் நல்லபிப்பிராயம் உடையவனாயிருக்க வேண்டுமெனப் பிரார்த்திப்பதுண்டு. நம்மைப்பற்றி நாம் நல்லபிப்பிராயங்கொண்டிருக்கிறோ மெனக் காட்டாதவரைப் பிறர் நம்மை அவ்வாறு நினைக்கவேண்டுமென எதிர்பார்க்க முடியுமா? "தன்னை மதிப்பிலாரைப் பிறர் மதியார்" என்பது சீனதேசத்துப் பழமொழி. தன்னைத்தான் மதிக்காது பிறர் தன்னை மதிக்குந் தகுதியுடையவன் உரிமை பாராட்டிக்கொள்ளும் ஒருவனை உலகம் வஞ்சகனென ஒதுக்கித்தள்ளும். பிறரை மதிப்பது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமே தன்னை மதிப்பதும்.

"சில காலம் எல்லாரையும் ஏமாற்றலாம். சிலரை எப்பொழுதும் ஏமாற்றலாம். ஆனால் எல்லாரையும் எப்பொழுதும் ஏமாற்றமுடியாது" என லின்கான் கூறினார். ஆயினும் நம்மை நாமே ஒருபோதும் ஏமாற்றிக்கொள்ள முடியாது. நாம் கௌரவத்தை விரும்பின் அதற்குத் தகுதியுடையவர்களாக வேண்டும்.

நாம் நம்மை எவ்வாறு மதிக்கின்றோமென்பதை உலகம் அறிந்துகொள்ள உரிமையுடைத்து. பெருமை சிறுமைகளின் அளவை நாமே நம்மீது முத்திரையிட்டுக்கொள்கின்றோம். அதன் மேல் பிறரிடமிருந்து எதிர்பார்க்க முடியாது. நாம் மக்களிடைப் பழகும்போது நம்மை எங்ஙனம் மதிக்கின்றோமென அவர்கள் நமது கண்களையும் முகத்தையும் ஊடுருவப் பார்க்கின்றார்கள். அவர்களை காட்டிலும் நம்மைப்பற்றி நாம் நன்கறிவோமாதலின் நாம் சிறுமை பெண்ணங்கொண்டிருப்பின் ஏன் அவ்வாறு கொண்டோமென ஆராய்ச்சி செய்யும் சிரமத்தை யவர்கள் மேற்கொள்ளப் போவதில்லை.

கானடாவுக்குச் செல்லும் முதல் நாள் ஜெனரல் வுல்ப் நிகழ்த்திய தற்புகழ்ச்சியுரைகளை வெறுப்புடன் கேட்டுக்கொண்டிருந்த பிட் "ஆண்டவனே! நாட்டின் விதியையும் ஆளுகையையும் நான் இத்தகைய பேர்வழிகளிடத்தில் ஒப்புவித்திருக்க வேண்டும்" என லார்ட் டெம்பிளினிடம் கேலிபண்ணினர். போர்வீரனாகிய அவ்விளைஞன் தனது வாளை யுருவி மேஜை மீதறைந்து அவ்வுறையினுட் சுழற்றித் தன்னாலாகும் செயற்கருஞ் செயல்களை யெடுத்துரைத்தான்.

இவ்வகங்காரம் பிடித்த இளைஞன் சுரத்தாற் பீடிக்கப்பட்டுப் பாயும் படுக்கையுமாய்க் கிடந்த பொழுது எழுந்து சேனைத் தலைவனைப் வெற்றிமாலை சூடுவானென முதன்மந்திரி கனவு கண்டதேயில்லை. செயற்கருஞ் செயல்களைச் செய்து முடிக்குந் திறமைக்கு அறிகுறியாக அத்தற்புகழ்ச்சி மிளிர்ந்தது.

"நன்கு பக்குவமடைந்த, நன்கு பழக்கப்பட்ட மூளையானது எப்பொழுதும் விலைபாவது நிச்சயம். ஆனல் அது வீட்டினுள் பதுங்கித் தேடப்பெறுகிற நிலையிலிருத்தல் தகாது. முன்னணிக்குவந்து வெற்றி பெறும் பலர் தம்மைப்பற்றிப் பெருமை பேசிக் கொள்கிறார். ஒன்றிலுங் கலவாது வாளாவுறையும் தகைகோர் பலர் அசட்டை செய்யப்படுகிறார். முன்னணியில் வரும் அவர் சுறுசுறுப்பும் தவறுமையும் செயல் திறனும் உடையவராக இருக்கின்றார். அவையில்லையெனின் தகுதி யென்பது ஓர் செயலற்ற பொருளேயன்றோ? "தூங்குகிற சிங்கத்தைக் காட்டினும் குரைக்கின்ற நாயானது பலவழிகளில் உபயோகமுள்ளதாகிறது" என வாஷிங்டன் அர்விங் கூறுகிறார்.

ஏல்கல்லூரியில் உடன்பயிலுமோர் மாணவன் படிப்பில் தனக்குள்ள அதிக விருப்பத்தைக் கேலிசெய்தபோது, ஜான் ஸி காலஹூன் "காங்கிரஸ் எனது வேலையைத் திறமையுடனும் மதிப்புடனும் செய்து முடிக்கத் தகுதியுடையவனுவதிலேயே எனது அதிக காலத்தைச செலவிடக் கட்டாயப்படுத்தப்படுகிறே"னென விடையிறுத்தார். அப்பேச்சு ஓர் நகையை யெழுப்பவே அவர் "நீங்கள் ஐயமுறுகிறீர்களா? அடுத்த மூன்றாண்டுகளுக்குள் தேசியத்தலைநகரை நான் ஓர் பிரதிநிதியாகச் சென்றடையுஞ் சக்தி

என்னிடத்திலிருக்கிறதென நான் உறுதியாக நம்பாவிடில் இன்றே கல்லூரியைவிட்டு விலகுவேன் என உங்கட்கு நிச்சயமாகக் கூறுகிறேன்'' என அவர் அறைந்தார்.

'அண்டமுதல் நாயகனதாவியனை யாளைக்கொண்ட கல்வதே கருமமென்றுணர்வுகொண்'டவனுகிய ஆண்டகையனுமனது வீர பராக்கிரம விரிவுரை

“கேட்டியடியேனுரை முனிர்தருளல் கேளார்
வீட்டியிடுமேலவனை வேறலவினையன்றல்
நீட்டியினி யென்பல விராமனெதிர் நின்னைக்
காட்டியடிசாழ் வெனிது காண்டியிதுகாலம்”

எனப் பணிவுடன் ஆரம்பமாகி

இலங்கையொடு மேருதிகொலென்னினு மிடத்தென்
வலக்கொளொருகைத் தலையில் வைத்தெதிர் தடுப்பான்
விலக்கினவைர நூறிவரி வெஞ்சிலையினோர்தம்
பொலன் கழல்கள் தாழ்குவென் இதன்னைபொருளன்றல்

* * * *

இருக்குமதி சூழ்கடியிலங்கையை யிமையனை
உருக்கியெரியா விகலகக் கவியுமொன்று
முருக்கிதி ருத்தகுல முடித்துவினை முற்றிப்
பொருக்கவசல் கென்னினு மதின்று புரிகின்றேன்

என வீறுகொண்டெழுந்து ஜ்வலிக்கின்றது. தன்னையறியாத சீதாபிராட்டியாரிடம் இவ்வளவு கூறிய அனுமன் கடல் தாவும் போதாவது சீதையைக் கண்டு திருமபிய போதாவது தனது வெற்றியைப்பற்றி ஒரு வார்த்தையாவது கூறவில்லை. இதனைக் கம்பர் பெருமான்,

ஆண்டகை தேவியுள்ளத் தருந்தவ மமையச் சொல்லிப்
பூண்டபே ரடையாளஞ் சைக்கொண் டதும்புகன் று போரில்
நீண்டவா ளரக்கரோடு நிகழ்ந்தது நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் றன்தன் வென்றியை யுரைப்பவெள்கி

என்றும் கவிபால் விளக்குகிறார். அனுமன் இவ்வாறு கூறியதும் “கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்ட'' என வானர வீரர்கள் தவறாக உணர்ந்தார்களெனினும் அன்றுதனது வலிமையை விளக்கிக் காலத்தை வீணாக்குவது அனுவசியமென்று கருதிய அனுமன்

'யாவையு மினிவேறெண்ணல் வேண்டுவ திறையுமில்லை
சேவகன் தேவிதன்னைக் கண்டமை விரைவிற்செப்பி
ஆவத்தவ்வண்ணலுள்ளத் தருந்துயராற்றலேயாம்
போவது புலமையென்னுப் பொருக்கென வெழுந்துபோனர்.'

தனது பெருமையைக் கூறிக்கொள்ள அவசிய மேற்பட்ட போது கூறவேண்டியதே. அநாவசியமாக வீணே தனது பெருமையைப் பெரியார் பேசார்.

இராமனைக் காண வந்தபொழுது "நாவாய வேட்டுவன் நாயடியேன்" என அறிமுகப் படுத்திக்கொண்ட குகனது பயங்கரமான பணிவு பரதனது சேனை வெள்ளத்தைக் கண்ணுற்றதும் "எலியெலா மிப்படை அரவம்யா னெனை ஒலிபுலஞ் சேனையையு வந்து" கூவுகையில் ஒரு சிறிதும் காணப்படவில்லை.

"கிராட்டன் தன்னைப்பற்றி யென்ன சொல்கிறார்" என்று கேட்ட எர்ஸ்கின் பிரபுவுக்கு "கிராட்டன் தன்னைப்பற்றி யொன்றும் கூறிக்கொள்ளவில்லை. ஏன்? அவர் பெரியார். சித்திர வதை செய்யினும தம்மைப் புகழ்ந்து ஓர் வார்த்தையாவது அவரிடமிருந்து பெறமுடியாது. ஆறு குதிரைகள் ஒன்று சேர்நத ஒரு கூட்டமும் அவரிடமிருந்து தம்மைப்பற்றியவோர் அபிப்பிராயத்தை இழுக்கமுடியாது. வேறு பெரியார்களைப்போலவே அவர் தமது புகழின் வலிமையை நன்கறிவார். பொம்மலாட்டின் முரசறைவோன் போன்று அவர் அதனது விசையைப் பறைசாற்ற முனவரமாட்டார். தேசீயப் பலி பீடத்தின் மீது அவர் நிற்கிறார். தீயையும் மணத்தையும் வளர்ப்பது பணியாளரான நமது வேலையே. அவைகளில் ஏதாவதொன்றை கிராட்டன் செய்யவேமாட்டார்" என கர்வின் பதிலிறுத்தார்.

விரும்பத்தகாத தற்புகழ்ச்சி யென்று பிறரிடத்தில் நாம் எதை நினைக்கிறோமோ அதுவே பெரும்பாலாகச் செயற்கருஞ் செயல்களைச் செய்து முடிக்கவல்ல திறமையிற்றும் கொண்டுள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துவதா யிருக்கிறது. பெரியார் தம்மிடத்துப் பெருநம்பிக்கையே கொள்கிறார். வெட்ஸ்வோர்த் தான் உலக சரித்திரத்தில் பெறப்போகும் உயரிய நிலையைப் பெரிதும் நம்பினர். அதை வெளியிற் சொல்லத் தயங்கினருமில்லை. டேன்ட் தனது புகழை முன்னரே அறிந்துரைத்தார். புயல்க்

கண்டு பயந்த தனது மாலுமியினிடம் "பயப்படாதே. நீ, சீசரையும் அவரது உயர்ந்த அதிருஷ்டங்களையும் தாங்கிச் செல்லுகிறாய்" என ஜூலியஸ் சீசர் கூறினர்.

பெரிய மனிதர்களிடையே அதிகமாகக் காணப்படும் தற்புகழ்ச்சி அவசியமாகலாம்: தான் ஒருவனுக்கென அமைத்திருக்கும் உயர்நிலையை அவன் அடையத் தவறிவிடுகிறானே என்ற பயத்தால் இயற்கை யன்னை அவனுக்குப் பெருநம்பிக்கையை யளிக்கிறாள். இலட்சியத்தை நோக்கிச் செல்லும் வழியில் அவன் தவறிவிடாதபடி சில சமயம் விரும்பத்தகாத நிலைகாறும் தற்புகழ்ச்சியை யவள் அதிகப்படுத்துகிறாள். மனந் தளர்வுற்ற காலை தற்புகழ்ச்சியும் அவசியமாகவே காண்கின்றது. தன்னம்பிக்கை நம்மின் நிலைபெற்ற சக்தியைக் குறிப்பதாகும்.

ஒழுக்கமுறையிற் பார்க்கும்போது தம்மை நம்புகிறவர்களையே நாம் நம்புவது நல்லது. ஒருவன் தனது ஒழுக்கத்தைக் குறித்தே ஐயமுறும்போது பிறரின் ஐயத்தையும் தூண்டுகிறான். ஒழுக்கக்கேடு எப்பொழுதும் நம்மிடமிருந்தே ஆரம்பமாகிறது.

தொழில் மிகுந்த இந்நாளில் மூலை முடுக்குகளிற் பதுங்கிக் கிடக்கும் தக்கோரைத் தேட நேரமில்லை. ஒருவன் தகுதியற்றவனென்று காட்டிக்கொள்ளும்வரை உலகம் அவனைத் தான் மதிக்கிற அளவிலேயே மதிக்கிறது. உலகம் தைரியத்தையும் ஆண்மையையுமே போற்றுகிறது. உலகத்திலுறைதலாகிய மன்னிக்க முடியாத பாவத்திற்கு சதா மன்னிப்புக் கேட்டுக்கொண்டு திரிபவனைப்போல் செல்கின்ற இளைஞர்களை அது இகழ்ந்தொதுக்குகிறது.

"தனது நிலையை ஒருவன் நன்கறிந்திருப்பானாகில் அவன் எவ்வாறு ஆகவேண்டுமென்பதையும் சீக்கிரம் அறிந்துகொள்வான். மனத்திலும் பேச்சிலும் ஒருவன் தன்னை மதிப்பானாகில் செய்கையில தன்னை மதிக்க சீக்கிரம் ஆரம்பித்து விடுவான்." என ஷெல்லிங் கூறுகிறார். தனது வலிமையை நம்பும் ஒருவன் நிச்சயம் அதை யுடையவனாகிறான். "பணிவு வித்தகத்தின் ஓர் பாகமாகும். அது மக்கட்கு அவசியம் வேண்டுவதே. ஆனால் யாரும் தற்சார்பை கைவிடப்படாது. அதுதான எல்லாவற்றைக்காட்டிலும் உண்மையான ஆண்மையின சிறந்தகுணமாகும்." என கோதே கூறுவதைக் கவனியுங்கள். "பூவலர்ந்து பழங்கனியுமுன் மரமானது நிலத்தில் நன்கு வேரூன்ற வேண்டும். தனதுகாலிலேயே தான் நிமிர்ந்துநிற்க மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும். அப்பொழுதே அவன் தன்னம்பிக்கை யுடையவனாய் கொடையையும் சந்தர்ப்பத்தையும் பிறவற்றையும் எதிர்பாராதவனா யிருப்

பான். இந்த அடிப்படையிலேயே அடையத்தகுந்த அறிவுப் பயிற்சி யென்னும் மேன்மாடம் நன்கமைக்கப்பட வேண்டும்'' என புரூடு எழுதினர். இதைக் கம்பர் பெருமான் அநுமன் மூலமாக நன்கு விளக்குகிறார்.

"இலங்கை யினளவிற் றன்றால் இவ்வுரு வெடுத்த தோற்றம்
விலங்கவு முளதன்றென்று விண்ணவர் வியந்துநோக்க
அலங்கல்தாழ் மார்பம் முன்றாழ்ந்து அடித்துணை அழுந்தலோடும்
பொலன் கெழுமலையுந்தாளும் பூதலம்புக்கமாதோ''

வானளாவி வளர்ந்து விண்ணவர் நாட்டையுங் கண்ட வீரனாகிய அநுமனது தன்னம்பிக்கை அளவுகடந்ததோ என நண்பர் எச்சரிக்கவும் இவ்வுரு வெடுத்த தோற்றம் இலங்கை யினளவிற் றன்று விலங்கவுமுளது என விண்ணவர் வியந்து நோக்கவும் பெரியார் ஆசீர்வாதங் கூறவும் நின்ற அனுமன் தனது பேராண்மைக்கிசைந்த பேருரு வெடுத்துவானையுங் கடந்து வளர்ந்தானெனினும் தனது அடிகளை நிலத்திலேயே நன்கு பதித்துநின்றானென்பதைக் கவி வெகு அழகுபடக் கூறுகின்றார்.

கீழ்மையினின்றும் உயர்த்தும் தன் மதிப்பையும் தற்சார்பையும் ஒவ்வொரு இளைஞனுங் கொண்டிருத்தல் வேண்டும். தற்சார்பு குண அழகின் சிறந்த அங்கமாகும். அது பல தனி முடிகளையும் வென்றிமாலைகளையும் பெறவல்லது. உலக சரித்திரத்தில் தமது தெய்வ உரிமை நிலைபெற வேண்டுமென நிரூபித்த பெரியார் பலருடன் தொடர்புடையவராக்குவது அதுவே. வேறொன்றாலும் அளிக்கமுடியாத சக்தியைத் தன்னம்பிக்கையும் தன் மதிப்பும் நமக்கு அளிக்கிறது.

பலவீனமுள்ள, சாயுந் தன்மைவாய்ந்த, அடிமைப் புத்தியுடைய, ஒருறுதி யில்லாது ஆடிக்கொண்டிருக்கிறவர்கள் "தற்சார்புடையோ ரிடத்திற் ஜ்வலிக்கும் கருணை வெள்ளம் பொருந்திய இறுமாப்புத்தியை யறியார்; எப்பொழுதும் அறியவும் முடியாது.

அரசைத்தான் அடையவில்லை யென்பதல்ல. அரசையடையுஞ் சக்தி தன்னுடையது என்பதே அவனது மகிழ்ச்சி. எல்லாவற்றிற்கும் மேலாக நீ உனக்கு உண்மையாக இரு. பகலுக்குப்பின் இரவு வருவதுபோல அது பலனைத்தானே கொணர்ந்து தருதல் ஒருதலை. அப்பொழுது நீ யாருக்கும் பொய்யனாக இருக்க முடியாது.''

ஷேக்ஸ்பீயர்.

---

# சதங்கையொலி.

## சக்திக்கு ஞானம் வேண்டாமா?

சக்தியின் வடிவம் பெண் என்று கூறுவது இந்நாட்டுமரபு. தக்க கல்விப்பயிற்சியின்மையால் 'சக்தி' யின் சக்தி எவ்வளவுதூரம் வீணாகின்ற தென்பதை நம்மவர் நன்கு யோசித்தல் வேண்டும். நமது மாதர்கள் ஐரோப்பிய மாதர்களைப்போல மாறிவிட வேண்டுமென்று நாம் விரும்பவில்லை. எனினும் ஐரோப்பிய நங்கையரின் வீரசுதந்திர விருப்பமும் அறிவுப்பயிற்சியும் பிற வசதிகளும் நமது பெண்மணிகளுக்கும் வேண்டுமன்றோ?

பெண்மைக்கு ஞானத்தை வைத்தான்—உயிர்
பேணி வளர்த்திடும் ஈசன்
மண்ணுக்குள்ளே சிலமூடர்—நல்ல
மாதரறிவைக்கெடுத்தார்.

இச்செயலால் நமது சமூகத்திற்கு விளைந்தபயன் என்னை?

கண்களிரண்டினிலொன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திடலாமோ?

இத்தகைய விபரீதம் தான், பேதமை என்னும் அணிகலத்தினை மாதர்க்குப் பூட்டியதன் பெரும்பயனாகும். பெண்கல்வி விஷயத்தில் பெண் மக்கள் நம்மோடு ஒத்துழைப்பரென்று நாடிருக்கும் நிலையில் எதிர்பார்ப்பது இயலாதகாரியமேயாகும். எனவே சக்திவடிவமான பெண்மைக்கு ஞானத்தை அளிக்கமுற்படுவது ஆண்மக்களின் அதிமுக்கியமான கடமைகளில் ஒன்றேயாகும்.

## வடஇந்தியாவும் தென்னிந்தியாவும்.

பெண்கல்வி விஷயத்தில் வடஇந்தியாவைப் பார்க்கிலும் தென்னிந்தியா இழிவான நிலையிலிருக்கின்றது. பரோடா மகாராணியைப் போன்ற மாதரசி தென்னிந்தியாவிலில்லை. ஆமதாபாத் சாரளாதேவியாரைப் போன்ற பெண்மணியினையும் தென்னிந்தியாவில் காண்பதரிது. கல்கத்தாவில் உள்ள நமது விஞ்ஞான சாஸ்திரியாரான ஜகதீசசந்திர வசுவின் தேவியார் இந்தியாவில் புதுமைப்பெண் இயக்கத்தைத் தோற்ற வல்ல பெருஞ்சக்தி வாய்ந்தவராவர். இவரைப்போன்றபெண்ணரசி தென்னிந்தியாவில் தோன்றுகிறதற்கு இன்னம் ஒரு நூற்றாண்டு செல்லவேண்டுமென்று தோன்றுகிறது. கிழக்கிலும் மேற்கிலும் உள்ள அறிவுக்கலைகளை நன்குணர்ந்த போஸ் தேவியார் உலகமெங்கணும் பிரயாணம் செய்துள்ளார். நாற்றிசை நாடுகளும் சென்று பல பெண்ணரசிகளோடும் சம்பாஷணை செய்துள்ளார். இவர் இந்திய மாதர்களின் பெருநலம் கருதி உழைக்க முற்படுவரென்பது வடஇந்தியாவைப்போல் தென்னிந்தியாவும் இவரைப்பின்பற்றி ஒழுகுமென்பதும் நமது நம்பிக்கை.

உ

சிவமயம்.

# "குமரன்"

KVC0009

எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௩ } காரைக்குடி அட்சயஸூ பங்குனிமீ { மணி ௬

## இளமை யெங்கே?

குழந்தை, இளமை, முதுமை யென்ற மூன்று பருவங்கள் பொதுவாக மக்களது வாழ்வில் காணப்படுவன. குழந்தைப் பருவத்திலிருந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்தேறி மக்கள் இளமைப் பருவத்தை யடைகின்றனர். இளமைப் பருவத்திலேயே செயற்கருஞ் செயல்கள் செய்யப் பெறுதல்கூடும். மக்களது யாக்கையின் பயனை பெறுதற்குரிய பருவம் அதுவேயன்றோ? இயற்கை யின்பங்கள் பலவற்றையும் ஆண்டு அநுபவித்துத் துய்த்தற்கிடனாகநிற்பது கட்டிளங் காளைப் பருவமேயாகும். யாக்கை பெற்ற ஒவ்வொரு பிராணியும் இன்பந் துய்த்து, வீரவாழ்வு, வெற்றி வாழ்வினை யடைவது இளமை முடிசூடி நிற்கும் வாழ்க்கையின் நடுப்பருவத்தில்தான் என்பதை எவரு முணர்வர். மக்கள் அகக் கண்ணும், புறக்கண்ணும் திறக்கப் பெற்று வாழும் வாழ்க்கையானது சுமார் இருபத்தைந்தாண்டு கட்குப் பிறகே கைகூடப்பெறுவதியல்பு. இதற்கு முன்னே செல்லும் நாள் குழந்தைப் பருவத்தைச் சார்ந்து, இளமை நோக்கி வளர்ந்து வருகிறது. இந்த இருபத்தைந்து ஆண்டுகளிலும் மக்களது உடலும், உளமும் பண்படுத்தப் பெற்றுப் பிற்கால வாழ்விற்கு இடப்படும் வித்தானது இடையூறின்றி வளர்வதற்கு வேண்டிய உரத்துடன் பாதுகாத்துவரப் பெறல் வேண்டும். இம் மாதிரியாக உடலையும், உளத்தையும் ஊக்கத்துடன் வளர்க்கும் பொறுப்பு, தாய் தந்தையருக்கும், குருகுல ஆசிரியருக்கும் முற்

காலத்தே யளிக்கப் பெற்றிருந்தது. நெறியோடு குருகுலத்தி லிருந்து பயிற்சிபெறும் மாணவர்கள் உடலூரமும், உளவலியுங் கொண்டு நூற்றாண்டிற்கு மேலுமிருந்து நல்வாழ்வு வாழ்ந்தனர். அவர்கள் இளமைப் பருவத்தின் சிகரத்திலிருந்து இன்பநறுங் கனிகளையுண்டு மகிழ்ச்சி யடைந்தது ஆச்சரியமன்று.

குருகுல முறையானது கட்டோடு அழிவுபெற்ற இக்காலத் தில் மக்களது வாழ்க்கையின் கால அளவு நூற்றாண்டினை யெட்டிப் பார்ப்பதுமில்லை. பெரும்பாலான மக்கள் குழந்தைப்பருவத்தி லிருந்து கிழட்டுப் பருவத்தைப் பெறுகின்றனன்றி யிளமையின் பெற்றியை அறிவதில்லை. குழந்தைப் பருவத்திலேயே இவர்கள் செய்யும் அநியாயத்தைக்கண்டு இயற்கை தேவி யிளமைப்பரு வத்தை நல்க மறுக்கின்றாள். குழந்தைப் பருவத்தில் சரியான உழைப்பின்றி விவாகமும் செய்யப் பெறுவதாலேயே குழந்தைகள் இளமைப் பருவத்தை யடையாதொழிகின்றனர். இந்திரியக் கட்டும் தேக முயற்சியுமே உடலுக்கு உறுதியைத் தருகின்றன; உடலுக்கு வலியை யளிக்கின்றன. குழந்தைப் பருவத்தில் கையுங் காலும் சுதந்திரமாக விடப்பெற்று ஓடியாடி விளையாடவேண்டுவது இன்றியமையாததாகும். விளையாடுவது கௌரவக்குறைவென்ற உணர்ச்சி என்று மக்களிடையில் தோன்றுகிறதோ, அன்றே குழந்தைகளின் உடல் சூம்புகின்றது. உடல் பலமுடைய ஒவ் வொருவரும் பிறந்ததுமுதல் இன்றளவும் தேக முயற்சி செய்பவ ராகவே யிருப்பதைக் காணலாம். விளையாட்டாயினும் ஆக; வேலையாயினும் ஆக. எப்படியாவது உடலுக்கு உழைப்பிருக்கு மாயின், வலிபடைவது திண்ணம்,

தற்கால மக்கள் கைக்குழந்தைகளிடத்தும் கலியாணப்பேச் சுப் பேசுதல் சகிக்கும் தரத்ததன்று. சிறு குழந்தைகளிடத்து கலியாணத்தையும், பிள்ளைப் பேற்றையும் பற்றிப் பேசும் பேச்சு உயிரோடுகூடிய உடலை யிற்று வீழச்செய்கிறதென்ற உண்மை பலருக்குத் தெரியவில்லை. இருபத்தைந்து, முப்பதாண்டுகட்குப் பின்னர் பேச வேண்டிய விஷயங்கள் பச்சிளம் பருவத்திலுள்ள குழந்தைகள் பால் கூறப்பெறுகின்றன. இதனால் குழந்தைகளுள் ளம் பேதப்பட்டு, கலியாணம், பிள்ளைப்பேறு என்ற உணர்ச்சிகள்

வலிபெறாத உளத்தைப் பற்றி வளர்ச்சியை நசுக்குகின்றன. இந்த எண்ணங்கள் உளத்திற் பாயுமானால் கல்வி முதலிய நறுங்குணங் கள் பற்றுவதரிது. கலியாண எண்ணமும் பிள்ளைப்பேற்றின் எண்ணமும் மனத்தில் ஊற ஊற பருவகாலம் மிக நெருங்கு கின்றது. குழந்தை மணமே மிகுந்து வருகின்றது. பழத்திலே பிழியவேண்டிய சாறு, பூவிலும் பிஞ்சிலும் பிழியப்படுகின்றன. குழந்தைகளுக்குக் குழந்தைகள் விரும்பப்படுகின்றன.

இம்மாதிரியாகக் குழந்தையுங், குழந்தையுங் கூடிக் குலாவுமு இளமை யின்பம் முற்றி முதிர முடிகிறதில்லை. இரண்டு குழந்தை களின் உடலையும் அது பாழாக்குகின்றது. இந்நிலையில் காணப் படும் கற்பக்குறிகள் சிதைவுறுவது அதிசயமல்ல. குழந்தைகள் பிறக்கினும், உடனே மறிக்கின்றன. எஞ்சி யுயிர்பிழைப்பனவும், தீராத நோய் வாய்ப்பட்டு பெற்றோரையும், உற்றோரையுந் துன்பத் திற்குள்ளாக்குகின்றன. குழந்தை வயதில் குழந்தைகளை விரும்பி நிற்கும் பெண் குழந்தைகளின் உடல், வளர்ச்சியின்றி வரட்சியுற்று நிற்பதைக் காணலாம். தலைக் குழந்தையிலேயே விண்ணுலகெய்து வதும், எஞ்சி யுயிர் பிழைத்தால் நோய் அரசனால் ஆளப்பெறு வதும் கண்கூடு.

மனைவி யின்பத்தின் பெற்றியை உள்ளவாறுணர முடியாத சிறுவர்கள் நேரிய படிப்பும் வளர்ப்பும் இன்மை காரணமாக எழுகின்ற தீய எண்ணங்களால் நெறிகடந்து மாதரின்பம் துய்க்க விரும்புகின்றனர். இளமையின் வலிமையடையாத சிறுவர்கள் நெறிகடந்து பல பெண்களை விழைவதால் தீராத நோய்களைப் பெற்று, உடலின் வளங்குன்றி யிடர்ப்பட்டழிகின்றனர். இவர் களுக்கு விவாகம் செய்விக்கப்பெற்ற பெண்களும் கொடு நோய்க ளுக்கு ஆளாகி மாண்டுவருவதையுங் காண்கிறோம். இவர்களுக் குக் குழந்தையெனச் சில நோய்ப் பிண்டங்கள் பிறக்கின்றன. இக்குழந்தைகளால் உலகிற்கு ஏதேனும் நன்மையுண்டா ? இவை தாம் புத்தெனும் நரகத்தைப் போக்குவனபோலும்! பாவம்!!

இரும்பினையொத்த தசையும், எஃகினையொத்த நரம்பும் பெற்று இன்பவாழ்வு வாழவேண்டிய வாலிபவயத்தை யிழந்து குழந்தையிலிருந்து கிழவரான பேதையரின் நிலை வருந்தத்தக்க

தன்றோ? இளமையின் தோற்றமாகிய இருபத்தைத்தாண்டி லேயே முதுமையின் தோற்றம் கைவரப்பெறுகின்றனர். எனவே இவர்களது இளமைப்பருவம் யாண்டுசென்று ஒளித்தது. குழந்தையிலேயே இளமையின்பம் பெறுமாறு தூண்டப்பெற்ற இவர்கள், உண்மையான இளமைப் பருவத்தையே இழந்துவிட்டனர். குருவியின் தலையில் பனங்காயைக் கட்டியதுபோல் பச்சிளங் குழந்தைகட்கு மணஞ்செய்து கொல்லுகின்றனர். பல்லாயிரம் இளைஞர் இளமைப் பருவங் கைகூடாது குழந்தைப் பருவத்தினின்றும் கிழப்பருவத்தில் வீழ்ந்து பரிதவிக்கின்றனர். குழநதைப பருவத்தில் எப்படி இளமையின்பம் கிடைக்கவில்லையோ, அப்படியே அவர்களது இளங்கிழமைப்பருவத்திலும் அவ்வின்பங்கிட்டுவதில்லை. பல விதமான தாதுவிருத்தி லேகியங்களையும், மேனாட்டு 'டானிக்'குகளையும் நாடி நிற்கின்றனர். வைத்தியர்களை நோக்கி குறையிரந்து வாய்பிளந்து நிற்கும் தன்மை பரிதவிக்கத்தக்கதாகும். உடலிலிருந்தே நாள்தோறும வளர்ந்து வரவேண்டிய இளமைப்பருவம் விலை கொடுத்து வாங்கும் தகையதாமோ? நூறாண்டு இருக்கவேண்டிய மக்கள் முப்பது நாற்பதாண்டிலும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தேற வேண்டிய குழந்தைகள் தாயின் உதிரத்திலும், பிரசவஅறையிலும் இறந்தொழிவதும குழந்தை மணத்தாலேயே யென்பதை யொவ்வொருவரும் உணர்தல்வேண்டும். இனியுள்ள தாய்தந்தையராவது தங்கள் குழந்தைகளும் குழந்தைப் பருவத்திலிருந்து இளமைப் பருவத்தையடைந்த பின்னர் மணவினைபுரிவார்களாக! நல்ல உழைப்பிலும், விளையாட்டிலும் பிள்ளைகளைப் பயிற்றுவாராக!

முரு.

---

## முரசு.

(பி. ஸ்ரீ.)

இத்தலைப் பெயரோடு பாரதியார் சில பாக்கள் எழுதியுள்ளார். இவை வெண்சொல்லும் புதை பொருளும் உடையன.

வெற்றி யெட்டுத் திக்குமெட்டக்
கொட்டு முரசே
வேத மென்றும் வாழ்க என்று
கொட்டு முரசே
நெற்றி யொற்றைக் கண்ணனோடே
நிர்த்தனஞ் செய்தாள்
நித்த சக்தி வாழ்க வென்று
கொட்டு முரசே.

இவ்வாறு 'முரசு' ஒலி செய்யத் தொடங்குகின்றது. பாரதியாரின் பாட்டிசையினூடே முரசின் ஒலி வாசகர் செவியிலும் உள்ளத்திலும் முழங்குகின்றது. பாரதியாரையே நமது தமிழகத்தின் வீரமுரசென்று கூறுவது மிகையாகாது. தமிழகத்தின் புதுவாழ்விற்குரிய சில மர்மங்களை யிவ் 'வீரமுரசு' எடுத்துக் காட்டுகின்றதெனினும் இதன் உயிரொலி வீரமே யாகுமென்பது பாரதியார் பாடல்களைப் பன்முறையும் ஓதியுள்ள வாசகர்க்கு நன்கு புலனாகும். வீரம் வேண்டும்; வெற்றி வேண்டும்; சக்தி வேண்டும் என்று பாரதியார் முரசு இடைவிடாது ஒலிக்கின்றது.

இந்தியாவின் வெற்றி எட்டுத்திக்கும் எட்டவேண்டுமென்று கொட்டுமாறு பாரதியார் தமது முரசினுக்கு ஆணை தருகின்றார். வீர சுதந்திரத்திற்கு வீரசக்தி இன்றியமையாததன்றோ? பண்டையர் தம் நிதிக்குவையான வேதத்தை — ஞானநூல்களை வாழ்த்தி, 'முரசு' முழங்கத் தொடங்குகின்றது. சிவபெருமானோடு கைகோத்து நர்த்தனம் செய்யும் நித்த சக்தியினை வாழ்த்தி பாரதியார் தம் வீரமங்கல முரசு தமிழ் மக்களுக்கு உண்மையும் உறுதியும் கூறத் தொடங்குகின்றது.

ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக்
குண்மை தெரிந்தது சொல்வேன்
சீருக்கெல்லா முதலாகும்—ஒரு
தெய்வம் துணைசெய்ய வேண்டும்.

மங்கள சோதியான தெய்வ ஒளியினைத் துணையாக நம்பி நாம் உண்மை நெறியில் செல்லுதல் வேண்டும். சமயங்களின் தெய்விக உண்மையினை உணர்ந்து ஒழுகுவதுதான் நமது கடன். தெய்வம் பல சொல்லிப் பகைத்தீயை வளர்ப்பது மூடத்தனமே

யாரும். அனைத்திலும் ஒன்றாய் எங்கணும் ஓர் பொருளாய் விளங்கும் பரம்பொருளே பரமான்மாவாகும். தீயினைக்கும்பிடு வோரும், திக்கை வணங்குவோரும், சிலுவையை வாழ்த்துவோ ரும் ஒரே பரம்பொருளைப் பணிந்திடும் மக்களேயாவர். பொருள் யாவினும் நிற்பது பரம்பொருள் என்னும் உண்மை கண்டவர்கள் பாரினுள் தெய்வம் பலவென்று சண்டை செய்வதில்லை. இத்த கைய சமரச ஞானத்தை 'முரசு' நன்கு முழக்குகின்றது.

மாத்தை நட்டவன் நீர் வார்த்து அதை ஓங்கிடச் செய்வா னன்றோ? இத்தகைய சிரத்தை தெய்வத்திற்கும உண்டு. இவ்வுல கங்களை யெல்லாம்—உயிர்களை யெல்லாம் படர்வித்த பரம்பொருள் மூச்சற்றுக் கிடக்கவில்லை.

வலிமை புடையது தெய்வம்—நம்மை
வாழ்த்திடச் செய்வது தெய்வம்

இத்தகைய தெய்வத்தின் சந்நிதியே உலகம். இச் சந்நிதியில் சமயபேதமில்லை; சாதி பேதமில்லை.

ஒன்றென்று கொட்டு முரசே—இந்த
நீணிலம் வாழ்பவரெல்லாம்
நகரென்று கொட்டு முரசே—பொய்மைச்
சாதி வகுப்பினை யெல்லாம்

ஈசுவா குடும்பத்தவரான மக்களனைவரும் சமானர்; சகோதரர். எங்கணும் பரந்து செல்லும் இறை உயிரென்னும் பந்தத்தினுல் உயிர்க்குலம் பிரிந்து செல்ல முடியாதபடி நன்கு இணைக்கப்பட் டுள்ளது. குணங்களாலும் செயல்களாலும் பேத மேற்படுவது இயல்பே. ஆனால் பிறப்பால் பிரிவு கற்பிப்பது பேதைமையே யாகும்.

சிறப்பும் சீலமும் அல்லது, பிறப்பு
நலம் தருமோ பேதையீரே ?

என்ற கபிலர் அகவல் இவ் உண்மையினை இனிது விளக்குகின் றது. எச் சமூகத்திலும் அறிவாளிகள் வேண்டும். அறிஞர் களுக்கு விசேஷ கௌரவம் அளிக்கப்படுவதும் இயல்பே. நீதி நியமங்களைப் பரிபாலிக்கும் க்ஷத்திரியரும் சமூகத்திற்கு அவசிய மாவரன்றோ? நாட்டின் பொருளாதாரநிலையை வளர்க்கும் வணி

கரும் சமூக நலத்திற்கு இன்றியமையாதவரே ஆவர். ஆனால் இப்பிரிவுகள் குணஞ்செயல் குறித்து அமைய வேண்டுமென்று பாரதி கூறுகின்றார். சூத்திரரென்றும் பஞ்சமரென்றும் சில வகுப்பினரை இகழ்ந்து ஒதுக்கி ஒடுக்கிவைப்பது சமூகத்தற் கொலையேயாகும்.

வேதமறிந்தவன் பார்ப்பான்—பல
வித்தை தெரிந்தவன் பார்ப்பான்
நீதி நிலைதவறாமல்—தண்ட
நேமங்கள் செய்பவன் நாய்க்கன்.

பண்டங்கள் விற்பவன் செட்டி—பிறர்
பட்டினி தீர்ப்பவன் செட்டி
தொண்டரென்றோர் வகுப்பில்லை—தொழில்
சோம்பலைப் போலிழிவில்லை.

இதுதான் பாரதியாரது புதிய வர்ணாசிரமதருமம். நாற்பாற்குலமும் உண்மையில் ஒருகுலமேயாகும். பாரதியார்கூறும் "வருண தருமம்" ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு சமூகத்திலும் காணப் படுவதாகும். ஹர்பர்ட் ஸ்பென்சர், அக்ஸ்லீ, டார்வின், ஹெக்கல், லாட்ஜ் ஆதியோர் மேலைநாட்டு அந்தணர். நெப்போலியன், கிச்சனர் ஆதியோர் க்ஷத்திரியர். ராக்பெல்லர், போர்ட் முதலிய பெருஞ்செல்வத் திருவாளர்கள் மேலைநாட்டு வணிகரும் வண்மை யாளருமாவர். தாசர், தொண்டர் என்ற தனிவகுப்பில்லை. பணி செய்யும் பேறுபெற்றவர் அனைவரும் தாசரே; தொண்டரே.

ஒற்றைக் குடும்பந்தனிலே—பொருள்
ஓங்கவளர்ப்பவன் தந்தை
மற்றைக்கருமங்கள் செய்தே—மனை
வாழ்ந்திடச்செயபவள் அன்னை

ஏவைகள் செய்பவர் மக்கள்—இவர்
யாவரும் ஓர் குலமன்றோ ?
மேவியனைவரும் ஒன்றாய்—நல்ல
வீடுநடத்துதல் கண்டோம்.

வீடுவிரிந்தே நாடாகின்றது. தேசமென்பது பொங்கிப்பரந்து பெருகியதோர் குடும்பமேயன்றோ? எனவே சாதிப்பிரிவுகள்,

சமயப்பிரிவுகள் என்னும் குறுக்குச்சுவர்களை யெழுப்பி நாட்டைச் சின்னபின்னமாக்குவது மூடத்தனத்திலும்மூடத்தனமேயன்றோ?

சாதிக்கொடுமைகள் வேண்டாம்—அன்பு
தன்னிற் செழித்திடும்வையம்
ஆதரவுற்றிங்குவாழ்வோம்—தொழில்
ஆயிரம் மாண்புறச்செய்வோம்

தொழிலே பிழைக்கும வழி. தொழில் செய்வது ஒருபோதும் இழிவாகாது. சும்மாகிடந்து சுகம்பெற முயல்வதே இழிவாகும். இதனையுணர்ந்து பலவேறு தொழில்களை அவ்வவற்றிற்குரிய தகுதி வாய்ந்தவர்கள் செய்ய முற்படுதல்வேண்டும். தொழில் வேற்றுமைகளாலும் நிறவேற்றுமைகளாலும் பிரிவுகள் கூறுவது இந்திய அன்னையின் இன்னல்களை மேன்மேலும் அதிகரிக்கச் செய்வதேயாகும். நிதியில் நிறமில்லை; ஒரு சாதிக்கொரு நீதியுமில்லை.

வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்
பிள்ளைகள் பெற்றந்தப்பூனை—அவை
பேருக்கொருநிறமாகும்.

சாம்பல்நிறமொருகுட்டி—கரும்
சாந்துநிறமொருகுட்டி
பாம்பு நிறமொருகுட்டி—வெள்ளைப்
பாலின்நிறமொருகுட்டி

எந்தநிறமிருந்தாலும்—அவை
யாவும் ஒரேநிறமன்றோ?
இந்தநிறம் சிறிதென்றும்—இஃது
ஏற்றதென்றும் சொல்லலாமோ?

வண்ணங்கள் வேற்றுமைப்பட்டால்—அதில்
மானுடர் வேற்றுமை யில்லை.
எண்ணங்கள் செய்கைகளெல்லாம்—இங்கு
யாவர்க்கு ஒன்றெனல் காணீர்.

'மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ?' என்று கபிலர் வினவுகின்றார். அவ்வண்ணமே பாரதியார், எண்ணங்களிலும் செய்கையிலும் வேற்றுமை உண்டோ என்று கேட்கின்றார். ஒரே

வகையான உணவைப் பல சாதியினரும் உண்டு சீரணித்துக் கொள்ளவில்லையா? தாழ் குலத்தினரைக் காயப்படுத்தும் ஆயுதம் மேற்குலத்தினருக்கு ஊறுசெய்யாது விடுவதுண்டா? இங்ஙனம் ஷேக்ஸ்பியர் தமது நாடக பாத்திரம் ஒன்றின் வாயிலாகப் பேசுகின்றார். இக்கருத்தினையே தமிழகத்தின் ஷேக்ஸ்பியரான கம்பர் குகன் வாயிலாக வெளியிடுகின்றார்.

மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம்
வாயாவோ?

காட்டரசனும் இயற்கை மகவும் ஆகிய குகவேந்தன் பரிவாரத்தை நோக்கிக் கூறும் வீர வசனத்தில் இவ்வாக்கியம் காணப்படுகின்றது. குகன் பரதனைப் பார்க்கின்றான். பழியும் பாவமும் தமக்கில்லையென்று கருதும் இராஜகுலத்தாருள் ஒருவனாகிய பரதனை இகழ்ந்து பேசுகின்றான். சூரிய வம்சமென்றும் சந்திர வம்சமென்றும் அக்கினி குலமென்றும் கடவுளின் பிரதிநிதிகளென்றும் வானமண்டலத்தினின்றும் மேகமண்டலத்தைக் கிழித்துக் கொண்டு வந்திறங்கியவரென்றும் வீண்பெருமை பாராட்டிக் கொள்ளும் முடிமன்னர்களுக்கும் சாமானிய மக்களுக்கும் உண்மையில் என்ன பேத மிருக்கின்றது? வேடர் கையில் உதைக்கும் செஞ்சரம் மன்னவர் நெஞ்சில் ஊறுசெய்யாதோ?— என்று குகன் கேட்கும் கேள்வியிலே வெறும் சூதுப்பிரிவுகளெல்லாம் மறைந்தொழிகின்றன.

அன்பிலே ஒற்றுமையிலே ஆக்கம் உண்டு. பகைமிலே வேற்றுமையிலே ஆக்கம் இல்லை; துன்பம்தான் பெருகுகின்றது.

உடன் பிறந்தார்களைப் போலே—இவ்
உலகில் மனிதரெல்லாரும்
இடம் பெரிதுண்டு வையத்தில்—இதில்
எதுக்குச் சண்டைகள் செய்வீர்?

உடன் பிறந்தார்களைப் போலே—இவ்
உலகில் மனிதரெல்லாரும்
திடங்கொண்டவர் மெலிந்தோரை—இங்கு
தின்று பிழைத்திடலாமோ?

ஒருவரையொருவர் பிச்சுத்தின்னும் அரக்கர் நாகரிகத்தை நமது கவி கண்டிக்கின்றார். இராவணன்மீது குற்றப்பத்திரிகை படித்த இலக்குவன் "மன்னுயிர் புடைத்துத்தின்றான்" என்று கூறுகின்றான். நர மாம்ச பட்சிணிகளான இராவணாதி ராட்சதர்கள் தான் மன்னுயிர் புடைத்துத்தின்றார் என்பதில்லை. ஏகாதிபத்தியம் என்ற வல்லரசு எப்போதும் மன்னுயிர் புடைத்துத் தின்று பிழைப்பதேயன்றோ? பிறரைப் பிச்சுத்தின்று பிழைப்பதும் பிறர் பங்கைத் திருடுவதும் அரக்கர் நாகரிகத்தின் முக்கிய அம்சங்கள் என்று கம்பன் காட்டுகின்றான். இக் குறைகள் நவநாகரிகத்திலும் காணப்படுகின்றன. போட்டி, போட்டி என்று கண் மூடிக் கதறிக்கொண்டு நிறம் நிறத்தோடு பூசல் புரிவதும் மெலிவு கண்ட 'குழந்தை மனிதரை' வல்லார் வீழ்த்தி மிதிப்பதும் தற்கால ஐரோப்பிய நாகரிகத்தின் சிறப்பியல்பே யன்றோ? ஏழையர் கண்ணீரில் தோய்ந்து ஊறிக்கிடக்கும் பெரும்பொருளன்றோ தற்கால உலகின் முதலாளிமாரது மூலதனமாகக் காண்கின்றது! இராணுவ பலத்தைக் கொண்டு மக்களை யேகாதிபத்தியம் அடக்கி ஆளுகிறதென்றால் பொருட் செருக்கினைக் கொண்டு வாணிபச் சாதியினரான மேலை நாட்டார் ஏழை மக்களை அடிமைக் குழியில் வீழ்த்தி மிதிக்கின்றார். என்ன அநியாயம்!

செம்புக்கும் கொம்புக்கும் அஞ்சி—மக்கள்
சிற்றடிமைப் படலாமோ?

என்று பாரதி 'முரசு' வினவுகின்றது. 'செம்பு' என்பது பொருள் வலிமையைக் குறிக்கின்றது. கொம்பென்பது இராணுவ பலத்தைக் குறித்து நிற்கின்றது. இவ் இரண்டிற்கும் அஞ்சி அஞ்சி, சுதந்திர வாழ்வினையே பிறப்புரிமையாகக் கொண்ட மக்கள் அரசினர்க்கும் முதலாளிமார்க்கும் அடிமைச் சுருள் எழுதிக் கொடுக்கலாமா? கொடுத்தால் அது செல்லுமா?

கத்தி எடுப்பவன் கத்தியால் அழிவன் என்று கிறிஸ்து நாதர் கூறியுள்ளார். பாம்பாட்டி பாம்பினாலேயே மரணமடைவதுண்டு. இவ்வண்ணமே பிறரை அடிமையாக்க முயல்வோர் தாமே யடிமைகளுக்கும் அடிமைகளாகி அழிவதுண்டு. எனவே அன்புவேண்டும்; ஒற்றுமை வேண்டும். அன்பே விடுதலை; ஒற்றுமையே உயர்நிலை.

ஒன்றென்று கொட்டு முரசே—அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே
நன்றென்று கொட்டு முரசே—இந்த
நானில மாந்தருக் கெல்லாம்.

இங்ஙனம் மங்களமாக 'முர'சொலி முடிவுறுகின்றது. பாரதி வாழ்க! ஒற்றுமை வாழ்க!

---

# உடல் நலம்.



சமூக சீர்திருத்தக்காரர் எழுதுவது:

மக்கள் வாழ்விற்கு முதற்கண் இன்றியமையாது வேண்டற்பாலது உடல் நலமாகும். உடலூரத்திற்குத் தக்கவாறே உள வலிமையும் அமையும். உடலும் உளமும் வலிமை பெற்றிருப்பின் வாழ்வு இன்பமயமாகத் திகழும். பல ஆண்டுகள் இன்ப வாழ்வு வாழ வேண்டும் என்பதே எல்லோருடைய கருத்தாகும். ஆனால் பலரைச் சோம்பேறித்தன்மானது ஆட்கொண்டு துன்புறுத்துகின்றது. உழைப்பு இருந்தாலொழிய உடலும் உள்ளமும் ஒருநாளும் வலிமை பெறமாட்டா. உழைக்க உழைக்க உடல் பெரிதும் வலுவடைகின்றது. உடலிலுள்ள அழுக்குகள் எல்லாம் அகன்று இரத்தம் சுத்தமாகின்றது. நிறைந்த உழைப்புடன் தூய காற்றிலும் தூய நீரிலும், வெயிலிலும் உடல் படியும்படி வாழ்வோர் நிறைந்த பலமும் மாறிலா மகிழ்ச்சியுமுடையவர்களாகக் காணப்படுகிறார்கள்.

வயல்களிலும் தோட்டங்களிலும் வேலை செய்து இயற்கை வாழ்வு வாழும் மக்களிற் பலர் நீண்டகாலம் நோயிலா வாழ்வு வாழ்வதை நாம் நேரில் காண்கின்றோம். மூளை வேலை செய்வோரிலும், கௌரவ வாழ்க்கை வாழ்வோரிலும் பல கிழவர்கள் தத்தம் வீடுகளிலுள்ள தோட்டங்களில் பயிர் பச்சைகளுக்குத் தண்ணீர் இறைத்தும், தத்தம் வேஷ்டிகளைத் தாமே தோய்த்துக்கொண்டும், காலை வேளையிலும் மாலை வேளையிலும் ஊருக்கு வெளியே நீண்டதூரம் உலாவிவந்தும் உடல்வலிமை பெற்று நல்வாழ்வு வாழ்ந்து வருதலையுங் காண்கின்றோம். பலர் நாள்தோறும்

இயற்கையாகவாவது, கருவிகளைக் கொண்டாவது உடற்பயிற்சி செய்து நிறைந்த பலத்துடன் நீண்ட ஆயுள் வாழ்வதையும் பார்க்கின்றோம். எவ்வகையிலாவது உடற்பயிற்சி செய்வோர் நல்ல பலத்துடன் நீண்ட ஆயுள் நோயிலா வாழ்வு வாழ்வர் என்பது கண் கூடு.

வயது முதிர்ந்த கிழவர்கள் கிழவிகள் ஆகியவர்களின் ஆயுள், உடல்நலன், உயரம், பருமன், மகிழ்ச்சி, தீரமான உழைப்பு, நிறைந்த பிள்ளைப்பேறு ஆகியவை தற்கால உலகத்தில் காண்பது அருமையாகிவிட்டது. தற்காலத்தில் ஆடவர் பெண்டிர் இருபாலாரினும் இளமை மாணம் மிக மிக அதிகம். "இளமை மாணம் அதிகமாக இருக்கிறபடியால் குடும்பங்களைக் கவனிப்பதற்கு காரியன் அகப்படுவது கஷ்டமாக இருக்கிறது. தேவைக்குத் தக்க வயது முதிர்ந்த காரியன்கள் பலர் அகப்படுவது அரிதாக இருக்கிறது." என்று ஒரு நண்பர் வேடிக்கையாகச் சொன்னார். அஃதும் உண்மையே. இந்நாளில் இளைஞர்களிற் பலர் உயரமும், பருமனும், நரம்பு பலமும் இல்லாதவர்களாகக் கூழைபாய்ச் சோர்வுடையவராய்க் காணப்படுகின்றார். மக்களிடையே பரவியிருக்கும் நோய்களுக்கு அளவில்லை. மேகம், கிரந்தி ஆகிய நோய்கள் பல ஜனங்களிடையே மிகச் சுலபமாகப் பரவி வருகின்றன. பிறக்கும் குழந்தைகளிற் பல இந்நோய்களுக்கு உட்பட்டுப் பிறக்கின்றன. இவ்வாறுயின் வருங்காலத்துச் சமூக வாழ்வு பெரிதும் கெட்டுப்போய்விடுமன்றோ?

இத்தீமைகளுக்கு முக்கியமான காரணங்கள் சிலவுள. ஒன்று குழந்தை மணம். இரண்டாவது உடல் உழைப்பின்மை. மூன்றாவது தேவைக்கு அதிகமான உணவை வேளை தவறி உட்கொள்ளுதல். நாலாவது அசுத்தம் நிறைந்த ஊர்களில், சிறை போன்ற வீடுகளில், நல்ல காற்று, நல்ல தண்ணீர் சூரிய வெளிச்சம், வெப்பம் இன்றிச் சோம்பி வாழ்வது. ஐந்தாவது ஒழுக்கத்தோடு இம்மாற்றங்களே பழைய நோயிலாவாழ்வைக் கெடுத்து நோய் மயமாக்குவன. முற்காலத்துக் கிராமவாழ்வானது இயற்கையோடுகூடிக் குலாவி வாழும் இன்ப வாழ்வாக இருந்திருக்கின்றது. தற்காலத்துக் கிராம வாழ்வு பெரிதும் சீர்குலைந்து போய்விட்டது.

சமூகத்தில் எவ்வளவு தீமைகள் மலிந்தாலும் அவ்வளவும் விதி வினையின்பாற்படுவன என்று சாதாரண ஜனங்கள் ஒருவாறு அமைந்து விடுகின்றனர். ஆனால் உண்மைகளை ஆராய்வோர் நெஞ்சம் கொதிப்புறுகின்றது. தன்னறிவு, தன் முயற்சியின்றி எவ்வளவு தீமைகள் செய்யலாமோ அவ்வளவு தீமைகளையும் செய்துவிட்டு ஆண்டவன்மேல் அஞ்சாது பழிசுமத்த முற்படுதலை என்னென்று புகல்வது!

சமூகவாழ்வு சீர்குலைந்திருப்பதை யுணர்ந்து, அதைத்திருத்த முற்படுதலன்றோ நலமுடையதாகும். எட்டுவயதுச் சிறுவனுக்கும் ஒரு சிறுமிக்கும் விளையாட்டுமணஞ் செய்து வேடிக்கை பார்ப்பதை இறைவன் பொறுப்பானோ? பதின்மூன்று வயதுச் சிறுவன் சிற்றின்பம் நுகருதல் யாங்ஙனம் பொருந்தும்? பதினைந்து வயதுச் சிறுமி பிள்ளை பெற்றுத் தளர்ச்சியுற்றுக் கிழவியாதல் எவ்வாறு பொருத்தமுடையதாகும். ஆண்மகன் இருபதாண்டு வரையிலும், பெண்மகள் பதினெட்டியாண்டு வரையினுமாவது பிரமசரிய விரதங்காக்க வேண்டாமா? பச்சிளம் பருவத்திலேயே சிற்றின்பம் நுகர்ந்தால் உடல் தளராது எவ்வாறு வளரும். நீண்ட ஆயுளை ஜாதகத்தில் எழுதிப்பார்ப்பதைத் தவிர நேரில் காணலாகுமோ? ஆடி ஓடி விளையாடும் பருவத்தில் மணஞ்செய்வது கொடுமையன்றோ? ஏன் அவசரப்படுதல் வேண்டும். பருவம் வந்த பின்னர் செய்தாலன்றோ, வாழ்வும் அவசரமாய்க் கழியாது நீண்டநாள் தங்கி நிற்கும்? இளமை மணம் கூடாது என்று கூறுவோரைக் காலநிலை தெரியாதவன் என்று கேலி செய்வோரும் சிலர் உளர் எனில் சமூகவாழ்வு சிரிப்பிற்கிடனாக விளங்குகிறது என்பதில் ஐயம் என்னை?

இளமை மணத்தாலும், கெட்ட நினைவு பேச்சுக்களாலும் சிறுவர்களும் சிறுமிகளும் குழந்தைப் பருவத்திலேயே சிற்றின்ப இச்சைகொண்டு விடுகின்றனர். சீக்கிரம் மூப்பும் அடைந்து விடுகின்றனர். விளையாட்டுக் குழந்தைகள்கூடச் சிற்றின்ப விளையாட்டு விளையாடுகின்றனர். ஆண்மக்கள் பெண்மக்கள் ஆகியவரிற் பெரியவரிற் பலர் குழந்தைகளை விளையாட்டாகச் சிற்றின்பக் கேலி செய்கின்றனர். ஐந்துவயதுக் குழந்தையைப்பார்த்து,

"உனக்கு எப்பொழுது யாரைக் கல்யாணஞ் செய்வது? நீ எவ்வாறு வாழ்வாய்" என்று கேட்பது ஆபாசமன்றோ? குழந்தைப் பருவத்திலேயே கல்யாண நினைப்பை ஊட்டுவது கெடுதல் அல்லவா? குழந்தைப் பருவத்திலேயே சிலர் கல்யாணம்பேசித் தீர்மானித்துக் கொண்டும், சாமான் சேகரித்துக் கொண்டும் கல்யாணப் பொழுது போக்குகின்றனர். குழந்தை மணத்தால் குழந்தை விதவைகளும், மலிந்துவருகின்றனர். கல்யாணம் என்பது இவ்வளவு விளையாட்டாக நடந்து கொண்டிருக்கும் பொழுது சமூக வாழ்வு எப்படிச் செழிப்புறும்?

கல்யாணப் பொருத்தத்தில் முக்கியமாகச் சிலர் பணப் பொருத்தம் வீட்டுப் பொருத்தம் ஆகியவைகளையே பார்க்கின்றனர். தம்பதிகள் நோயுடையவராயினும், வயது முதிர்ந்தவராயினும், நற்குணம் நல்லொழுக்கம் இலராயினும கவனிக்கப்படுவதில்லை. கிழவனுக்கு இளம்பெண்ணைக் கட்டினால், பெண்ணின் கதி எவ்வாறாகும் என்பதை யோஜிக்க வேண்டாமா? மேகம், கிரந்தி, காசம், நீரிழிவு ஆகியவை உடையாருக்கு இலாதவரைக் கட்டினால் நல்லுடம்பு உடையவர் வாழ்வுமன்றோ கெட்டுப்போய் விடும்? இதனை, "ருணானுபந்தம். பிராரப்தம்" என்று கூறுதல் தகுதியுடையதாகுமோ? இவ்வாறு பெற்றோர் தம் மக்களுக்கு மாறுபட்ட மணம செய்வது இயற்கையாகப் போய்விட்டது. அளவுகடந்த ஸ்ரீதன நலன்கருதி நல்லுடம்பிலாப் பெண்ணை நல்லுடம்புடைய இளைஞனுக்குக் கட்டுகின்றனர். நல்லுடம்பிலா இளைஞனுக்கு நல்லுடம்புடைய பெண் கட்டப்படுகின்றாள். இம் மாறுபாடுகளை விதி வினையின்பாற்படுத்த நான் ஒருப்படமாட்டேன். ஒருவன் ஒழுக்கஹீனனாய் நோய் பெறுவானேல் அது அவனுடைய குற்றமே. அந்நோயை அவன் தன்மனைவிக்கு வழங்கிப் பிள்ளைகளுக்கும் வழங்குதல் அவனுடைய பெருங் குற்றமே.

தாமுங் கெட்டுப்போகாதிருத்தலோடு தமது மக்களையும் கெட்டுப் போகாதபடி பாதுகாக்க வேண்டுவது பெற்றோர்களுடைய கடனாகும். இளம்பருவத்தில் காம உணர்வானது கண் கெட்ட நிலையில் தன்னறிவை மீறிச் சிலரை அடிமைப்படுத்தல் இயல்பாதலால், பெற்றோரே பிள்ளைகளை ஆதியிலிருந்து நற்பழக்

கத்தில் கொண்டுவர வேண்டியவர்கள் ஆவார்கள். இருபதாண்டுகள் வரை சிறுவர்கள் உடல் வளர்ப்பதிலும், கலாசாலை வாழ்விலும், விளையாட்டிலும் வீட்டு வேலை பார்ப்பதிலும் கழிக்கும்படி அவர்களைப் பழக்கிக்கொண்டு வருதல் வேண்டும். இளம்பருவத்தில் சிற்றின்பக் கதைகள் பேச்சுக்கள் கூட்டுறவுகள் இல்லாதிருக்கும்படி அன்னாரைப் பழக்குதல் வேண்டும். சுருட்டு, பொடி, புகையிலை, பீடி, சிகரெட் ஆகிய லாகிரி வஸ்துக்களை உபயோகிக்காமலிருக்கும்படி செய்தல் வேண்டும்.

இஃதெல்லாம் பெற்றோர் பொறுப்பேயன்றி இறைவன் பொறுப்பன்று. "எல்லாத் தீமைகளும் அவன் பொறுப்பென்று" அமைதல் சோம்பேறிப் பேச்சே. தம் வாழ்வைப் புனிதப்படுத்திக்கொள்ள வேண்டுவது தமது கடனே. சமூக வாழ்வைப் புனிதப்படுத்திக்கொள்ள வேண்டுவது சமூகத்து மக்கள் கடனே. சமூகத்திலுள்ள குறைபாடுகளையெடுத்தியம்புங்காலத்துக் கோபங் கொள்ளுதலில் பயனில்லை. சமூக வாழ்வைத் திருத்துதற்கு வேண்டிய சாதகங்களைச் செய்யவே ஒவ்வொரு பெரியாரும் அறிஞரும் முற்படுதல் வேண்டும். அறிவுக் கண்ணுக்குமுன் சமூகத்தை வைத்து, உற்று நோக்கினல், ஒவ்வொருவருக்கும் தற்காலமிருக்கும் பரிதாப நிலையானது நன்கு புலனாகும். சமூக வாழ்விற்கு அடிப்படையாக அமைய வேண்டுவது உடல் நலனாகும். உடல் நலன் பிரமசரிய ஒழுக்கத்தாலும், உழைப்பாலுமே அமையுந் தகையது.

உடல் வளர்ப்போர் ஒவ்வொருவரும் நீண்ட ஆயுள்வாழலாம் என்பது அறிஞர் கண்டுள்ள உண்மையாகும். நன்கு உடலை வளர்ப்போர் நூறாண்டுகள் வாழலாம் என்பது உடல்நூல் வல்லுநர் துணிபு. உடல் நோயுற்றுக் கெடுவதன் காரணம், அறியாமை, பாதுகாப்பின்மை, சோம்பேறித்தனம் ஆகியவைகளே என்று உடற்பயிற்சி நிபுணர் மக்பாடன் என்பவர் கூறுகின்றார். உடல் வளர்க்கும் முயற்சி நாட்டில தழைத்தல் வேண்டும். செல்வர் அறிஞர் அனைவரும் உடலாலும் ஒவ்வொரு நாளும் சிறிதளவேனும் உழைத்தல் வேண்டும். பெண்மக்களும் குழந்தைகளும் உடற்பயிற்சி பெறுதல் வேண்டும். குழந்தை மணம் ஒழிந்து

பருவமணம் நடைபெறல் வேண்டும். கூடியவரை இயற்கையோடு கலந்துவாழ மக்கள் முயலுதல் வேண்டும். சமூகத்தின் செல்வம் உடலேயாதலால், உடல் வளர்ப்பை நம் மக்கள் நாடுவார்களாக.

---

## நாட்டுக் கல்வி.

(பி. ஸ்ரீ.)

நமது கலாசாலைகளில் மாணாக்கர் பெற்றுவரும் கல்விக்கும் நமது சமூக—தேசிய வாழ்விற்கும் விசேஷமான தொடர்பில்லை யென்பதை அனைவரும் அறிவர். நம்மவரை அநாகரிகமக்களாகக் கருதியே நமது அதிகாரவர்க்கத்தினர் அன்னிய நாட்டுக்கல்வி முறைகளையும் நாகரிகமுறைகளையும் நம்மீதுசுமத்தப்பார்க்கின்றனர். உலகமெலாம் அறியாமையிருளில் ஆழ்ந்துகிடந்த பண்டைநாளில் நமதுநாடு ஞானஒளியின் நிலக்களமாகத் திகழ்ந்ததென்று உலக சரித்திரம் ஒப்புக்கொள்ளுகின்றது. பண்டை யிந்திய நாகரிக வாலாறு ஆராய்ச்சியாளர்க்கு ஓர் புதுமையாகவே காணப்படுகின்ற தெனினும் அது உண்மையான நல்வளர்ச்சிக்குரிய அம்சஙகள் பலவற்றையும் தன்னகத்தேகொண்டுளது என்பது மறுக்கமுடி யாததோர் விஷயமாகும்.

இடைக்காலத்தில் நம்மவர் சோம்பி 'நள்ளிருள் மயக்கத்தில்' ஆழ்ந்துகிடந்தார். இன்னும் இவ்விருள் முற்றும் அகன்றொழிய வில்லை. 'திக்குறிதோன்றும் இராப்புக்கள்' இன்னும் கூவிக் கொண்டிருக்கின்றன. நம் கைவிளக்கு அவிந்துவிட்டது. அந்நிய நாட்டு மின்சார வெளிச்சத்தில் நம்கண்கள் கூசுகின்றன. எனவே கண்ணைமூடிக்கொண்டு கனவு காணும் நிலையிலிருக்கின்றோம். நமது கனவுகளிலே இசையில்லை; அழகில்லை. ஒற்றுமையின்மையும் பலவீனமும் மலிந்து கிடக்கின்றன. நரகலோகத்துயிர்கள்போல நம்மவர் ஏங்கி ஏங்கிச் சாகின்றனர். இந்நிலையிலே தான் வெள்ளை யர் நாகரிகம், அவர்தம் வாணிபத்தையும் அரசியலையும் துணை யாகக்கொண்டு நாடெங்கும் பரந்துவருகின்றது. ஆனல் இந்நாக ரிகம் ஸ்தூலவிஷயங்களில் சில நன்மைகள் செய்திருக்கின்றதெனி னும், நமது சொந்தமதியினை மாய்த்து இலக்கிய வளர்ச்சிக்கு இடையூருக அமைந்திருக்கின்றது என்பதில் ஐயமில்லை.

நமது நாகரிகத்திற்கும் ஜாதிய மனப் பண்பிற்கும் ஏற்றவாறு நமது கல்வி முறைகள் திருத்தி அமைக்கப்பெறுதல் வேண்டும். வெள்ளையர் வாயிலாக நாம் தற்கால அறிவுப் பயிற்சியினை அடைதல் வேண்டும். ஆனால் வெள்ளையர் மொழியினை வருந்திக் கற்றபின்னரே நவீன அறிவுப் பொக்கிஷத்தை நாம் பெறுதல் கூடும்—என்ற பரிதாப நிலை விரைவில் ஒழிதல் வேண்டும். தாய் மொழி வாயிலாக மேலை நாட்டுக்கலைச் செல்வத்தை அநுபவிப்பதுதான் முறையாகும். கட்டடம் கட்டுவதற்கு அன்னியநாட்டிலிருந்து அபூர்வ சாமான்களை வரவழைத்தல் நன்றே. எனினும் அடிப்படை நமது 'மனை'யிலேயே நிலை பெற்றிருத்தல் வேண்டுமன்றோ? இவ்வண்ணமே நமது நாட்டுக் கல்வியென்னும் கட்டடத்திற்கு வேண்டிய பல வேறு அம்சங்களையும் நாம் நாற்றிசை நாடுகளினின்றும் பெற்றுக்கொள்ளலாம். ஆனால் அடிப்படை நமது பண்டையர் தம் நிதிக்குவையினையே தழுவி அமைதல் வேண்டும்.

முன்னைக்காலத்தில் இவ்வுலகில் அடர்ந்து கிடந்த இருளைக் கிழித்துக்கொண்டு ஓர் ஒளி மின்னியெழுந்தது. இதுதான் வேத—கீத அமுத ஒளியாகும். இதன் ஜீவநாடி இன்னும் நமது இந்திய அன்னையின் ஜீவநாடியாகவே யிருக்கின்றது. பலஊழிகளினூடு பாய்ந்து இங்குவந்தெய்திய வேதமந்திரத்தின் உயிரொலியெது?

"இருளை நீக்கி ஒளியினைக்காட்டுவாய்,
இறப்பை நீக்கி அமுதத்தை யூட்டுவாய்"

இம் மறையொலிவந்து ஆழ்ந்து தூக்கத்தில் வீழ்ந்து கிடக்கும் நம்மவர் செவியில் நுழைகின்றது. இலௌகிக ஞானத்தை மேலை நாட்டினர்பால் நாம் கற்றுக்கொள்வதோடு நமது சமயத்தின் சாராம்சமான தெய்வீக உண்மைகளையும் ஆராய்ச்சி வாயிலாகச் சோதித்தெரிந்துக் கைக்கொள்ளல் வேண்டும். இதுவே குறித்த மறையொலி நமக்கு வெளியிடும் உபதேசமாகும். நாம் அறிவுற்று விழித்தெழாது தீய நாச உறக்கத்திலே கிடந்தால் இது மாண நித்திரையாக மாறி விடுதலும் கூடுமன்றோ? எனவே, நாம் நமக்கிசைந்த நாட்டுக் கல்வியினை நமது கல்விச்சாலைகளில்

வளர்த்தல் இன்றியமையாததாகும். இன்னாட்டுக் கல்வி தமிழ் மொழி வாயிலாகவே கைகூடுவதாகும். தமிழ் மொழியின் வாழ்வே நமது நாட்டின் வாழ்வு.

“வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ் மொழி
வாழிய வாழியவே”.
“வானமளந்த தனைத்து மளந்திடும்
வன்மொழி வாழியவே
சூழ்கலி நீங்கத் தமிழ் மொழியோங்கத்
தொலங்குக வையகமே”.
“தொல்லைவினை தருதொல்லையகன்று
சுடர்க தமிழ் நாடே.”

---

## ஊற்று வெள்ளம்.

### இலக்கியமாணவன் எழுதுவது.

நம் தமிழிலக்கியமாகிய பூங்காவனத்தில் பாரதியாரது கவிதை ஊற்று வெள்ளமாகப் பொங்கி வருகின்றது. இக்கவிதை பெரும்பாலும் வீரச்சுவையுடையதாகவே காணப்படுகின்றது. எனினும் வீரத்தை வளர்க்கும் காதலிலும் பாரதியாரது கவியுள்ளம் ஈடுபட்டு நிற்கின்றது. காதல் வேறு; காமம் வேறு என்னும் உண்மையினை நம்மவர் சங்கக் காலத்தில் நன்குணர்ந்திருந்தார். சைன முனிவர்களும் பிறரும் இந்நாட்டில் அடிவைத்த காலந் தொடங்கிக் காதலும் காமமும் ஒன்றென்றும் பாவமே யென்றும் தமிழ் மக்கள் கருதத் தலைப்பட்டனர். இனி இவ் வேறுபாட்டினை மீண்டும் எடுத்துக்காட்டிக் காதலின் அற்புத சக்தியினை விளக்குவது கம்பராமாயணமே யாகும். இராவணனும் சூர்ப்பனகையும் காமத்தால் அழிந்த கதையினைச் சித்திரிக்கும் கம்பர், பொதுவாக இராமாயணத்தைக் காதலின் வெற்றியாகவே சித்திரித்துக் காட்டுகின்றார். கம்பருக்குப் பின்னர் இவ் வித்தியாசத்தை நம்மவர் மீண்டும் மறக்கலாயினர். தற்காலத்திலேதான் பாரதியார் தோன்றிக் காதல் உயிரை வளர்க்குமென்றும் காமம் வாழ்வைச் சிதைக்குமென்றும் தம் கவிமுரசு வாயிலாக முழக்குகின்றார்.

கவிதைப்பயிரை வளர்க்கும் காதலினால் உயிர் தோன்று மென்றும், காதலினால் உயிர் அறிவெய்தி வீரத்திலேறுமென்றும், எனவே 'காதலென்பதோர் கோயிலின் கண்ணே' ஞானத் திரு விளக்கேற்றித் தொழுதிடல் வேண்டுமென்றும் இது, இம் மண் ணுலகில் தெய்வ வாழ்வு பெறுதற்குரிய வழியாகுமென்றும் பாரதியார் பாடுகின்றார்.

"காற்று வெளியிடைக் கண்ணம்மா—நின்றன்
காதலை யெண்ணிக் களிக்கின்றேன்—அமு
தூற்றினை யொத்த இதழ்களும்—நில
வூறித்ததும்பும் விழிகளும்—பத்து

மாற்றுப் பொன்னொத்த நின்மேனியும்—இந்த
வையத்தில் யானுள்ள மட்டிலும்—எனை
வேற்று நினைவின்றித் தேற்றியே—இங்கோர்
விண்ணவனாகப் பிரியுமே—இந்தக் (காற்றுவெளி)"

இன்னுயிராகிய காதலியின் காதலால் காதலன் ஆனந்தவெறி பெறுகின்றான். இக்காதலிலே துன்பங்களெல்லாம் கரைந்து போகின்றன.

" ... ... ... ... ... ... ... ... ... துயர்
போயின, போயின துன்பங்கள்—நினைப்
பொன்னெனக் கொண்ட பொழுதிலே—உயிர்த்
தீயினிலே வளர் சோதியே—என்றன்
சிந்தனையே என்றன் சித்தமே"

இவ்வாறு காதலின் தெய்விக சக்தியை பாரதியார் உணர்ந்து பாடு கின்றார். எனினும் பாரதியாரது காதல் சில சமயங்களில் சரீர சம்பந்தமான 'காதலா'க மாறிவிடுகின்றது. கண்ணன் பாட்டி லுங்கூட இக்குறையினை நாம் காண்கின்றோம். கவிவிசும்பிலே பளிச் என்று மின்னிப் பாய்ந்து செல்லும் ஆகாய வாணம்போல இவர் கவிதை கம்பீர கதியில் செல்லுகின்றது. ஆனால் எதிர் பாராத சந்தர்ப்பங்களில் இது தன்னொளியிழந்து கருகி நிலத்தை நோக்கித் திரும்புகின்றது. பாரதியாரது வள்ளிப்பாட்டிலும் இத்தகைய குறையினைக் காண்கின்றோம். இளமயில் என்றும் இதய மலர் வாழ்வென்றும் ஞானவிழியாளென்றும் தெள்ளிய

ஞானப் பெருஞ் செல்வமென்றும் வள்ளியைப் போற்றும் முருக வேளும் பாரதி பாடல்களில் சரீர சம்பந்தமான காதற் பேச்சுக்கு இறங்கிவிடுகின்றாரெனின், இது பாரதியாரது காதற் சித்திரத்தின் பெருங் குறையென்று துணிந்து கூறுவது மிகையாகுமோ?

வெள்ளைநிலா வானத்தை மூடி விரிந்து பொழிகின்றது. இவ்வொளிக்கொள்ளையிலே வள்ளியின் காதலர் வள்ளியைத் தேடி வருகின்றார். வள்ளியம்மையின் 'பிள்ளைக்கிளிமென் குதலை யிலே'— 'வீரத்தமிழ்ச் சொல்லின் சாரத்திலே'—முருகவேளின் ஒப்பற்ற திருமனம் பின்னமறச்சென்று கலந்து விடுகின்றது. "வட்டங்களிட்டும் குளமகலாத மணிப்பெருந் தெப்பத்தைப் போலே எட்டுத்திசையும் ஒளிர்ந்திடும் கால இரவியைப்போன்ற" திருமுகத்தையும் திருமேனியையும் முருகவேளின் மனம் சுற்றிச் சுற்றி வருகின்றது. இங்ஙனம் அழகுபெற வருணிக்கும் பாரதி யார் இடையிடையே காதலமுதோடு காமநஞ்சினையும் கலந்து விடுவது மிகமிக வருந்தத்தக்கதேயாகும்.

பாரதியாரின் குறை வள்ளிப்பாட்டைப் பார்க்கிலும் "கண் ணம்மா'வைக்குறித்த சில பாக்களில் அதிகமாக காணப்படு கின்றது. கண்ணம்மா என்ற தெய்விக நற்பெயரை மாத்திரம் வைத்துக்கொண்டு பாரதியார் சாதாரணமான ஓர் பெண்ணைப் பற்றியே வருணிக்கின்றாரென்று வாசகர் உள்ளத்தில் தோன்று மாறு சில பாடல்கள் அமைந்துள்ளன. பொன்னை நிகர்த்த மேனியும் மின்னை நிகர்த்த சாயலுமுள்ள நித்தியகன்னியாக வந்து 'கண்ணம்மா' கவியின் மனப்பீடத்தில் வீற்றிருக்கின்றாள்.

நாடித்தவம் புரிந்து—பீடுற்ற முனிவரர்
கேடற்ற தென்றுகண்டு—கூடக்கருதுமொளி
மாடத்திலேஞானக்—கூடத்தில் விளையாடி
ஓடித்திரிந்த கன்னி—வேடத்திரதியைப்போல்

ஈடற்ற கற்பனைகள்—காடுற்ற சிந்தனைகள்
மூடிக்கிடக்கு நெஞ்சின்—ஊடுற்றதை யமரர்
தேடித்தவிக்கு மின்ப—வீடொத்தினிமைசெய்து
வேடத்தி சிறுவள்ளி வித்தையென் கண்ணம்மா!

(பீடத்திலேறி)

கண்ணம்மை எனினும் வள்ளியம்மை எனினும் பாரதியார் உள்ளத்தில் காதலுணர்வோடு சரீரசம்பந்தமான காமஉணர்வும் கலந்துவிடுகின்றது. குறித்த பாடல்களை வாசகர்கள் தாமேபடித்துப் பார்ப்பதால் இவ்வுண்மை இனிது விளங்குவதாகும். சந்திரமதி பாட்டு ஒன்றுதான் ஒப்புயர்வற்ற தூயகாதலின விலையிலா முழுமணியாக விளங்குகின்றது. இது தனியாக வேறொரு சந்தர்ப்பத்தில் ஆராயப்படும்.

"காணிநிலம் வேண்டு"மென்ற தலைப்பெயரோடு பாரதியார் பாடிய காதற்பாட்டு ஓர் அழகிய நன்மணியேயாகும். 'தூணிலழகியதாய்' 'தூயநிறத்தினராய்' காணிநிலத்திடையே ஓர் மாளிகை வேண்டுமென்றும் தென்னைமாமும் கீற்றும் இளநீருமாகக் கேணியருகினில் வளர்ந்தோங்க வேண்டுமென்றும் பாரதியார் பாடுகின்றார். இவ்விடத்தில் நல்லமுத்துச்சுடர்போலே நிலாவொளிமுன்பு வரவேணும். வெண்ணிலவின் தன்னொளியோடு பாட்டுக்குயிலின் கீதவினோதமும் கலந்து வரல்வேண்டும். இளந்தென்றலும், இவ்வினிமையோடு இனிமையாகக் கலந்து உள்ளத்திற்கு மகிழ்வூட்டவேண்டும். இங்ஙனம் ஒளியும் இனிமையும் கலந்து வருகையில் கவியின்பமும் காதலின்பமும் வேண்டுமென்று பாரதியார் பராசக்தியை நோக்கிப் பிரார்த்தனைசெய்வது அற்புதமாகவேயிருக்கின்றது.

"பாட்டுக்கலந்திடவே—அங்கேயொரு
பத்தினிப்பெண் வேணும்—எங்கள்
கூட்டுக்களியினிலே—கவிதைகள்
கொண்டு தரவேணும்—அந்தக்
காட்டுவெளியினிலே—அம்மா, நின்றன்
காவலுறவேணும்—என்றன்
பாட்டுத்திறத்தாலே—இவ்வையத்தைப்
பாலித்திடவேணும்."

பாரதியாரின் காதற்பாக்களில் இத்தகைய பாக்களே தலைசிறந்து விளங்குகின்றன. 'பூலோக குமாரி' 'கண்ணம்மா அங்கவர்ணனை' முதலான காதற் பாடல்கள் மறைந்த பின்னரும் 'காணி நிலம்' போன்ற பாடல்கள் நிலைபெற்று நிற்குமென்பது திண்ணம்.

---

# ஓர் மேலைநாட்டுச் சித்தாந்தி.

ஸர். ஆர்தர் கோனன் டாயில் கொள்கைகளைத்
தழுவி யெழுதப்பட்டது.

கி. பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலைநாடுகளில் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சி நாளொரு மேனியும்பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கி வந்தது. சமயத்திற்கும் 'ஸையன் ஸி'ற்கும் ஏற்பட்ட போராட்டம் ஓர் பாரதமாகவே விளைந்துவிட் டது. முடிவில் 'ஸையன்ஸ்' வெற்றிமாலை சூடிவந்ததென் பதை அறியாதாரில்லை. ஆனால் ஜயமென்னும் வெறிகொண்டு 'ஸையன்ஸ்' மதங்களின் சாரதத்துவமான தெய்விக உண்மைகளை எல்லாவற்றையும் மறுக்கத்துணிந்தது. சமயத்திற்கு விரோத மாக எழுந்து 'ஸையன்ஸ்' நாத்திக வாதத்தினைத் தழுவிப்பட லாயிற்று.

இங்கிலேயிலேதான் ஸ்வீடனபர்க், எட்வர்ட் இர்வின் முத வான பெரியோர்கள் தோன்றி, சூக்கும உலக விஷயமான சில உண்மைகளை வெளியிடத் தொடங்கினர். மறுலோகச் செய்தி கள் பன்முறையும் உலகத்தின் பல இடங்களிலும் மக்கள் செவி யில் வந்து விழுந்திருக்கின்றன. முக்கியமாக நமது தாய் நாட் டில் மறு உலகத்தைப்பற்றிய ஆராய்ச்சி நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலந் தொடங்கி நடைபெற்று வந்திருக்கின்றது. ஆனால் ஆராய்ச்சி அறிவென்னும் மலை விளக்கு இடைக்காலத்தில் குடத்தி லேற்றிவைத்த விளக்கைப்போல் ஒளி மழுங்கி உயிர் குன்றி எரியலாயிற்று. தற்காலத்திலோ மேலைநாட்டு விஞ்ஞான சாஸ் திர வெள்ளம் அலைமேல் அலையாக வந்து மோதுகின்றன. இவ் வெள்ளத்தில் மூடபக்திகளோடு நம் சமய உண்மைகளும் மூழ் கிப்போய் விடுமோ?—என்ற கவலை பலர்க்கும் ஏற்பட்டிருக்கி றது. ஸ்தூல உலகில் மேலைநாட்டினர் வளர்த்துவரும் பேரற் புதங்களைக் கண்டு பிரமித்துப்போன நம்மவர் எல்லா விஷயங்களி லும்—சமய விஷயங்களிலுங் கூட அன்னார் அடிச்சுவடுகளையே பேதையபடியவரென்னப் பின்பற்றத் தொடங்கினர். மேற்றிசை நாட்டினர்க்கு ஒரு காலத்தில் ஞானஒளி வழங்கிய கீழ்நாடு இன்று

அறிவின் பல துறைகளிலும் மேலைநாட்டு முகம் பார்த்து அருள் நோக்கி நிற்கின்றது.

நாத்திக மென்னும் கருமேகக் குலம் கிழித்து எழுந்தொளிரும் மின்னென ஞான சூரியனது பொன்னொளி ஐரோப்பா அமெரிக்கா கண்டங்களில் பாய்ந்து வந்தது. இவ்வொளியால் அறிவுற்று விழித்துக்கொண்ட பெரியோருள் ஸ்வீடன்பர்க் என்பார் ஒருவர். இவாது சித்தாந்தத்தினைப்பற்றி சில வார்த்தைகள் சொல்வதே இச் சிற்றுரையின் நோக்கமாகும்.

ஸ்வீடன்பர்க் என்பார் சமய உலகில் தோன்றிய சீர்திருத்தவாதியருள் ஒருவர், இவர்பால் ஞானதிருஷ்டி யென்னும விசேஷமனோசக்தி வாய்ந்திருந்தது. மேலும் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியில் இவர் தேர்ச்சிபெற்றிருந்தார். இயந்திர நூல்களில் இவர் அபூர்வமான திறமையுற்றிருந்தார். பஞ்சபூத நுட்பங்களை ஆராயும் பௌதிக நூலிலும் 'மீன் சுடர் விண்ண'கத்தை உற்றுநோக்கி உண்மைகாணும் வான சாஸ்திரத்திலும் இவர் வல்லவராக யிருந்தார். உடல் நூல் பயிற்சியும் பொருளாதார அரசியல் நூல்களின் தேர்ச்சியும் இவர்க்குண்டு அன்னையின் தீம்பாலோடு இவர் கிறிஸ்து வேத உண்மைகளைப் பருகி யிருந்தார். இவாது இளமை கிறிஸ்து சமய வைதிக மண்டலத்திலேயே கழிந்து வந்தது.

இத்தகைய பெரியார்க்கு ஐம்பத்தைந்தாவது வயதிலே தான் சூக்தும ஞான சூரியன் உதயமாயிற்று. இவ்வுலகத்தின் சக்திகளுக்கு அதீதமான சக்திகளுண்டென்று இவர் உணர்ந்தார். இத்தகைய சக்திகளுக்குத் தாமே ஆவேச பீடமாக (medium) இருப்பதையும் நன்குணர்ந்தார். சூக்கும சக்திகள் ஆவேசிப்பதற்கு தூய வெள்ளைக் காகிதம் போலிருக்கும் உள்ளமே விசேஷமாகப் பயன்படுவதாகும். ஏனெனில் இத்தகைய உள்ளம் தன் சொந்தச் சரக்கைக் கொண்டு நுழைத்து விடாமல் உண்மையை உள்ளவாறு பிரதிபலிக்க வல்லது. ஆனால் இத்தகைய உள்ளத்தில் ஒரு குறையுமுண்டு. அதாவது ஆராய்ச்சித்திறமை இவ்வுள்ளத்திற்கு இல்லாமலே குறையாகும். ஸ்வீடன் பர்க்கின் உள்ளம ஆவேசபீடமாதற்குரிய வெள்ளைக்கடிதம் போன்ற உள்ளமன்று. இவ்வொருகுறை ஸ்வீடன் பர்க்கின்

மன நிலையில் காணப்படுகின்றதெனினும் இவரது ஆராய்ச்சித் திறமை வேறுவகையில் எவ்வளவோ நற்பயன் நல்கத்தக்கதா யிருந்தது.

கிறிஸ்து வேதம் இளமையிலேயே இவரது உள்ளத்தில் கலந்திருந்ததால் அவர் கடவுள் அருளிய முழுமுதல் நூலாகவே அதனைக் கருதலானர். ஆனல் தாம் தமது சூக்கும திருஷ்டி வாயிலாகக் கண்ட மறுலோகச் செய்திகளுக்கிணங்க இக்கிறிஸ்து வேதத்திற்குப் பொருள் கொள்ளவேண்டுமென்று கருதினர். சுருங்கக்கூறுமிடத்து இவர் கிறஸ்து வேதத்தின் சொல்லை ஒப் புக்கொண்டார்; சொற்பொருளை விலக்கி வேறு உட்பொருள் காணத்தொடங்கினர். தேவதூதர்களின் உதவியால் கிறிஸ்து வேதத்தின் மெய்ப்பொருள் காணும்பேறு தனக்கே வாய்த்த தென்று இவர் கூறியது, நமது சமயவாதிகள் இவ்வாறு கூறி யுள்ளனவற்றை, நமக்கு நினைப்பூட்டுகின்றது. இங்ஙனம் கிறிஸ்துவேதத்திற்குப் புதுமைப்பொருள் கண்ட ஸ்வீடன்பர்க் தம் மனம்போன போக்கின்படி யெல்லாம் சொற்களுக்குப் பொருள் காண்பாராயினர். இதனல் ஸ்வீடன்பர்க் அகராதி யென்ற ஓர் புத்தப் புதிய அகராதி தொகுக்கப்படவேண்டுவது அவசியமாகின்றது. ஸ்வீடன்பர்க் அகராதியில் 'குதிரை' என்றால் அறிவினல் அறியப்படும் உண்மை யென்ற பொருள் தருகின்றது. விஞ்ஞான சாஸ்திர உண்மை என்பது 'கழுதை' யென்ற சொல் லால் இவ்வகராதியில் குறிக்கப்படுகின்றது. தீ என்றால் வளர்ச்சி என்ற பொருள் தருகின்றது. இங்ஙனம் பொருள் காண்பது நமது நாட்டிற்கு ஓர் புதுமையன்று. நம் கண்முன் காலஞ் சென்ற மகர்ஷி தயானந்த ஸரஸ்வதிகள் வேதத்திற்கு இத்தகைய விந்தைப்பொருள் கண்டாரென்பதை நாம் நன்கறிவோம். ஆனல் கடவுள் அருளிய மறை கிறிஸ்து—வேதமாயினும் இந்து வேத மாயினும்—மறை பொருள் தந்து மக்களை மயங்கச் செய்வதென் ருல், நமது பகுத்தறிவிற்கு எவ்வாறு பொருந்துவதாகும்?

மேலே கூறிய குறை ஸ்வீடன்பர்க் கிறிஸ்து வேதத்திற்குப் பொருள் கொள்ளும் முறையில் காணப்படுகின்றதெனினும் இவ ரது சித்தாந்தத்தைப் பொதுவாக நோக்குமிடத்து அது விரிந்த

நவீனக் கொள்கைகளுக்கும் லட்சியங்களுக்கும் பெரிதும் பொருத்தமுடையதேயாகும். இவ்விஷயத்திலும் ஸ்வீடன்பர்க்கின் சித்தாந்தம் தயானந்தர் சித்தாந்தமாகிய ஆரிய சமாஜத்தை ஒரு புடை ஒத்துளது. ஆனால் ஆரிய சமாஜத்தில் மறுலோகச் செய்திகள் வெளிப்படையாகக் காணப்படவில்லை. ஆனால் ஸ்வீடன் பர்க்கின் சித்தாந்தமோ மறுலோகத்தைப்பற்றிய ஆராய்ச்சிகளுக்கு ஓர் அருந்துணையாக அமைகின்றது.

இனி ஸ்வீடன்பர்க் சித்தாந்தத்தின் சாராம்சத்தை ஒருவாறு எடுத்துக்காட்டி இச்சிற்றுரையை முடித்துவிடுவோம். ஆன்மாக்களின் கர்மபூமியே இவ்வுலம். இந்த ஜட உலக அனுபவ வாயிலாக அறிவு பெற்று ஆன்மவளர்ச்சி பெறுவது மக்கள் கடன். உண்மை கிறிஸ்தவர்க்கு மாத்திரமன்று. பல்பெருஞ் சமயங்களும் உண்மைப் பொருளின் பல்வேறு அம்சங்களையும் வற்புறுத்துகின்றன. தீவினையின் வேர் தன்னலமேயாகும். எனினும் மக்கள் வளர்ச்சிக்கு மிடுக்கு அல்லது பெருமிதத்தோடு கூடிய தன்னம்பிக்கை வேண்டும். ஞான திருஷ்டி யென்னும் சக்தி மக்களுக்குண்டு. இத்தகைய சூக்கும சக்திகளால் தூரதேச வர்த்தமானங்களையும் மறு லோகச் செய்திகளையும் நாம் தெரிந்து கொள்ளுதல் கூடும். ஸ்வீடன்பர்க் மறுலோகச் செய்திகளைத் தமது அபார மனேசக்தியால் கண்டறிந்தார். அமெரிக்காவைப் போல மறு உலகமும் ஸ்வீடன்பர்க்குக்கு அவ்வளவு நிச்சயமாகவே இருந்தது. இன்னும் ஸ்வீடன்பர்க்கின் கொள்கைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்ய விரும்புவோர் ஸர் ஆர்தர் கோனன் டாயில் எழுதி வெளியிட்டுள்ள மறுலோகச் செய்திகளின் வரலாறு என்னும் நூலின் முதலதிகாரத்தைப் படித்து மகிழ்வாராக.



# நவீன நாகரிகத்தின் குறை எது?

அறிஞர் வஸ்வானி எழுதுவது.

பல நூற்றாண்டுகளாக மனிதன் உயிர்க்குலத்தின் முடிமணி யாக வளர்ந்து வருகிறான். அறிவின் பல துறைகளிலும் இவன் வளர்ந்துள்ளான். விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிகளும் கல்விப் பயிற்சியும் மக்களிடையே வளர்ந்து வருகின்றன. அறிவுச் செல் வம் வளர்ந்தோங்குகின்றது. எனினும் நாகரிகம் அழிந்துவரு கின்றது. வாணிபம் கைத்தொழில் கட்டுப்பாடு அபிவிருத்தி யடைந்து வருகின்றன. ஆனால் குழப்பம் நாகரிக உலகமெங்க ணும் தாண்டவ மாடுகின்றது. மேல்நாட்டு நாகரிக மக்கள் ஆன்மாவோடு உள்ள தொடர்பினைக் கண் கூடாகக் காண முயல் கின்றாரில்லை.

கடவுளுடைய பரமபத ராஜ்ய மெங்கே யிருக்கிறது? அது மக்களுள்ளத்தே யிருக்கின்றது. மக்களது அகத்தும் புறத்தும் அது விளங்குகின்றது. அணுவினுக்கணுவாக உள்ளான் இறைவ னென்று நம் சமய நூல்கள் வற்புறுத்துகின்றன. ஒவ்வொரு அணுவிலும் ஓர் அண்டம் புதைந்துகிடக்கின்றது. இதனிலுமற் புதமானதோர் அண்டம் மக்களுள்ளத்தினுள்ளே மறைந்து கிடக் கின்றது. இதுதான் பரமாகாசமல்லது இறைவனது பரமண்டல மாகும். இதுவே ஆன்மா தெய்வமொடு வதியும் நல்லுலகம். மிருக பலங்கொண்டு உடைமைகளின் வலிமைகொண்டு இந்த ராஜ்யத்தை ஒருவரும் வசப்படுத்த முடியாது. எனினும் மண் ணுலகத்திலுள்ள இராணுவ ராஜ்யத்தைக் காட்டிலும் இது உண் மையான ராஜ்யமாகும். உண்மையான உண்மை உண்மையினும் உண்மை இதுவன்றோ? இந்த மகாராஜ்யத்தின் உரிமைகளை உணர்ந்தொழுகுவோர் எத்தனை பேர்?

இறையுயிர் அலைமேல் அலையெறிந்து வருகின்றது. ஒவ் வொரு இதயப் பூங்கோவிலின் கதவினையும் அது தட்டுகின்றது. நாம் கதவைத் திறந்துவைக்க மறுக்கின்றோம். சிற்றின்பம் அதி காரம் ஆதிய மாயை வலையில் சிக்குண்டு நாம் மயங்கிக் கிடக்கின்

ரும். இறையுயிரின் மகா சக்தியினை நாம் நன்கு பிரதிபலிப்ப தில்லை.

ஆன்ம ராஜ்யத்தில் — இதயமாகிய இறைவனது பரமபத ராஜ்யத்தில் நாம் குடிகளாக வாழ வேண்டும். இதற்கு வழி யிறைவனுக்கே நாம் மீளா ஆளாகி நிற்பதேயாகும். இறைவனை நம் உள்ளத்தில் தனியரசாக ஏற்றுவாழ்வதே வாழ்வு. கவலை களுக்கிடையே பல வேறு தொழில்களுக்கிடையே கொஞ்சம் சாவகாசத்தை உண்டுபண்ணிக்கொள்ளல் வேண்டும். சாவதான மாக அமைதியோடு தியானம் செய்யப் பழகுதல் வேண்டும். ஒவ்வொரு நாளும் கொஞ்ச நேரமாவது மோனத்திற் சென்று ஒடுங்கவும் பழகுதல் வேண்டும். மௌனத்தில் பழகுவதற்குச் சிறு கழகங்கள் அமைத்துக்கொள்வது நன்று.

மோனமென்பது ஞானவரம்பாதலின் அதுவே ஞானமூர்த் தியை விரும்பி அழைக்க வல்லதாகும்.

'வேண்முத்து' என்ற விந்தைப் பெயர்தாங்கிய நடனமாத ரசி ஒருத்தி யிருநதாள். பல வேறு போக யின்பங்களிலே மூழ்கி இன்பம் பெற முயன்ற இவ்வம்மை பேர்பெற்றிருந்தாள்; புகழ் பெற்றிருந்தாள். பின்னர் போகமும் விளம்பரமும் பொய்ப்புக ழும் பயனில்லவென்பதைக் கண் கூடாகக் கண்டு களைப்படைந் தாள். மலைமீது சென்று ஏகாந்த வெளியில் தனிமையோடு வாழ விரும்பினள். தியான உலகில் ஆரவார உலகினை அறவே மறந்துவிட ஒருப்பட்டாள். ஆன்ம ராஜ்யத்தில் தன்னந் தனிய ளாக அடிவைக்க முயன்றாள். இங்ஙனம் மோனத்தில் பயிற்சி பெறுவோர் ஆன்ம சுயராஜ்யமென்னும் தன்னரசு பெறுவரென் பதி லையமில்லை.

அன்பர்களே! நீண்டகாலமாக நீங்கள் ஆரவாரங்களுக்கும் ஆடம்பரங்களுக்கு மிடையே உழன்று களைத்து வந்தீர்கள். உல கில் பெரும்பாலார் செலவும் சாமான்யமான—கவலை தோய்ந்த தன்னல நெறியிலே சென்று நீங்கள் எய்திய பயன் தானென்னை? உங்களுள்ளம் சோகத்தில்—துயரத்தில் மூங்கி முழுகிக்கிடக்கின் றது. இனியாவது சிலர் செல்லும் வேறு நெறியை நோக்குங் கள். இதுவே பெரியோர் பிடித்தொழுகும் பெருநெறியாகும்.

இதுவே உயிர்ச் சக்தியை யழிக்கவல்லது. மிகச் சிலரே இந்நெறி யினை யறிவார்; பெரும் பாலார் அறியார். மௌனத்திலாழ்ந்து தியான வாயிலாக உண்மை காண்போர் நெறி யிதுவேயாகும். மௌனம் பழகுதற்கு ஓர் சிறு கழகம் அமைத்துக்கொண்டு வட்டமாக உட்கார்ந்துகொண்டு 'மோனவாக்'கினைக் கேட்க முயலுங்கள். அப்போது இறைவனது திருவாக்கு நன்றாக ஒலி செய்வதாகும். அந்தராத்மாவாக—மனச்சான்றாக நின்று இறைவனருளும் மெய்யுரை கேட்டபின், அவனது அதிகார முத்திரையோடு வெளியுலகம் செல்லுதல் வேண்டும். அப்பால் நோய்களும் துயரங்களுமலிந்த ஜனசமூகத்திற்குப் பணிசெய்ய முற்படுதல் வேண்டும். இத்தகைய பணியினாலேதான் எண்ணரும் துன்பத்துள் வைகும் மக்களுக்கு சாந்தியும ஆனந்தமு முண்டாகும்.

---

# சொல்லுதல் யார்க்கு மெளிது.

"கோல்டன்ரூல்" மாசிகையில் டாக்டர் போன்ஸ் எழுதுவது.

உலகம் அபிவிருத்தியடைந்து வருகின்றது. ஸ்தூல விஷயமான அபிவிருத்தியோடு சூக்ஷும ஞானத்திலும் நவீன உலகம் முன்னேறி வருகின்றது. வாழ்க்கையின் பல துறைகளையும் வளமுறச் செய்வதற்கு—வனப்புறச்செய்வதற்கு மக்கள் பல்வேறு உபாயங்களைக் கண்டுபிடித்து வருகின்றார். பொருளிலும் போகத்திலும் ஈடுபட்டிருக்கும் நவீன மக்களது உள்ளம் இப்பழைய முறைகளில் செழிப்படைந்து வருகின்றது. கல்வியின் பல துறைகளுங்கூட விசேஷ அபிவிருத்தி யடைந்து வருகின்றன.

இப்பொழுது உலகமிருக்கும் நிலையில் மக்கள் அடையுங் கல்வி பெரும்பாலும் அனுபவ ஞானத்துறையில் பயனற்றதாகுமென்பதே நல்லறிவாளர் துணிவு. வாழ்க்கைப் போரில் வெற்றிசூடவேண்டுமென்று ஆண்டாண்டுதோறும் முயன்று முயன்று தவறி விழும் கல்விமான்கள் தொகை சிறிதன்று. இவர்களெல்லாம் பெருஞ் சக்திகளைத் தம்மகத்தே தாங்கிய ஆண்களும் பெண்களுமாவர். எனினும் இவர்களால் இத்தகைய சூக்ஷும

சக்திகளை வெளியிட முடியவில்லை. இங்ஙனம் உள்ளத்தே பொதிந்துள்ளசக்தி வெளியேறி வினையாற்றாது தடுக்கும் விரோத மான இடையூறு எது? இவ் இடையூற்றினை மோதி மிதித்து விட்டால் சூக்கும சக்திகள் தாமே தட்டுத்தடையின்றி வெளிப் பட்டு வினைபுரியு மென்பதிலையமில்லை.

நாம் செல்லும் நெறியில் இடையூறாக நிற்பது நம்மைப் பற்றிய அறியாமை யொழியப் பிறிதொன்றுமில்லை. வாழ்க்கை யாகிய நெறியில் யாத்திரை செய்வோர் தங்கள் பிரயாணத்திற் குத் தங்களைத் தயார்செய்துகொள்ள வேண்டுமன்றோ? முன் னாளில் இதைக் குறித்து நாம் அறிந்திருந்ததைக் காட்டிலும் இப்போது அதிகமாக அறிந்துள்ளோம். நமது செயல்களை உருவாக்கும் சக்திகளைப் பற்றிய அறிவு முன்னினும் அதிகமாக இப்போது மக்கள்பால் காணப்படுகின்றது. மக்களின் பல வேறு நிலைமைகளுக்கும் உரிய காரணங்களைப்பற்றிய அறிவும் இப்போது அதிகமாக மக்களிடையே வளர்ந்து வருகின்றது.

இரசாயன சாஸ்திரி பலவேறு பொருள்களையும் பாகுபாடு செய்கின்றான். அவற்றைப் பிரித்துப் பிரித்து அவ்வவற்றிற்குரிய மூலாதார நுண்பொருளைக் காண்கின்றான். அவ்விதமே நாமும் நமது வெற்றி தோல்விகளின் காரணங்களைப் பகுத்தாராய்ந்து இவை யிவை யென்று வரையறுத்துச் சுட்டிக் காட்டுதல் கூடும். காரணத்தை யொருதரம் கண்டுகொண்டால் அக்காரணத்தி னின்று விளையுங் காரியத்தில் அறிவோடு தலையிட்டு வெற்றி பெறுகின்றோம். எப்போது முன்னேறிச் செல்வது? எப் போது சமயோசிதமாகப் பின்வாங்கி நிற்பது? இவற்றைக் குறித்து நாம் அறிந்துகொள்ள முயலவேண்டும்.

முடிவு—பயன்—சித்தி இதுவே வெளியுலகம் வேண்டி நிற்பதாகும். எனவே மெய் அறிஞன் ஏதாவதொரு நற்பயனை—சித்தியை செயலில்காண்பிக்க முற்படுகின்றான். மூடனோ வெறும் பேச்சில் பொழுது போக்குகின்றான். சில வேளைகளில் மூடன் பேச்சு, திறமை வாய்ந்ததாகவும் இருக்கும். ஆனால் சொற் களைச் செயல்களால் ஆன் செய்ய மாத்திரம் மூடனுக்கு ஆற்ற லில்லை.

எதிர்காலக் கல்விமுறை சொற்களைப் பார்க்கிலும் செயலையே போற்றுவதாகும். வீண் விவரங்களாலும், விதண்டாவாதங் களாலும் பயனில்லை. அதிமுக்கியமான செயலொன்றைச் செய் வதே முக்கியமானது. பேச்சாளர்களையெல்லாம் அடக்கி வைப்பவன் செயல் திறம் வாய்ந்த ஞானேயாவன். இவன் எப்போதும் முன்னேறிச் சென்று ஏதாவதொரு பெருஞ் செய லைச் செய்தே தீருவான். வெறுஞ் சொற்பொழிவாளரோ, தமக் கென ஏற்பட்டுள்ள கடமைகளையும் செய்ய முடியாமல் திண் டாடுகின்றார். காரண மென்னை? 'சொல்லுதல் யார்க்கு மெளிது'.

வாசகர்களே! நீங்கள் சிறிது தற்சோதனை செய்து பாருங் கள். அதிகம் பேசும் வழக்கம் உங்கள்பால் காணப்படுகின்றதா? அனுவசியமாக நீங்கள் சொல்லம்புகளைச் சோனு மாரியாகப் பொழிவதுண்டா? பேச்சே புருஷார்த்தமெனக் கருதுவ துண்டா? அப்படியானல் நீங்கள் உங்கள் வாழ்க்கை யின் பெரும் பகுதியினையும் இழந்துவிடுகிறீர்கள். செயலே பெரி தென்று உறுதிகொள்ளுங்கள். பேச்சாளர் பேசிக்கொண்டே யிருக்கலாம். ஆனல் செயல் திறம் வாய்ந்த கருமவீரரோ செயற்கரும் செயல்கள் செய்வதிலேயே கண்ணுங்கருத்துமா யிருக்கின்றார்.

---

## சதங்கையொலி.

---

### சும்மா இரு.

இத்தகைய தலைப்பெயரோடு ஒரு கிருபர் 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜ ய'த்தில் ஓர் சிற்றுரை வரைந்துள்ளார். இதில் சில அரிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றின் சாரம் வருமாறு:—

"சும்மா இரு என்பது அருணகிரி நாதரின் அருள் வாக்கு. இதன் புதை பொருள் மிக அருமையானது. இதனை புணர்வதன் முன் சும்மா இருப்பது சுலபமன்றென்பதை நாம் உணர்ந்து கொள்ளல் வேண்டும். சஞ்சலமே மனத்தின் நீர்மை. ஒரு கணமேனும் அமைதியுற்றிருப்பது

மனத்தின் சுபாவமன்று. எண்ணாத எண்ணமெலாம் எண்ணிப் புண்ணுவதே மனக் குரங்கின் நிலைமையாகும். இச்சையைப் பெருக்கி, இச்சையை நிறைவேற்றிக்கொள்வதால் மனம் அமைதிபெற்று இன்பமுறுமென்றெண்ணுவது தவறு. நெருப்பை நெய்யால் அவிப்பதை யொக்குமிது. போகமும், மோகமும் மன அமைதியின் பகைவர். கானலை நீரெனக் கருதுவதுபோல் பொய்யை மெய்யெனக் கருதி அல்லற்பட்டழிவது மக்களிற் பெரும்பாலார் சுபாவமா யிருக்கிறது. எனவே, மனத்தை இத்தகைய பந்தத்தினின்றும் விடுதலை பெறச் செய்வது அவசியமாகும். இதுதான் சும்மா இருக்கும் நிலை. இந் நிலைமைக்கு வேண்டுவன எவை? தீவிர ஞானம், நிறைந்த வைராக்கியம், அளவற்ற மனேசக்தி, ஆன்ம சக்தி, ஈசுவர பக்தி, இறைவன் திருவருள், தன்னடக்கம் ஆதியன. இத்தகைய குண விசேஷங்களோடு சும்மா இருக்கப் பழக வேண்டுமென்பது அருணகிரியார் கருத்து. இதனாலன்றே ஞான யோகியாகிய தாயுமானவர், "ஐயா அருணகிரியப்பா உனைப்போல—மெய்யாக ஒரு சொல் விளம்பினர் ஆர்" என்று கூறுவாராயினர்.

இக் குறிப்புக்களை வாசகர் நன்கு சிந்தைசெய்து தெளிவெய்துவாராக.

## தூர சம்பாஷணையும் மறுலோகச் செய்திகளும்.

'ப்ரொக் ரெஸிவ் திங்கர்' என்ற பத்திரிகையில், மறுலோகச் செய்திகளை தூரசம்பாஷணை வாயிலாக அறிவதைக் குறித்து ஓர் கட்டுரை காணப்படுகின்றது. இதன் சாரம் வருமாறு:—

மறுலோகச் செய்திகளால் நாம் அறிவது எது? மக்களுக்கும் உலகத்திற்கும் உள்ள தொடர்பினை அறிவிப்பதே இச் செய்திகளின் முக்கிய நோக்கம். உயிர் வாழ்க்கை இம்மையிலிருப்பது போல மறுமையிலும் தொடர்ந்து செல்வதென்று இத்தகைய ஆராய்ச்சிகள் வற்புறுத்துகின்றன. மரணவாயிலாக மறுலோகத்தில் பிரவேசித்தவர்கள் தத்தமக்குரிய சிறப்பியல்புகளோடு தத்தம் குணாதிசயங்களுக்கேற்ப அவ்வுலகங்களில் வாழ்ந்து வருகின்றார். நாம் பல வேறு உருவினராக—பலவகை விசேஷ குணங்களோடு வாழ்கின்றோமெனினும், இறையுயிர், இறையுளம் என்னும் தெய்விக பந்தத்தால் சகோதராராகின்றோம். புறமனத்தில் வேற்றுமை காணப்படினும் உள்மனத்தில் ஒற்றுமை காணப்படுகின்றது. உள்மனத்தின் அபாரசக்திகள் இன்னும் நன்கு ஆராயப்படவில்லை. உதாரணமாக, தூர சம்பாஷணை என்பது இத்தகைய சக்திகளிலொன்று. மனத்தோடு மனம் கலந்துரையாடுவதே தூரசம்பாஷணையாகும். இதற்கு

உடல் ஓர் தடையாவதில்லை. இவ்வுலகில் தூரசம்பாஷணை நடைபெறுவது போல மறு உலகத்திற்கும் இவ் உலகத்திற்குங் கூட, 'தூரசம்பாஷணை' என்னும் பெயர் வாய்ந்த தந்திக்கம்பி அமைந்துளது. இவ்விஷயத்தைக் குறித்து நிபுணர் ஆராய்ந்து வருகின்றார். ஆவேச பீடங்களாக இருப்பவர் தூர சம்பாஷணையால் மறுலோகச் செய்திகளை அறிகின்றனரா அல்லது, வேறு வகையில் அறிகின்றனரா? இவ்விஷயமும் ஆராய்ச்சியில் இருந்து வருகின்றது. மறுலோகத்திலும் மூடசிகாமணிகளுண்டு. இவர்கள் ஆவேச பீடங்கள் வாயிலாகப் பொய்யும் பிரட்டும் அனுப்புவதுண்டு. பகுத்தறிவு கொண்டு இச் செய்திகளை நன்கு பரிசோதித்தல் வேண்டும். செத்தவரெல்லாம் தேவர்களல்லர்; பிசாசுகளுமல்லர். தேவர்ளும் பிசாசுகளும் மறு உலகிலேதான்—மறுமைவாழ்விலேதான் காணப்படுகின்றனர் என்பதுமில்லை. இவ்வுலக வாழ்விலும் மக்களிடையே தேவர் இருக்கின்றார்; மக்களுருக்கொண்டமைந்த பேய்பிசாசுகளும் இருக்கின்றனவன்றோ? இத்தகைய உண்மைகள் பல, சூக்கும சாஸ்திர ஆராய்ச்சியால் வெளியிடப் பெறுகின்றன.''

இத்தகைய ஆராய்ச்சிகள் நமது நாட்டிலும் நடைபெற வேண்டும் என்பது எமது விருப்பம். இவையே சமய உண்மைகளின் உரை கல்லாகும்.

## வாழ்க்கையும் சர்வ கலாசங்கமும்.

கல்கத்தா சர்வகலா சங்கப்பட்ட அளிப்பு விழாவில் உதவி அத்யட்சகராகிய ஆசிரியர் பதுநாத் சர்க்கார் செய்த பிரசங்கத்தில் பற்பல விஷயங்களைப் பேசி முடிவில் சர்வகலாசங்கம் உலக வாழ்க்கைக்கு எவ்விதம் சாதக மளிக்கக்கூடுமென்று பேசினர். அவர் சொன்னதன் கருத்தாவது:—

வித்வான்களாக விருக்க விரும்புவோருக்குச் சர்வகலா சங்கம் உண்மையை அறியவேண்டு மென்னும் தாகமும் அதற்கேற்ற அமைதியும் ஒழுக்கமும் புத்தி சாதுர்யமும் பயிலுவிக்கிறது.

ஜாதி மதம் வருப்பு சீதோஷ்ண நிலைமை முதலியவற்றில் என்ன வித்யாசங்கள் தென்படினும் வாழ்க்கையில் அடிப்படையான அம்சங்களிலும் தத்துவங்களிலும் ஒருவித பேதமும் காணப்படுவதில்லை. மனித சமூகம் ஒரேவிதமான தென்பதை யறிந்து அதன் பிரகாரம் நடக்கத் தவறிய எந்த தேசத்தவரும் முன்னேற்ற மடைந்ததாக எச்சரிதமும் கூறியது கிடையாது. ஒரு தேசத்தில் ராஜ்ய விஷயமாயினும் வேறெவ்வழியிலுமாயினும் யாவருக்கும் ஒரே சட்டம் சமமான உரிமை என்றிருந்தால்தான் அபிவிருத்தியடைவது சாத்யமாகும். இவ்வித தேச முன்னேற்றத்திற் கவசியமான வழியில் மாணக்கரை பயிலுவிப்பதே ஒவ்வொரு சர்வகலா சங்கத்தின் நோக்கமாயிருக்க வேண்டும்.

---

உ

சிவமயம்.

# "குமரன்"

KVC0009

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௬. { காரைக்குடி
பிரபவ-௵ சித்திரை-௴ } மணி ௭.

## பிள்ளைத் தமிழ்.

மக்கட்குரிய பருவங்களில் சிறப்புற்று மிளிர்வது பிள்ளைப் பருவமேயாகும். பகைவரென்றும், நட்டாரென்றும் உணராது எல்லாரையும் ஒன்றாகக்கருதி விளையாடும் பிள்ளைப்பருவம் எவ்வளவு சிறப்புடைத்து! ஆடவர் மகளிர், பெரியார் சிறியார், நல்லவர் கெட்டவர் என்ற பேத உணர்வு சிறிதுமின்றி யாவரையும் சமமாக எண்ணி, இன்முகங்காட்டிப் புன்முறுவல் கொள்ளும் தன்மைதான் என்னே! பச்சிளங்குழந்தையரின் தண்ணளியும் இன்முகமாகிய செந்தாமரை மலரினை, வஞ்சம், பொறாமை, அகங்காரம் எனும் வெம்மைகள் தாக்கிக் கருக்குவதில்லை. இவ்வெப்பநோய்கள் சின்னஞ் சிறு குழந்தைகளின் களங்கமற்ற புன் முறுவலின் முன்னே ஆற்றலழிந்து புறமிட்டோடுகின்றன. அன்றலர்ந்த செந்தாமரையாக விளங்கும் செல்வக்குழந்தைகளின் பெற்றியை உணர்ந்தின்புறாத உள்ளமும் உள்ளமோ? இத்தகைய பொற்குழவியினை யெடுத்து முத்தமிடாத மக்கட்கு உலகவாழ்வில் பிறிதோர் இன்பமுண்டோ? அன்றலர்ந்த செந்தாமரையாக விளங்கும் செல்வக் குழந்தைகளின் விளையாட்டினைப்பற்றி யெடுத்துரைக்காத கவிகளும் இலர். பேத உருவாக விளங்கும் இந்த உலகில், ஜாதிபேதம், சமயபேதம், பருவபேதம், ஏனைய உயர்வு தாழ்வுகள் எனும் பேத உணர்வு சிறிதுமில்லாத வாழ்வு வாழ்வோர் யாவர்? வானந்துளங்கிலும் மண் கம்பமாயினும், தானந்

துளங்கித் தலைதடுமாறினும் களங்கமற்ற புன் முறுவலுடன் சிரித்து விளையாடும் குழந்தைப் பருவத்தின் பெருமை யென்னே! கவலையற்ற, களங்கமற்ற இன்பவாழ்வே உலகவாழ்வின் மணிமுடியாக விளங்குவது. அவ்வாழ்வினைத் தனிமுடி கவித்தாளுகின்ற இளங்குழந்தைகளை யாரே புறக்கணிக்கமுடியும்? குழந்தைகள் தெய்வத்தன்மை பெற்று விளங்குவதும், தெய்வங்களைக் குழந்தையாகப் பாராட்டி வணங்குவதும் கபடமற்ற-பயமில்லாத பக்தி செலுத்துவதற்கு இறைவனைக் குழந்தைவடிவினனாகக் கொண்டு போற்றுவது சாலச்சிறப்புடையது என்பது பேரறிஞர் கொள்கையாகும். கண்ணன், முருகன் முதலிய தெய்வங்கள் குழந்தைப்பருவத்திற் போற்றப்படுகின்றனர். மதுரை மீனுக்ஷியும் ஞானசம்பந்தப் பெருமானும் குழந்தைப் பருவத்தில் சிறப்புறத் திகழ்ந்து நிற்கின்றார். தெய்வவணக்கம் செய்வோர் இறைவனைச் செல்வச் சிறு குழந்தையாக எண்ணி வணங்கும் வணக்கம் பெரும்பயன் அளிப்பதாகும். அங்கு அன்பும், இன்பமுமன்றி, பயமும், கொடுமையும் தோற்றுவதில்லை. நமது செந்தமிழ்க் கவிஞர் பலரும் பக்திச்சுவை கனி சொட்டச் சொட்ட இறைவனையும், இறைவியையும் சிறு குழந்தையாகக் கொண்டு பாடியிருக்கின்றனர். பன்னூலாரும் பாடியிருப்பினும், பிள்ளைத்தமிழ் எனும் சின்னூலே சிறப்பாகப் பிள்ளைப்பருவத்தின் பெற்றியை இனிது எடுத்துரைப்பதாகும். பிள்ளைத்தமிழ் பாடியவர் பிள்ளைத் தமிழாகவும் பாடினர்; வாலிபத்தமிழ், கிழவன் தமிழாகப்பாடினரு முண்டு. பிள்ளைத்தமிழ்பாடினோர் பிள்ளைப்பருவத்தில் நின்று பாடாமல் வயோதிகப் பருவநிகழ்ச்சியினையும் பாடுவாராயினர். செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழில் பெரும் பகுதி பிள்ளைத்தமிழாகவே பாடப்பட்டுள்ளது. மணங்கமழ் தெய்வமாகிய முருகக் கடவுளைச் சிறுகுழந்தையாகக் கொண்டு ஒருபொழுது நிகழ்ந்த செயலைப்பற்றிக் கூறும் அருங்கவி வருமாறு:—

என்னைத் தனைவர் அருபசிக்கு
மிரங்கிப் பார்த்து நெருபண்டி
வெக்கிக் குழறைந்து மனிர்தவர்வா
ய்... குனித்து விழித்தழுத

துள்ளித் தடிந்துப் புடை பெயர்ந்து
தொட்டி லுதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத்
தோளின் மகரக் குழைதவழ
மென்னத் தவழ்ந்து குறுமூரல்
விளைந்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டு முமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

இப்பாட்டின் கடைசி அடியின் ஒருபகுதி தவிர எனைய வெல்லாம் குழந்தைக் குமரன் திருவிளை யாடலைப் பற்றிக் கூறப்பட்டனவேயாகும். இவ்வொருபாட்டில் முக்காலே மூன்று வீசம் பாட்டு குழந்தைப் பருவத்தைப் பற்றியதன்றோ? பச்சிளங் குழந்தை செய்யும் செயலில் நுழைந்து ஈடுபட்டு நுட்ப உணர்வோடு பாடும் பாடலே உயிருள்ளபாடலாகும். இம்மாதிரியான செய்யுட்கள் இன்னும் பலவுண்டு. முரு.

---

# ஸ்ரீ ஞானசம்பந்த விஜயம்.



பண்டித சி. வீரபாகு பிள்ளை.

வம்புஅறு வரிவண்டு மணம் நாற மலரும்
மதுமலர்நற் கொன்றை யான் அடி அலால் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்.
—தேவாரம்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற் புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.
—பெரியபுராணம்.

உலகநங்கை தன் அழகு ஒழுகும் மேனியிலே போர்த்திருந்த இருட் போர்வையைச் சிறிது சிறிதாக நீக்கிப் பின்முற்றமாகநட்டிக் கீழே எறிந்துவிட்டுக் கண்முட்ட வளம் படைத்த காட்சியெல்லாம் தோன்ற விளக்கிவிட்டாள். அந்த விடியற்காலையிலேயே சூரியச்செம்படவனும் தன்வெள்ளைக் கதிர்வலைகளைவீசி இரவு எல்லாம் நீலவானக்கடலிலே மிகுந்தசோபையோடு விளங்கிய மீன்களை எல்லாம் பிடித்து வலை வளம் கிடைத்த மகிழ்ச்சியால் கீழ்த்திசையிலே பொன் ஒளி சிந்திப் புறப்படுகிறான். வானளாவிய மரங்கள்—செடி கொடிகள்-பச்சைப் பசேல் என்ற வயல்கள்—கதிரொளியைக் கலந்து பொன் நிறமாகி விட்டன. இடை இடையே வெள்ளைப் பூக்கள் உதிர்ந்த பசும் புல்தரை நக்ஷத்திரங்களை அணிந்த நீலவானத்தை நினைப்பூட்டுகின்றது. குளங்களிலே தாமரை மலர்கள் தம் சிவந்த மெல்லிய இதழ்களைப் பசிய இலைகளிலே விரித்து அழகாக விகசிக்கின்றன. பொதியத் தென்றல் மலர்களின் மணத்தை அளைந்து மெல்லென வீசுகின்றது. அந்நேரத்திலே,

"வானில் பொலிவு எய்தும் மழைமேகம் கிழித்து ஓடிக் கூனல் பிறைசேரும், குளிர்சாரல் கொடுங் குன்ற" த்திலிருந்து மதுரைக்குச் செல்லும் பாதையிலே ஸ்ரீ ஞான சம்பந்த மூர்த்திகள் எண்ணுக்கடங்காத அடியார்களோடு வந்துகொண்டிருக்கிறார். அவர் ஏறிவரும் முத்துப்பல்லக்கு, அவருக்கு நிழல் செய்யும் முத்துப் பந்தல் கொள்ளைக்கதிர் பரப்பிப் பிரகாசிக்கின்றன. அடியார்கூட்டத்தின் நடுவிலே சம்பந்த சரணாலயர் பிராதக்காலமாகையால் தெய்வம்மணக்கும்தேவாரப்பாசுரங்களை அமுதவர்ஷம்போலப் பாடுகிறார். அவர் ஒரு பாசுரம் பாடி முடிந்ததும், திருநீலகண்டப் பாணர்பிரான் அப்பாசுரத்தை யாழில் அமைத்துப் பாலொடுதேன் கலந்தாற்போல வாசிக்கிறார். இந்த இருவகைத் தோமிருதங்களையும் அள்ளி விழுங்கிஅடியார்கள் எல்லாம் வசப்பட்டு லயப்பட்டுப் போய்விட்டார்கள். அவர்கள் ஹிருதயமோ சிற்றலைகளில் அசைந்தாடும் தாமரைமலர் போலவும் நெருப்பில் நெகிழ்ந்து உருகும் வெண்ணைப் போலவும் பொன்போலவும்

ஆகிவிட்டது. மனோலோகத்திலே சித்திரத்துக்குமேல் சித்திரம் எழ அவர்கள் எல்லாம் ஆனந்தப்பெருக்கிலே தங்களையே மறந்து செல்லுகிறார்கள். "விரிதிகழ் விழவின் பின் செல்வோர் பாடல் வேட்கையின் வீழ்ந்தபோது அவிழ்ந்த புரிசடைத்துருக்கும்" பூவணத்து ஆவணவீதி ஆயிற்று அப்பாதை.

இப்படிச் சென்றுகொண்டிருக்கும் பொழுது நிகழ்ச்சியொன்று அவர்கள் போவது தடைப்பட்டது. வழியிலே ஒரு பெரியவர் அடியற்ற மரம்போல விழுந்து கைகுவித்து வணங்குகிறார். அவர் நெற்றியிலே நீறு மணக்கின்றது. மார்பிலே கண்டிகை அணிந்திருக்கிறார். கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப்பெருகி வழிகிறது. அவரைத் தெரிந்தவர்களும் அந்தக் கூட்டத்தில் இரண்டொருவர் இல்லாமல் இல்லை. அவர்கள் அவரைப்பார்த்ததும் 'இவர்நெடுமாற மன்னனது முதல்மந்திரி; நம்பெருமானை எதிர்கொண்டு அழைக்க வந்திருக்கவேண்டும்' என்றார்கள். அடியார்கள் எழுந்தருளும்படி அவரை எவ்வளவோ வேண்டியும் அவர் எழவில்லை. இதற்குள் சிவிகையில் இருக்கும் சம்பந்தப்பெருமானுக்கு விஷயம் தெரிந்துவிட்டது. பிள்ளைத்தெய்வம் சிவிகை விட்டிறங்கிப் பாததாமரை நோவ வந்து மந்திரத்தலைவரை அடைந்து 'அன்பு மிக்க குலச்சிறையே எழுந்திரும்.' என்று கூறித் தம் மெல்லிய கைகளால் அவரை எடுத்தார். மந்திரி எழுந்தார். தம் மனக்கோயிலிலே இதுவரையும் வைத்து வழிபட்ட பால கௌண்டின்ய திலகம் நிற்கின்றது. மெய்ம்மயிர் பொடித்தது; கண்ணீர் ஒழுகுகிறது; விதிர் விதிர்த்து மீளவும் விழுந்து வணங்குகிறார். குமார மூர்த்தி தம் மெல்லிய கரங்களால் அவரை எடுத்துத்தழுவி க்ஷேமம் விசாரித்தார். அதற்குக் குலச்சிறையார்,

"சென்றகாலத்தின் பழுதிலாத்திறமும் இனி எதிர்காலத்தின் சிறப்பும்
இன்று எழுந்தருளப் பெற்றபேறு; இசனால் எற்றைக்கும் திருவருள் உடையோம்;
நன்றி இல் நெறியில் அழுந்திய நாடும் நல்தவ வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற்று ஒளியினில்விளங்கும் மேன்மையும்படைத்தனம்"

என்கிறார்.

மதுரை நகரம் தெரிகிறது. அந்த நகரமோ காவற்காடும் கன்மலர்ச் சோலையும் சூழ்ந்து ஒருமரகத மலைபோலத் தோன்றுகின்றது. அதன்கண் உள்ள சோமசுந்தரக்கடவுளது கோயில் கோபுரங்களில்வைத்த தங்க ஸ்தூபிகளும், திசையானை சுமக்கும் பொன் விமானமும், அரண்மனைவாயில் மாடத்தின்மேல்வைத்த சுவர்ணக் குடங்களும், சங்கமண்டபத்துப் பொற்கலசங்களும் அந்தப் பச்சைமணி மலையைக்கிறிச்செய்த தங்கப்பணிகள்போலப் பிரகாசிக்கின்றன. சம்பந்த மூர்த்தி அந்நகரைச் சுட்டிக் கந்தருவகான இன்பம் நிலவுலகத்துக்கு வந்ததுபோல,

மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை, வரிவளைக்கைம் மடமானி,
பங்கயச் செல்வி, பாண்டிமாதேவி, பணிசெய்து நாள்தொறும் பரவ,
பொங்கு அழல்உருவன், பூதநாயகன், நால்வேதமும்பொருள்களும் அருளி
அங்கயல் கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய், ஆவதும் இதுவே

வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன், வெள்ளைநீறு அணியும்
கொற்றவன் தனக்கு மந்திரி ஆய குலச்சிறை, குலாவிநின்று ஏத்தும்
ஒற்றை வெள்விடையான், உம்பரார் தலைவன், உலகினில் இயற்கை
ஒழிந்திட்டு
அற்றவர்க்கற்ற சிவன் உறைகின்ற ஆலவாய் ஆவதும் இதுவே!

என்று, பொதியமலை இன்னும் ஒருமுறை உருகும்படி, கேட்ட உயிர்ப்பொருள்களின் ஜீவநாடிகள் தோறும் சிவானந்தப் பெருந்தேன்வெள்ளம் நுழைந்து கலக்கும்படிபாடுகிறார். சேதுமுன்றுறையில் கடல் ஒலி அவிந்ததுபோல சராசரமனைத்தும் அந்த வேதகீதத்தைப் பருகிச் சித்திரம்போலாகிவிட்டன. பதினொரு பாசுரமும் பாடி முடிந்தாலும் இன்னும் அந்தக் கானரசத்தின் சுவை தெவிட்டாமல் இன்புறுத்திக் கொண்டுதானிருக்கிறது. பாணர் பிரானுக்கு அந்தக்கீதப்பெருக்கைத் தம்யாழில் இட்டு வாசிப்பதற்கு நெடுநேரம் வேண்டியதிருந்தது. அதில் லயப்பட்ட மனம் தமக்குத் திரும்பவும் வந்தாலல்லவா வாசிக்க முடியும்? பின் சம்பந்த மூர்த்திகள் சிவிகையில் ஏறிக் குலச்சிறையார் பக்கத்தில் வணங்கிவர அடியவர்கள் சூழ, விருதாவளி கூறச், சின்னம் ஒலிக்கப் புறப்பட்டு வருகிறார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கோட்டை வாசல் புலனாகிறது; வாசலோ,

> மேருவை நிறுத்தி, வழிசெய்தது கொல்! விண்ணோர்
> ஊர்புக அமைத்தபடி கால் கொல்! உலகு ஏழும்
> சோர்வு இல நிலைக்க நடுஇட்டதொரு தாணோ!
> நீர்புக கடற்கு வழியோ!

என்று சொல்லும்படி இருக்கிறது. சம்பந்த மூர்த்திகள் அந்தப் பெருவாயிலைக் கடந்து நகரத்துக்குள் வந்துவிட்டார். நகரமோ "ஆயிரம் கண்ணோன் அருங்கலச் செப்பு வாய்திறந்தாற்போல" அவ்வளவு ரமணியமாக இருக்கிறது. சுவாமிகளும் அடியார்களும் இப்பொழுது நிலமகள் முடியில் தரித்த மணிமகுடம் போல விளங்கும் சோமசுந்தரக் கடவுள் கோயிலுக்கு வருகிறார்கள். பிள்ளைப் பெருமான் பல்லக்கை விட்டிறங்கித் தாயை நினைந்த கன்றைப் போல நேராக ஆலயத்துக்குள் சென்று எல்லார்க்கும் முன்னே தோன்றி முளைத்த மூலலிங்கத்தைத் தரிசித்துத் திருவிருக்குக்குறள் பாடி இன்புற்று வெளிவருகிறார்.

அந்நேரம், மந்திரியார் இவர்வரவை ஆவலோடு நோக்கித் தன்னையே மறந்து நிற்கும் பாண்டிமா தேவியைக் காட்டுகிறார். தம் செல்வப் பிள்ளையைக் காணாதபோழுதே அப்பிள்ளையின் செயல்களைக் கேட்டுப் பால்சுரந்த அம்மைக்கு நேரில் காண நேர்ந்தால் அவள் ஆனந்தத்துக்கு எல்லை ஏது? மதுரை நகரைக் கண்டதும் தம் தாயை நினைந்து பாசுரம் பாடிய பிள்ளைக்கும் அத் தாயை நேரில் பார்த்து விட்டால் அந்த மகிழ்ச்சிக்கு இணை இல்லை. பாண்டிமாதேவி கண்ணீர் பெருகத் தம் செல்வக் குமரனை வணங்குகிறாள். பேச முடியவில்லை; கடைசியாக வற்றாது பெருகிக் கொண்டிருக்கும் கண்ணீருக்கும் கம்பலைக்கும் இடையிலே "என் செல்வமே! யானும் என்பதியும் செய்த தவம் யாது?" என்றாள். அதற்கு அந்த நல் சூர்ந்தாள் செல்வ மகனும் "பரசமயத்தவர்கள் இடையிலே அன்பு குன்றாதிருப்பது அரிது; அவ்விதம் இருந்த உம்மைக் காண வேண்டுமென்றே என் அம்மே! இங்கு வந்தேன்" என்றார். அதைக்கேட்டதும் தாய்க்கு

மேனி எல்லாம் மயிர்க்கூச் செறிந்து விட்டது. பேச நா எழ வில்லை. ஆராத மகிழ்ச்சியால் தன் மகனைத் தழுவிக் கொண் டாள்—உச்சி மோந்தாள்—முத்தமிட்டாள்—பழந்தனம் இழந் தன படைத்தவரை ஒத்தாள்—குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள். தன் குறையெல்லாம் இன்றோடு தீர்ந் தது என்று அவள் மனம் பூரித்துவிட்டது. இதனிடையே குலச்சிறையார் திருமடத்துக்கு எழுந்தருள வேண்டாமா? என் றார். அதுகேட்ட குமாரமூர்த்தி தம் தாயிடத்தில் அரிதில் விடை பெற்றுக்கொண்டு சென்று தமக்கென அமைத்த திருமடத்தில் எழுந்தருளி இருந்தார். அரசியும் அரண்மனை போய்ச்சேர்ந்தாள்.

அன்று இரவு இருள் கிள்ளிவிட்டுக் கிட்டத்திலிருந்தாலும் தெரியாது. நக்ஷத்திரங்களும்கூட வானத்தில் பரவிய கரியமேகத் தில் மறைந்து கொண்டன. 'கருகுமையிருளின் கணம் கட்டுவிட்டு உருகுவது' போலிருந்தது. 'ஆலோகத்தின் அபாவமே இருள்' என்று வாதிக்கும் சமயத்தவர்களும்கூட இன்று இவ்விருளைப் பார்த்தார்களானால், அந்த வாதத்தைக் கட்டோடுவிட்டு விடுவார் கள். இப்பொழுதுதான் நாழிகைக் கணக்கன் நாழிகை வட்டிலைக் கொண்டு அறிந்து அறிந்து இருபது நாழிகை என்றான். அவன் சொல்லி வாய் மூடவில்லை. ஞானசம்பந்தமூர்த்தி தங்கி இருந்த திருமடம் நெருப்புப்பற்றி எரிகிறது. அங்கிருந்த அடியார்களெல் லாம் அந்நேரம் தூக்க மயக்கத்தோடு "தீ! தீ! ஐயோ! தீ!" என்று கதறிக்கொண்டு நாலாபக்கங்களிலிருந்தும் வெளியே ஓடி வருகிறார்கள். காற்றும் கூடிவிட்டதால் நெருப்புச்சுவாலை கொந் தளித்துக்கொண்டு பாவுகிறது. மூங்கில் வரிகள்—கைகள்—சட்டங் கள் எரியும்பொழுது சட சட வென்று வெடிக்கின்றன. தென் னோலையால் வேய்ந்த திருமடம் முழுதையும் க்ஷணநேரத்தில் அக் கினி வெள்ளம் மூடிக்கொண்டது. எரிமலையின் கர்ப்பத்திலிருந்து வெளிப்படுகின்ற நெருப்புக்கற்களைப்போலத் திக் கங்குகள் திசை யெல்லாம் பறக்கின்றன. மேலெல்லாம் தீத்தழல். கீழெல்லாம் புகைக்குழம்பு. ஜ்வாலைகள் மேல் நோக்கி எழுவதைப் பார்த்தால் நெருப்பிட்ட தீயவருக்கு உதவியாக இருந்து நக்ஷத்திரங்களைப் பொதிந்துகொண்ட மேகங்களை உண்ணச் சீறி எழுவது

போலத் தோன்றும் வெண்ணிறப் புகையும், கருநிறப் புகையும், மண்டிப்பரந்து வெளிக்கு நல்லவர்கள்போல நடித்த சமணர்கள் து செயல்தான் இது என்று காட்டிவிட்டன. தீயின் குமுறுதலையும் அடியார்களின் கூக்குரலையும் கேட்டுத் திரள் திரளான ஜனங்கள் வந்துகூடிவிடுகிறார்கள். நெருப்புப்பெருமலைபோலத்திருமடம் தீஎரி வதைக்கண்டதும் அவர்களைத் திகில் மூடிக்கொண்டது. சிலர் நெருப்பை அணைக்கப் பலவாறு முயன்றார்கள். ஒன்றும் பயனில்லை.

இந்தப்பெருங் கலவரத்தில் ஞான சம்பந்தப் பெருமானது கலங்காத நெஞ்சும் கலங்கிவிட்டது. அடியார்கள் படும்அவஸ்தை யைக் கண்டதும் அவர்மனம் சகிக்கவில்லை; நீராய் உருகிவிட்டது. சிவபெருமானை வணங்கித் திருவாய் மலர்ந்து,

செய்யனே! திரு ஆலவாய் மேவிய
ஐயனே! அஞ்சல் என்று அருள்செய் எனை;
பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்
பையவே சென்று பாண்டியற்கு ஆகவே.

என்றுபாடுகிறார். அவரது நாலாயிரத்து நூற்று நாற்பத்தோரு பாசுரங்களிலே இப்பாசுரம் ஒன்றுதான் அவரது அச்சத்தைக்காட்டி நிற்பது. பாசுரம் முடிந்ததோ இல்லையோ அந்த அக்கினிப் பெருவெள்ளம் குண்டோதரன் வாய் புகுந்த வைகைப் பெருவெள்ளம் போலவும், உக்கிர குமாரன் வேல் தைத்த ஊழிக் கருங்கடல்போலவும் போன இடம் தெரியாமல் போய்விட்டது. கண்டவர்களெல்லாம் வியப்படைந்தார்கள். அடியார் மனங்கள் திகில்நீங்கி அமைதியுற்றன. ஊரவரெல்லாம் ஒருங்குகூடி உடனே திருமடத்தைப் பழுது பார்க்கிறார்கள். ஒருவிதம் செப்பனிட்டு முடிந்தது. அவ்விடத்திலே தானே திரும்பவும் ஞான சம்பந்த மூர்த்தியும் அடியார்களும் சென்று தங்குகிறார்கள்.

இங்ஙனம் அநியாயமாய்த் திருமடம் திடீரென்று தீப்பற்றி எரியக்காரணம் என்னவென்று நீங்கள் கேட்பீர்கள். அதைத்தான்

இப்பொழுது சொல்லப் போகிறோம். முடியுடை வேந்தர் மூவருள்ளும் தமிழுடையார் என்று சிறப்பித்துப் பேசிய பாண்டியர் வழியிலே வந்த பாண்டியன் நெடுமாறன் இப்பொழுது அரசாளுகின்றான். அவன் கூனியிருந்தமையால் கூன் பாண்டியன் என்றே பேரும் அவனுக்கு வழங்கியது. இவன், தன்பிராசீனமான சைவ சமயத்தை விட்டு விட்டு சமண சமயத்தைத்தழுவிக்கொண்டான். " மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி " என்பது பழமொழியல்லவா ? குடிகளிலும் பெரும்பாலர் சமண மதத்துக்கு வந்துவிட்டார்கள். அழுத்தமான நம்பிக்கைவாய்ந்த ஒரு சிலரும் அந்தச் சமயத்தில் சேர விருப்பமில்லாதவர்களாயிருந்தாலும்—என்ன செய்வார்கள்—வெளிக்காவது சைன மதத்தவர்போல நடிக்க வேண்டியதாகிவிட்டது.

இப்படி மன்னனும், பிறர் கட்டாயத்தினாலோ பயத்தினாலோ குடிகளும் சமணக்கொள்கையைப் பற்றினாலும் பாண்டியன் பட்டமகிஷியான மங்கையர்க்கரசியும் அவன் முதன் மந்திரியான குலச்சிறையும் அந்தமதத்தைப்பின்பற்ற மறுத்துவிட்டார்கள். தங்கள் சைவ சமயமே ராஜாங்கத்தில் அமர்ந்துள்ளது என்பது அவர்கள் உறுதியான கொள்கை. தம்முடைய பருப்பு எந்தநீரிலும் வெந்துவிடும் என்று நினைத்துக்கொண்டிருந்த ஜைனமதாசாரியர்கள் நம்பிக்கை இவர்களிடத்தில் மட்டும் தவறிப்போய்விட்டது. "போனால் போகிறது இருவர்தானே ! அரசனும் அவன் நாடும் நம் வசத்திலிருக்கும்பொழுது இவர்களால் என்ன செய்யமுடியும்?" என்று அவர்கள் திருப்தி கொண்டு விட்டார்கள்.

நெடுநாள் கழிந்தன. அரசியார் சிவபிரானை நோக்கிச் செய்த தவமோ கோரமானது. அதற்கு எள்ளளவும் குறைந்ததில்லை முதல்மந்திரியின் தவம். இருவர்களது தபோ வலிமையும் என்ன செய்தது ? வேதவனத்திலிருந்த சம்பந்த மூர்த்திகளைத்தான்—அப்பர் மூர்த்தியே போக வேண்டாமென்று தடுத்துங்கூட—மதுரை நகரத்துக்குக்கொண்டு வந்து சேர்த்து விட்டார்.

சம்பந்த மூர்த்திகள் வந்தார்களல்லவா? அவ்வளவுதான், சமணர்களுக்கெல்லாம் வயிற்றெரிச்சல். யானைமலை முதலிய எட்டுமலைகளிலும் வசித்த சமணர்களெல்லாம் மதுரைக்கு வந்து விட்டார்கள். அப்பொழுதே மதுரையில் ஒரு சமண மகாநாடு கூடிற்று. தீர்மானங்கள் அந்தரங்கமாகையால் நமக்குத்தெரியா. பிரதிநிதிகள் அரசனைப்பார்க்கப் போனார்கள்.

அரசன் திருஓலக்க மண்டபத்தில் அவர்களை வரவேற்று உபசரித்தான். பாயினால் உடல் மூடும் அவர்கள் "அரசே! சைவசமயத்தான் ஒருவன் வந்திருக்கிறான்; கண்டுமுட்டு" என்றார் கள். அரசன் கேட்டு முட்டு என்றான்.

"அவன்யார்? அவன் வரக் காரணம் யாது?"

"அரசே அவன் ஒரு சிறுபிள்ளை—ஒரு சின்ன ராட்டு—சீகாழிக்காரனும். சிவனிடத்தில் ஞானம் பெற்றவனும். எங்களை எல்லாம் வாதில் வெல்ல வந்திருக்கிறான். என்னவாதம் வேண்டியிருக்கிறது? அவன் கூடப் பலர் வந்திருக்கிறார்கள். எதற்கோ தெரியாது."

அதுகேட்ட அரசன் பெரிது கவலைகொண்டு அந்தக் குருக்களைப்பார்த்து "அவனையும் அவன்கூட வந்தவர்களையும் விரட்டி-விட வழியில்லையா?" என்றான்.

"வழியா இல்லை. ஒரு மந்திரம் ஜபித்தால் அவன் இருக்கும் விடுதியிலே நெருப்புப் பற்றிக்கொள்ளும். சிஷ்யர்களும் தானும் போன மூலை தெரியாமல் போய்விடுவான்."

'சபாஷ்; இது நல்லயுக்தி! அப்படியே செய்துவிடுங்கள்' என்றான் அரசன்.

சரியென்று அரசனிடம் விடை பெற்றுக்கொண்டு, பிரதிநிதிகள் திரும்பிவிட்டார்கள். சமண மகாநாட்டார் அவர்களுக்கு வாகைமாலை சூட்டிக் கையெறிந்தார்கள். இரவு வந்தது, சமணர்

கள் மந்திரம் ஜபித்தார்கள். பலன் இல்லை. மந்திரங்களுக்கெல்லாம் ஆதியானதும், வேதம் தன் ஹிருதயத்தில் வைத்துப்போற்றுவதுமான திருவைந்தெழுத்தை ஓதுவார்க்கு இவர்கள் பொருளற்ற மந்திரங்கள் யாதுசெய்ய வல்லன? பார்த்தார்கள்; இனி என்ன செய்வது? அரசனுக்குத் தெரிந்தால் தம் விருத்தி போய்விடும் என்று கலங்கினார்கள். கடைசியில் அவர்களுக்கு ஒரு முடிவு தட்டுப்பட்டது. மந்திரமும் வேண்டாம் மாயமும் வேண்டாமென்று கொள்ளிக் கட்டைகளோடு மெள்ளப்போய் யாரும் அறியாதபடி அந்த நள்ளிரவிலே திருமடத்தில் தீவைத்துவிட்டார்கள்.

இது என்ன விபரீதம்? ஜீவகாருண்யமே தங்கள் சமயத்தின் பிரதான கொள்கையாக உடைய சமணர்கள் இந்தப் பாதகச் செயலைச் செய்வார்களா? என்று நீங்கள் நினைக்கலாம். அதெல்லாம் பண்டைக்காலம். இப்பொழுது அவர்கள் மதமே சீர்குலைந்து போய்விட்டது. வர்த்தமான மஹாவீரரது கொள்கைகளெல்லாம் மாறிவிட்டன. சமணர்கள் அவரைப் பேருக்குத்தான் குருவென்று வழிபடுகிறார்கள். வெறும் பொய்யான மந்திரங்களும் தந்திரங்களும் தான் இப்பொழுது அவர்கள் கையிருப்பு. ஆகவே இதுவும் செய்வார்கள் வேறு எதுவும் செய்வார்கள்.

(தொடரும்.)

---

# உடல்வலி.

(கன்னான் கழறுவது.)

பலவினர்கள்.

உடல்வலி இல்லாதார்க்கு, அவர்களது அறிவு வளர்ச்சி எத்தகைத்தாயிருப்பினும், வாழ்க்கை பொருளற்றதாகவே தோன்றும். ஏனெனில் வாழ்க்கை இன்பங்களை அவர்கள் நுகர முடியாது. உடல் வலியில்லாதாரைச் செயல் திறனற்றகோழைகள்

எனச்செப்பலாம். உடல் வலியால் மனிதரின் மனவலியையும், விடாமுயற்சியையும், ஊக்கத்தையும் பெறலாமென்பது தேற்றம். அத்தகைய ஒருவன் எத்தகைய இன்னல்களைக்கண்டும் அஞ்சான். அவைகளை எளிதாக வென்றுவிடுவான். திடீரெனத் தோன்றும் எவ்வித அவசர வேலைகட்கும் அவன் பின்வாங்கமாட்டான்.

## சில உதாரணங்கள்.

உடல்வலியால் எத்தகைய மாபெரும் செயல்களையும் செய்து முடிக்கலாம் என்பதைச் சரித்திரங்கள் வாயிலாக அறிந்துகொள்ளலாம். நம் இந்துதேச சரித்திரத்தை நன்கு துருவி ஆராய்வோமாயின் முன்னர் எத்தகைய வீரர்கள் நம் நாட்டில் வாழ்ந்து வந்தார்கள் என்பதையும், அவர்களது அரிய செயல்களையும் நன்கு அறியலாம். இராஜபுத்திர வீரர்களின் சரிதங்களை இந்தியமாணவன் ஒவ்வொருவனும் கற்கவேண்டுவது மிக மிக அவசியம். அவ்வாறு கற்பதால் அவர்கள் அடையும் நலன்கள் பலப் பல. ஆனால் நம் நாட்டில் அந்நிய நாட்டவரது ஆட்சி நிலவுவதன் பயனாக கல்விச் சாலைகளில் அத்தகைய வீரர்களின் சரிதங்கள் போதிக்கப் படுவதில்லை. நம் முன்னோர்களைப் பற்றி இழிவாகக் கருதத்தக்க பாடங்களே பெரிதும் போதிக்கப் படுகின்றன. இவற்றை விரிக்கிற் பெருகும். எனவே இம்மட்டோடு நிறுத்துவோம். அமெரிக்கக் குடியரசு நாட்டின் தலைவராய் இருந்து அரிய பெரிய காரியங்கள் செய்த "ருஸ்வெல்ட்" எனும் பெரியார் அவரது இளமைப் பருவத்தில் உடல் வலியற்றவராகவே யிருந்தார். அவ்வாறு இருந்து வருங்காலத்தில் ஒரு சமயம் உடல் வலிமை பெறவேண்டும் என்னும் அவா அவர்மனத்தே தோன்றிற்று. அவ்வெண்ணம் எழுந்ததும் அதற்காகப் பாடுபடவேதென உறுதிசெய்துகொண்டார். அன்றுமுதல் உடல் வலி கருதி இடைவிடாது உழைத்து வந்ததன் பயனாக அவர் உடல் வலிமைபெற்றது. பின்னர் உடல் வலிமைக்கு அவர் ஓர் உதாரணமாக இலங்கினார். தனது தலைவர் பதவியைத் திறம்பட நடாத்திப் பேரும்புகழும் பெற்றதற்கு அவரது உடல்வலிமையே உற்ற துணையாகவிருந்தது. அவரது ஜீவிய சரித்திரத்தைப் படிப்போர்க்கு உடல் வலிமையால் எத்தகைய செயற்கரிய செயல்களையும் சாதித்துவிடலாம் என்பது புலனாகும்.

அதுபோன்ற உடல் வலிமையை ஒவ்வொருவரும் அடையலாம் — அடையக்கூடும். மற்றுமோர் அமெரிக்கக் குடியாசுத் தலைவரான "உட்ரோ வில்ஸன்" என்பார் அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட காலத்து மிகப் பலவீனமாகவேயிருந்தார். எனினும் உடல் வலிமையின்றி எக்காரியத்தையும் சாதித்தல் முடியாதெனக் கண்டதும் அத்துறையிலீடுபட்டு உழைத்து உடல் வலிமைபெற்று ஓர் புதிய ஜீவ சக்தியும் அடைந்தார். அதன்பயனாகவே தலைவர் என்ற முறையில் தனது கடமைகளைச் சரிவர ஆற்ற முடிந்தது என்று சொல்லப்படுகிறது. ஐரோப்பிய யுத்தம் நடந்த காலத்து ஆங்கில ஏகாதிபத்தியத்தின் முதன் மந்திரியாயிருந்த டேவிட் லாயிட்ஜார்ஜ் என்பார் ஓர் பெரிய இராஜதந்திரி என்பதை அரசியல் துறையி லீடுபட்ட ஒவ்வொருவரும் அறிவர். யுத்தகாலத்தில் ஆங்கிலமக்க ளனைவரும் அவரையே நம்பியிருந்தனர். அக்காலத்தில் அந்நாட்டு ஜனங்கள் போற்றத்தக்க விதமாக ஆட்சி நடத்தி வந்தார். அத்தகைய ஒருவர் எத்தகைய வாழ்க்கை வாழ்ந்து வந்தார் என்பதை ஒவ்வொருவரும் சிந்தித்தலவசியம். அவர் ஆடம்பரமற்ற இயற்கையோடியைந்த எளியவாழ்க்கை நடாத்திவந்தார். நாளிற் பெரும் பகுதியினை வான வெளியிலேயே கழித்துவந்தார். உடல் வலுவடைதற்குரிய முறைகளிலீடுபட்டு உழைத்து வந்தார். எனவே அவரது உடல் உரம் பெற்று ஜீவ சக்தியால் மிளிர்ந்தது. அதுவே அவர் உன்னத நிலையடைந்ததற்கு முக்கிமான காரணம். பிரான்ஸ் தேசத்து முதன் மந்திரியாயிருந்து ஒப்புயர்வற்ற செயல்கள் செய்த ஜியார்ஜ் கிளெமென்ஸோ என்பார் பல்லாண்டுகள் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் மருத்துவராக (வைத்தியர்) க்காலங் கழித்துவந்தார். மனித வர்க்கத்தாரின் முயற்சிகள் அனைத்தும் அவர்களது உடல் நிலையினையே பொறுத்துநிற்கின்றனஎன்பதைத் தம் அனுபவத்தில் நன்கு கண்டுகொண்டார். அவ்வுண்மையறிந்து நாளடைவில்மருத்துவத்தொழிலையும்விடுத்த உடல்வலிப்பயிற்சித் தொழிலில் ஈடுபட்டாரெனக்கூறப்படுகிறது பின்னர் அவர்பிரான்ஸ் தேசத்துமுதன் மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். யுத்த காலத்தில் அந்நாடு எத்தகைய இன்னல்களுக்கு உள்ளாயிற்று என்பதுசெப்புந்தரத்ததன்று. அந்நாட்டைஅவ்வின்னல்களினின்

றும் தப்புவித்து நன்னிலை யடையும்படி செய்தவர் கிளெமென் ஸோவேயாவர். அப்பொழுது அவர்க்கு வயது எண்பது. வயது முதிர்ச்சி, அவரது அபாரவேலைகட்கு ஒரு சிறிதும் இடையூரு யிருக்கவில்லை. காரணம் அவரது உடல் வலிமையேயாகும்.

## மகாயுத்தத்தின் போதனை.

கடந்த ஐரோப்பிய மகாயுத்தம் உலகத்திலுள்ள பல்வேறு இனத்தவர்க்கும் ஓர் அரிய போதனையைப் போதிக்கின்றது. அதாவது ஒவ்வொருவரும் தம் உடலை நல்லநிலையில் வைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதேயாம். உடற் பயிற்சியில் சிறிதும் ஊக்கங்காட்டாமலிருந்து வந்த இனத்தவரெல்லாம் யுத்தத்தின் பயனாக இப்பொழுது அதில் பெரிதும் ஊக்கங்காட்ட முற்பட்டிருக்கின்றனர். களைப்பின்றித் தளரா ஊக்கத்தோடு வேலை செய்யவும் போர்புரியவும் உடல்வலிமை இன்றியமையாததாகும். உடல்வலியில்லாதவன் குண்டுச் சத்தம் கேட்டவுடனேயே தன்னையறியாமலே விழுந்துவிடுவான். போர் உடைகளைத்தாங்கவும் ஆயுதங்களைத் தூக்கவும் திறனற்றவனாகவிருப்பான். நெடுந்தூரம் செல்லவோ உணவின்றிச் சிறிதுகாலங்கூடக் கழிக்கவோ சக்தியற்றவனாகவிருப்பான். இத்தகையோர் போர்க்காலங்களில் மதுவருந்தச்செய்து உணர்ச்சியின்றியே தம் கடனாற்றுமாறு செய்யப்படுகின்றனர். மதுவருந்துவோர் எவ்வாறு நடந்துகொள்வார்கள் என்பதை நாம் சொல்லத் தேவையில்லை. உண்மையில் அவர்களது உடல் உரம்பெற்றிருக்குமாயின் மதுவருந்தித் தாம் செய்வன இன்னவையெனத் தாம் அறியாமலே காரியங்கள் நிகழ்த்தவேண்டியிராதல்லவா? போதியசக்தியும், திறமையும், சகிப்புத் தன்மையும் பெற்றிருப்பார்களல்லவா? இயந்திரங்களைப்போல் பகுத்தறிவில்லாது எதுவும் செய்யவேண்டியிராதல்லவா? எனவே உடலினை வலியுறச் செய்தல் எத்துணை அவசியம் என்பது சொல்லாமலே விளங்கும்.

## சுகாதாரம்.

உடலில் நல்ல இரத்தமின்றி சோம்பியிருப்பவர்களும், பலவீனமாயிருப்பவர்களும், ஊக்கங்குன்றிச் செயல்திறனற்றிருப்பவ

ர்களும், தேகாப்பியாசமுறைகளைக் கையாண்டு ஒரு சில மாதங்கள் முயற்சிசெய்தாலும் உடல் உரம்பெற்று எத்தகைய அசாத்தியமான காரியங்களையும் செய்துமுடிக்கும் நிலையெய்தலாமென்பது திண்ணம். இதினின்றும் ஒரு சிலமாதங்கள் மட்டும் அனுட்டித்தால் போதும் என்று எவரும் எண்ணிவிடலாகாது. ஒரு சில மாதங்களிலேயே அத்தகையமாற்றத்தைக் காணலாமென்பதே இதன் கருத்து. சுகவாழ்வு வாழ விரும்புவோர் மனித சரீரத்தின் அமைப்பினை முதலாவதாகக் கற்றுக்கொள்ளுதல் அவசியமாகும். மனிதரைப் பற்றிக்கொள்ளும் நோய்களில் பெரும்பாலன நம்மைப்பற்றிக்கொள்ளாமல் நல்வாழ்வு வாழ்வதால் தவிர்த்துவிடலாம். மேனாட்டு வைத்திய நிபுணர்களிற் பலர் இத்தகைய முடிவிற்கு இப்பொழுது வந்துவிட்டார்கள். அத்தகைய சுகவாழ்க்கையை அனைவரும் எளிதில் அடையலாம். அவ்வாறு அடைதல் அவரவாது முயற்சியையே பெரிதும் பொறுத்து நிற்கின்றது.

---

# ஹிந்து தர்மத்தை நிலை நிறுத்தியவர்.

ஆசிரியர், டி. எல். வஸ்வானி வேதமாசிகையில் எழுதுவது

சிவராத்திரித் திருநாள். அந்நள்ளிரவிலே தனித்து விழித்திருந்த சிறுவன் அறியாமைத் துயிலுணர்ந்து விழித்தது அதுவே முதல் தடவையாகும். கோயிலில் விக்கிரகத்தின்மீது, ஓர் சுண்டெலி அச்சமின்றி ஓடி விளையாடிக்கொண்டிருந்தது. "உலகத்தையாளும் உண்மைக் கடவுள் இவ்வுருவமாக இருத்தல் கூடுமோ" என்ற சங்கை சிறுவனுள்ளத்திலே பளிச்சென்று எழுந்தது. சில ஆண்டுகள் சென்றன. தயானந்தர் அறிவுத்தாகங்கொண்டு அலைந்துதிரிந்தார். பல்லாண்டுகள் தேடித்திரிந்து நற்பயிற்சி பெற்றபின்னர், தயானந்தருக்கு அறிவுச் செல்வம் கிடைத்தது. வேதங்களின் திறவுகோல் வைதிகர்வசமில்லையெனக் கண்டார். வடமதுரையில் வாழ்ந்த ஓர் அந்தகத்துறவியின், அரு

ஞானைகளிலேதான் இவர் வேதநுட்பம் விளங்கிடக்கண்டார். இத் துறவியின் பெயர் விரஜானந்தர். விரஜானந்தயோகியின்றித் தயானந்தரிஷியில்லை. நல்லாசிரியன் கீழ் இவர் வேதநூல் பயின்றார். மேலைநாட்டாராய்ச்சியாளர் கூறும் வண்ணம் வேதமென்பது பல தெய்வ வழிபாட்டை வற்புறுத்துவதன்று. நமது வைதீக பண்டிதர் கூற்றின்படி ஆலய வழிபாட்டினையும் ஆதரிப்பதன்று. எல்லா மக்களையும், எல்லா நாட்டினரையும், எல்லா இனத்தாரையும் ஒன்றுபட இணைக்கும் ஒரே பரம்பொருளைக் குறித்த ஞானமே வேதநூல் வாயிலாக அறியக்கிடப்பதென நம் தயானந்தர் கண்டு கொண்டார்.

இந்த ஞானத்தைத் தயானந்தர் தம்மக்களுக்கு வெளியிடலானார். சூத்திரர், தீண்டாதார், பல்வேறு சமயத்தினரான ஆண் பெண்கள் அனைவருக்கும் இந்நல்லறிவினை இவர் வரையாது வழங்கினார். புரோகிதர் அடிக்கீழ் அடங்கிக்கிடந்த சமூகத்தால், பல நூற்றாண்டுகளாக அறியாமையிருளில் சிறை செய்யப்பட்டிருந்த பெண் மக்களுக்கும் இந்த ஞானம் உரியதாகுமென இவர் எடுத்துரைத்தார். உண்மைக்குச் சான்று பகர்ந்த தியாகமூர்த்திகள் அனைவரும் உலகின் பல பாகங்களிலும் ஆற்றொணாத் துன்பத்திற்கு ஆளானவாறு நம் தயானந்தரும் பெருந்துன்பத்திற்காளானார். முடிவில் இரகசியமாக விடமூட்டப்பெற்று, தயானந்தர் தமது கொள்கையின்பொருட்டு உயிர்த்தியாகமும் செய்தார். ௧௮௮௩-ம் ஆண்டில் ஆஜ்மீரில் அன்னார் ஆவிதுறந்தார்.

அவர் சென்ற நெறி நம் பொது ஜனங்கள் விரும்பிச் செல்லும் வழக்க நெறியன்று. அவர் சொன்மாரி பொழிந்த சில இடங்களில், அவரது தாய்நாட்டினரே அவர் மீது கன்மாரியும் பொழியலாயினர். இந்நாளிலோ, வெவ்வேறு வகுப்பினரும் தயானந்தரை இந்திய ஜாதியின் மகோபகாரியென்று வாயார வாழ்த்துகின்றார். நண்பர் சி. எப். ஆண்ட்ரூஸ் ஓர் கிறிஸ்தவராயினும், அவரும் தயானந்தரது பெருமைக்குச் சான்று தருகின்றார். டாக்டர் கோர் வேதவழக்கோடு மாறுபட்டவராயினும் தயானந்தரைப் போற்றுகின்றார். டாக்டர் சர்வாதிகாரி ஆரியசமாஜத்தைச் சார்ந்தவரல்லர். எனினும் அவர் சென்ற நூற்றாண்டைச் சிறப்

பித்த சில மேதாவிகளில் தயானந்தரும் ஒருவரெனத் துணிந்தார். இந்தியாவின் பலபாகங்களிலிருந்தும், பிஜீ, ஆப்ரிக்கா முதலான வெளிநாடுகளிலிருந்தும் ஆண்களோடு பெண்களும் வடமதுரை வந்து தயானந்தரின் நாற்றூண்டுவிழாவில் மனமுவந்து கலந்துகொண்டார். வங்கநாட்டினின்றும் வடமதுரைக்கு நடந்துவந்த யாத்திரிகருமுண்டு. ஒருவர் ஜப்பானிலிருந்து போந்தார். கலாசாலை மாணவரிற் பல்லாயிரவர் தனி ரயில் வண்டிகளில் வந்து குழுமி, தயானந்தரின் புகழ்பாடி ஊர்வலம் வந்தனர். பிரமசாரிகள் கூட்டம் ஒருபுறம். அநாதைக் குழந்தைகள் கூட்டம் மற்றொருபுறம். தீண்டாதார் கூட்டம் ஒருசார். அனைவரும் வடமதுரை மாநகர் வீதியில் தயானந்தரை ஒருமுகமாகத் தோத்திரஞ்செய்தனர். பெண்கள் கூட்டங் கூட்டமாகச் சென்று தாயனந்தருக்குப் பல்லாண்டுபாடினர். இரண்டு லக்ஷம் மக்கள் ஆணும் பெண்ணும் குழந்தைகளுமாகக் குழுமி, "மஹரிஷி தயானந்தர் வாழ்க! வாழ்க!!" என்று வாழ்த்தெடுப்பாராயினர். நெப்போலிய வீரனது பெருஞ் சேனையின் செலவு எனது நினைவிற்கு வந்தது. ஆனல் தயானந்தர் நெப்போலியனைப் பார்க்கினும் பெரும் வீரரல்லரோ? தயானந்தரின் சேனையே ஆரியசமாஜம். ஆசாரச் சீர்திருத்தத்திலும், கல்வி வளர்ச்சியிலும் ஆரிய சமாஜம் அற்புதப் பணியாற்றியுள்ளது. இன்று தயானந்தரின் திருப்பெயர் இந்தியாவிற்கு இன்னமுதமாயிருக்கின்றது. ஹிந்து தர்மத்தின் கவசமென்றும், ஹிந்து மக்களின் விடுதலைக் குருவென்றும், ஹிந்து சமூகத்தின் ஞானமூர்த்தியென்றும் இந்திய அன்னை தயானந்தரை அழைக்கின்றுள்.



# "உல்லாபன்" *



(கோகுலத்துக் கண்ணன் எழுதியது.)

வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூப்புவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
யவலக் கவலை கையா றழுங்க
றவலா வுள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை யிது

—மணிமேகலை.

விண்ணு நீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணலிநீ அழுங்குதல் இழுதைப் பாலதால்

—கம்பராமாயணம்.

சென்ற சில வாரங்களாகக்கொடிய நோயொன்றினால் பீடிக்கப்பட்டு வருந்தினேன். மறலிபோன்ற ஜ்வரநோய் என்னுடன் சமர் புரிந்து, வெற்றிபெற்று, சிறையாகப்பிடித்து வருத்தியது. இது போழ்து அக்கொடுங்கோன் மன்னன் என்னை, கொடிய சிறையினின்றும் நீக்கி, மெல்ல மெல்ல அகன்று செல்லப் பார்க்கின்றனன். இவ்வாறு அவன் என்னைவிட்டு நீங்கிச் செல்லுங்கால் தன்னைப்பற்றியே என்னைச் சிந்தித்துக் கொண்டிருக்கும்படிக்கும், தியானிக்கும்படிக்கும் உத்தரவிட்டிருக்கிறான். ஆதலின் என்னருமை நண்பர்களே, இவ்விதழில் யான் எழுதும் கட்டுரை அவ்வளவு இன்பமுள்ளதாயிராது. நோயாளியாகிய யான் ஒரு நோயாளனின் கனவைப்பற்றித் தான் கூற முடியும்.

உற்றுநோக்கு மிடத்து இப் பிணியின்றன்மை இதுதான். சூரியனொளி, விளக்கொளி முதலியவை கண்களைக் கூசச்செய்கின்றனவென்று படுக்கையைச் சுற்றித் திரையிட்டுத் தேகம் நலி

* நோய்வாய்ப்பட்டு குணமடைவோன்—உல்லாபன்.

யாமலிருக்க வேண்டிப் பஞ்சணையில் துயிலும் நோயாளி இதை விட மகத்தான கனவைக் காண முடியுமா? தான் படுத்திருக்கும் படுக்கை, சகல அண்டகோளங்களும், பிரபஞ்சமும் என்றல்லவோ உல்லாபன் நினைக்கிறான்? படபடவென்று அடித்துக் கொள்ளும் அவன் இருதய மன்றோ, மற்ற ஜீவராசிகளினால் செய்யப்படும் ஓதை யென்று அவன் கருதுவது! இவற்றைத் தவிர வேறெதிலேனு மவன்புத்தி செல்லுமோ?

'இனிது, இனிது, ஏகாந்தமினிது'— கம்பீரமான அரசத்தன்மை பொருந்திய ஏகாந்தம்— ஒரு நோயாளியின் படுக்கை தான். இவ் வமளியை அவன் எவ்வாறு செங்கோலோச்சுகிறான்! எத்தகைய கம்பீரத்துடன் அவன் தன் தலையணைகளைத்தன் ஆஞ்ஞாசக்கிரத்துட்படுத்துகிறான்! நிமிஷத்திற்கு நிமிஷம் புதிய புதிய கட்டளைகள் அவன் புத்தியினின்றும் எழுகின்றன! அத்தனை கட்டளைக்கும் வாய்திறவாது அத்தலையணைகள் கீழ்ப்படிகின்றன! ஒரு முறை இப்பக்கம் வந்து நிற்கின்றன; மறுமுறை அப்பக்கம் செல்கின்றன; சற்றுச்சாய்வாக நிற்கின்றன; மற்றோர் முறை நெட்டையாக நிறுத்தப்படுகின்றன; இன்னொரு தரம் மடக்கி வைக்கப்படுகின்றன. மற்றுமோர் முறை நன்றாய் அழுத்திக் கசக்கிப் பிசையப்படுகின்றன. இவ்வாறு இந்நோய் வாய்ப்பட்ட மனிதனால் பற்பலவாறு அலைக்கப்பட்டு, தன் சித்தம் எவ்வெவ்விதமாக அந்நோயின் கொடுமைக்கேற்றப்படி அலைபுமோ அவ்விதமெல்லாம் இத்தலையணைகளும் அலைக்கப்படுகின்றன. பாவம்! இவற்றின் நிலையே நமக்கு அந்நோயாளியின் வருத்தத்தை நன்கு விளக்கும். மேலும் அப்பிணியாளன் ஓர் பெரிய ராஜதந்திரி போன்று சமயத்திற்கேற்றவாறு கட்சி மாறுகிறான். இவ் வமயம் கால்களை நீட்டிப் படுப்பது மடக்குவது; சற்று குறுக்காகப் படுத்துப்பார்ப்பது; சிறிது நேரம் நெடிகப்படுப்பது; மறுபடியும் கால்களை யுதறி எழுந்து உட்காருவது; மற்றுமோர் முறை சாய்ந்து உட்காருவது; திடீரெனக் கால்மாடு தலைமாடாக மாறும்படி விழுந்து புரள்வது. இவ்வாறு பலமுறை நிலைமாறியும் இவனை யொருவரும் கட்சி மாறுகிறவனென்றும், சஞ்சல புத்தியுடையவனென்றும் கூறுவதில்லை. திரைச் சீலையினாலும், கொசுவலையினா

லும் சூழப்பட்ட பிரதேசத்துள் அவனே ராசா! அவனே ஏகச் சக்கிராதிபதி— அமளியே அவனது சாம்ராஜ்யம்!

வியாதியானது ஒரு மனிதனை அவன் ஆகிருதியில் மிகவும் வளர்ந்தோங்கினதாகத் தோன்றச் செய்கின்றது. அவனுக்குத் தன் சரீரம் பருத்தும், பூதாகாரமாகவும் தோன்றச் செய்கிறது. அவன் கட்புலன்களுக்கு அவனுக்கு அவனே தனித்த பொருள். அவன் தன்னைப்பற்றியல்லாத வேறெந்த சங்கதியையும் அறிய விரும்புவதில்லை. வேறு பொருள்களைப் பற்றியும் கவனிப்பதில்லை. எல்லாம் தனக்கே— பெரும் சுயநலப்புலியாகி விடுகின்றான் நோயின் வாய்ப்பட்டபொழுது. சுயநலமே அவனது பெருங் கடமையாக முன்னிற்கின்றது. இது தான் அவனது மனுநீதி. 'எது போழ்து யாம் உடல்நலம் பெறுவோம்?' என்பதே அவனது தீராக்கவலை. அவன் படுத்திருக்கும் அறைக்கு வெளியே என்ன நேரிடினும் சரி, ஏன்? அவ்வறையிலேயே எது நிகழ்ந்தாலும் அவனுக்கு அக்கரையில்லை. இக் கடுஞ்சுரம் எங்ஙனம், எவ்வமயம் என்னை வருத்துவதை விட்டொழியும்? என்பதே அவனது பெரும் விசாரம்.

சின்னாட்களுக்கு முன்னே அவன் ஆப்த நண்பனொருவன் ஏதோ கேசு ஒன்றில் சம்பந்தப்பட்டு, அவனது பெயரே அழிந்துபோகுந் தருவாயிலிருந்தான். அந் நண்பனை அப் பேராபத்திலிருந்து நீக்குவதாகக் கங்கணம் கட்டிக்கொண்டு இவ்வுல்லாபன் அக்காரியத்தில் தன் உடல் பொருளாவிகளை ஈடுபடுத்தினான். தன் சுகவீனத்தையுங் கருதாது ஆயிரந்தடவை இதே உல்லாபன் ஊரைப் பன்முறை சுற்றி, ஒரு நாள் ஒரு சாட்சியைத் தூண்டுவதும், மற்றொரு நாள் வக்கிலைத் தூண்டுவதுமாக இருந்தான். இந்த நண்பன் கேசை நேற்று 'சுரங்கி' போட்டிருந்தார்கள்.

ஆனால் இன்றோ இவ்வுல்லாபன் தன்னிலையறியாது படுத்திருக்கிறான். அக்கேசைப்பற்றிச் சிறிதும் கவலையின்றி 'ஏதோ யாருக்கோ' என்றிருக்கிறான் போலும்! ஆயினும் வீட்டிலுள்ளோர், 'நண்பர்-கேசு—அபஜப மடைந்து விட்டது' என்று 'குசு குசு'வென்று பேசிக்கொள்வது இவன் காதில் விழுந்திருக்கலாகா

தோ? விழுந்திருக்கலாம். ஆயினும் அவன் இத்தருணத்தில் 'நண்பன்—அபஜயம்' என்ற சொற்களின் பொருளை யுணர்ந்தானென்று நினைக்கிறீர்களோ? இல்லை, இல்லை. அவன் நண்பன் எக்கேடு கெட்டாலென்ன! தான்படும் அவஸ்தையை யார் படுகிறார்கள்? தன் சிந்தனையெல்லாம்—நினைவெல்லாம் 'சனியன் பிடித்த இவ் வுபாதை எப்பொழுது நீங்கும்' என்பதே. இவ்வளவு சுயநலப் புத்தியைத் தாக்கக்க அந்நோய் எத்தகையது? 'உல்லாபன் நோய் என்னும் கவசம் தரித்திருக்கிறான்' அக்கவசமோ 'அவஸ்தை'யெ ன்னும முரட்டுத் தோழனாலாயது. 'பரிவு' என்பதை யவன் தன் சொந்த உபயோகத்திற்காக லோபி பொன்னைக்காப்பது போல காத்து வருகின்றான். அதோ அவன் தனக்காகவே இரங்கி முனங்குகிறான்; அவன் மனமுருகுகிறது; 'அவஸ்தை'யினால் அவன் மனம் இளகுகின்றது; தன் பொருட்டாக அவன் வாய் விட்டு அழுவதற்கும் தயாராக இருக்கிறான்; ஏன் இதோ 'ஐயோ, அப்பா!' வென்று அரற்றுகிறானே! அவனுக்கு வெட்க மில்லையோ வென்பீராகில், அவன் யாருக்காகத் துக்கப்படுகிறான்? அவனுக்காகவே யன்றோ?

இக்கொடிய பிணியை எவ்விதமாக நீக்க முடியுமென்று அவன் சதா சதிபாலோசனை புரிகின்றான். சிறுசிறு யுக்திகளையாராய்ந்து தேர்ந்து சிறிது மனம் தேறுகிறான். அவனுக்கு எப்பொருளும் அவன் சுய ரூபமாகக் காணப்படுகிறது. அவனுக்கு எத்தனை வலித்துக்கொண்டும், குடைந்து கொண்டும் உபாதைப்பட்டுக்கொண்டும் இருக்கும் அவயவங்களுண்டோ அத்தனையும் அவன் மனக்கண்ணுக்குத் தனித்தனி நோயாளராகத்தோன்றுகின்றன. சிற்சில வேளைகளில் அவன் அவ்வவயவங்களை யெல்லாம் தனி வியாதியஸ்தர்களாகக் கருதி, தான் ஒரு தனித்த மனிதனெனவும் எண்ணி ஆலோசிக்கிறான்: 'இத்தலை ஏன் இவ்வாறு வலிக்கிறது? மண்டை ஏன் பிளக்கிறது? நேற்று இரவு முழுவதும் தூங்க வொட்டாமல் ஏன் இந்த ஓயாத்தலைபிடி? மண்டையைப்பிளந்து அதனுள்ளிருக்கும் இந்நோயை வெளிப் படுத்துவோமா?' வென்றும் எண்ணமிடுவான். வாடி மெலிந்த அழுக்கேறிய தன் உடலத்தைக்கண்டு இரங்கிப் பரிதபிப்பான்,

இவ்வாறு பலவாருக உன்னியுன்னி அருள்வடிவாகி நிற்பான். அவனிருப்பிடமே தயைக் குறைவிடமாகவும், தன்னருள் சுரக்கும் ஊற்ருகவும் தோன்றும்.

தனக்காக ஒருவரும் பரிந்து முன் வர மாட்டார்களென நினைத்து அவனுக்கவனே பரிந்து கொள்வான். இது அவனுக்குச் சுபாவமாகவே தோன்றும். அவனது வருத்தத்தைககண்டு பிறர் ஒருவரும் வருந்தவில்லையே யென்று அவன் சிறிதும் கவர்ச்சியடையான். தனக்குத்தானே எல்லாம் புரிந்து கொள்ளும் போது பிறர் எதற்காக ? ஆயினும் தாதி—நோயாளிக்குபகாரி-வேளைக்கு வேளை கஞ்சியும். பாலும், மருந்தும் கொணர்ந்து அவனுக்கு ஊட்டுபவள்—அவள் ஒருத்தியே அவனுக்கு இன்பத்தைத் தருகிருள். ஏன்? அந்தாதி அவன் கூறுவதற்கெல்லாம்—பிதற்றுவதற்கெல்லாம்—ஊமைபோல் வாய் திறவாது தலையசைத்து—அவள் தான் மேற்கொண்ட காரியத்தைச்செய்து முடிக்கிருள். இது அந்நோயாளனுக்குத்தெரியுமோ !

வெளியுலகத்தில் நடக்கும் விஷயங்களுக்கெல்லாம் நோயாளி இறந்தவனே. புறவுலகத்தின் வேலையையும், ஓசையையும், அதன் ஆடம்பரத்தையும் அவனறிவதில்லை. தினந்தோறும் வேளை தவருமல் டாக்டர் (வைத்தியர்) வந்து அவனைக்கண்டு போகும்பொழுது அவனுக்குச் சிறிது புறவுலகத்தின் வாசனை வீசுகிறது. வைத்தியரோ அவசர அவசரமாக வந்து அவனைக்கண்டு விட்டு, சில நிமிஷங்களுக்குள் ஓடி விடுகிருர். ஆனு லிவனே, 'என்னை ? இவ்வளவு அவசரப்படுகிருர் இவ்வைத்தியர் ?' என்று அதிருப்தி யடைகிருன். 'என்னை ஒரு கேள்வி கூட இம்மடவைத்தியன கேட்கவில்லையே !' என்கிருன். ஆனுல் இவனைப்போல் எத்தனை நோயாளிகளை இவ்வைத்தியர் பார்க்கப்போகிருர் என்பதை இவன் உணருவதில்லை. தான் ஒருவன் தான் நோயாளி என்று நிச்சயமாக எண்ணுகிருன். கையில் கொடுக்கப்பட்ட பீசை (வைத்தியம் செய்வதற்காகக் கொடுக்கப்படும் கூலி) ஓசைபடாமல் சேபியிலிட்டு, அடிமேலடி வைத்து நடந்து வெகு வேகமாக வெளிச்சென்று மற்ற நோயாளிகளைக் காணச்செல்லும் வைத்தியன்

நோக்கத்தை இவன் அறிவதில்லை. அவர்களைப்பற்றி இவனுக் கென்னகவலை—'என்நோய் எனக்குத்தான் தெரியும்!' என்கிறான். ஆனால் நாளைக்கும் இதே வேளையில் வைத்தியன் திரும்ப வருவா னென்ற நம்பிக்கை மாத்திரம் இவனுக்குண்டு.

வீட்டுச் சந்தடியையும் இவன் கவனிப்பது கிடையாது. ஜன நடமாட்டத்தாலுண்டாகும் ஓசை இவனுக்கு வெகு தூரத்தில் இருந்து எழும் சத்தத்தைப் போன்று ஒரே ஓசையுடையதாய்த் தான் கேட்கும். வீட்டுவேலைக்காரர் என்ன காரணமாகவோதிரு டர்போன்று பதுங்கி, ஒடுங்கி அடிமேல் அடிவைத்துச் சிறி தேனும் சந்தடி செய்யாது மாடிப் படிக்கட்டேறி இறங்குகின்ற னர். தனிந்த இக்காலடிகளின் சத்தத்தை மாத்திரம் நம்நோயாளி உற்றுக் கேட்கிறான். ஏனவ்வாறு இவர்கள் இம்மாதிரி செய்ய வேண்டுமென்பதை அவன் ஒருவாறு அறிந்து தனக்குள்ளேயே நகைத்துக் கொள்கிறான். அதற்குமேல் அவன் சிந்திப்பதுமில்லை; சிந்திக்க யத்தனம் செய்வதுங் கிடையாது. இந்த இன்ப காமான லகமே போதும்! அடிக்கடி வீட்டு வாயிற்கதவு தட்டப்படுவ தும், திறக்கப்படுவதும், பிறகு 'குசு, குசு' வென்று பலர் பேசும் அரவமும், மறுபடி கதவு மூடப்படுவதினாலுண்டான சத்தமும் உல்லாபனின் கண்களைத் திறக்கச் செய்கின்றன. ஆனால் வந்தவர் யாரென்று விசாரித்தறிய போதிய சக்தி அவனுக்கில்லை. ஆனா லும் அவ்வாறு வந்துபோகும் மனிதர் தன்னைக் குறித்தே வந் திருக்கின்றனர் என்றெண்ணி அகமகிழ்கிறான். "வந்தவர்களின் பெயரைக் கேட்கவேண்டியது அனாவசியம்; எல்லாம் என்னைப் பற்றி விசாரிக்கத்தான் வந்தார்கள்போலும்" என்று திருப்தி யடைகிறான். எங்கும் அமைதி நிரம்பிய நிச்சப்தத்தில் அவ்வுல் லாபன் ராஜ்யப் பரப்பையும், நோயின் ஆளுகையின் வன்மையை யும் நன்கு அறியலாகும்.

'நோய்' வாய்ப்படின் ராஜ்யாதிகாரம் பெற்றது போலாம்' பிணியாளனுக்கு எவ்வளவு ராஜ மரியாதைகள் செய்கின்றனர்! கைகட்டி, வாய்புதைத்து, மெல்லென நடந்து வந்து, வாயைத் திறவாது கண்களினாலும், கைகளினாலும் சாடைகாட்டிக் காரி யங்கள் நடைபெறுகின்றன. அஜாக்கிரதையுடன் நடந்து சாமான்

களை யுருட்டுபவர், நினைத்தபோது கதவை 'தடால், தடாலெ'ன திறந்து மூடுவர், தட்டுபவர், ஓ'வெனகூச்சலிடும் குழந்தை முதலிய வர்களை நம் நோயரசன் தன் தேசத்தினின்றும் பிரஷ்டம் செய்கின்றான். தவறி யாராவது அத்தகையினர் அவன் ராஜ்ய எல்லைக்குட் பிரவேசிப்பாராயின் அவர்பாடு அதோகதிதான்! இஃதிவ்வாறிருக்க பிணியாளனின் அமளியை 'அரியாசனம்' என்று என் கூறக்கூடாது? வியாதியஸ்தன் குணம் அடைந்து சாய்வு நாற்காலியில் சாய்ந்து களை தீரும் நிலையில் அவனை என் சிம்மாதனத்தினின்றும் தள்ளப்பட்ட அரசன் என்று அழைக்கலாகாது? அவனது ராஜ்யத்தை வேறெவனோ பிடுங்கிக்கொண்டு விடுகிறான்! நோய் குணமாகும் தருணம் உல்லாபன்நிலை இவ்வமயத்தில் மனிதன் தனது பூதாகார உருவத்தினின்று நீங்கித் தன் சுயநிலைக்கு சுயரூபத்திற்குச் சுருங்கிவிடுகிறான். இதுகாறும் இவனைப் போற்றி வந்த அயலாரும், பந்துக்களும் இப்பொழுது எவ்வாறு இவனிடம் நடந்து கொள்கின்றனர்?

இவன் ராஜ்ய விவகாரங்கள் நடத்தின இடம், இவனது மந்திராலோசனை மண்டபம் செங்கோன் மன்னனாக ஆண்ட ராஜ்யம் எங்கே? ஓகோ அது வெறும் படுக்கையறையாக இப்பொழுது தோன்றுகிறதோ? 'ஹூம் இருக்கட்டும்'. இவனது அரியாசனமெங்கே? பஞ்சணை மெத்தையோ? இவன் இட்ட ஏவலுக்கெல்லாம் அடங்கி யொடுங்கி நடந்த தலையணைச் சேவகனெங்கே? ஆம், அதோ வெளுத்த துணியொன்றினால் முக்காடிட்டு உட்கார்ந்திருக்கின்றனனே! அவனுக்குரிய ஸ்தானத்தில்! ஆழியினைப் போன்று சுருண்டு, திரண்டு மோதும் அலைகளையுடைய அவன் படுக்கை யெங்கே? அதோ அதன் மீதுதான் உல்லாபன் உட்கார்ந்திருக்கிறான். மூன்று நாளைக்கு ஒருதரம் உதறிப்போடப்பட்ட அப்படுக்கை, ஒரு நிமிடத்தில் சுருண்டு திரைகளுடையனவாகி வந்தன! ஒவ்வொரு சுருளும் வியாதியின் கடுமையைக்குறித்தது. நோயின் உக்கிரம் சிறிதேனும் தணியாதாவென்று இப்படியுமப் படியும் புரளுவதின் பலனது! 'ஐயோ, அப்பா, ஹூம், ஹூம்' என்ற ஹூங்காரங்களும் சப்தங்களும் அவலக்குரலும் எந்தக் குகையினின்று எழுந்தனவோ? நரகக்குழி போன்ற எந்த பிலத்

துவாரங்களினின்று அவை வெளிப்பட்டனவோ? யார் கண்டார்கள்! இப்பொழுது அந்தரகவேதனை நின்றது! அப்பிலங்களைக் கண்டறிந்தாய்விட்டது. சுரமும் நின்றது. ஆனாலும் டாக்டர் அடிக்கடி வந்து போவதினால் நோயின் மிச்சம் கொஞ்சம் இருக்கின்றது போலும்! யார் அங்கே வருவது? டாக்டரா? இல்லை. ஆம், என்ன, அடியோடு வேஷம் மாறியிருக்கிறாரே-சிரித்த முகத்துடன் 'வள வள' வென்று ஊர்வம்பு பேசும் இவரா? முன்பு இவனுக்குக் கைபார்த்தவர்? இவரா? உல்லாபனுக்கும் நோய்க்கும் இடை நின்று, கஞ்சி, மருந்து முதலியபவைகளை ஊட்டி. நோயுடன் போராடும் உற்சாகம் செய்தவர் யார்? அப்போர் வீரன் யார்? ஓ அனுபவ முதிர்ந்த மூதாட்டி! எமமதை கொண்ட பிணியே, அகம்படைத்த நோயாசனே, உன் ஆரவாரங்கள் இப்பொழுதெங்கே! கொட்டங்கள் அடங்கினவோ! 'ஆரோக்கியம்' என்ற அரசர்பெருமான் உன்னை வெருட்டுகிறானோ?

இவ்வாறு வியாதியென்னும் நீரோட்டத்தினால் அடித்துக் கொண்டு போகப்பட்டு, வெட்டவெளியான 'சுகமுறுங்காலம்' என்ற சதுப்பு நிலத்திலே யான் இப்பொழுது நிற்கின்றேன். இன்னும் சின்னாட்களில் உறுதியான பூமியான 'பூரண சுக'த்தை யடைவேன்.

இத்தகைய தருணத்தில்தான் என்னன்பரே உம்முடைய நிருபம் வந்தது. அதன்படி யானடப்பது கஷ்டந்தான். ஆயினும் உம்மைத் திருப்தி செய்ய வேண்டி இக்கனவை வரைந்துள்ளேன். அது ஒரு வேளை பைத்தியக்காரன் பிதற்றல் போன்றிருப்பின் என்னை மன்னிக்க. இவ்வாறு எழுதினது எனக்குச் சிறிது சந்துஷ்டியையே தந்தது. உமது கடிதம் வந்த பிறகுதான் எனக்கு உலக விவகாரங்களில் நினைவு ஏற்பட்டது. பத்திரிகை உலகத்தைப் பற்றியும், அசியலைப்பற்றியும் உம் நிருபமே எனக்கு ஞாபகமூட்டியது. பிரமை பிடித்து எக்கமுற்றிருந்த என் மனம் தெளிந்தது. நோய் வயத்தனாகி, என்னை மறந்து கற்பனா சக்தியிடுபட்டு பலயோசனைகள் தூரம் பாத்து வளர்ந்திருந்த யான் எனது சுய அறிவையும் ரூபத்தையும் பெற்றேன். அதுவே நோய் என்னைவிட்டு நீங்கிற்றென்பதற்கு அத்தாட்சி.

குறிப்பு:—இஃது ஆங்கில உரைநடையாசிரியர்களி லொருவ ரான சார்லஸ் லாம் Charles Lamb) என்பார் இதே பெயருடன் எழுதிய கட்டுரையைத் தழுவி எழுதப்பட்டது.

---

# வீரம் வேண்டும்.

வீரப்பன் எழுதுவது.

நமது நாட்டு இளைஞர்கள் தற்பொழுது வீரமின்றிப் பேடி வாழ்வு வாழ்வோராயிருக்கின்றனர். எதற்கும் பயப்படும் தன்மையரா யிலங்குகின்றனர். மனதில் சிறிதும் தைரியமில்லை. கண்டதற்கெல்லாம் அஞ்சி அஞ்சிச் சாகின்றனர். முன்னர் நமது நாட்டில் பல வீர இளைஞர்களிருந்தனர். அன்னோர் எதற்கும் அஞ்சுவதில்லை. தைரியத்தோடு எவ்வேலையையும் செய்து வந்தனர். எனவே, அடிமை வாழ்வின்றி சுதந்திர வாழ்வு வாழ்ந்து வந்தனர், பிற்காலத்து இளைஞர்கள் சிறிதும் தைரியமின்றி பேடிவாழ்வு வாழத் தொடங்கவே, நமது நாடு அந்நியர் கையில் சிக்கியது. நாமும் அடிமை வாழ்வு வாழ்கின்றோம். உலகில் பல சிறப்பட்ட மக்கள் தோன்றி மறைகின்றனர். ஆனால் அவர்களுடைய பெயர்கள் சரித்திரங்களில் பொறிக்கப் பெறுவதில்லை. வீர வாழ்வு வாழ்ந்த ஒருவனுடைய பெயர்தான் சரித்திரத்தில் காணப்பெறுகின்றது. வீரனாக வாழ விரும்பும் ஒருவன் ஒழுக்கத்தைப் பொன்னே போற் போற்றுதல் வேண்டும். ஒழுக்க மில்லா வொருவன் எவ்வளவு தைரியவானாக விருப்பனும் அவனது வீரம் உண்மைவீரமாகாது. எப்பொழுதும் அவனுடைய மனமானது பயத்தால் பீடித்து நிற்கும். எனவே வீர வாழ்விற்கு அடிப்படையாக விருப்பது ஒழுக்கமென்பதை இளைஞர்கள் சிந்தித்தல் வேண்டும்.

நெப்போலியன் "பயமென்றால் என்ன"வென்று கேட்டானும், அவனது அஞ்சா நெஞ்சின் வலிமையினை இவ்வாக்கியத்

தால் இளைஞர்கள் அறிந்து கொள்ளுதல் வேண்டும். நெப்போலி யன் எதற்கும் பயப்படாத வீரனாக இருந்ததால் தான் இன்று நாம் அவனைப்பற்றிப் பேசுகின்றோம். அவனும் பயமெனும் பேய்க்கு ஆளாகி யிருப்பானே யானால் ஒருவனும் அவனைப்பற்றிப் பேசப் போவதில்லை. வீரம் இளைஞர்களின் செய்கையில் வரவேண்டும். பலர் எழுதுவதில் வீரமாக எழுதிவிடுகின்றனர். காரியத்திலோ எடுத்ததற்கெல்லாம் பயந்து சாகின்றனர். இன்னும் பலர் வீரத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்வதில் மகா நிபுணர்களாயிருக்கின்றனர். இரண்டுமணி நேரம் வீரத்தைப் பற்றி சரமாரியாகப் பேசிவிடுகின்றனர். இரவு ஏழுமணி யாகி விட்டால் வெளியில் செல்வதற்குத் துணைக்கு ஒரு ஆள் வேண்டும். இப்படிப்பட்ட எழுத்து வீரர்களாலும், பேச்சு வீரர்களாலும் நாட்டுக்கு ஒருவிதமான பயனுமில்லை. செய்கை வீரர்களாலே தான் நாடு நன்மை பெறக்கூடும். நமது இளைஞர்கள் வீரர்களின் சரித்திரங்களை வாசித்தல் வேண்டும். பொழுது போவதற்காக அதனைப் படிக்கக்கூடாது. உணர்ச்சியோடு படிக்கவேண்டும். நாமும் அவர்களைப்போல உண்மை வீரர்களாக வாழ்முயலுதல் வேண்டும். நம்மால் வீரனாக முடியுமாவென்ற ஐயமிருத்தல் கூடாது. நாமும் அவர்களைப்போல் வீரனாக வாழமுடியும் என்ற தைரியத்தோடு அந்நூல்களை வாசித்தல் வேண்டும்.

---

## கோமதன்.

(முற்றொடர்.)

கோமதன் பாடலாடலை நிறுத்திக் கூறுகிறான்:—

இராகம் நாத நாமக்கிரியை.] [தாளம் ஏகம்.

கண்ணிகள்.

1 நிறுத்துமின்க ணிறுத்துமின் குறித்த பாடலாடலே
நீடுதற்பி னூர்மிதிக்கு மோசை கிட்டுதே.

2. புதரினூடு மரத்தினூடு மறையப் போமினே
புகலு மெங்கள் கூட்டமிக்க அச்ச மூட்டுமே.

3. நிச்சயமோர் கன்னியீண்டு வருத லுண்மையே
நிசியின் கைப்பட் டிவ்வடவி யூடு மாழ்கியே.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. சசியென் றுரைக்குமென்முய் தன்னையே சூழ்ந்து நாளும்
விரவுபல் கணங்க ளேய்ப்ப விளங்குமோர் கூட்ட மென்னை
மருவியே வாழ நான்றேர்மந்திர வலியாற் சேர்த்தே
பெருமையோ டுறைதற் கேற்ற பேற்றினை யுடையே னன்றே.

2. விடத்தினை நிகர்க்குமென்றே விளம்பலாந் தகைமைத் தான
சுடர்க்கரு விழிக்குமாயத்தோற்றமே காட்டி மால்செய்
நடைக்குரித்தானமாயப் பொடிதனை யானு நீலக்
கடற்படு பஞ்சை மானுங் காற்றிலே தூற்றல் வேண்டும்.

3. அன்றெனி லெனது சித்ர வழக்கினைக் கண்ட போதே
மன்றலங் குழலா ளந்தக்கன்னியு மனத்தி னூடே
துன்றிடு வியப்புத்தோன்றத் துணுக்கமுற் றயர்வாளாகி
யொன்றுமெ னுளப்பாங் கிற்கு மாறுகொண்டோடு வாளால்.

4. யா னுரைக்கின்ற பொய்மை நயமொழி யெல்லா மந்த
வூனமில் வலிபெறுத வுளத்தினு லெளியரான
மானிடர் தமையென்மாய வலையிடைப் பிணித்த லாலே
யானுமென் னுளத்திற்கேற்ற நன்மையே பெறுவனு மால்.

5. இவ்விடை வருதன்மேய விளங்கொடி தனது நீல
மைவிழி யூடென்மாயப் பொடியது மருவு மானல்
எவ்வமி லெளிய வாழ்வின் மேவுநாட்டினனே யென்னச்
செவ்விய ளனையா ளேக்கிற் சீர்பெறத் தோன்றுவேனல்.

6. சைவல நிகர்த்த கூந்தற் சந்திர வதனத்தாளு
மிவ்விடை வருவதானு ளாதலினியானு மேகி
யவ்விடைமறந்து நின்றே யவளுறு நிலையின் சீரார்
செவ்வியுற் றுணர்த லன்றே சிறந்தநற் செயலதாமால்.

(தொடரும்.)

இயற்கை மகவு

# பத்திரிகை ஆராய்ச்சி.

கல்கத்தா "மாடர்ன் ரெவ்யூ" பத்திரிகையில் டக்கா மஸ்லினைப்பற்றி வெளிவந்துள்ள கட்டுரையொன்றிலிருந்து பின்வரும் பகுதி எடுக்கப்பட்டுள்ளது:—

மென்மையிலும் அழகிலும் இவ்வாறு சிறந்த டக்கா மஸ்லினைப் பற்றிப் பல அதி ஆச்சரியமான கதைகள் சொல்வதுண்டு. டக்கா மஸ்லின் வகைகளுக்கு மொகலாயர் இட்ட பெயர்களே இதை விளக்கும். அவையாவன:—1. அபிரான். (ஓடும் நீர்) இந்தத் துணியைக் கால்வாயில் போட்டால், அது கண்ணுக்குத் தெரியாதாம். 2. பாவ்டா ஹர்வா (செய்த காற்று) அந்தத் துணியைக் காற்றில் பறக்க விட்டால், மேகம்போல் மிதக்குமாம். 3. ஷாப்நாம் (மாலைப் பனி) இந்தத் துணியைப் புல் தரையில் விரித்தால் பனியினின்றும் வித்தியாசப் படுத்த முடியாதாம். ஒரு மாடு புல் மேயும் பொழுது அறியாமல் மஸ்லினையும் தின்று விட்டதென்று ஒரு கதை உண்டு. மொகலாய சக்ரவர்த்தி ஒளரங்கஜேப் ஒரு நாள் மேனியைச் சரியானபடி மறையாமல் உடை உடுத்தியதற்காகத் தன் மகளைக் கண்டிக்க, அவள், டக்கா மஸ்லினால் ஆகிய எழு உடைகளைத் தான் தரித்திருப்பதாகப் பதில் கூறினாளாம்! இத்தகைய பெருஞ் சிறப்பிற்குக் காரணம் யாது? டக்கா பருத்திச்செடியின் மேன்மையென்று சிலர் கூறுவர். இந்தப் பருத்தி மற்ற இந்தியப் பருத்திகளைக் காட்டிலும் உயர்ந்ததுதான். இது டக்கா ஜில்லாவின் வட பாகத்தில் விளைந்துவந்தது. இப்பொழுதோ கவர்ன்மெண்ட் பொட்டானிகல் தோட்டத்தில் உள்ள இரண்டு செடிகளைத் தவிர வேறு கிடையாது. இவைகளைக்கொண்டு இந்த வகைப் பருத்திச் செடிகளை விருத்திசெய்ய கவர்ன்மெண்டார் முயல்கிறார்கள். இதற்குப் "பொடி" என்பது சுதேசிப் பெயர். அமெரிக்கன் பருத்தி இதைவிட வள முடையது. ஆகையால், டக்கா மஸ்லின் சிறப்புக்குப் பருத்தியின் மேன்மை மாத்திரம் காரணமாகாது. உண்மையில் நூற்போர் செய்வோரின் சாமர்த்தியம் தான் முக்கிய காரணம். சாதாரண நூல் இப்பொழுது போல் சர்க்காவில் நூற்கப்பட்டது. உயர்ந்த நூல் "டுடுவா" என்ற கைத்தறியில் நூற்கப்பட்டது. பின்சொன்ன தொழில் நடைபெறும் பொழுது உஷ்ணம் கூடா

தாகையால், நூற்போர் மாத்திரம் நிறையத் தண்ணீரை அடியிலே வைத்துக்கொண்டு; அதன்மேல் நூற்பார்கள். நூற்பவர் அநேகமாய் ஸ்திரீகள். இவர்களிலும் முப்பது வயதிற்கு உட்பட்டவர்தான் உயர்ந்த வேலை செய்வார்கள். ஏனெனில், இந்தக் கைத்தொழிலுக்கு மெல்லிய ஸ்பரிசமும், பார்வைக் கூர்மையும் வேண்டும். மூக்குக் கண்ணாடிதரித்த தற்காலச் சீமாட்டியர் மஸ்லின் நூல்நூற்கத் தகுதியற்றவர் போலும்! இப்பொழுது முன்போல் சாமர்த்தியம் உள்ளவர் டக்காவில் ஒருவருமே இல்லை. டக்கா மஸ்லினது மேன்மையைப் பற்றியும் ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். இப்பொழுது சர்க்காவில் நூற்கப்படும் நூல் 200-ம் நம்பருக்கு மேற்படுவது துர்லபம். சர்தாரண மில் துணி 25-நம்பர் நூலால் ஆகியது. அந்தக் காலத்திலோ, டக்காவில் 550-ம் நம்பர் நூலை நூற்று உபயோகித்தார்கள். இங்கிலாந்தில்'மெஷீன்'ல் நூற்கப்பட்ட 700-நம்பர் நூல், காட்சிச் சாலையில் காண்பிக்கப்பட்டது; ஆனால், அந்த நூலைக்கொண்டு உறுதியான துணிநெய்தல் அசாத்தியம். டக்கா மஸ்லின், 10-கஜம் பீஸ் ஒன்றை ஒரு மோதிரத்துக்குள் நுழைக்க முடியுமாம்! டக்கா மஸ்லின் சாதாரண ஜனங்கள் வாங்கக் கூடியதில்லை. 10 கஜம் பீஸ் ஒன்று, ஒருவனே வேலைசெய்தால், நெய்வதற்கு $2\frac{1}{2}$ வருஷங்கள் பிடிக்கும்! ஆகையால், 20 கஜம் பீஸின் விலை, 400 அல்லது 450 ரூபாவாக விருந்தது; அக்காலத்தில் ஒரு ரூபா இப்பொழுதைக் காட்டிலும் பலமடங்கு மதிப்புள்ள தென்பது ஞாபக மிருக்கட்டும்.

ஃ ஃ ஃ

திருவிடைமருதூர் ஊழியர் கழகத்தில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் செய்த உபந்யாசத்தில் பின்வரும் பகுதிகள் காணப்படுகின்றன:—

தேசபக்திக்கு உயிர்போன்றது.மொழிப்பற்று. மொழிப்பற்றின்றி நாட்டுப்பற்று உண்டாதல் அரிது. மொழிப்பற்றில்லா நாட்டுப்பற்றும் போலியாகும். ஆதலால் மொழிப்பற்று இன்றியமையாதது. நாட்டுப் பெயர்களெல்லாம் பெரிதும் மொழிவழியே பிறந்தன. நாட்டுக்குப் பெயர் நல்கும் பேறுடைய மொழியை அதாவது தாயையா மறப்பது? உலகில் தாயை மறந்தவரைத் தேடிப்பார்த்தால், தமிழன் முதலில் நிற்றல் காணலாம். தாய்மொழிப் பற்றின்றிவாழ்வோன் தமிழன் என்று சொல்வது மிகையாகாது. தமிழ்மக்கள் அந்நியமொழிக்கு ஆக்கந்தேடுவதில் மிகத்திறமைவாய்ந்தவர்கள். அந்நியமொழி பல

பயிலலாம். பயிலவேண்டாமென்று நான் சொல்கின்றேனில்லே. தாயைப்போற்றி மற்றவரையும் போற்றுங்கள் என்று சொல்லுகிறேன். பதினெட்டு மொழி வல்லவரே பண்டைநாளில் பண்டிதரென்றழைக்கப்பட்டனர். பல மொழிகளேப் பயிலும் பயிற்சி தமிழ் மக்கட்குண்டு. பலமொழிப் பயிற்சியிடைத் தாயை மறப்பது கூடாது என்னும் ஒன்றையே ஈண்டுப் பெரிதும் வலியுத்துகிறேன். தமிழ்க் கூட்டத்தில் ஒரு தமிழன் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவது என்ன மொழிப்பற்று? என்ன நாட்டுப்பற்று? இவ்வழக்கம் தமிழ்நாட்டில் அதிகம்.

வங்காள கவியரசராகிய ரவீந்திரநாத்தாகூர் "கீதாஞ்சலி"க்காக உலகப்பரிசில் பெற்ருர். அப்பரிசிற் பொருளாக உள்ள கீதாஞ்சலி முதன் முதலில் எம்மொழியில் யாக்கப்பெற்றது? ஆங்கிலத்திலா? அன்று. தமது தாய்மொழியாகிய வங்க மொழியிலன்றே தாகூர் கீதாஞ்சலி யாத்தனர்? திலகர் பெருமான் ஆறுண்டு சிறைக்கோட்டம் நண்ணியிருந்தபோது அவர் 'கீதை'க்குக் கீதாரகசியம் என்னும் ஒரு பாஷியம் வரைந்தார். அதனே அவர் எம்மொழியில் வரைந்தார்? தமது தாய்மொழியாகிய மஹராஷ்டிர மொழியன்றே? திலகர் பெருமானுக்கு ஆங்கிலந்தெரியாதோ? மகாத்மா காந்தி இப்பொழுது தமது வரலாறு எழுதிவருகிருர். அவர் எம்மொழியில் அத்தொண்டாற்றி வருகிருர்? நேயர்களே சிந்தியுங்கள். அவர் தாய்மொழியாகிய குஜராத் மொழியில் வரலாறு எழுதிவருவது உங்கட்குத் தெரியும். இப்பெருந் தேசபக்தர்கள் தாய்மொழியின் வளர்ச்சி தேசவளர்ச்சி யென்பதன் நுட்பந்தெரிந்தவர்கள். ஐயர்லாந்து தேசத்தார் பல நூற்றுண்டுகளாகத் தமது நாட்டின் விடுதலே குறித்துப் பலதிறக் கிளர்ச்சி செய்தார். பின்னே நாட்டார்க்குத் தாய்மொழி மீது வேட்கை எழுப்பினல் நாட்டார்க்குள் நாட்டுப் பற்று முருகியெழுமென்று தலைவர்கள் ஐரிஷ் மொழிவளர்ப்பதில் பெருங் கவலே செலுத்தித் தேசப்பற்றை எழுவித்து முடிவில் விடுதலேயடைந்தனர்.



உ

சிவமயம்.

# குமரன்.

KVC00009

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. திருக்குறள்.

சதங்கை சு. } காரைக்குடி பிரபவ-ஙூ வைகாசி-மீ { மணி ௪.

## ஸ்ரீ ஞானசம்பந்த விஜயம்.

பண்டித சி. விரபாகு பிள்ளை.

(முன்தொடர்ச்சி.)

அரசன் கட்டளையிட்டதும் சமணர்கள் தீ வைத்ததும் சம்பந்தமூர்த்திக்கோ ஞானக் கண்முன் வெளியாகிவிட்டது. ஆகவே "அமணர் கொளுவும் சுடர் பையவே சென்று பாண்டியற்காக்வே" என்றார்கள். "அஞ்சுவது அஞ்சல் அறிவார்தொழில்" என்றபடி அஞ்சிய அந்தக் கலக்கமான நேரத்திலுங் கூட "சுடர் பையவே சென்று பாண்டியர்க்காகவே" என்று வார்த்தைகள் தராசு வைத்து நிறுத்துப் போடப்பட்டனபோல, அவ்ருக்கு எவ்வளவு பொருத்தமாகவும் இரக்கமாகவும் அமைகின்றன பாருங்கள். 'வெய்யவே சென்று வேந்தனுக்காகவே' என்று அமைந்திருக்குமானல் என்னென்ன அபாயங்களெல்லாம் விளைந்திருக்கும்? இன்னும் அப்பெருமானது பெருங்கருணையைப் பாருங்கள். "வெய்யவே சென்று அன்னவர்க்காகவே" என்றாராயின் சமணர்கள் போன இடம் புல் முளைத்திருக்கும். நிற்க, இனி அரசன் கதி என்னவாயிற்று என்று பார்ப்போம்.

சூர்யோதய மாகிவிட்டது. உதயத்தில் அன்று நடந்த காட்சியைக் கண்டவர்களுக்கு மதுரை நகரமே ஒரு புதுமையை

அடையப்போகிறது என்று தோன்றும். கோடிக்கணக்கான வானக்காட்சிகள் — சித்திரத்தோற்றங்கள் — லாவண்யங்கள்— அன்று விடியலில் சூரியப் பிரவேசத்தில் காணப்பட்டன. விடிய ஐந்து நாழிகையிலிருந்தே தொடங்கிய 'சிவோகம்' 'சிவோகம்' என்ற ராட்டினத்தின் ஒலி இன்னும் மதுரை நகரத்தில் சப்தித்துக்கொண்டே இருக்கின்றது.

அந்த நேரத்திலே, அரசன், அரண்மனை அந்தப் புரத்திலே ஐந்து மூன்றடுக்கிய பஞ்சணையிலே சாய்ந்துகொண்டிருக்கிறான். இரவில் ஏற்றிய குத்துவிளக்கு இன்னும் அவியவில்லை; எரிந்து கொண்டுதானிருக்கிறது. "என்னை யார் தீயைக்கொண்டு கொளுத்துகிறது? இது என்ன! என்னால் தாங்கமுடியவில்லையே" என்று சொல்லித் துடித்துவிட்டான். சப்தம்கேட்டதும் அரசி வந்துவிட்டாள். அவளுக்குத்தான் என்ன; துன்பத்துக்கு மேல் துன்பமா? சற்று முன்தான் திருமடத்தில் தீப்பற்றியது என்று கேட்டு நெருப்பிலிட்ட புழுவாய்த் துடித்துக் கண்ணீர் விட்டுக் கலங்கினாள். தன் செல்வக் குமாரனுக்கும் அவர் அடியார்களுக்கும் பழுதில்லை என்று கேட்ட பின்தான் உயிர் கைக்கு வந்தது. அதற்குள் இந்தத் துன்பம் வந்துவிட்டது. இன்னது செய்வதென்று தெரியவில்லை. தன் குலதெய்வமான சிவபிரானைக் கணவனது நோய் நீங்கவேண்டுமென்று பிரார்த்தித்தாள். மந்திரிக்கு ஆள் அனுப்ப மந்திரிவந்துவிட்டார். அரசன்படும் அவஸ்தையைக் கண்டதும் அவர் அடைந்த துன்பத்துக்குக் கங்குகரையில்லை. வாழைக் குருத்துக்களைக் கொண்டுவரச் சொல்லி அவற்றின்மேல் அரசனைப் படுக்கவைத்தார். அவை அந்த க்ஷணமே சுருக்கொண்டு கரிந்து போயின. மருத்துவர்கள் வந்தார்கள். அவர்கள் மருந்துகளை யெல்லாம் உண்டு ஏப்பமிட்டு விட்டதாம். இதற்குள் சமணர்களும் வந்துவிட்டார்கள். அவர்கள் மனம் படபடவென்று அடிக்கிறது. கைகளை நொடித்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் குண்டிகை நீரை மந்திரித்து அரசன்மேல் தெளித்து பீலி கொண்டு தடவுகிறார்கள். பீலி பிரம்போடு கரிந்தது. வெப்பமோ பக்கத்தில் நிற்கக்கூடவில்லை. அரசன் தாங்கமுடியாமல் அவர்களை வைது விலக்கிவிடுகிறான்.

பிரக்ஞை போய்விடுகிறது. சமணர்களது மந்திரமும் தந்திரமும் நிஷ்பிரயோஜனமாயின. அரசிக்குத் துக்கம் கைமீறிவிட்டது. சோர்ந்துபோய் அரசன் தலைமாட்டில் இருந்துவிட்டாள். மருந்துகளின் உதவியால் போன உணர்வு திரும்பவும் கொஞ்சம் வருகிறது. அந்நேரம், தேவி அரசனைப் பார்த்து "அரசே! இந்த நோய் ஒருமாயமாக இருக்கிறது. இது "சீகாழியிலிருந்து வந்திருக்கும் எங்கள் ஞானசம்பந்தப்பிள்ளை தீர்த்தால்தான் தீரும். அவரை அழைத்து வரட்டுமா?" என்றாள். அரசனும் இசைந்தான்.

அரசியும் அமைச்சரும் திருமடத்துக்குச் சென்று,

"ஞானத்தின் திரு உருவை, நான் மறையின் தனித்துணையை,
வானத்தின் மிசை அன்றி மண்ணின்வளர் மதிக் கொழுந்தை,
தேன் நக்க மலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர் தொடுக்கும்
கனத்தின் எழுபரப்பை."

காண்கிறார்கள். சமணர்கள். பெருமானுக்குச் செய்த கொடுஞ்செயல் அவர்கள் மனங்களைக்கீறி இருந்தது. துக்கமோ கொஞ்ச நஞ்சமல்ல. கண்களிலிருந்து கண்ணீர் பெருகுகிறது. இருவரும் குமாரமூர்த்தியின் பாதங்களில் விழுந்து வணங்கினர்கள். சம்பந்தப்பெருமான் அவர்களை இனிய மொழிகளால் தேற்றித் "தீங்குயாதேனும் உண்டா?" என்றார். அதற்கு அரசி "பெருமானே! பொல்லாத வெப்புநோய் எங்கள் அரசரை அடுத்திருக்கிறது; அவர் புழுவாய்த் துடிக்கிறார். நீர் கருணை கூர்ந்து எழுந்தருளி வந்து அவரைக் காத்தருள வேண்டும்" என்றாள். தம் தாயே நேரில் வந்து வேண்டும்போது பிள்ளைப்பெருமான் தடுத்துரைக்க முடியுமா? 'நல்லது' என்று இசைந்து அரண்மனைக்குச்செல்ல முத்துப்பல்லக்கில் ஏறுகிறார். பல்லக்கு வருகிறது. அரசியும் மந்திரியும் கூடவே சேவித்துக்கொண்டு வருகிறார்கள். இப்பொழுது புகலியர் பெருமான் 'குன்று குயின்றனவாசல்; அரண்மனை முற்றம், ஆயுதசாலை, தோரணமாடம், வரவேற்பு மண்டபம், அரசிருக்கை மண்டபம், சித்திரத்தெற்றி எல்லாம் கடந்து அந்தப்புரத்தில் அரசன் பக்கத்திலேயே வந்து விட்டார்.

அரசனுக்கு அவரைக்கண்ட உடனேயே நோய் வேகம் சிறந்து தணிந்தது. கையெடுத்து வணங்கி அவரை வரவேற்கிறன். அவன் பக்கத்தில் ஒரு மணி ஆசனம் இடப்பட்டிருந்தது. அதில் ஏறி இருக்கிறார் சம்பந்தர். காலையில் எழும் சூரியனைச் சூழ்ந்த கருமேகம் போல அவரைச் சமணர்கள் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களுக்குத்துக்கம் நெஞ்சடைக்கிறது. கண் சிவக்க என்னென்னவோ சொல்லுகிறார்கள். இதை யெல்லாம் அரசி பார்த்தாள். அவளுக்குப் பயம் பிடித்துவிட்டது. இந்தப் பொல்லாதவர்கள் பிள்ளைப்பிரானுக்கு இன்னும் என்ன செய்து விடுவார்களோ? என்று நினைத்துக்கண்கலங்கி நிற்கிறார். அதைக்கண்டார் சம்பந்தப்பிள்ளை. தம் அன்னை பயப்படாமல் இருக்கும்படி,

மானினேர் விழிமாதராய்! வழுதிக்குமாபெருந்தேவி கேள்
'பால் நல்வாய் ஒருபாலன் ஈங்கிவன்' என்று நீபரிவெய்திடேல்
ஆனைமாமலை ஆதியாய இடங்களில் பல அல்லல் சேர்
ஈனர்கட்கு, எளியேன் அலேன்திரு ஆலவாய் அரன் நிற்கவே.

என்று பாடுகிறார். இதைக்கேட்டதும் சமணர்களுக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. சம்பந்தப் பெருமானைப்பார்த்து "நாம் இருவரும் சமயவாதம் செய்வோம்; வென்றவர் பக்கம் அரசன் சேரட்டும்." என்றார்கள். அதற்கு அரசன் "என்ன வாதம் வந்திருக்கிறது இப்பொழுது? வீடு தீ எரியும்போது பல்லவி பிடித்துப்பாடிய கதையாகிவிட்டது. சுவாமிகளும், வேண்டுமானல் நீங்களும் 'என் நோயை நீக்கவேண்டும். நீக்கினவர் சமயமே என் சமயமும்.' என்றான்.

அப்பொழுது சமணர்கள் "வேந்தர் வேந்தே! நாங்கள் உமது இடதுபக்கத்து வெப்பை நீக்குகிறோம்; வலதுபக்கம் அவருக்கு" என்று சொல்லி, அரசனை அணுகி அவனது இடது பக்கத்தை மந்திரித்து நீர் தெளித்துப் பீலியால் தடவினார்கள். சிகிச்சை செய்தவர்களே கிட்டத்தில் நிற்கமுடியாமல் விலகிப்போவார்களானால் அரசனுக்கு எப்படி இருக்கும் என்று யூகித்துக்கொள்ளுங்கள். அரசன் நம் பிள்ளைத்தெய்வத்தை நோக்கிக் கண்ணீர்

விட்டுக்கைகூப்பித்தன் நோயை நீக்கும்படி வேண்டுகிறான். பிள்ளைப்பெருமானும் திருநீறு எடுத்தப்பாண்டியன் உடலில் பூசி,

"மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு,
தந்திரமாவது நீறு, சமயத்தில் உள்ளது நீறு,
சுந்தரமாவது நீறு, துதிக்கப்படுவது நீறு
செந்து வர்வாய் உமை பங்கன் திருவாலவாயான் திருநீறே"

என்று பதினொரு பாசுரம் பாடித் திரும்பவும் திருநீற்றைப் பூசுகிறார். சுரநோய் நீங்கிவிட்டது. அரசன் பேரானந்தமடைந்து அவர் பாதங்களில் விழுந்து வணங்குகிறான். திருநீறிடுகிறான். அவன் அடைந்த மகிழ்ச்சிக்களவில்லை. அரசியும் மந்திரியும் புத்துயிர் பெற்றவர் போலப்பூரித்து விட்டார்கள். கண்டவரும் கேட்டவரும் ஆனந்தித்தனர். எல்லாம் ஆனந்தமயம்.

என்ன ஆனால்தான் என்ன? சமணர்கள் விடவாபோகிறார்கள்? மீளவும் அரசனை அணுகி "வேந்தே! வேலியே பயிரை யழிக்கக்கங்கணம் கட்டிவிட்டால் என்ன செய்வது? எல்லாம் அருகன் செயல். ஒன்று செய்யும். இந்தப்பிள்ளை எங்களோடு நெருப்பு வாதமும் நீர்வாதமும் செய்யட்டும் பார்க்கலாம்" என்றார்கள்.

அரசன் "ஐயா! நந்திகளே!! உங்களுக்கு இனி என்னவாதம் வேண்டியதிருக்கிறது?" என்றான்.

அதற்குள் சம்பந்தமூர்த்தி அரசனைக்கை அமர்த்தி முனிவர்களைப்பார்த்து, "நெருப்புவாதமா செய்யவேண்டும்? எப்படி என்று சொல்லுங்கள் செய்வோம்" என்றார்.

இருவர் மதசம்பந்தமான ஏடுகளையும் எரியும் நெருப்பில் இடவேண்டும்; எவர் ஏடு வேகாமல் பச்சையாக இருந்ததோ அவர் வென்றவர்.

சம்மதம்.

இனி அரசன் என்ன சொல்ல இருக்கிறது? கஞ்சுகிகளைக் கொண்டு நெருப்பு மூட்டச் சொல்லுகிறான். நெருப்பு மூட்டப்பட்டது. எரியும் நெருப்பிலே சமணர்கள் தங்கள் சமய ஏடுகளை ஏறக்குறைய ஒரு பொதி கொண்டுவந்து கொட்டினார்கள். புகலிப்

பின்னை பாசுரங்கள் எழுதிய ஏட்டுச் சுவடியைக் கொண்டுவரச் சொல்லி இறைவனைத் தொழுது கயிறுசாத்துகிறார். 'போகமார்த்த பூண் முலையாள்' என்று தொடங்கும் நள்ளாற்றுப் பதிகம் உதய மாகிறது. அவ்வேட்டை எடுத்து நெருப்பில் இடுகிறார். குறித்த நாழிகை கழிந்தது. தீ கஞ்சுகிகள் தீயை அணைத்தார்கள். கழுமலச் செல்வர் எழுந்து சென்று நெருப்பிலே வேகாமல் பச்சையாக இருந்த தமது ஏட்டை எடுத்து எல்லாரும் வியந்து மகிழத்தம் சுவடியில் சேர்த்துக்கொள்ளுகிறார். சமணர்கள் ஒரு ஏடாவது தப்பித்தவறிக்கிடந்து விடாதா என்று கரி எல்லாம் எடுத்து ஊதி ஊதிப் பார்த்தார்கள். ஒன்றும் இல்லை. எல்லாம் அக்கினிதேவனுக்கு ஆவுதி ஆகிவிட்டது. கைகளைப் பிசைந்து கொண்டு நிற்கிறார்கள்.

"அடுத்தது நீர்வாதமா?" என்றான் அரசன்.

"ஆம்; அதுதான்" என்றார்கள் சமணர்கள். ஆனால் முன் இருந்த ஊக்கம் இல்லை. நாடிகள் அரைவாசி அடங்கிவிட்டன.

"நீர்வாதம் எவ்விதம் செய்வது?" என்றார் சிரபுரச் செல்வர்.

உம்முடைய ஏட்டையும் எங்கள் சமய ஏடுகளையும் வைகை நதியில் இடவேண்டும். எவர் ஏடு ஆற்றில் எதிர்ஏறிச்சென்றதோ அவர் ஜெயித்தவர்.

'சரி' என்று சம்பந்தர் ஒப்புக்கொண்டுவிட்டார்.

அந்நேரம் அமைச்சர், "வாது செய்வது சரிதான். அதில் தோற்றவர்கள் என்னசெய்வது?" என்றார்.

சமணர்களுக்கு அவரைத்தின்று விடலாமா என்றிருந்தது. வந்தகோபத்துக்கு அளவில்லை. அமைச்சரைப்பார்த்து "நாங்கள் தோற்று விட்டோமானால் எங்களை இந்த அரசனே கழுவிலேற் றட்டும் என்றார்கள்.

நதிக்குச் செல்ல ஏற்பாடுகள் நடந்தன. அரசன், அரசி, அமைச்சர், ஞானசம்பந்தப் பெருமான், அடியார்கள், சமணர் கள், எல்லாரும் புறப்பட்டு விட்டார்கள். வழியிலே எள் விழ இடமில்லை. ஜனங்கள் நெருக்கம். மாடங்களிலும், மாளிகைகளி

லும் பெண்கள் 'நான் முந்தி' 'நான் முந்தி' என்று இடம்பிடித்து கொண்டு குழந்தைப் பெருமானைப் பார்க்கக் கூடியிருக்கிறார்கள். இப்பொழுது பல்லக்கு நதிக்கரைக்கு வந்து விடுகிறது.

> "கார்முற்றி இணர் ஊழ்த்தகமழ் தோட்ட மலர்வேய்ந்து
> சீர் முற்றிப் புலவர் வாய்ச் சிறப்பெய்தி இருநிலம்
> தார் முற்றியது போலத்தகை பூத்த வையை"

அதிக வேகமாக வருகிறாள். அவளது காம்பீர்யமான வரவு பொருநையாற்றின் ஆவணிப் பெருக்குபோல இருக்கிறது. நகரம் முழுதும் நதியில்தான் கூடிவிட்டது. ஒருவர் வாயிலாவது சமணர்கள் ஜெயிக்கட்டும் என்ற வார்த்தை வரவேண்டுமே! கிடையாது. எல்லாரும் ஞான சம்பந்தப் பெருமானே வாகை சூட வேண்டுமென்று தங்கள் இஷ்டதேவதைகளைப் பிரார்த்திக்கிறார்கள்.

சமணர்கள் தங்கள் அத்திநாத்தி எழுதிய ஏடுகளைச் சுமக்க முடியாமல் சுமந்துகொண்டு நதியின் கிட்டத்தில் வந்தார்கள். அதன் வேகத்தைக்கண்டதும் அவர்களுக்குத்திகில் ஏற்பட்டுவிட்டது. என்ன செய்வது? இட்டார்கள். வைகை அவ்வேடுகளை இழுத்துக்கொண்டு அதிக வேகமாகப் போகிறாள். ஒரு ஏடாவது சற்று எதிர்நோக்கிப்பார்க்கவேண்டுமே? சமணர்களுக்கு ஜீவ களை போய் விட்டது. அதன்பின் சம்பந்தப்பெருமான் தம் பவளவாய் திறந்து,

> "வாழ்க அந்தணர், வானவர், ஆன் இனம்,
> வீழ்க தண்புனல், வேந்தனும் ஓங்குக.
> ஆழ்கதீய தெல்லாம். அரன் நாமமே
> சூழ்க வையமும் துயர் தீர்கவே"

என்று பதினொரு பாசுரம்பாடி ஏட்டில் வரைந்து அவ் ஏட்டை வைகையில் இடுகிறார். ஏடு எதிர் ஏறி நீரைக்கிழித்துக் கொண்டு நதிவேகத்தையும் கடந்து செல்லுகிறது. ஆரறிவார் தமிழ் அருமை என்கிறோம்? இம்மதுரை மூதூர் நெருப்பறிந்தது முன். இப்பொழுது நீரும் அறிந்துவிட்டது. ஜனங்களெல்லாம் கண்படைத்த செல்வம் என்று காண்கிறார்கள். அவர்களுக்குத் தான் என்ன ஆனந்தம்! ஒவ்வொருவரும் அந்தவெற்றியைத் தமதென்று நினைத்து மகிழ்கிறார்கள். மதுரைநகரத்தார் நெற்றியில்

லாம் நீறு மணக்கின்றது. சொல்லெல்லாம் சைவம் மணக்கின்றது. அரசன் பரம சைவனாகிவிட்டான்.

இவற்றையெல்லாம் பார்த்தார்கள் சமணர்கள். அவர்களால் சகிக்கமுடியவில்லை. ஒருவரும் சொல்லாமலே கழுவில் ஏறிவிடுகிறார்கள். "ஐயோ! எண்ணாயிரம்சமணர்கள் இறந்துவிட்டார்களே" என்று நினைக்கிறோம். அதன்மூலம் யாருக்குத்தெரிகிறது? ஆனாலும் பெரிய மலர்க்குவியலில் அழுகிய பூக்களைக் களைந்துதான் தீரவேண்டும். இல்லையேல் குவியல்மலர் முழுதுமல்லவா கெட்டுவிடும்? அவ்விதமே சமணர்களும் களையப்பட்டார்கள் என்றுதான் வைத்துக் கொள்ளவேண்டும்.

நிற்க, மதுரை நகரமோ இப்பொழுது சிவலோகமாகிவிட்டது. வாகை சூடிய சம்பந்தப்பெருமானை வரவேற்பதற்கும் அந்த நகரத்தவர்கள் செய்திருந்த அலங்காரங்கள் கொஞ்சமல்ல.

"தோரணம் நடுவாரும், தூண் உறை பொதிவாரும்,
பூரணகுடம் எங்கும் புனைதுகில் புனைவாரும்
கார்அணி நெடுமாடம் கதிர்மணி அணிவாரும்,
ஆரணமறை வாணர்க்கு அமுது இனிது அடுவாரும்,
சந்தனம், அகில் நாறும் சாந்தொடு, தெருவெங்கும்
சிந்தினர் திரிவாரும், செழுமலர் சொரிவாரும்,
இந்திரதனு நாண எரிமணி நிரை மாடத்து
அந்தமில் விலை ஆரக் கோவைகள் அணிவாரும்"

ஆனார்கள். வழியெல்லாம் 'சீகாழிச் செல்வம் வருக,' 'ஸ்ரீ ஞானசம்பந்தர் வாழ்க,' 'பூந்தராய்ப் பெருமான் வெல்க,' 'புகலியர் கோன் சிறக்க' என்று பெரிய பெரிய பொன் எழுத்துக்களில் எழுதித் தைத்ததோரணங்கள்—பூங்காவணங்கள்—கமான்கள்—கதலிக்குலைகள்— கமுக மரங்கள்—மலர்மாலைகள்— சித்திரத் தொங்கல்கள்—ரிஷபக் கொடிகள்— வெண்பட்டு விதானங்கள், மதுரை நகரம் புதுக்கி அமைத்த சித்திரம் போலாகிவிட்டது.

ஞானசம்பந்தப் பெருமான் விஜய சம்மன்னராய் சோம சுந்தரக் கடவுளை வணங்க முத்துப்பல்லக்கில் ஏறி நகரத்துக் குள் வருகிறார். அரசனும் பிறரும் அவரைச் சூழ்ந்து சேவித்து

வருகிறார்கள். சம்பந்த சாணலயர் இப்பொழுது நடையிலேயே தேவாரப் பாசுரங்களைப்பாடி வருகிறார். பாணர் பிரானும் யாழை வாசிக்கிறார். இருவர்களது இசையமுதமும் வீதியிலே வாசலிலே, முற்றத்திலே, சாளரத்திலே, மாடத்திலே நின்றவர் களையெல்லாம் உயிருள்ள சித்திரங்கள்போல் ஆக்கிவிட்டன. கடவுளே! அவர்கள் அந்தக்கானரசத்தில் தங்களையே மறந்து விட்டார்கள். அவர்கள் செவி நுகர்ந்து நிரம்பவில்லை. ஆ! எல்லை இல்லாத லாவண்யம்— கரையில்லாத கானரசம்—ஈடில்லாத இன்பமயம்.

"என்றும் அடியவர் உள்ளத்திருப்பன; இவ்வுலகோர்
நன்று மலர் கொடுதூவித் துதிப்பன; நல்ல சங்கத்து
ஒன்றும் புலவர்கள்யாப்புக்கு உரியன; ஒண்கலியைப்
பொன்றும் கவுணியன் சைவசிகாமணி பொன்னடியே."

ஆளுடைப்பிள்ளையார். —திரு மும்மணிக் கோவை.

---

# துளசி.



## மருத்துவ மகிமை.

திருவண்ணமலை வைத்தியர் வேங்கடசாமி முதலியார்.

சீருஞ் சிறப்பும் பொருந்திய தமிழ் நாட்டில் ஒப்புயர்வற்று விளங்கும் சஞ்சீவி மூலிகைளுள் துளசி என வழங்கும் திருத் துழாயும் ஒன்று. துளசியைப் பற்றி நமது தொன்மையான மரு த்துவ நூல்களில் பொதுவிதியாலும் சிறப்பு விதியாலும் விசேஷ விதியாலும் கூறியுள்ள அரிய குணமும் பெரிய செயலும் கற்றுரு ணர்ந்ததே. மூலிகை வகைகளில் முதன்மையானதும், பாலரோக ங்களைப்பறக்கடிப்பதும், மிருத்யுவுக்குமிருத்தானதும்,ஜன்னிக்கு வன்னியானதும், கபத்துக்குக் காலனானதுமாகிய துளசியா னது குடும்ப வைத்திய முறைகளாக எவ்வளவு முக்கியமாய் உப யோக மாகின்ற தென்றும்; நமது பாட்டிமார்களிடம் வீட்டுச்

சரக்காய் முன்னின்று இளங்குழவிகளைப் பால ரோகங்களினின்றும் எவ்வாறு காப்பாற்றுகின்றதென்றும்; இம் மூலிகையைத் தனிபாகவோ, இரண்டொரு சாதாரண வீட்டுச் சரக்கு, நாட்டுச் சரக்கு, காட்டுச்சரக்குகளுடன் சேர்த்தோ உபயோகித்து வருவதால் சிற்சில கடுர ரோகங்களும் எவ்வளவு சுலபமாயும் ஆச்சரியமாயும் நீங்குகின்றனவென்றும் இதன் இதர உபயோக முறைகளையும் நமது முன்னோர்களாகிய முனிபுங்கவர்கள் சந்தர்ப்பத்திற்கேற்ப ஆங்காங்கு மருத்துவ நூற்களின் இடையிடையே தனிபாகவோ அனுபான பூர்வமாகவோ சுருங்கக் காட்டி வைத்துள்ள சூக்கும முறைகளை மருத்துவாசிரியர்கள் நன்கறிவர்.

துளசியை ஸ்ரீ மகாலட்சுமியின் சொரூப மென்பர் பக்த சிரேஷ்டர்கள். காய கற்ப மகாமூலிகை யென்பர் தேரையாதி முனிந்திரர்கள். தெய்விக சித்தாமிர்த மென்பர் வைராக்ய புருடராகிய விஸ்வாமித்திரர். தொலையாத பற்பல பிரிவுகளையுடைய மேக ரோகங்கட்கும், அலைபோன்ற பித்த ரோகங்கட்கும், மலைபோன்ற கபரோகங்கட்கும், தலைபாய சிறந்த மருந்தென்பர் மருத்துவ நூலாசிரியர்கள். பாலர்களின் பாதுகாவலனென்பள் நல்லிசைப் புலமை மெல்லியலாளாகிய ஔவைப் பிராட்டியார். எவ்வித மருந்துகளாலும் வசப்படாத கப (சிலேஷ்ம) ரோகங்களாகிய காலனுக்குக் கால காலனென்பர் அகஸ்திய முனிவரின் பாட்டனாராகிய தன்வந்திரி பகவான்.

## இனம்.

1. சிறுதுளசி, 2. பெருந்துளசி., 3. நிலத்துளசி; 4. நீலத்துளசி, 5. ராம துளசி, 6. நீர்த் துளசி, 7. காட்டுத் துளசி, 8. கருந்துளசி, 9. கரியமால் துளசி, 10. கர்பூர துளசி, 11. செந்துளசி, 12. நாய்த்துளசி, 13. கல் துளசி, 14. முன் துளசி, 15. வெண்டுளசி, 16. எலுமிச்சந்துளசி, 17. கௌசிக துளசி, 18. கிருஷ்ண துளசி எனப் பல பிரிவுகள் உள. இவற்றுள் கிருஷ்ண துளசியும் எலுமிச்சந்துளசியுமே சிறந்தவை, சிறு துளசி, பெருந்துளசி, நிலத் துளசி, நீலத் துளசி, நீர்த் துளசி, இவையே வீடுகளில் வளர்க்கப் பெற்றும் சாதாரணமாய் எங்கும் கிடைத்தும், எல்லா வியாதிகட்கும் உதவக் கூடியன வாயிருக்கின்றன.

மற்றவை கிடைப்பதரிதாயும் ரசவாதம், கருமானம், யந்திர மந்திரம் இவற்றில் சம்பந்தமாகி உலகோர் அதிசயிக்கும் தெய்விக சக்தியைத் தருவனவாய், மலைகளிலும் குகைகளிலும் வனங்களிலும் ஏதேச்சையாய் வசிக்கும் சித்தப் புருஷர்களின் அந்தரங்க மூலிகைகளாய், மற்றோர் கண்களுக்கே மறைபடும் இயல்புடையனவாய், அவ்வாவறுத்த யோகிகளும் ஞானிகளும் வசிக்குமிடங்களில் மாத்திரம் விருத்தியாவனவாயிருக்கின்றன.

ஆகவே, சித்தர் வர்க்கத் துளசிகளை விட்டு, மனித வர்க்கத்தைச் சார்ந்த சிறுதுளசி, பெருந்துளசி, நிலத்துளசி, நீலத்துளசி, நீர்த்துளசி இவை ஒன்றற்கொன்று பொருத்தமாய் அதிக வித்யாசமின்றி சமகுணமுடைத்தாயிருத்தலால் இவற்றில் எது கிடைப்பினும் அதையே சந்தேகமின்றி உபயோகித்து வருதல் வழக்கத்திலிருக்கிறது. ......... ........."

வெண்பா.

"ஐயம் வயிறுளைச்சல்
அஸ்திசுரம் தாகமும் போம்
பைய சுரமாந்தம்
பறக்குங்காண்—மெய்யாக
வாயின் அரோசகம் போம்
வன் காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்."

வெண்பா.

"விருந்தர் வனமே
விலக்க வார் பித்தம்
விந்தா வனவை
விடந்த—விருந்தா
... ...... ..."

என துளசியின் குணங்களை விளக்குகின்றார். தேரைய முனிவர்.

சுருக்க உரை.

கபதோஷம், வயிற்று உளைச்சல், எலும்பைப்பற்றி நீங்காதுள்ள சுரம், தாகரோகம், சுரமாந்தம், நாவின் ருசியைக் கெடு

த்து எந்த ஆகாரத்திலும் வெறுப்பைத் தருகின்ற அரோசகம் முதலியன போம்.

விருந்தாவனமே—துளசியின் சாறே; விலக்க வா—தடுத்தலி னல் வாாத, பித்தம்—பித்தரோகக் கூட்டங்களையும், தா—வலி மையுள்ள, விருந்து—விருந்தைப்போல, ஆவன—எதிர்பாராமல் வருபவைகளாகிய, ஐ—சிலேத்தும சம்பந்தமான, விடம்—விஷச் சேர்க்கைகளையும், தவிரும்—நீக்கும். எனவே,

திவ்ய ஔஷதப் பிரயோகங்களால் தடைபட்டு நிற்கக்கூடிய பித்தரோகங்களையும், திடீரெனத் தோற்றி ஆபத்தை விளைக்கக் கூடிய கப (சிலேத்ம ரோகங்களையும் இவை சம்பந்தமான தொந்த ரோகங்களையும் நீக்கிச் சுகத்தையளிக்கத்தக்கது துளசி யாகிய அரிய தெய்விக மூலிகையின் சாறு ஒன்றே என்பதை "விருந்தாவனமே... ... ... ... ... ... ... ... ... விடந் தவிரும்" என நிலைப்படுத்துகின்றார். ) விந்தை என்பது துளசி; வனம் என்பது சாறு, ரசம், நீர்; இதனை, "வனமே நீர் மிருதி காடு வளர்சோலை துளசி யிமம்" என்று சூடாமணி நிகண்டும் கூறும்.

பூனைக் காஞ்சொறி போன்றவை தினவை (அரிப்பை)யுண்டா க்கலும், கொடிவேலி என்னும் சித்திரமூலம் போன்றவை எரிச் சலையும் ரணத்தையும் உண்டாக்கலும், ஊமத்தை போன்றவை மயக்கந் தருதலும், நஞ்சு குறிப்பாலை போன்றவை வாந்தியை உண்டாக்கலும், பாகல் (பாவைச்செடி) போன்றவை மருந்தை முறித்தலும், காக்கணம் போன்றவை பேதியை உண்டாக்கலும், காயுருவி போன்றவை மந்தாக்கினியைத் தருதலும், கோவை போன்றவை உஷ்ணத்தை- வெக்காட்டை- அழலைத் தணித் தலும் இயற்கைக் குணம். இவ்வாறே சில மூலிகைகளும் அவை வளர்ந்த இடத்து மண்ணும் பல நன்மையையும் துன்பத்தையும் தனித்தோ கலந்தோ செய்தல் அனுபவம். எருக்கம்பாலைப் பூசி அதன்மேல் அச்செடி வேரின் மண்ணையே போடுதல் சம்பிரதாய மல்லவா? இதே போல இத்துளசியும் ஆபத்தான அவசிய சமயங்களில் மாலையினலும், இலையினலும், கிளையினலும், வேரி னலும், செடியின் அடியிலுள்ள மண்ணினலும், உதிர்ந்த இலைச் சருகினலும் பேருதவி செய்கின்றது.

துளசிக்குள்ள அநேக குணங்களில் "மிகினுங் குறையினும் நோய்செய்யும் நூலோர் வளிமுதலா வெண்ணிய மூன்று" என்ற பொய்யா மொழிப்படி வாத—பித்த—கப தொந்த நாடி பேதங் களை ஏற்றத்தாழ்வின்றி மாறுபடாமல் நிற்கச் செய்தல் முக்கிய மானது. வாதமாதி நாடிகள் தன்நிலை மாருதும் மீருதும் நிற்பின் தென்திசைத் தலைவனும் யமதருமனும் நெருங்கான் என்பது சுகாதார நூற்றுணிவு. 'நமனார்க்கு இங்கு எது கவை நாம் இருக்கும் இடத்தே' என்பார் தேரைய முனிவரும்.

" ... ... ... ... ...
... ... ... ...
சீராயின தெய்வ நன்னோயிது
தெய்வத் தண்ணந் துழாய்த்
தாராயினுந் தழையாயினுந்
தண்கொம்பதாயினுங் கீழ்
வேராயினும் நின்ற மண்ணாயினுங்
கொண்டு வீசுமினே"

என்ற பெரியார் உரையும், துளசிமாலை, இலை, கொம்பு, வேர், கீழ் மண் இவையனைத்தாலும் நோயைத் தீர்க்கும் சக்தி வாய்ந்தது என்பதை நினைவூட்டுகின்றது. முன்னர் கூறியவாறு மிக்க பலமான பித்த ரோகங்களையும் காலனுக்குச் சமமான பயங்கரமுள்ள கபரோகங்களையும் தீர்க்கமுடியாது, மருந்து களும் மந்திரங்களும் கைவிட்டகாலத்தும், பசுமை தங்கிய துளசியிலையை மாலையாகக்கட்டி அணிந்துகொள்வதாலும், இவ் வளவு அதிகமாகக் கிடைக்காதாயின் சிறிது தழையாலேனும், இதுவும் கிடையாதபோது, துளசிக் கொம்பாலேனும், இஃதும் அரிதாம்போது துளசிவேராலேனும், இவையாவும் கிட்டாதா யின் துளசிச் செடியிருந்த இடத்தின் அடிமண்ணாலேனும் பித்த—கப ரோகங்களைப் போக்கிக்கொள்ளலாம் எனல் அனுபவ சித்தம். (பித்தரோகம் நாற்பது, கபரோகம் தொண்ணூற்றாறு இவற்றின் விபரங்களை எழுத இங்கு இடமில்லை.)

"துளசி மணந் தன்னால்
சொக்கிடும் விஷப்பூச்சிகள்

துளசி உலர்ந்த தூள்
    துவர் உப்பைப் போக்கிடும்
சிகிச்சாப் பொடி தனக்குச்
    சிறந்தது துளசியே
சிகிச்சை பலவும் செய்து
    தேகத்தை வளர்த்திடும்
குருமுனி அகஸ்தியர்
    கொக்கோகர் வசிஷ்டரும்
பெருமுனி வால்மீகி
    பேர்பெற்ற புஜண்டரும்
திருமூலர் பரம்பரை
    தேவர்புகழ் தன்வந்திரி
அருஞ் செயல் சித்தரெலாம்
    அகமகிழ் கற்பமிது
நாட்டவிதன் பெருமை
    நாவுமுண்டோ பாவுமுண்டோ
பூட்டகமாக சித்தர்
    புதைத்திட்டர் செப்பேட்டை ''
... ... ... ... ...

இதுபோன்ற மற்றும் சில மூலிகைகளைப்பற்றிய குறிப்புகளுடன் சிதறுண்ட சிறு ஓலைச் சுவடியொன்று சிதலை (செல்கரையான்) உண்டு மிகுந்துள்ள சில ஏடுகள் கிடைத்தன. ஏடுகளின் தலைப்பில் (தேரைய மகா முனிவர் வைத்தியம்) என்று காண்கிறது. தேரையர் பேரால் அச்சாகியுள்ள தேரையர் 1500, 1001,100 கரிசல், எதுமை, யமகம், தைலவருக்கச்சுருக்கம், சிந்தாமணி, மருத்துப் பாரதம், பதார்த்தகுணம் முதலியவற்றுள் தனி மூலிகைத் திரட்டுகள் காணப்படவில்லை. ஆகவே காலபேதத்தால் மறைந்த பலவாகிய வைத்தியகலைகளோடு இவரால் இயற்றப்பெற்ற "தனிமூலிகைத் திரட்டு'' போன்ற வேறு நூற்களும் மறைந்திருக்கலாமென்பது ஆன்றோர் அபிப்பிராயம்.

துளசிச் செடியில் தாமிர (செம்பு)ச் சத்து இருப்பதால் ரசவாதிகள் இதை அதிகமாகக் கையாண்டு வருதல் துளசியைக்

கிரமப்படி கையாண்டு வருவோர், முறைப்படி முடிந்த தாம்பிரச் சுன்னம் என்னும் ஒப்புயர்வற்ற மருந்தை உண்ட வச்சிர தேகிகளுக் கொப்பாவர்.

கபரோகம் தொடர்ந்துவரும் சந்ததியார் துளசிக் கட்டையை மணிகளாகச்செய்து மாலையாகக்கழுத்தில் அணிந்துவருதலாலும், கட்டையை சந்தனம்போல இழைத்து மார்பில் பூசிவருதலாலும் மிருத்யுவுக்குச் சமமான கபரோகம் சாந்தமாம். இவ்வாறு செய்துவருவோரின் சுக்கில சுரோணிதங்கள் வன்மையுற்று அதனால் தோன்றும் சந்ததிகள் நோயற்ற வாழ்க்கையைப் பெறுவர்.

துளசியின் உலர்ந்த இலையைத் தூள்செய்து தேகத்திற் றேய்த்துக் குளித்துவர தேகத்தில் உப்புபூர்த்தல், கற்றாழை நாற்றம், முடைநாற்றம், சிரங்கு, சொறி முதலியன தீரும்.

சிகித்சாப்பொடி, நலங்குமாவு, கதம்பப்பொடி என வழங்கும் கலவைத் தூளுடன் துளசியிலைத் தூள் சமமாகக் கலந்து இடித்து வைத்துக்கொண்டு பிரதிதினமும் தேகத்தில் தேய்த்து குளித்துவர, தோலைப்பற்றி உண்டாகும் சரும வியாதிகள் காணா. ஒருக்கால் காணினும் விரைவில் குணமாம்.

துளசியிலையைத் தண்ணீரிலிட்டுக்காய்ச்சி ஸ்நானம் செய்தாலும் வேது பிடித்தாலும் சீதள—பித்த—சம்பந்த வியாதிகள் பீடிக்கா.

வேப்பிலையின் வாடைக்காற்றால் பித்த பைத்திய ரோகங்களும், புங்கன்இலை வாடைக்காற்றால், சேராங்கொட்டைப் பாலால் கண்ட விக்கமும் நீங்குதல்போல துளசிக் காற்றினால் கபரோகங்கள் கண்காணாதோடும்.

நமது தேசத்தில் துளசி தீர்த்தம் என்று துளசியும் தண்ணீரும் காலையில் உட்கொள்ளல் சர்வ சாதாரணமாயிருப்பதே! இது வைணவசமூகத்தினருக்குத் தொன்றுதொட்டபழக்கம். வைணவ சந்நிதிகளிலும், வைணவ மடாலயங்களிலும் முதலில் சிறிது தண்ணீரும் உடனே துளசி தளங்களும் கொடுத்துவருதல்

இன்றுமுள்ள பழைமையான ஆசாரம். அதிகாலையில் நீராடி அவரவர் குலாசாரப்படி நெற்றிச் சின்னமணிந்து தேவாராதனை யைப் பூர்த்திசெய்த பின்னர் சிறிதளவு நீரும் மூன்று தளம் துளசியும் பிரதிதினமும் உட்கொண்டு வருவார்க்கு ஜெனனவியா திகள் காணமலே மறைந்துபோம். இவ்வாறு வைகறையிற் றுயில் நீத்து, சனிநீராடி, தெய்வந்தொழுது, துளசி தீர்த்தம் உட்கொண்டுவருதலால் தீரும் வியாதிகளாவன:—

1. கபதோஷம், 2. கபாதிக்கம், 3. அரோசகம், 4. அக்கினி கிடைவிஷம், 5. அஸ்திதாது கபசுரம், 6. திரிதோஷ விகற்பங்கள், 7. இரைப்பு, 8. கிருமி, 9. நீர்கோவை, 10. இருமலால் வரும் கேவல், 11. மார்ச்சளி, 12. சுரம், 13. ஜன்னி, 14. குளிர்சுரம், 15. திச்சுரம், 16. குத்தல், 17. குடைச்சல், 18. முலைப் பாலால் வரும் மந்தம, 19. பலவித பித்த ரோகங்கள், 20. கணச்சூடு, 21. கோழை, 22. பொடியிருமல், 23. வித்திரிதிக்கட்டி, 24. கப காசம், 25. எலிவிஷம், 26 வெட்டுப்புண், 27. ஐயம், 28. ரணம், 29. சுரமாந்தம், 30. தாகம், 31. பலவித புண்கள், 32. மலே ரியா என்னும் விஷசுரம், 33. பிரசவத்தின்பின் காணும் வேதனை, 34. நீர்வண்டு முதலிய விஷம், 35. தொண்டைக்குள் குறுகுறு என்னும் சப்தம், 36 பிரமேகம், 37. ஜலதோஷம், 38, ஜலதோஷ இருமல், 39. நிலையான பித்தம், 40. நித்திரா பங்கம், 41. மூளை யை விகாரப்படுத்தல், 42. கெட்ட கனவு காணல், 43. நாவில் மாவு படிதல், 44. அண்ணத்திலும் நாவிலும் வழவழப்பு, 45. உதட்டிலும் நாவிலும் பள்ளம் விழுதல், 46. மனக்கவலை, 47. மந்தாக்கினி, 48. வாட்சி, 49. சொறி, 50. சிரங்கு, 51. தினவு, 52. சுவாசம, 53. காசம், 54. க்ஷயம், 55. சுவாச காசம், 56. தோலைப்பற்றிய கிரந்தி ரோகங்கள், 57. தந்த ரோகங்கள், 58. கன்னரோகங்கள், 59. செவி ரோகங்கள், 60. நயனரோகங்கள் முதலாய பலவாம்.

இவை போன்ற பலவியாதிகளைத் தீர்ப்பதில் தொன்மைமருந் தாய் இத்துளசி சிறந்து நிற்கிறது. இதுவேயன்றி,

வீடுகளில் துளசிச்செடியிருப்பின், விஷக்காற்றுகள், விஷப் பூச்சிகள், விஷவியாதிகள் முதலியன இத்துளசிக்காற்றால் நெருங்

காது விலகிவிடுதல் அனுபவம். தென்னாட்டில் பெரும்பாலும் பிராமணர்களின் இல்லங்களில் துளசி மடம் என ஓர் சிறு கட்டடம் தூண்போலமைத்து அதில் துளசிச் செடியை வளர்த்து வருதல் பிரத்யட்சம்.

துளசியின் காற்று தேகத்தில்படவேண்டி அத்துளசிச் செடியை பிரதட்சணமாகச் சுற்றி வலம்வருதல் பிராமண ஸ்திரீகளின் வழக்கம்.

நந்தவனங்களிலும் தேவாலயங்களிலும் துளசிச்செடிகளைப் பயிர்செய்வித்தலும் இந்நோக்கங் கொண்டே.

“ பம்பாய் நகரத்தில், விக்டோரியா தோட்டமும், ஆல்பர்ட் விநோதசாலையும் அமைக்கப்பட்டபோது, வேலைக்காரர்கள் கொசுக்கடி, மலேரியா என்னும் விஷசுரம் போன்றவைகளால் அடைந்த இன்னல் அளவில்லை. இவற்றை நீக்குதற்குச் செய்த முயற்சிகளெல்லாம் பலிபாது போயின. பின்னர் அங்கு உத்தியோகம் வகித்து வந்த இந்தியர் ஒருவரின் அபிப்பிராயப்படி துளசிச் செடிகளைப் பயிர் செய்வித்த பிறகு மேற்படி தொல்லைகள் இருந்தவிடம் தெரியாது மறைந்துபோயின வெனப் பத்திரிகைகளில் வெளிவந்ததைப் பலர் மறந்திருக்க மாட்டார்கள். இதனால் விஷக்காற்று, விஷப்பூச்சி, தொற்று வியாதி முதலியவற்றைத் தொலைப்பதில் துளசி தலைசிறந்து நிற்றல் கவனிக்கத்தக்கது.

காட்டில் வேட்டையாடியதால் இறந்த மனிதன் தேகம் பல மாதங்கள் வரையில் கெடாமலும், கிருமி கீடங்கள் சேராமலும் துர்க்கந்தம் இல்லாமலும் இருக்கக்கண்டு வியப்புற்று, ஆராய்ச்சி செய்ததில் அச்சவம் கிடந்தஇடம் துளசிச்செடிகள் நிரம்பியிருந்த வனம் எனக்கண்டு, இதைப் பலருக்கும் அறிவித்ததாகவும் பத்திரிகை உலகம் கேள்விப்பட்டிருக்கலாம். இதுவும் அழுகச்செய்யும் கொடிய விஷச் சேர்க்கையை நீக்கும் குணம் துளசிக்குள்ளதென்பதை நிலைநாட்டுகிறது.

மாறுந்தகாலத்தில், கபம் இறுகலாக நிறைந்து பேச்சைத் தடுத்து சுவாசத்தைத் திக்குமுக்கலாடச் செய்யும் ஆபத்தான சமயத்தில் துவசித் தீர்த்தம் கொடுத்தல் இன்றும் நமது நாட்டில் பழைமையான வழக்கமாக இருந்துவருகிறது. இது, சுவாசத்தைத் தாராளமாக நடைபெறச்செய்வதிலும், இதற்குத்தடையாயுள்ள இறுகிக் கெட்டிப்பட்டுப்போன கபத்தை இளக்கி நீராக்கி வெளிப்படுத்துவதிலும் நிகரற்ற சஞ்சீவி யென்பதை உள்ளங்கை நெல்லிக்கனியாக விளக்கிவருகின்றது.

ஆகவே, கடுமையான விபாதிகள் வந்தபின் வைத்தியத்திற்கும், மருந்துகட்கும் வீணே செலவுசெய்து வருந்துதலைவிட நோயே வாராமல் தடுத்துக்கொண்டு "நோய்க்கிடங் கொடேல்" என்றபடி சுகமே வாழவேண்டி காலையில் ஸ்நாநம்செய்து, நெற்றிச் சின்னம் அணிந்து சிறிது ஜலத்துடன் ஒன்றிரண்டு இனுக்கு, துளசி இலைகளை உட்கொண்டு வருதல் இன்றியமையாததாம்.

ஒவ்வோர் இல்லத்திலும் குறைந்தது ஓர் செடியாகிலும் துளசியைப் பயிர்செய்துவருதல் சுகாதாரத்திற்கு ஏற்றதாம்.

விலக்கு.

ஒவ்வோர் செடிவகைகள் ஒவ்வோர் தினத்தில், அமிர்தபானம் செய்து கருப்பமடைந்து கிளைகளை, விதைகளை, உற்பத்தி செய்தல் இயற்கை. இவ்வகையில் துளசிச்செடி, ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக் கிழமைகளும், அஷ்டமி, துவாதசி, சதுர்த்தசி, சங்கராந்தி, புகாதி பருவ சந்திகளும் துளசியைக் கிள்ளக்கூடாது.

ஆபத்தை நிவிர்த்தி செய்ய அவசியம் துளசி வேண்டியிருப்பின் இத் தினங்களில் முளைக்கொழுந்தில் நான்கு இலைகளைவிட்டு அதன் கீழுள்ளவற்றைத் தனி இலைகளாக (துளிருக்குச் சேதமின்றி) எடுத்துக்கொள்ளலாம் பெரியார் அநுபவம் இதுவே.

---

# * சமய ஒழுக்கம்.

(ந. ராமகிருஷ்ண விஸ்வ கர்மன்.)

## உயிர்ச் சக்தியுடன் பொலிக!

பழமறைகளிலோர் பாசுரம் இறைவனை நோக்கி 'ஆத்மதா, பலதா' வென்று விண்ணப்பிக்கின்றது. இருபொருட்களும் இன்றியமையாதன,— ஆன்ம வெளிச்சமும் உடல்வலிமையும், இறைவனே 'பலதா'— ஆற்றலளிப்பவ என்று வழுத்தினர். பழம் பாரத நாடு 'சக்தி'யைத் தொழுதது. இந்தியா தன் 'சக்தி'யை இழந்த நாள்தொட்டே வருந்தா நிற்கின்றது. ஆன்ம நெறிப்பட்ட வாழ்க்கையில் எமக்கு ஆழ்ந்த நம்பிக்கை யுண்டு. ஆனல் 'உடல் நெறி'ப் பட்ட வாழ்க்கையிலும் உயிர்ச் சக்திக்கு மதிப்புண்டென்பதை மறத்தலாகாது. உடல்நெறியை, உலக நெறியை, இயற்கை நெறியை அசட்டை பண்ணுதல் கூடாது. உடம்பைப் புறக்கணியாதீர். உங்கள் உடலங்கள் இறையொளியின் கோவில்களாகத் தக்கனவென்று கருதுவீர்களாக. குழல்வல்லோன் குழலூதக் கேட்டிருப்பீர்களல்லவா? அக்குழல் உடைந்த தொன்ருயின், இசை பயனிலவாய்ச் சிதைவுறுதல் காண்பீர். குழலூதுவோன் (ஆன்மா) அவன் ஓட்டை யுடம்பாகிய இசைக்கருவியில் உள்ளமுருக்கும் இன்னிசை பாட இசையாது துன்புறுவான். ஆன்ம நலத்திற்காக உடல் காத்திடுமின்.

## ஆண்டகைமை பெறுக.

இரண்டு தலைமுறைகளுக்கு முன்னர் சிந்துநாட்டவர் வலியராய் விளங்கினர். ஆங்கிலேய ஆராய்ச்சியாள ஞெருவன் பிரித்தானியர் வெற்றிமுடிவில் சிந்துநாட்டைக் கண்ணுற்ற போது 'உரத்துத் தடித்த' சிந்தியரென வியந்து கூறினன். ஆங்கு வெளிறிய முகமுடைய இளைஞர் பலரைக் காண்பீர் இன்று. அன்னூர் தளர்நிலை பலகாரியங்களுக்கு ஏதுவாகிவிட்

---

* ஆசிரியர்-வாஸ்வானி வரைந்த கட்டுரையின் தமிழாக்கம்.

டது. பரீக்ஷையில் தேர்தல் வேண்டுமென்ற மனக்குழப்பம்; பரீக்ஷையின் பின்னர், சீவனத்திற்குப் போராட்டம்; பொருளாதார நிலைமையின் கவலை; சித்தியர் உணவும் ஒழுங்காக இல்லை. இதற்கு, இருபெருங் காரணங்களுண்டு. அவை:— (க) 'பிரமச்சர்ய' ஒழுக்கக் குறை (உ) விளையாட்டுக்களில் (Games) காதலின்மை. இளமை மணம் பிரமச்சர்யத்தைக் கொன்றது, சிரமானத்திற்குச் சிறந்த ஏதுவாயிற்று. இளமை மணத்தால் பிறக்கும் குழந்தைகள் வலிமை குன்றியிருக்கின்றன. இளமை மணத்தைத் தடுப்பதற்கு ஓர் பெரும் இயக்கம் தோற்றுவித்தல் இன்றியமையாததாகும். பலமிழந்தவர், தளர்ந்தவர், உயிர்ச் சக்தி யில்லாதவர்களெல்லாம் ஆன்ம வளர்ச்சியின் விரோதிகளாவர். ஆன்மா விழைவது 'சக்தி'-பெருஞ் சக்தி—போற்றலே. 'தட்டி யெழுப்பிய இந்தியா' என்னும் நூலில் ராம்ஸெ மக்டனல்டு (Ramsay Mac Donald) இற்றை நாள் இந்தியாவைக் குறித்து மூன்று சொற்கள் வரைந்திருக்கின்றார்:—'ஆண்டன்மை யழித்தல்' யான் பன்முறையும் 'ஆன்ம சக்தி'யைக் குறித்துப் பேசியிருக்கின்றேன். வலியிழந்தவர்க்கு ஆன்ம சக்தி உரிமையுடைய தன்றென்பதை யொருபோதும் மறந்துவிட வேண்டாம். ஆண்டகைமை யழிந்து கிடத்தலால், இத் தொன்மை நாட்டில் 'ஆன்ம சக்தி' சிறை நண்ணித் தவங் கிடந் துழலா நிற்கின்றது. இற்றை நாள் வானுலகம் புகுவதன் முன்னர், இவ்வுலகிலேயே முதற்கண் நீங்கள் மக்களாதல் வேண்டும். ஆண்டகைமையே சமயம்.

## சமயத்தின் பேரொலி.

சிவசக்தியோடு பொலிகின்ற ஒவ்வொரு தேசத்தினரும் மனிதநீர்மைகளை வலியுறுத்துகின்றனர். ஒவ்வொரு நாட்டிலும் உயிர்ச்சக்தி ததும்பும் வாலிபர்கள் விளையாட்டுக்களைக் காதலிக்கின்றனர். ஆங்கிலேயர்களுக்கு (Sports) விளையாட்டுக்களிலுள்ள காதலின் உண்மை உலகமறிந்ததொன்று. ஜெர்மானிய மாணக்கர் இராணுவப் பயிற்சியும் மலையேற்றமும் விரும்புகின்றனர். ஜப்பானில் இளைஞர் பலவகை உடற்பயிற்சியும் இராணுவப் பயிற்சியும் 'ஜி-ஜிட்ஸு'வென்னும் விளையாட்டும் பெற்றின்புறுவர். உடல்வலிப் பயிற்சியிலு மொருங்கே தேர்ச்சிபெறுத உபாத்தியாயரை

ஜப்பான் பள்ளிக்கூடங்களில் அமர்த்துவதில்லை. ஜப்பானியப் பை யன்களைக்குளிர்ந்த பனிக்காலத்தில்கூடப் பள்ளிக்கூடத்திலிருந்து நெடுந்தூரம் நடந்துசென்று வருமாறு ஊக்கமூட்டுகின்றனர்.

இற்றை நாள் இந்திய மாணுக்கரும் இளைஞரும் 'தூங்காமல் தூங்கி சுகம்பெற' விழைகின்றனர். ஒரு குற்றம் நாம் நீண்ட நாளாகச் செய்து வருகின்றோம். அதுவே வலிமையின்மை யென் னும் பெருங்குறை. †'தபஸ்ய' வென்பது பண்டைக்காலக் குறிப் புச் சொல்லாக நிலவுகின்றது. இன்று தன்னலம் பாராட்டுதலே பலருடைய குறிக்கோள்.

உடம்பைத் தூய்மையாகவும் நலம்படவும் காப்பதற்காக வருந்தாதவன் யோகநெறியின் மர்மத்தை உணரமாட்டானென்று பதஞ்சலி முனிவர் யோகசூத்திரத்தில் மிகத் தெளிவுற விளக்கி யிருக்கின்றார். உயிர்ச் சக்தியோடு பொலிக,— என்பதே சமயத் தின் பேருழுக்கமாகும்.

## சீவசக்தி பெறும் வழி.

நீங்கள் உயிர்ச் சக்தியோடு வாழ விரும்பினல் நான்கு பொருட்களைச் சிந்தைசெய்ய வினவுகின்றேன். (க) 'எளிய தூய வாழ்க்கை'— உணவும் உடையும் எளிதாகவும் தூய்மையாகவும் கொண்மின். எளிய வாழ்க்கை வலிமை தரும். (உ) பிரமச்சர்யம்— நெஞ்சத் தழுக்கின்றித் தூய்மையாக ஒழுகல் ஒரு வலிமைபெற்ற இந்தியாவைப் படைத்துவிடும். (ங) உடற் பயிற்சி—உடலின் தவம், இதன் பயிற்சியும் வளர்ச்சியும் தனிமனிதருக்கும்—சமூகத் திற்கும் முற்போக் களிப்பதற்கு இன்றியமை யாதனவாம். கடுஞ் செயற் கலாசாலையில் (School of Hardness) உங்களைப் பழக்கு

---

†தவமாவது—மனம் புலன்களின் வழியே செல்லாது நிலைத்தற் பொருட்டுப் பசிகிடத்தலால் உணவைக் குறைத்தலும், கோடைகாலத்து வெயிலில் நிற்றலும், மழையிலும் பனியிலும் நீர்நிலையில் நிற்றலுமாகிய செயல்களால் தம்முயிர்க்கு வருந்துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர் களைக் காப்பாற்றுதலாம். இத்தகையன ஆசிரியர்க் குடன்பாடென்பதைப் பின்வரும் வரிகளால் குறிக்கின்றார். (Train yourselves in the School of Hardness கடுஞ் செயல்களில் நிலைத்துப் பழகுமின்.)

மாறு கேட்டுக் கொள்ளுகின்றேன். இந்திய விளையாட்டுக்களையும் பிராணயாமப் பயிற்சியையும் மறுமுறையும் நிலைநாட்ட உங்களை வேண்டுகின்றேன். (ச) சிராமனை நினைந்திடுமின்—அவன் 'சக்தி' யின் ஒரு அவதாரம். அவனை நாம் மறந்துவிட்டோம். வேற்று நாடுகளில் தத்தம் வீரர்களின் நாட்களைக் குதூகலமாகக் கொண் டாடுகின்றனர். சிராமனை நினைந்திட மறுமுறையும் உங்களைக் கேட்கின்றேன். நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் இராமன் திருநாளைக் குதூகலமாகக் கொண்டாடுமின். நமது நாட்டுச் சரி தத்தில் மாபெரும் வீரனாக விளங்கிய இராமனது வாழ்க்கை—பணிகளின் நற்கருத்துக்களையும் நல்லுபதேசங்களையும் திரட்டி, இந்திய மாணாக்கர் மாணாக்கியரொவ்வொருவரின் உள்ளங்களிலும் பசுமரத்தாணிபோல் பதியுமாறு ஹிந்தியிலும் பிற தாய் மொழி களிலும் சுருங்க வரைந்த பாடப்புத்தகமாக அமைத்து நமது பள்ளிக்கூடங்களில் போதித்தல் வேண்டும். இராமனை நினைப்பார் பலர் இன்றிலர். பண்டைப் பெருஞ் செல்வங்கள் உங்கள்பால் சேமித்துக் கிடக்கின்றன; ஆனால் ஐயோ! அதன் திறவுகோல் உங்களிடத்தில் இல்லை. உங்கள் ரிஷிகளால் பெருமையுடையோ மென்று கூறுகின்றீர்கள். உங்களால் ரிஷிகள் பெருமை யடை கின்றார்களா? நீங்கள் அவர்களை மறந்து விட்டீர்கள். மாபெரும் தலைவர்களை—உங்கள் சரிதத்தின் மாபெரும் வீரர்களை "எளிய வாழ்க்கை வாழ்மின், வலிமை பெறுமின், மக்களாக நிலவுமின், 'சக்தி'யின் புதல்வரும் புதல்விகளுமாக இலங்குமின்" என்ற இராமனது பொன்னுரைகளுக்கு மாறுபட்டு விட்டீர்கள். அம் முறையொழுகின், இத் தொன்மை நாட்டில் இராமன் திரும்பவும் பிறந்திடுவான். இந்தியாவை மறுமுறையும் மனிதசமூகத்திற்குப் பணியாற்றுக் தொண்டனாகவும் தேசங்களுக்குத் தனிப்பெருந் தலைவனாகவும் படைத்திடுவான்.

---

# சுகாதார விதிகள்.

(கலைமகள் கழகமுவரு)

இன்ப வாழ்வு வாழவிரும்புவோர் சுகாதார விதிகளை முதலாவதாக நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அவற்றையறிந்து அவற்றிற்கேற்ப ஒழுகுதல் மிகுந்த பயனளிக்கும். மக்கள் அனைவரும் சுகாதார விதிகளை அறிந்து அவற்றின்படி நடந்து வருவார்களானால் அதுவே அவர்களது ஜீவியத்திற்குத்தக்க இன்ஷியூரன்ஸ் ஆகும். அகவே, சுகாதாரவாழ்க்கைக்கு மூலாதாரமாயுள்ள சில விஷயங்களைக் கவனிப்போம்.

## ஆகாயம்.

சுத்த ஆகாயத்தை உட்கொள்ளுவது மனித உடலுக்கு ஒரு வகை உணவாகும். நல்ல உணவு, பழங்கள், காய்கறிகள்முதலியவற்றைப்புசித்தால் எத்தகைய நற்பயன் அடையலாமோ அத்தகைய நற்பயனைச்சுத்தமான ஆகாயத்தை உட்கொள்ளுவதாலடையலாம். ஆனால் இவ்வுண்மையினைப் பலரும் அறியாமலிருப்பது பெரிதும் வருந்தத்தக்க விடயமாகும். உணவைக் காட்டிலும் ஆகாயம் அதிமுக்கியமானது என்பதை யான் சொல்லத் தேவையில்லை. எப்படியெனில் உணவின்றி ஒருமனிதன் சிலவாரங்களோ அன்றிச் சில தினங்களோ கழிக்கமுடியும். அவனது உடலுக்கு எவ்விதகேடும் நேர்வதில்லை. ஆனால் சில நிமிஷங்கள்கூட ஆகாயத்தை உட்கொள்ளாமல் மனிதன் உயிர்வாழ முடியாது. இவ்வுண்மையினை ஒவ்வொருவரும் அவரவரது அனுபவத்தில் கண்டுகொள்ளலாம். இதினின்றும் மனித உடலுக்கு ஆகாயம் உணவைக்காட்டிலும் அதி முக்கியமென்பது கூறாமலேவிளங்கும். நல்ல சுகமான சரீரத்தில் நுழைந்து கலந்து கொள்ளுவன அனைத்தும் அச்சரீரத்திற்கு உணவாக ஆகின்றன என்பதையும், இரத்த ஓட்டத்திற்குப் போதியபலத்தையும் சக்தியையும் அளிப்பது பிராணவாயுவே என்பதையும் ஒவ்வொருவரும் நன்கு கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எவ்வித முயற்சியில்லாமலும் செலவில்லாமலும் இலவசமாக ஆகாயம் அனைவருக்கும் கிடைப்பதால்

அதன்பலனை மனிதர் பெரும்பாலும் மதிக்கின்றாரில்லை. ஒரு மனிதனுக்கு நல்ல, சுத்தமான, மனதிற்குகந்த உணவு கிட்டவில்லையாயின் அது பற்றிப்பிரமாதமாகப்பேசுகின்றான். தான் பட்டினி கிடந்து சாவதாகச் சொல்லுகின்றான். ஆனல் அதேமனிதன் கதவுகளை இறுகமூடிக்கொண்டு புதிய சுத்தமான காற்று நுழையாத வாறு செய்து, தான்வெளிவிட்ட ஆகயத்தையே மீண்டும் மீண்டும்உட்கொள்ளுவது தவறுஎன்று கருதுவதில்லை.உடல் நலத்திற்குச்சுத்தமான ஆகாயம் உட்கொள்ள வேண்டுவது அவசியமென்று உணராததே இவ்வித நிலைக்குக் காரணம்.

## பிராண வாயு.

பிராணவாயு மனிதஉடலுக்கு உணவைக்காட்டினும் மேலான ஒன்று எனப் பல அறிஞர்கள் கருதுகின்றனர். அதற்குரிய பல ஆதாரங்களையும் எடுத்துக் காட்டுகின்றனர். நாம் உட்கொள்ளும் பிராணவாயு இரத்தத்துடன் கலந்து இரத்த ஓட்டத்திற்கு முழுமுதற் காரணமாயிருக்கின்றது என்பது ஆராய்ச்சியினர் அடைந்துள்ள முடிவு. இருதயமே இரத்த ஓட்டத்திற்குக் காரணமாயிருக்கின்றதுஎனப் பலரும் கருதியிருக்கின்றனர். அவ்வாறு கருதியிருப்பது தவறு என நவீன ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.பிராணவாயுவே காரணம் எனும்கொள்கை சரியாகவோ அன்றித்தவறாக இருக்கட்டும். அது பற்றி நமது அரிய காலத்தை வீண்விவாதத்தில் செலவிடவேண்டாம். அவ்விடயம் எப்படியிருப்பினும்,பிராணவாயுவின்தத்துவத்தையும்,இரத்தத்தில் அது அதிகமாகக் கலந்திருக்கவேண்டிய, அவசியத்தையும் எவரும் மறுக்க முடியாது. சுத்தமான, புத்தப் புதிய ஆகாயத்தை மனிதவர்க்கத்தாரனைவரும் இலவசமாக உட்கொள்ளப் பலவசதிகள் இருந்தும் பெரும்பாலோர் அதனை உணருகின்றாரில்லை. சுத்த ஆகாயத்தை அவர்கள் பெரும் விரோதியெனக் கருதித் தாமிருக்கும் இடங்களில் அது நுழையாதவாறு செய்கின்றார்போலும். நாம் பிறந்தது முதல் இறக்கும்வரை சிறிதும் ஓய்வின்றி, சுத்தமான பிராணவாயுவை உட்கொண்டு, அசுத்தமான வாயுவை வெளி விடுமாறு கடவுள் ஏற்படுத்தியிருப்பதினின்றுமே சுத்த ஆகாயத்தின்

அவசியத்தையும், முக்கியத்தையும் நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். சாதாரணமான நடுத்தர வயதுள்ள ஒருமனிதன் ஒருவன் சுத்தமாயிருக்கையில் நிமிஷம் ஒன்றுக்கு நானூற்றெம்பது கன அடி அளவுள்ள ஆகாயத்தை உட்கொள்ளுகிறானென்றும், அதேமனிதன் மணி ஒன்றுக்கு நான்குமைல் வேகத்தில் நடந்து கொண்டிருக்கும்பொழுது ஐந்துபங்கு அதிகமாக ஆகாயத்தை உட்கொள்ளுகிறானென்றும், ஆறுமைல் வேகத்தில் நடக்கையில் எழுபங்கு வாயுவை உட்கொள்ளுகிறானென்றும் ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்திருக்கின்றனர்.

## மூன்று வேலைகள்.

மூச்சு விடுவதால் நம் சரீரத்தில் என்னென்ன வேலைகள் நடைபெறுகின்றனவென்பதை நாம் கவனிக்கும் பக்ஷத்தில் சுத்த ஆகாயம் உட்கொள்ளுவதன் அவசியத்தைக் கண்டு உணர்ந்து கொள்ளலாம். நாம் உட்கொள்ளும் ஆகாயம் மூன்று விதமான வேலைகளைச் செய்கின்றது. அவையாவன:—

(க) இரத்தத்திலுள்ள அசுத்தங்களை யெல்லாம் அகற்றி அதற்குப் புத்துயிர் அளித்தல். (உ) சரீரத்திற்கு இன்றியமையாது தேவைப்படும் உஷ்ணத்தையளித்தல். (௩) வயிற்றில் ஜீரணமான ஆகாரத்தை இரத்தமாக மாற்றிச் சரீரமுழுதும் பரவச் செய்தல். உயிருடன் வாழ்தற்கு இன்றியமையாத இவ் வேலைகளைச் செய்து முடிக்கும் சுத்த ஆகாய விஷயத்தில் கவனஞ்செலுத்தாதிருப்பது மதியீனமன்றோ?

## அதிகமாகத் தேவைப்படும் காலம்.

சிசுப்பருவம், பாலப்பருவம், இளமைப் பருவம் முதலிய பருவங்களில் சுத்த ஆகாயம் மிக மிக அதிகமாகத்தேவைப்படும். ஏனெனில் உடல் வளர்ச்சிக்கு அவை உரியபருவங்களாகும். அப் பருவங்களில் உடல் வளர்ச்சி வேலை வெகு தீவிரமாக நடந்துகொண்டேயிருக்கும். சிசுக்கள் எவ்வாறு வளர்ந்து வருகின்றதென்பதை நாம் அறிவோம். சாத்தியமானவரை திறந்த வெளிகளில், சுத்த ஆகாயமுள்ள இடங்களில்

வைத்து வளர்க்கப்பட்டு வரும் குழந்தைகள் நல்ல திடகாத்திரமான, நோயற்ற நிலையில் இருந்து வருவதைக் கண்கூடாகக்காண்கின்றோம். ஐரோப்பியக் குழந்தைகளைப் பார்த்திருப்பவர்க்கு இதுபற்றி நாம் அதிகம் கூறத்தேவையில்லை.

---

# குரு நானக் திருமொழி.

சுத்தானந்த பாரதியார்.

நானக் சீக்கிய மதத் தலைவர். அன்னார் திருமொழி எல்லா மாந்தரையும் ஒரு குலமாக வாழச் செய்வன. அதன் சாரமே ஈண்டு தமிழில் அமைத்துக் கூறப்படுகிறது.

இறைவன் ஒருவனே ஈகையும், அன்பும்,
நிறைவுறு நெஞ்சில் நிறைந்தருள் சுரப்பான். க.
ஆசாற் பணிக! அருட்பணி புரிக!
மாசறு மனத்தால் மாமகிழ் வெய்துக! உ.
களிப்புங் கருணையுங் கமையுங் காட்சியும்,
உளத்தி லுறுதியும் உடைமை யாக்குக! ங.
காமுஞ் சினமுங் காசுறு பற்றும்
தாமத விருளுந் தாண்டுக தவத்தால்! ச.
கடவுளைத் தேடிக் காட்டக மலையேல்!
இடமுள மனத்தில் இலகுவன் அவனே! ரு
சாதி வேற்றுமைச் சடங்குகள் நீப்பிர்!
நீதியும், அறமும், நேயமும், பழகிர்! சா.
தூய நெஞ்சும் தொண்டுறு வாழ்வும்,
நேய வாற்றலும், நிலைல மாமே. எ.
அன்பைப் பெற்றார், அனைத்தும் பெற்றார்!
அன்பை யிழந்தார், அனைத்து மிழந்தார். அ.

எளிய வாழ்வின் இன்பை நுகரீர்!
ஒளிபெறு நல்லோர் உறவு பேணுக! கூ.
கூற்றிற் கஞ்சேல்! குருவின் பணிக்கே,
ஆற்றலும், ஆவியும், அனைத்தும் அளிமின்! க0.
உண்மைக் குறுநியாய் ஒன்றுபட் டுய்மின்!
திண்ணிய நல்லறச் செவ்வழி செல்மின்! கக.
வேற்றுமை யாவும் வேறறுத் திடுமின்!
சாற்றுமின் சிடரே "சத் ஸ்ரீ அகால்" என கஉ.
தந்தை கடவுள் சகோதரர் மக்கள்
இந்தக் கோள்கை இயங்குக வொழுக்கில். கங.
திறமுடன் சீடர் தேசுற வாழி!
அறம் வாழி! அனைத்தும் வாழி! கச.

---

### இயற்கை வைத்தியமென்னும்

# மருந்தில்லா வைத்தியம்.

லெக்ஷ்மண சர்மா.

இக்காலத்தில் நமது தேசத்தில் வழங்கும் பலவகை வைத்தியங்களில் இயற்கை வைத்தியமென்பதும் ஒன்று. இது புதிய வைத்தியமென்றும், முதன் முதலில் ஜர்மனியதேசத்தில் உண்டாகி உலகமெங்கும் பரவிவந்ததென்றும், நினைக்கப்படுகிறது. உண்மை அப்படிக்கல்ல. இதுவே எல்லா வைத்தியங்களிலும் பழமையானது. இதை நிரூபித்துக்காட்ட இப்போது சமயமில்லை. இப்போது இவ்வைத்தியத்தின் சிறப்பான சில குணங்களை மாத்திரம் எடுத்துச்சொல்ல உத்தேசித்திருக்கிறேன்.

இவ்வைத்தியமானது நோய்களைத் தீர்த்துக்கொள்ள மாத்திரம் உதவுவதன்று. நோய்கள் நம்மை அணுகாமலேயிருக்கும்படி நாம் நடந்துகொள்ளவேண்டிய முறைகளையே இவ்வைத்தியம் போதிக்கின்றது. இவ்வித ஒழுக்கமானது இயற்கையொழுக்கமெனப்படும். இவ்வொழுக்கத்தினின்றும் நாம் வழுவியதால்தான்

நோய் நம்மிடம் உண்டாகின்றதென்பதும், ஆகையால், அவ்வாறு நாம் செய்திருக்கும் தவறுதல்களை மாற்றிக்கொள்வதே நோய்க்கு முதன் மருந்தென்பதும், இவ்வைத்தியத்தின் கருத்து.

நம் ஒழுக்கமானது உணவு முதலியவற்றில் தவறுயிருக்கின்றது. இதனுல் நோய் எவ்வாறு வருமென்பதையும் இயற்கை வைத்திய நூல்கள் தெளிவாக விவரிக்கின்றன.

நாம் வசிக்கும் வீடுகள், வீதிகள் முதலியவற்றில் அசுத்தங்கள் அதிகமானுல், அவற்றினுல் நாம் உட்கொள்ளும் முக்கிய உணவாகிய வாயு அல்லது காற்றுனது கெட்டுப்போய் நமக்கு நோயைத் தருமென்றும், அதனுல் வீதிகளையும் வீடுகளையும் சுத்தமாக வைத்துக்கொள்வது அவசியமென்றும், பொதுவாய் எல்லா வைத்திய நூல்களும் வற்புறுத்திவருகிறுர்கள்.

ஆனுல் இயற்கை வைத்தியமானது இவ்வித வெளிச்சுத்தமானது நோயின்மைக்குப் போதாதென்றும், இதைத் தவிர வேறொரு சுத்தமும் தேவையென்றும் சொல்ல வருகிறது. அதாவது, நம் தேகத்தின் உட்புறத்திய சுத்தம்.

தேகத்தை அப்போதைக்கப்போது சுத்தம்செய்துகொள்ள மேல்த் தோலை மாத்திரம் சோப்புகள், தைலங்கள் முதலியவற்றினுல் சுத்தம் செய்துகொண்டால் தேகம் சுத்தியாகிவிடுவதாக நம்மில் அநேகர் நம்புகிறுர்கள். இது முற்றிலும் மூடத்தனம். தேகத்தினுள்ளே, ஒவ்வொரு இடத்திலும் பலவகையான அசுத்தங்கள் உண்டாகின்றன. அவை அதிகமாக உண்டாகாமலும், உண்டானமட்டில் அப்போதைக்கப்போது வெளியேறிவிடும்படிக்கும், பார்த்துக்கொள்வதே நோயின்மைக்கு உபாயம், என்பது இயற்கை வைத்தியத்தாரின் கொள்கை.

தேகத்தினுள் அசுத்தங்கள் உண்டாகும்வகை முக்கியமாய் உணவினுலேயே. உணவின் பல நியமங்களை நாம் இப்போது மீறியே நடந்துவருகின்றேம். இதனுல் உணவானது முற்றிலும் அற்றுப்போகாமல், பலகொடிய நச்சுப்பொருள்களாக மாறி, அவையும் வெளியேறுமல், சிறுகச்சிறுக உடலில் தங்கி, அதி

கரித்து, உடலின் இயற்கையான உருவத்தை முதலில் மாற்றுகிறது. இதை நாம் சாஸ்திரக்கண் கொண்டு பார்க்கலாம். இவ்வுருமாற்றங்களே நோயின் வித்துக்கள் நம்முள் படித்திருப்பதைக் குறிக்கும். இதையறியும்பொருட்டு, "முகவிலக்கண விவேகம்" என்றோர் நூல் ஒரு வைத்திய சிரேஷ்டரால் செய்யப்படிருக்கிறது. இதன் முக்கிய தத்வங்களையும், மற்ற இவ்வைத்திய விவரங்களையும் "மருந்தில்லா வைத்தியம்" என்னும் நூலில் விரிவாய்க் கூறியிருக்கிறேன். வேண்டுவோர் அந்நூலைப் பார்த்துக் கொள்ளலாம்.

உணவானது அப்போதைக்கப்போது அற்றுப் போயின பின்பே மறுபடி உண்ணவேண்டுமென்பது உண்மையான ஆயுர்வேதத்தின் கட்டளை. இதை திருவள்ளுவரும் பல குறள்களால் கூறியிருக்கின்றார். பரிமேலழகரின் உரையையும் சேர்த்துப் பார்க்க, இயற்கை வைத்தியத்தின் முடிவுகளே அங்கு கூறப்பட்டனவென்று சொல்ல வேண்டும். இவ்விரண்டின் ஒற்றுமையைப் பார்க்க, நான் எழுதியிருக்கும் "பூர்ணசக்தி" என்னும் சிறு நூலைப் படிக்க வேண்டும்.

உணவானது உடலில்ஜீரணமாகி, அதன் இரசங்கள் இரத்தத்தில் சேர்ந்து. அவை செலவாகி விடவும், மீதமுள்ள மலம் வெளியேறவும் பொருத்தால்தான் தீவிரமான பசியைக் காணலாம். அவ்விதம் நாம் செய்ததாலும், மேலும் பசியின்மையால், இயற்கையுணவு சுவையற்றதாகத் தோன்றுவதினால், உணவுக்குச் சுவையுண்டாக்குவதற்காக உப்பு முதலான செயற்கைச் சுவைகளை சேர்த்தும் பல விசித்திர வகைகளால் உணவைச் சமைக்கச் செய்தும் நம் உடலினுள் தொழிற்படும் தீயளவுக்குமேல் உண்ணுவதாலும், உணவின் பொருள்கள் முற்றிலும் அருமல், பல வித மலங்களாகவும் நஞ்சுகளாகவும் உடலில் தங்கி விடுகின்றன.

முக்கியமாய், மலமானது அன்றன்று நிசேஷமாய் வெளிப்படாமல், சிறிது சிறிது தங்கித் தங்கி இடையில் இரத்தத்தைக் கெடுத்துவிட்டு, அப்பால் வெளியாவதும் இதனால் நாகரிக மனிதன் எப்போதும் ஒரு பெரிய கக்கூசைச் சுமந்து செல்பவனு

கின்றான். இதனால், நோயானது மனிதனைப் பீடிப்பது கொஞ்ச மேனும் ஆச்சரியமல்ல என்று நாம் காணலாம்.

இப்படி நம் தேகத்தினுள் வளர்ந்துவரும் நஞ்சுகளையும்பழய மலங்களையும் அகற்றுவதே வைத்தியம், என்பதுதான் இயற்கை வைத்தியத் தீர்மானம். இதற்கு மருந்துகள் உதவா. இதற்கு உதாரணம் விளக்கெண்ணெய் முதலிய பேதி மருந்துகளே. இவை இரண்டொரு தடவை தான் மலசுத்திக்கு உதவுமே தவிர, அடிக்கடியுபயோகித்தால் தீராத மலசிக்கல்களையே உண்டாக்கு கின்றன. இதுபோல்தான் எல்லா மருந்துகளும், என்று இயற் கை வைத்திய முடிவு. இதர வைத்தியங்களில் கையாளும் "மருந் துகள்" அநேகமாய்த் தாமே நம் தேகத்துக்கு அந்நியாயமான நஞ்சுகளாயிருக்கின்றன. இவற்றால் தேகத்திலுள்ள நோய்ச் சுமை அதிகப்படுவது நிச்சயம்.

ஆனால் நம் தேகத்தினுள்ளிருக்கும் உயிரானது நோய்ச் சுமைகளைக் களையும் சக்தி வாய்ந்ததாகவே அமைந்திருக்கின்றதா கையால், நோயின் வித்துகளைக் களையவும், நோய்வந்தபின் அதை தீர்க்கவும், உயிரே போதுமான வல்லமையுள்ளதாயிருக்கின்றது. உயிரானது இதற்காகச்செய்யும் முயற்சிகளுக்கு நாம் தடைசெய் யாமலிருப்பதே நம் கடமை. உயிருக்கு உதவிசெய்யும் பொருட்டு சுத்தவாயுவு, வெயில், தண்ணீர், நற்பசியிருக்கும்போது பத்திய மான உணவு, மற்றபோதுபட்டினி இவ்வைந்தும்போதுமானவை. இவைதவிர வேறொன்றும் மருந்தாகக் கொள்ளாததால், இவ் வைத்தியம் மருந்தில்லா வைத்தியம் எனும் பெயரைக்கொண்டது.

இவ்வகை வைத்திய முறைகளால் காய்ச்சல் முதலிய நோய் கள் வெகு சீக்கிரத்தில் தீருவதைப் பார்க்கலாம். மிகவும் பயங்கர மான காய்ச்சல்களும்கூட, இவ்வைத்தியம் துவக்கினஉடனேயே உயிருக்கு அபாயம் செய்யாதபடி, சாந்தமாகி மருந்துகளால் குண மாவதைவிட அதி சீக்கிரத்திலேயே தீருகின்றன. இதற்கு எத் தனையோ சாக்ஷிகளுண்டு. இயற்கை வைத்தியத்தை ஒரு முறை செய்து கொண்டவர் என்றும் அவ்வைத்தியத்தையே போற்று வார்கள் என்பதும் உலக அனுபவம்.

வேறு எவ்வைத்தியத்திலும் தீராத கொடிய நோய்கள் கூட இவ்வைத்தியத்தில் தீருகின்றன. இதனால்தான் இவ்வைத்தியத்தைக் கையாளும் வைத்தியர்கள் பிழைத்துவருகிறார்கள். காய்ச்சல் முதலிய நோய்கள் தாமே இலேசாயும் சொற்ப காலமே யிருக்கக்கூடியவைகளாயு மிருக்கின்றன. இவற்றில் மருந்துகளாலேயே வைத்தியம செய்துகொள்ளப்படுகிறது. உண்மையில் இவை தாமே தணியும் தன்மையுள்ளனவாயிருக்க, மருந்துகளால் அநேகமாய் அதிககாலமிருக்கும்படி நேருகிறது. ஆனால் மனிதர் மருந்துகளே இவற்றைத் தீர்க்கின்றனவென்று நம்பி, இயற்கை வைத்தியத்தை அலக்ஷியம் செய்கிறார்கள். மருந்துகளால் தீராத நோய்களுக்கு மாத்திரம் இவ்வைத்தியம் உதவுமென்று நினைககப்படுகிறது. இதுவும் இவ்வைத்தியத்தின் சிறப்பையே குறிக்கின்றது.

இனி வேறொரு சமயம் இயற்கை வைத்தியத்தினால் காய்ச்சல் முதல், பலவித நோய்கள் தீரும் வகையை வர்ணிக்கிறேன்.

இயற்கை வைத்தியமானது நோய்களின் வித்துக்களைக் களைந்து குணம் தருவதால், அதனால்வரும் சுகமே உண்மையான சுகமாகும் மற்ற வைத்தியங்களால் நோயின் வித்துக்கள் களையப்படுவது கிடையாதென்று உறுதியாய்ச் சொல்லாமல் மேலும் இயற்கை வைத்தியமே நோய்வாராதபடி நம்மைக் காத்துக் கொள்ளுவதற்கான முறைகளை போதிக்கின்றது. ஆகையால் இயற்கை வைத்தியத்தை யாவரும் கற்றுக்கொள்ளவேண்டும். முக்கியமாய் சிறுவர்களுக்கும் குடும்பங்களுக்கும் முதல் ஆதாவாயிருக்கும் தாய்மாருக்கும் இதை போதிக்கவேண்டும். இதனால் கிடைக்கும் பயன்களை அவரவர் தாமே ஊகித்துக் கொள்ளலாம். சொல்லப்புகுந்தால் விரியும்.



# தூய்மை.

(பண்டிதர் செ. ரா. கணபதி சுப்பரமணிய அய்யர் 'காம தேனு' பத்திரிகையில் எழுதியது)

உடற்றூய்மை:—புறந்தூய்மை நீரான் அமையும். நமது சரீரத்திலுள்ள அழுக்குகளெல்லாம் வியர்வையோடு வெளிப்படு கின்றன. அந்த நீர் உலர்ந்துபோனால் அழுக்கு நம் தேகத்தின் மீதே படியும். காற்று வீசுதலினாலும் தூசு முதலியன நம் தே கத்திற் சேர இடமுண்டு. இவைகள் நீங்குதற்காக நாம் ஸ்நாநம் செய்தல் வேண்டும். ஸ்நாநம் குளிர்ந்த நீரில் செய்தலே நலம். ஸ்நாநஞ் செய்யாவிடில் அழுக்கு தேகத்தில் படிதலினால் மயிர் கால் துவாரங்கள் அடைத்து மறுபடியும் வியர்வை நீர் வெளிப் படுதற்கு இடமின்றித்தடுத்துவிடும். ஆதலின் அவ்வழுக்கு தேகத் தின் உள்ளும் புறமும் நின்று விஷத்தன்மையடைந்து பிணியை வருவிக்கும். எனவே, நாம் தினந்தோறும் உடல் முழுவதையும் நன்றாகத் தேய்த்துக் குளித்து அழுக்காகிய போக்க வேண்டும். உடற் சுத்தமற்றோர் குளிர் காய்ச்சல் முதலிய நோய்களினால் வருந்துதலும், உடல் சுத்தமுற்றோர் நோயின்றி ஆரோக்கிய மாயிருத்தலும் பிரத்தியக்ஷம். வாரத்திற் கிரண்டு முறையேனும், அல்லது ஒரு முறையேனும் எண்ணெயிட்டுக்கொண்டு வெந்நீரில் ஸ்நாநம் செய்யவேண்டும். 'வைத்தியனுக்குக் கொடுப்பவனும் வாணியனுக்குக் கொடு,' 'சனிநீராடு' 'கூழானாலும் குளித்துக்குடி,' என்னும் பழமொழிகளின் உண்மைகளை ஆராய்ந்தறிந்து நாம் அவ ற்றைக் கடைபிடித்தல் வேண்டும்.

உடைத்தூய்மை:—நாம் உடுக்கும் உடை அழுக்கின்றிச் சுத்த முள்ளதாயிருத்தல் வேண்டும். நாம் ஒரு முறை உடுத்திய ஆடை வியர்வை முதலியவற்றால் மலினமடைதலின், மறுபடியும் அதனையே அணிதல் கூடாது உடை சுத்தமாயில்லாவிட்டால் அதிலுள்ள அழுக்கெல்லாம் நம்மீது படிந்து நோயை உண்டாக் கும். ஆதலினால் நாம் எப்பொழுதும் நமது உடைகளைத் துவை த்து உலர்த்தி உடுத்திக் கொள்ளல் வேண்டும். 'கந்தையானாலும் கசக்கிக்கட்டு' என்பது பழமொழியன்றோ? துவைக்கக் கூடாத கம்பளி முதலியவற்றாலாய ஆடைகளை அணிவோர் அவைகளை அடிக்கடி வெயிலில் உலர்த்தல் வேண்டும். அங்ஙனம் உலர்த்து வதினால் அவைகளிலுள்ள கிருமிகள் இறந்து படுகின்றன. அழுக் கற்ற ஆடையை அணிந்து கொள்வோர் தேகம் சுத்தமாகவும் சுகமாகவும் இருக்கும். உடையும் உடலும் சுத்தமாயிருக்குமானால் மனம் சுத்தமுறுவதற்கு அவைகளும் காரணங்களாகும்.

உ

சிவமயம்.

# "குமரன்" KVC0009

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௩. | காரைக்குடி பிரபவ-ஹூ ஆனி-மீ | மணி ௩.

## கன்னன்.

கன்னனும் விஜயனும் கடும் போர் புரிந்து களைத்துப் போயினர். மாலை நேரத்தில் சூரியனின் ஒளியானது குருதி வெள்ளம் பாய்ந்தோடும் போர்க்களத்தின் நிறத்தை யொத்திருந்தது. சிறந்த வில்லாளனாகிய கன்னன் விஜயனது காண்டீப வெங்கணைகளால் அடிபட்டுத் தேர்த்தட்டில் விழுந்துகிடக்கிறான். ஆவியோ நிலையினின்றுங் கலங்கிவிட்டது. உயிர் உள்ளேயோ, வெளியேயோ வென்ற நிலையில் மூச்சு ஓடிக்கொண்டிருக்கிறது. உடல் நிறைய அம்புகள் பாய்ந்திருக்கின்றன. மேனி முற்றும் இரத்தம் வடிந்து கொண்டிருக்கிறது. கைசோர்ந்து மெய் சோர்ந்து ஆவி சோர்ந்து தேரின்மேல் சாய்ந்து கிடக்கிறான் கன்னனெனும் பெருங் கொடையாளி. இவனுடைய கொடையின் பெற்றியை அறிவிப்பான் எண்ணிய கண்ணபிரான் பார்ப்பன வுருக்கொண்டு தோன்றினான். "நீ செய்துள்ள புண்ணிய மனைத்தையும் எற்குத் தானமாகக் கொடுப்பாயாக" எனக் கை நீட்டி இரந்து நின்றான் கண்ணனுங் கள்வன். ஏழேழு பிறப்பும் இல்லை யென்றுரையா இதயமொன்றனையே எதிர்நோக்கி நிற்கும் கன்னன் இல்லை யென் றுரைப்பனோ? இல்லை யென்ற சொல்லையும் பயிலாத கொடைவள்ளல் இரந்து நின்ற கண்ணனிடத்தே ஈந்தான் தான் செய்துள்ள தரும மனைத்தையும். தனக்குக் கிடைத்த பொருளனைத்தையும் பிறருக்கே உரிமையாக்கிய கொடைவள்ளலாங் கன்னன், தன்னுடைய உயிரனைய தோழனுக்காகப் போர் முனையில் உயிரையுந் தியாகம் செய்தான். இம்மையில் தனக்குண்டென நினைக்கும் எல்லா வாழ்வினையும் இழந்து யாவரையும் விட்டு இவ் வுலக வாழ்வினையுந் துறந்து உயிர் பிரியும் நிலையிலுள்ள கன்னன், மறுமையில் உதவியாமென நம்பிய தருமத்தையுந் தானங் கொடுத்தனன். இம்மாதிரியான கொடை வீரர்களால்தான் உலகம் உய்வு நெறி பெற்று வாழுதல் கூடும்.

எல்லாமிழந்து கிடக்கும் கன்னன் கண்ணபிரானுடைய திரு உருவக் காட்சியை வியந்து சில மொழிகள் பகர்கின்றான். கொடையிற் சிறந்த வீரன் மெய்யரும்பித் தன்னை மறந்த பக்தி மேலீட்டினால், "நீல நிறத்தோடு கூடிய உயர்ந்த மலையினையும் திரண்ட மேகத்தையும் கடலினது அளத்தற்கரிய நீரினையும் காயாம்பூவையும் ஒத்திருக்கின்ற திருக் கோலத்தினையும், ஐம் பெரும் படைகளையும், மிகுந்த மணம் பொருந்திய துழாய் மாலை யணிந்த மார்பினையும், திரண்டு நிற்கின்ற தோள்களையும், அழகிய கழுத்தினையும், செவ்விய இதழ்களையும், காலையிலே மலர்ந்தொளி ரும் தாமரைப் பூவினை யொத்த திருமுகத்தினையும், ஒளி பொருந் திய முடியையும் இந்த உலகத்திலேயே கண்ணால் காணப் பெற் றேன்" என்று கூறி மகிழ்ந்தான். இக்கருத்தினை வில்லிபுத்தூரார் கூறுவது வருமாறு:—

நீலநெடுங் கிரியுமழை முகிலும் பவ்வ
  நெடுநீருங் காயாவு நிகர்க்கு மிந்தக்
கோலமும்வெங் கதைவாளஞ் சங்கு நேமி
  கோதண்ட மெனும்படையும் குழைத்த வாச
மாலைகமழ் துழாய்மார்பும் திரண்ட தோளும்
  மணிக்கழுத்தும் செவ்விதழும் வாரி சாதக்
காலைமல ரெனமலர்ந்த முகமுஞ் சோதிக்
  கதிர்முடியும் இம்மையிலே கண்ணுற்றேனே.

---

# நட்பு.

பண்டிதை. சு. பாலாம்பிகை அம்மாள்.

எல்லாம் வல்ல முழு முதலிறைவனாற் படைக்கப்பட்ட ஆன்ம ராசிகளனைத்தும் பல்வேறு வகைப்பட்ட வாழ்க்கையை நடத்தி வருகின்றன. அவற்றுள் சில தனித்துவாழும் வாழ்க்கையும், சில ஒருங்குவாழும் வாழ்வினையும் மேற்கொண்டொழுகலாயின. இவற்றுள் விலங்குகள் புலாலுண்பவை, புல்லுண்பவையென இரு திறப்படும். அவற்றுள் புலாலுண்பவை தனித்து வாழ்வன. புல் லுண்பவை பெரும்பாலுங் கூடிவாழ்வன. சிங்கம், புலி முதலி யன தனி வாழ்வு வாழ்கின்றன. பிந்திய புல்லுண்பனவாகிய மான், மரை, குதிரை முதலியன தற்காப் பின் பொருட்டுச்சேர்ந்து வாழ் வன. மாமிச பட்சணிகள் பெரும்பாலும் பகையைத் தனித்து வெல்லுமாற்றலுடைய வாதலின் சேர்ந்து வாழ்தலை அவை விரும்பு வதில்லை. மான், மரை முதலியன பகையைத் தனித்துவெல்லும்

ஆற்றலிலவாதலின் இடையூறுற்றக்கால் தம்மினத்தூ மாக்கள், தமக்கு உதவுவான் வேண்டி ஒருங்குவாழும் வாழ்வை மேற்கொண்டொழுகலாயின.

மக்களுங் காட்டில் வாழுங்கால் தற்காப்புக்காக குழூஉ வாழ்வு வாழ்வாராயினர். நாட்டில் வாழுங்காலுந் தேவைகள் பலவுடைமையால் இனந்தழுவதலோடு வருணங்களாக வகுக்கப்பட்டு ஒரு சாரார் மற்றையோரைத் துணையாகக்கொண்டு தாமும் மற்றையோர்க்குத் துணையாக வாழ்வர். உலகம் புரத்தல் அரசற்கும், வாணிபஞ் செய்தல் வைசியர்க்கும், வேளாண்மை செய்தல் சூத்திரருக்குமே உரியதொழிலென உலகம் வகுத்தது. இவ்வாறன்றி வேறுபல தொழில்களும் சகல வருணத்தாராலும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. தற்காலம் அரசாங்க உத்தியோகமானது எல்லார்க்கும் பொதுவானதோர் தொழிலாக வழங்குகின்றது. இவ்வாறு பல்லோரும் பல்வகைப்பட்ட தொழில் புரிந்து ஒருவரை யொருவரின்றியமையாது வாழ்கின்றனர். இவ்வொற்றுமைக்குத் துணைசெய்தலே ஏதுவாகின்றது. இவ்வாறன்றி பயன் நோக்காது கருத்தொற்றுமைபற்றிக் கூடுதலே நட்பெனப்படும்.

கருத்தொற்றுமைக்கு நிலையொற்றுமையுங் குணவொற்றுமையுந் துணையாதல் வேண்டும். இனவொற்றுமையுஞ் சேருமாயின் நட்புப் பலனடையும். பெரியோர்க்குஞ் சிறியோர்க்கும், அறவோர்க்கும் மறவோர்க்கும், அறிவோர்க்கும் பேதையர்க்கும் நட்புண்டாதலரிது. கல்வியாளரைக் கல்வியாளரும், மறவோரை மறவோரும், பேதையரைப் பேதையரும், அறவோரை அறவோருமே பெரிதும் விரும்புவர். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' 'மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்' என்னும் வாக்கியங்களும் ஈண்டுக் கவனிக்கற்பாலன.

நண்பனெனவன் தாயாகவுந் தந்தையாகவும் உடன் பிறந்தானாகவும் மந்திரியாகவுங் குருவாகவும் இன்னும் பல்வேறு வகைப்பட்ட அன்பின்றொடர்பினனாகவும் நடிக்கத் தகுந்தவனாவான். ஆதலால் அவன் மற்றையோரெவரினுஞ் சிறந்தவனாக வைத்தெண்ணப்படுவான். 'நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண், மேற்சென்றிடித்தற் பொருட்டு' என நாயனார் கூறியவாறு ஒருவன் இன்னொருவனை நட்புக்கொள்ளுதல் தம்முளினியவென சொல்லி நகைத்துப் பொழுதுபோக்குவதற்கன்று. இன்பேனுமிடரேனும் வருங்காலத்து அச்சுமையின் பகுதியைத் தாங்கியாறுதல் செய்தற் பொருட்டும், தீயவழியிற் புகுங்கால் அவ்வழியிற் புகு

முன் அதனுலுண்டாகும் பழி பாவங்களை இன் சொற்களாலெடுத் துரைத்து மீட்டற்குமே யாம்.

ஆதலால் உயிரினுமினிய நட்பை ஒருவனின்னொருவனோடு உண்டாக்கக் கருதுவானாயின் அதையாராய்ந்து செய்தல்வேண் டும். அவனுடைய மறைபொருள்கள் யாவுந்தங்கும் பொக்கிஷம் அவனே யாதலின், மக்கள் தத்தம் இன்ப துன்பங்களை வெளி யிடாது மனத்தில் நிறைத்து வைப்பதும் ஒரு பெரியபாரமாகும். அவற்றை மனத்தினின்றும் வெளிப்படுத்துதல் அவசியமாகும். உற்ற நண்பனிடத்திலேயே அவைகளையுரைத்தல்வேண்டும். அவன் அவ்வச்சமயங்களுக் கேற்றவாறு தகுந்த நல்லுரை கூறிப் பரிகரிப்பான். அன்றியும், ஒருவனை அவனுடையநண்பனாலேயே, இவன் இத்தன்மையனென்றறிதல்கூடும். கூடுங்கூட்டமேயளந்தறி யுங் கருவியாக விருக்கின்றது. இப்பற்றை யெத்துணை நன்மையாக விருப்பினும் அவன் தீயானோடு நட்புக்கொள்வனேல் அவனுடைய நல்லியல்பழிந்து செயற்கையாலுண்டாகுந் தீயகுணங்களே அதி கரித்துத் துன்மார்க்கனாகி விடுவான். இவற்றிற் கவனஞ் செலுத் தாது சிலர் ஒரு நாட் காட்சியி லினிமைகண்டு தமதுள்ளத்தைப் பிறர்கைக் கொடுத்து வருந்துவர். ஒரு சில நாட்களில் பலருடைய குணங்களைக் கண்டறிதலரிதாகும். பலபல கருத்துக்களை யுட் கொண்டு தமது தீயவியற்கையை மறைத்துத் தம்மைப் பிறர்க்குக் காட்டாது வாழ்பவரும் பலருளர். ஆதலால் பல சந்தர்ப்பங்களி லும், வறுமை செல்வங்களிலும் பரிசோதித் தறிதல்வேண்டும்.

நட்பாராய்வின்மையால் வருந்தினோரும் வருந்துபவரும் பலராவர். ஒருவனுடைய குலத்தையும், குணத்தையும், குற்றத் தையும் குறைவற்ற சுற்றத்தையும் அறிதல்வேண்டும். 'குலத் தளவேயாகுங் குண'மாதலின் உயர்குடிப் பிறந்தார்க்கு அதிக மாக நற்குணங்களேயமைதலின் குலத்தையும் சிறுபான்மை மாறுபடக்கூடுமாதலின், அதனோடமையாது நேரிற் குணத்தை யறிதலவசியமாதலின் குணத்தையும், உலகத்தில் குற்றமில்லா தாரிலாதலின் "குணநாடிக் குற்றமும்நாடி யவற்றுண்மிகைநாடி மிக்க கொளல்" என்ற பொய்யாமொழியார் திருவாக்கின்படி குணத்தையும் குற்றத்தையுமாராய்ந்து குணம் மிகுத்துக் குற்றங் குறைந்தவனைத் தேடவேண்டுதலின் குற்றத்தையும், இனத்த வருடைய பழக்க வழக்கங்களே பெரும்பாலுமமைதலின் சுற்றத் தையும் விசாரித்தல் வேண்டும்.

இவ்வாறு உயர்குடிப் பிறந்து நல்லிலக்கணமமைந்தானாயி னும் தனக்குண்டாகும் அவமானத்திற்கஞ்சுபவனுவென்றும்

இடையூறுற்றவிடத்துக் காப்பாற்றுவதற் கேற்றவனுவென்றும் அறிதல் வேண்டும். 'அஞ்சுவதஞ்சாமை பேதைமை'. ஆதலின் அஞ்சத்தக்க பழிக்கஞ்சுபவனுவென்றும், "அற்றகுளத்திலறு நீர்ப்பறவை"போல்பவருமுளராதலின் இடையூறேனும் இலம் பாடேனுமுற்றவிடத்து அதைத் தானுமேற்றுத் தாங்கக்கூடிய வனுவென்றுங் கவனித்தல் வேண்டும்.

கெட்ட குணமுடையவர்களிலிருந்து எவ்விதத்திலும் விலகிக் கொள்ளுதல் அவசியம். ஒருவன் தான்பெறும் பேறுகளில் கெட்டவருடைய நட்பை விலக்கலும் ஓர் பெறும் பேருதலின் தமக்குப் பயனுண்டாங்காலத்து நட்புச்செய்து அஃதின்மையாங்கால் விட்டு விலகும் பதடிகளையும், நட்பின் தன்மையை நோக்காது அதன் பயனையே நோக்குவோரையும், முன் தாங்குவனு போற் பாசாங்கு செய்து சமர்க்களத்தில் வந்தவுடன் வீழ்த்தி முறிக்குங் குதிரைபோல்வாரையும், மனத்திலொன்று நினைத்து வெளியிலொன்று சொல்வோரையும், இல்லின் கண்ணிருந்து நல்லுரை கூறி நயப்பித்து சபைகளிலிருந்து வசை கூறுவோரையும் நீங்கியுய்தல் வேண்டும்.

இன்னணம்பல்லாற்ருனுமாராய்ந்து தியவர்களினீங்கி நற்குணங்களமைந்த நண்பனெருவனைக் கொள்வானுயின் தனக்கும் அவனுக்குமிடையே யுள்ள நட்புக் குன்ருதவாறு அதை வளர்ந்தோங்கச் செய்தல்வேண்டும். மனேநிலையானது காலத்துக்குக் காலம் மாறுபடும் பான்மையினதாதலின் அவ்வேறுபாட்டால் தெரிந்தோ தெரியாமலோ நண்பன் குற்றஞ் செய்வானுயின் அதைப் பொறுத்தல் வேண்டும். எத்தகைய அன்பின்ருெடர் பினரும் குற்றஞ் செய்யாதிருத்தல் இயலாத காரியமாகும். "அரியதற்ரு சறரூர் கண்ணுங்தெரியுங்கால் இன்மையரிதே வெளிறு" கற்றற்கரிய நுண்ணிய நூல்களைக் கற்றுப் பேறிவு வாய்க்கப்பெற்ற முதுக்குறைவாளரிடத்தும் ஆராயுமிடத்து அறியாமையிருத்தல் உண்மையாதல் போல எத்துணை குணமும் அன்பும் உடையாரிடத்துங் குறறம் உண்டாம். குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை. சிலர் முன் எத்துணை நன்மை செய்யினும பின் ஓர் குற்றத்தைச் செய்தால் அக்குற்றத்தையே பெரிதும் பாராட்டி முன் செய்த நன்மைகளனைத்தையும் மறந்து பகை சாதிக்கத் தொடங்குவர். இது நட்பின் பாற் பட்டதன்று. நண்பன் குற்றஞ் செய்தானுயின் அதை யவனுக்கு இன்சொற்களால் விளங்கக்காட்டிப் பின்பு அவன் அவ்வாறு செய்யாதபடி பேணுதல் வேண்டும்.

நண்பனின்றி உலகில் வாழ முடியாது. நண்பனின்றி வாழ்பவன் தன்னையொப்பாரும் மிக்காருமில்லாத மகானுதல் வேண்டும் தான் தோழமை பூணுதற்குத் தன்னை நிகர்ப்பாரொருவருமின்மை யானும் பிறருதவி வேண்டாமையானும். அன்றேல் எவரையும் நம் பாதவன் தோழனின்றி வாழ்வன். இத்தன்மையனை உலகம் நம் பாது. இடுக்கணுற்றக்கால் இவன் ன்றும் எமீட்சியில்லாதவன், என்றுங் கவலையையுடையவனுவான்.

---

# தூய்மை.

த. ராமகிருஷ்ண விச்வகர்மன். வேத மாணுக்கன்.

க. உடற்றூய்மை. உ. புலத்தூய்மை. ௩. உடைத் தூய்மை. ௪ உள்ளத் தூய்மை. ரு. சிந்தனைத் தூய்மை. சு. உயிர்த் தூய்மை. எ. உறையுமிடத் தூய்மை. அ. இல்லத் தூய்மை. கூ. பொழிற் றூய்மை. க0. ஊர்த் தூய்மையாதிய.

இங்ஙனம் முறைப்படுத்திக் கொண்டு ஒவ்வொன்றையும் செயலிற் கொணர்க. சில திங்களில் புறத்தூய்மையும் அகத் தூய்மையும் நிலைபெறும்; விரைந்தியற்றலாகா. வேத நெறியின் உண்மைப் பிரசாரம் தாமவ்வாறொழுகிப்பிறரும் கண்டியற்றுமாறு புரிவதாகும்; புறத் தோற்றத்திற்கியற்ற லன்று. வெளி மயக்கிற்காகச் செய்தல் குறித்த பயனளிக்காது. தங்கடமை யுணர்ந்து புரிவதே தூய்மை தருவதாகும். இடையறுது முயன் றால் ஒரு திங்களில் பிறர்கண்டு வியப்புறுமாறு தூய்மைக் கோரி லக்காக அமைந்து விடலாம். அயலார் புகழ்வது கேட்டு இறு மாந்து கைவிடாது திறமையோடு முயன்று மிகுந்த தூய்மை படைத்தல் வேண்டும். இத்துணைய தென்றளவிடற்கியலா. ‘கடமை யாற்றல் நமதுரிமை; பயன் விழையற்க.’ பயன் விரும் பிச் செய்யின் வீழ்ந்து படும். பிறர் புகழ்வதும் இகழ்வதும் கருதாது தங்கடனுற்றி உயர் பண்புக்களெய்திடுக. மறைநெறி வாழ்க்கையினைச் செயலிற் செய்க. இதன் வளர்ச்சி எஞ்ஞான் றும் நலன் பயக்கும்.

நாம் அமைக்க விரும்பும் நீர்மை குறித்த சொற்கள், சொற் றொடர், செய்யுள், அறவுரைகள் பொறித்த சித்திரங்களும், அந் நீர்மை கைவந்த பெரியார் உருவப் படம் அல்லது பெயர் வரைந் தும் அடிக்கடி நினைவு கூர்தற் பொருட்டுச் சுவரில் எதிராக மாட்டி.

வைத்திருப்பின், காணுந்தோறும் உள்ளத்திற் படிந்து உருவாதற் குதவியாம். நாட்டுப் பற்றிற்கு சிவாஜி சத்ரபதி, ராணு பிரதாப சிங்கன்; அறப்பற்றிற்கு சீக்கிய குரு; பிரமச்சர்யத்திற்கு பீஷ்மன்; வாய்மைக்கு அரிச்சந்திரன் இறைப் பற்றிற்குப் பிரஹ்லாதன் முதலியோர் உருவங்கள் அந்நீர்மைகளை மனத்தில் தூண்டும். இவற்றொடு குறித்த மந்திரங்கள் நன்மொழிகள் பெரியாருரைகளும் பொறித்திருப்பின் மனதிற்கு மிகுந்த வளர்ச்சி யளிக்கும். இவ்வாறியற்றின் சில நாட்களில் அநுபவமாகக் காணலாம். இதில் யாதும் ஐயமில்லை.

உள்ளக் கிளர்ச்சியும் புகழ் விருப்பும் ஆவேசமும் மாந்தருக்குச் சிறந்த நலன் விளைப்பனவே. உள்ளக் கிளர்ச்சி யில்லான் உயர்வடைதல் அரிது. உள்ளக் கிளர்ச்சியோடு மனதில் நம்பிக்கை வைத்து இக் குணத்தை இம் மதியில் அடைவேனெனத் துணிந்து இடையூறுகளைப் பொருட் படுத்தாது உறுதியாக நின்று கைகூடியதின் பின்னரே வெளியிடுதல் வேண்டும். முதலாயதாகத் தெரிந்தெடுக்குங் குணநலன் எளிதில் கைகூடுவதாகவும் புகழளிப்பதாகவும் அடுத்ததைக் கைக்கொள்வதற்கு இரு மடங்கு உள்ளக் கிளர்ச்சி தருவதாகவு மிருத்தல் நன்று.

சிலர் பொருள் சேர்க்கக் குணமுடையவர் போல் காண்கின்றனர். சிலர் நல்லவர்போன்று நடிக்க விரும்புகின்றனர். சிலர் தம்மைப் பெருமைப் படுத்திக்கொள்ள முன்வருகின்றனர். சிலர் வேறு விருப்பங்களில் முயற்சிக்கின்றனர். பொருள் திரட்டற் பொருட்டுத் தம்மகத்து நற்குணங்கள் வளர்தலும் நன்று. சான்றோர் போன்று நடிப்பதால் நலன் பயப்பின் யாதும் கெடுதியில்லை. தம்மைப் பெருமைப் படுத்திக் கொள்வதால் உயர்வு பெறின் புகழ்தற் குரியதேயாம். எவ்வகையானும் தம்மகத்து 'மனிதநீர்மை' பெருகுதற் பொருட்டு உயர் குணங்களை மேற்கொண்டு வளர்த்திடுக. நற்குணங்கள் நிரம்பப்பெற்று மக்களுக்கு நலன் பயப்பத் தம்மையே சர்வ ஜனங்களின் பொருட்டும் தியாகஞ் செய்வதால் தம் புகழ் நெடுநாள் நிலவும். இவ்வாறு விருப்பின்றித் தம்மை உயர்த்தாது போயினும் மேற்குறித்தவாறு பயன் கருதியேனும் விருப்போடு மேன்மை தருஞ்செயல்கள் புரிக. முதலில் பயன் கருதிய செயல்களால் உயர்வு கண்டோர், உயர்வுடைய பயன் கருதாச்செயல்களையும் ஆற்ற முயல்வர்.

சாதாரண மக்கள் முதலில் தத்தம் உள்ளத்தில் சிறுபொழுது நிலைக்க வைத்துப் பயிலுதல் நன்று. வாய்மை காக்க விரும்பின்,

தம்மை அரிச்சந்திரனைகப் பாவித்து எத்துணைக் கொடிய துன்பங்கள் நிகழினும் உண்மை கைவிடுதலில்லையென்று துணிக. தற்பொழுது துன்புறினும் வாய்மை கைவிடாது கடைப்பிடித்திடுக. இத்தகைய கற்பனையமான உறுதியினை மனத்திற் கொணர்ந்து பயிற்றுக. இக்கற்பனையால் தம்மை பெருந்துன்பத்திற் காளாக்கிவோ அல்லது சோதனையாக எற்படினும் தவறாதிருத்தற்குப் பயின்றிடுக. இதனைல் சிறிது வலிமையும் மனக்கிளர்ச்சியும் எற்படும். இடுக்கண் நிகழ்த்துங்கால் பெரும்பயன் விளையு மென விரும்புத லன்று, மனத்தில் சிறிது பயன் விருப்புண்டா மென்பதாம். கற்பனையான துன்பத்தைக் கற்பனையான ஆன்ம ஆற்றலால் அகற்றுதலானும் சிறிது வலிமை விளைகின்றது. மனத்தை உறுதிப்படுத்துவதற்கு இது ஒரு வகையான சிறு சாதனம்.

நான்கு அல்லது எட்டு நாட்களுக் கொருமுறை தம்மைச் சோதித்தால் பயிலும் பண்பு எத்துணை நிலவுகின்ற தென்றுணரலாம். குறிப்பிட்ட தவணையில் யாதேனும் சோதனை யேற்பட்டால் சொற்கள் எவ்வாறு வருகின்றன வென்றும், அவ்வாறே மற்றொருகால் நிகழின் எம்மொழிகளை அடக்கமாகக் கூறவேண்டுமென்றுஞ் சிந்திக்கலாம். இவ்வாறு தற்சோதனை புரிதலால் பெரும்பயன் விளையும்.

சுருங்கக் கூறமிடத்து எல்லா ஆற்றல்களிலும் 'உறுதியாக நிற்கும் வன்மை' மிகுந்தது. வாழ்க்கையில் 'வேத நெறி' மிளிர விழையின், புறவளர்ச்சியும் அகவளர்ச்சியும் உண்மையில் பெற வேண்டுமாயின், அங்ஙனம் மொழிதலோடு மனத்துக்கண் பேருறுதி கொள்ளல் வேண்டும். உள்ளத்தில் உலையா வுறுதி கொள்ளாவிடின் உலகமுழுதும் துணைநிற்பினும் உயர்வடையவியலாது. உலகமுழுதும் பகையாயினும் உள்ளம் உறுதி கொள்ளின் வெற்றி பெறப்படும். எனவே, தம்முயர்ச்சி தம்முறுதியில் நிலைத்திருக்கின்றது. இதனை என்றும் மறவற்க.

உறுதிகொண்டு உழைப்பீர்களாயின் மேற்குறித்த ஒவ்வொரு குணநலன்களையும் முறையே நிறுவி வளர்ச்சி யடையலாம். ஒன்றிரண்டாண்டுகள் இவ்வாறியற்றின் பிறர்கண்டு பின் தொடரும் நிலையில் வந்துவிடலாம். சிறிது உறுதியான் இத்துணையெய்தின் ஏன் முயலாதிருக்கின்றீர்? அன்புகூர்ந்து இன்றே துவங்குக. இரண்டு நான்கு திங்களில் என்னவாகின்ற தென்று பார்க்கலாமல்லவா?

—

# சந்திரமதி



(வீர. முத்துக்கருப்பன் செட்டியார்)

கவியுள்ளம் மலர்ந்து கனிந்து கசிந்து பண்ணேறி விண்ணுயர்ந்து கீதம்பாடி உலாவிவரும் சந்திரமதி மேகமாலை தாங்கி நக்ஷத்திரச் செண்டு வீசி வருகின்றாள். கலைமகளின் கண்ணும் மலர்மகளின் வதனமும் கலந்த இயற்கைத் தேவியின் வெற்றியுமாய் மிளிர்கின்றாள். ஓங்கிய சிந்தையால் இருள்கீறி அருள் சுரந்து ஒளி பரப்பும் குண சௌந்தரீ! தமிழின் இனிமையே, இங்கிதமே! பாஷாத்துவேஷமின்றிப் பாடிய கம்பனை வானத்திலே படம் பிடித்த புன்முறுவல் அரும்பிவரும் மோகினீ! ஆடிப்பாடிவரும் தேனே, தவழ்ந்து தவழ்ந்துவரும் வெள்ளிக்கும்பமே, உள்ளத்தின் உச்சியே, சீதையின் திருமுகமே, கீதையின் ஜோதியே, காதலின் வெற்றியே, வானொளியே, ஞானக்கண்ணே, சொற்பெருஞ் செல்வி, அறிவழகி! உன்னைக் காணுந்தோறும் காணுந்தோறும் என்மனங் குதிகொள்ளுகின்றது! அந்தோ! மல்லிகை ரோஜா கினது ஞானப்பாலை அருந்திக் கள்வெறி கொண்டு கண்சிமிட்டிப் பித்தனுடன் குலுங்கச்சிரிக்கும் விந்தையே விந்தை! ஆஹா! என்ன அற்புதம்.

---

# எவ்வாறு வளர்ப்பது?



(ந. வீரப்பன்)

ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் சமயம் உலகெங்கணும் பரவியிருத்தல் வேண்டுமென எண்ணுகின்றனர். இம்மை வாழ்வில் இன்பத்தையும் மறுமை வாழ்வில் சுவர்க்கத்தையும் அளிப்பது தங்கள் சமயந்தான் என்று ஒவ்வொருவரும் கூறுகின்றனர்.

தங்கள் சமயம் உலகெங்கும் பரவுதற்கு வேண்டிய வேலைகளை நாடோறும் செய்து கொண்டுவருகின்றனர். அங்ஙனமே நமது சைவசமயத் தினரும் சைவசமயமானது பூவுலகெங்கும் பரவுதல் வேண்டுமென்றும், சைவசமயந்தான் உண்மையில் மக்களுக்கு இம்மை, மறுமை இரண்டினும் நல்வாழ்வளிப்பதென்றும் கூறுகின்றனர். சைவசமயத்தை வளர்ப்பதற்கு ஆங்காங்கு சிற்சில கழகங்களும் கண்டிருக்கின்றனர். ஆனால் இன்றிருக்கும் சைவ சமய வளர்ப்புக் கழகங்கள் உண்மையில் சைவசமயத்தை வளர்ப்பனவாயில்லை. பழம் பெருமை பேசுவதையே தங்கடனாகக் கொண்டிருக்கின்றன. பழம் பெருமை பேசுவதால் மட்டும் எச்சமயமும் வளாமுடியாதென்பதை ஒருவரும் மறந்துவிடக்கூடாது. இன்று உலகிலேயே முதன்மைபெற முயற்சித்துவரும் கிறிஸ்து சமயத்தினர் எவ்வாறு தங்கள் பிரசாரத்தை நடத்துகின்றன ரென்பதை ஒவ்வொருவரும் யோசித்துப்பார்த்தல் வேண்டும். அன்னாரும் தங்கள் சமயத்தின் முதல்வராகிய இயேசு கிறிஸ்துவினுடைய பழம்பெருமைகளையெல்லாம் கூறுகின்றாரெனினும் தற்கால வாழ்விற்கேற்பத் தங்கள் பிரசாரத்தை நடத்துகின்றனர். ஊர்கள் தோறும் பல கல்வி நிலையங்களும், வைத்திய சாலைகளும், கைத்தொழிற் சாலைகளும் நிறுவி அவற்றின்மூலம் தங்கள் சமயத்தை வளர்க்கின்றனர். ஒருவரிருவராகக் கிராமந்தோறும் சென்று ஏழை மக்கள் இல்லங்கள் சென்று அவர்களைத் தங்கள் சமயத்தில் சேர்க்கின்றனர். சாதிபேதமின்றி அனைவரையும் ஒன்றெனக் கருதி கோயில்கட்குள் செல்ல அனுமதியளிக்கின்றனர். ஏழைகளுக்கு, உணவிற்கும் உடைக்கும் சிறிது பொருளும் கொடுக்கின்றனர். ஆடம்பரமின்றித் தங்கள் சமயத்தை மூலை முடுக்குகளிலும் பரவச்செய்துவிட்டனர். இன்னும் தங்கள் சமயம் யாண்டும் பரவுதற்கு வேண்டிய வேலைகளைச் செய்து வருகின்றனர். கிறிஸ்து சமயத்தில் சேர்ந்த எவனும் கண்டிப்பாக ஞாயிற்றுக்கிழமை யன்று வேலை செய்வதில்லை. நமது சைவசமயத்தில் பிறந்தவர்கள் நாள்தோறும் வேலை செய்யாதிருப்பதில்லை. ஞாயிற்றுக்கிழமை உலகிலேயே விடுமுறை நாளாகவந்து விட்டது. சைவசமயத்தினருக்கென்று வாரத்தில் ஓர் நாளேனும் விடுமுறை நாளுண்டா?

நமது சைவ சமய வளர்ப்புக் கழகங்களின் நிலையையுன்னு கின்ற பொழுது மனதிற்கு வருத்தமே உண்டாகிறது. அக்கழ கத்திலுள்ள பணியாளர்கள் உண்மையான பணியாளர்களாக இருக்கவில்லை. எவ்வழியில் பணியாற்றுதல் வேண்டுமென்று யோசிப்பதில்லை. பழைய காலத்தில் எவ்விதம் சமயப் பிரசாரம் செய்தார்களென்று படித்தார்களோ அவ்வாறு பிரசாரம் செய் வதுதான் பயன்படுமென்று எண்ணுகின்றனர். உலகம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து செல்கின்றது. தினந்தோறும் புதிய புதிய முறைகள் கையாளப்படுகின்றன. இந் நிலையில் பழைய முறையை அநுஷ்டிப்பது அறிவுடைமையா காது. பிரசங்கங்களில் சமய உண்மைகளை நன்கு எடுத்துக் கூறல்வேண்டும். ஆனல் இப்பொழுதுள்ள சமயப்பிரசாரகர்கள் அவ்வாறு செய்வதில்லை. "சைவத்தின் மேற் சமயம் வேறில்லை" என்ற பாட்டைப்படித்து அதற்கு வியாக்கியானமும் செய்கிறார் கள். "உங்கள் சமயத்தில் என்ன உண்மைகள் இருக்கின்றன" என்று ஒருவன் கேட்பானாயின் அதற்குச்சரியான விடையளிக் கும் ஆற்றலைப் பல பிரசாரகர்கள் பெற்றிருக்கவில்லை. அதற்குப் பிரதியாக வசவு கொடுக்க ஆரம்பித்துவிடுகின்றனர். இத்தகை யோரால் சமயம் ஒருபோதும் வளரப்போவதில்லை. சைவசமயப் பிரசாரகர்கள் ஏழைகள் குடிலை நண்ணி அவர்களுக்குச் சமய போதனை செய்வதே கிடையாது. நகரங்களில் சென்று சபை களில் பிரசங்கம் செய்துவிட்டு "நாங்களும் சமயப்பிரசாரம் செய்துவிட்டோம்" என்று பெருமை பேசிக்கொள்வதில் பிர யோஜனம் ஒன்றுமில்லை.

சமய உண்மைகளைக் கூறும் நூல்கள் வசன நடையில் பல தோன்றவேண்டும். அந்நூல்கள் கலாசாலையில் பாடப் புத்தகங் களாக வைக்கப்பெறல் வேண்டும். பிரசாரகர்கள் சாதி பேதம் கருதாது எல்லா வீடுகளுக்கும் சென்று சமயபோதனை செய்தல் வேண்டும். கேட்கும் கேள்விகளுக்குச் சரியான விடையளிக்கும் ஆற்றல் வாய்ந்தோரே சமயப் பிரசாரகர்களாயிருத்தல் வேண் டும். பொறுமையில்லாதவர்கள் பிரசாரகர்களாகவிருப்பது நன் மையாகாது. ஊர்கள்தோறும் சமயபோதனைக் கலாசாலைகள்

ஏற்படல் வேண்டும். அங்கு ஜாதிபேதமின்றி எல்லாப் பிள்ளைகளையும் சேர்த்துக்கொள்ள வசதியிருத்தல் வேண்டும். சமயப்பிரசாரம் செய்வதற்கு ஏற்ற இடங்கள் ஏழைகள் வீடுகளே என்பதை உணரவேண்டும். நாம் ஓர் சாராரைத் தீண்டாச்சாதியாரென ஒதுக்கிவைத்துவிட்டோம். கிறிஸ்து சமயத்தினர் அன்னவர்களையெல்லாம் தங்கள் சமயத்தில் சேர்த்துவருகின்றனர். கிறிஸ்துசமயத்தினர் சாதிபேதங்கருதாது அனைவரையும் ஆலயங்களில் செல்ல அனுமதியளிப்பதால் மேற்கூறியவர்கள் அதில் சேர்ந்துவிடுகின்றனர். நமது சமயத்தினரின் தொகை வரவரக் குறைந்துகொண்டே வருகின்றது. கிறிஸ்து சமயத்தினரின் தொகையோ தினந்தோறும் பெருகிக்கொண்டே செல்கின்றது. மேலும் நமது சமயத்தில் பிராமணரது நன்மைக்காக ஏற்பட்ட சமயச் சடங்குகள் மனிதனைத் தின்றுவிடுகின்றன. கிறிஸ்து சமயத்திலும் இத்தகைய தொல்லை முன் இருந்ததெனினும் இன்று அத்தொல்லை ஒழிந்துவிட்டது. நமது சமயம் தாழ்வுறுவதற்குப் பலவகையான காரியங்கள் தோன்றின. அன்பர்களே! இன்னும் இவ்விதமே இருப்போமானல் நமது சமயம் உண்மையில் அழிந்துகொண்டு செல்லுமென்பதிலையமில்லை. எனவே ஒவ்வொருவரும் சைவசமயத்தை வளர்ப்பதற்கு உண்மையாகப் பாடுபடுங்கள்! தீண்டாமை முதலிய கொடிய செயல்களை அறவே ஒழியுங்கள்! அன்றுதான் சைவசமயம் உயர்வுற்று வளருதல் கூடுமென்பதை மறந்துவிடாதிர்கள்! கிராமங்களுக்குச் சென்று சமயப் பிரசாரம் செய்யுங்கள்! ஏழைகள் வீடுதோறும் சென்று சைவசமயத்தின் பெருமையினையெடுத்துக்கூறுங்கள்!

---

# இந்தியாவில் க்ஷயரோகம்.

(மேஜர் ஸி. பாக்ஸ் என்பார் "பீப்பிள்" பத்திரிகையில் எழுதியது.)

பொதுவாக இந்தியமக்கட்கும் சிறப்பாக இந்தியத்தலைவர்கட்கும், இந்நாட்டில் க்ஷயரோகம் கடுமையாகப் பரவிவருவது குறித்தும் அதன் அட்டூழியம் குறித்தும் ஓர் வேண்டுகோள்

விடுத்திருந்தேன். அவ்வேண்டுகோள் விடுத்த இற்றைக்கு இரண்டாண்டுகட்கு மேலாகிவிட்டன. அதில் இக்கடுநோயால் மாணவிகிதம் ஏற்படுவதைக் குறைக்கச் சில யோசனைகளும் கூறியிருந்தேன். ஆனால் அதனைக் கவனிப்பார் எவருமிலர். இதில் எவ்வித ஆச்சரியமும் இன்று. ஏனெனில் அரசியல் விவகாரங்களும் சமூக விஷயங்களும், நோய் குறித்தும் துன்பம் குறித்தும் கூறப்படுவனவற்றைக் காட்டிலும் அதிக ஆர்வத்துடன் படிக்கப்படுகின்றன. அவைகளும் உற்சாகம் ஊட்டுபவைகளாக இருக்கின்றன எனலாம். இந்தியர்களின் முன்னேற்றத்திற்காக தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்து உழைத்து வரும் பொது ஜனத் தலைவர்கட்கு (அரசியல் வாதிகட்கல்ல) மீண்டும் ஒருமுறை வேண்டுகோள் விடுக்கின்றேன். தங்கள் உதவியையும் நிதிக்குப் பொருள்கொடுத்தலையும் முன்னிட்டுத் தங்கட்கு ராவ்பஹதூர் அல்லது கான்பஹதூர் முதலிய பட்டங்கள் பெற விரும்புவோர்கட்கு அவ்வேண்டுகோள் விடுக்கப்படவில்லை. பிறர் துன்பத்தைத் தம் துன்பமாகக் கருதுவோருக்கும், பிறர்பொருட்டுத் தன்னலமறுப்புடன் தியாகம் செய்ய ஒருப்படும் மனப்பான்மை உடையவருக்குமே விடுக்கப்பெற்றுள்ளது. இந்திய மக்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேர்களை இந்நோய் பற்றிக்கொண்டிருக்கிறது என்பது மிகையாகாது. இதனால் விளையும் மாபெரும் அபாயத்தினை உள்ளவாறு உணர்வது கஷ்டமேயாகும். ஏனெனில் அந்நோய் மெதுவாகப் பரவி வருகின்றது; கரும ரோகமாகவும் இருந்துவருகிறது. எனினும் அரசாங்கத்தாரும் பொது ஜனங்களும் இந்நோயால் எத்தனை பேர் உயிர்துறக்கின்றார் என்பதை அறிவார்களாயின், இந்நோயினால் ஏற்படும் மரணவிகிதத்தைக் குறைக்க முயற்சிகள் செய்யப்படவேண்டுமெனப் பொது ஜனங்கள் அரசாங்கத்தாரை வற்புறுத்துவார்கள் என்பது திண்ணம்.

நான் பொது ஜனங்கட்குச் சென்ற தடவை வேண்டு கோள் விடுத்தபோது, முன்னர் ராஜப்பிரதிநிதியாயிருந்த ரீடிங்பிரபு குஷ்டரோக நிவாரணநிதிக்குப் பொருள் உதவுமாறு பொது ஜனங்களை வேண்டிக்கொண்டிருக்கிறார் என்றும், அவர் இந்தி

யாவை விட்டுத் தன் தாய்நாடேகும் தறுவாயிலிருக்கிறுரென்றும், நான் மேற்கொண்டுள்ள விஷயத்திற்குப் புதிதாக வரப்போகும் ராஜப்பிரதிநிதியின் உதவியை நாடலாமென்றும் கூறப்பட்டது. புதிய ராஜப்பிரதிநிதியின் மனைவியான இர்வின் சீமாட்டி இவ் விஷயத்தில் ஊக்கங்காட்டி வருவதாக அறிகிறேன். அவ்வாருயின் இந்நோயினல் துன்புறும் கோடிக்கணக்கான இந்தியாது நன்றி யும் அவர் தம் உறவினருடைய நன்றியும் அவ்வம்மையாருக்கு உரியனவாகும்.

(க) இந்நோய்க்கு வகுப்பு, ஜாதி, சமயம், என்றவேறுபாடு கள் எதுவும்கிடையாது. எல்லோரையும்பற்றிக்கொண்டு துன்புறு த்தும். எனினும் எளியோர்களினிடையே இந்நோயினுல்எற்படும் மாணவிகிதம் அதிகமாக இருக்கிறது. ஏனெனில் சீதோஷ்ணநிலை குறித்து வேற்றிடங்கட்குச் செல்லவாவது, கொழுப்பான உணவு களைப் புசிக்கவாவது, வேறுபல வசதிகளைச் செய்துகொள்ளவா வது, அவர்களிடம் போதிய பணம் கிடையாது; வருவாயுமில்லை. ஆனல் தனிகர்களுக்கோ போதிய வசதிகள் இருக்கின்றன. கலந்து ஆலோசிக்கப் பல வைத்தியர்கள் இருக்கின்றனர். பல சமயல்காரர்கள் ஒன்ருகச் சேர்ந்தால் சமயல் எவ்வளவு நன்ரு யிராதோ அவ்வாறே இவ்வைத்தியர்களால், நன்மையைக்காட்டி லும் தின்மையே அதிகமாக ஏற்படுகின்றது. பணத்தால் செல்வத்தால் பெறக்கூடிய பல வசதிகளை அனுபவித்து வருப வர்களையும் இந்நோய் இரையாக்கிக்கொள்ளாமலில்லை. எனினும் சாதாரண சுகவாச ஸ்தலத்தில் எளியோர்களை அவர்களுடைய எழ்மைத்தனம் காரணமாக அனுமதிக்காமலிருப்பது எவ்வளவு கொடுமை! இந்தியாவில் சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக நான்பெற்ற அனுபவத்திலிருந்து இந்திய ஜனங்களிடை இந்நோ யைப்பற்றிக் குறிப்பிடுவது மிக மிக அவசியமெனக் கருதுகின் றேன். அவ்வாறு செய்தல் எனது இன்றியமையாக் கடனுமாகும்.

(உ) இந்நோய் ஒரு கபடமான நோயென்று சொல்லலாம். அதனை அறியாது போது ஜனங்கள் இந்நோய் பற்றிக்கொண்ட ஆரம்ப காலத்திலேயே நோயாளிகளைத் தகுந்த மருத்துவர்களிடம்

அழைத்துச் செல்லாமல் இருக்கின்றனர். அவ்வாறு அழைத்துச் செல்லப்படின் அநேகமாக அனைவரையும் அந்நோயினின்றும் தப்புவித்துவிடலாம். இந்நோய் பற்றிக்கொண்ட சிறுவர் சிறுமியர், ஒல்லியாகவும் பலமில்லாதவர்களாகவும் இருப்பார்கள். உரியகாலங்களில் அவர்களுக்குப் பசி இருக்காது. மற்றப்படியாவும் அவர்கள் சம்பந்தப்பட்டமட்டில் ஒழுங்காகவே நடைபெறும். அவர்கள் போதிய பலமில்லாதவர்களாக இருந்தாலும், படுத்த படுக்கையிலாவது மருத்துவரிடம் அழைத்துச் செல்லவேண்டிய நிலையிலாவது இருக்கமாட்டார்கள். வயது வந்தவர்களுங்கூட அநேகமாக இந்நிலையிலேதான் இருந்துவருவார்கள். இவர்கள் படுத்த படுக்கையாக விழும்பொழுதுதான் வைத்தியர்கள் அழைக்கப்படுகின்றனர். அப்பொழுது அவர்கள் சுரத்தாலும் நுரையீரல் நோயினாலும் வருந்திக்கொண்டிருப்பார்கள். அவ்வித கொடுமையான நிலைமையில் அவர்களைக்காப்பாற்றுவது அருமையாகும்.

(ங) இந்நோயினால் ஏற்படும் மரண விகிதத்தின் புள்ளி விவரங்களைக்காணில் எவருக்கும் பெருந்திகில் ஏற்பட்டுவிடும். பிளேக்நோயால் ஆயிரக்கணக்கானவர்கள் உயிர் துறக்கின்றனர். க்ஷயநோயினாலோ பதினாயிரக்கணக்கானவர்கள் யமனுலகுசேர்கின்றனர். இந்தியாவில் ஒவ்வோராண்டும் பத்துலக்ஷம் ஜனங்கள் க்ஷயரோகக் கூற்றுவனுக்கு இரையாகிறார்களென்பது மிகையாகாது.

(ச) இந்நோய் இந்நாட்டில் நாளுக்கு நாள் அதிகமாகப் பரவி வருகிறதாகத் தோன்றுகிறது. நகரங்களில் ஜன நெருக்கம் அதிகப்படுவதும், ஆலைகள், தொழிற்சாலைகள் முதலியன அதிகப்படுவதும் இதற்கு முக்கிய காரணங்களாயிருக்கவேண்டும்.

(ரு) இந்நோய் ஆடவர்களைக் காட்டிலும் பெண்டிர்களையே பெரிதும் பற்றிக்கொள்கின்றது. இதற்கு அவர்கள் பெரும்பாலும் வீடுகளுக்குள் அடைபட்டுக் கிடப்பதும் இளமை மணமுமே முக்கியகாரணங்களாகும். பருதா வழக்கமுள்ள பெண்பாலரிடையே மரணவிகிதம் அதிகமாக இருக்கின்றது. அவர்கள் படுக்கையினின்றும் எழுந்திருக்க முடியாத நிலை ஏற்படும் வரை

அல்லது அறிவிழந்துபோகும் வரை வீட்டுவேலைகளைச்செய்து கொண்டே இருப்பார்கள். தாங்கள் நோயால் வருந்துவதாகக் கூறமாட்டார்கள். பல வாரங்கள், பல மாதங்கள் வரை லகுவான ஜுரத்தால் வருந்திக் கொண்டிருந்தாலும் தாங்கள் நோயால் வருந்துவதாகக் கூறமாட்டார்கள். இனி எழுந்திருக்க முடியாது என்ற நிலை எற்படும் பொழுதுதான் வைத்தியர்களுடைய உதவி நாடப்படும். "நோய் கடுமையாகி விட்டது. பிழைப்பது அரிது" என்று வைத்தியர்கள் கூறக்கூடிய நிலையில்தான் வைத்தியர்களி டம் அழைத்துச் செல்லப்படுவார்கள்.

(௬) இந்நோய் பல ஆண்டுகள் வரை அமைதியாக இருந்து வரும். நன்கு விருத்தியடைவதற்கோர் தருணத்தை எதிர்பார்த் துக்கொண்டிருக்கும். உடலில் பலம் குறைந்து நோய்களை எதிர் த்து நிற்கும் சக்தி குறையும் காலத்து பிரஸ்தாபநோய் எளிதில் பரவுவதற்கு வாதி ஏற்படுகின்றது. கடினமாகப்படித்தல், தக்க உணவும் சுத்த ஆகாயமுமின்மை, இளமைமணம் முதலியன இந் நோய்பற்றிக் கொள்வதற்குப் பெரிதும் உதவியாயிருக்கின்றன. இந்நோய் பற்றிக்கொண்டதாகத் தெரியும் சிறுவர் சிறுமியரை எட்டுமுதல் பனிரெண்டுவயது வரை நன்கு பாதுகாத்துப் பரா மரித்து வருவோமாயின் பிதிஸிஸ் எனும் நோயினின்றும் அவர் களைத் தப்புவிபித்து விடலாம்

(எ) இவ்விஷயத்தில் அரசாங்கத்தாரே ஆரம்பமுயற்சி செய்யவேண்டுமென்று பொதுஜனங்கள் எதிர்பார்ப்பதாகவும், ஆனல் அரசாங்கத்தார் ஜனங்களே முயற்சி எடுக்கவேண்டு மென்று எதிர்பார்ப்பதாகவும் தெரிகிறது. இவ்வித நிலை இருந்து வரும்வரை எவ்வித நலனும் ஏற்படப்போவதில்லை. தொத்து நோய் என்ற முறையில் க்ஷயரோகம் வாராமல் தடைசெய்யச்சட் டம் இயற்றவும், பொருள் உதவவும் அரசாங்கத்தார் தயாராயிரு ப்பதாகவும் ஆனல் அந்நோயால் வருந்துபவர்களைக் குணப்படுத்த ஜனங்களே முயற்சி செய்து கொள்ளவேண்டுமென எதிர்பார்ப்ப தாகவும் தெரிகிறது.

(அ) இந்நோயினின்றும் முற்றும் விடுபட்ட குடும்பங்கள் மிகச்சிலவே இந்தியாவில் இருக்கின்றன என்று சொல்லலாம்.

சில யோசனைகள்.

(க) பெரிய நகரங்களில் க்ஷயரோக நிவாரணச் சங்கங்கள் நிறுவும் பொருட்டுப் பொதுக்கூட்டங்கள் கூட்டப்பட வேண்டும். அச்சங்கங்கள் இந்நோய் பரவுவதைத் தடைசெய்யவும், இந்நோயால் துன்புறுவோரைக் குறைப்படுத்தவும், சுகாதார இடங்களை ஏற்படுத்தவும், க்ஷயரோக ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தவும், இவற்றிற்குப் பொருள் வசூலிக்கவும், சட்டங்கள் ஏற்படுத்தப்படுங் காலத்துப் பொதுஜனப் பிரதிநிதிகளாக இருந்து வாதாடவும் நோயால் துன்புறுவோர்க்கு உதவி செய்யவும் முயற்சிகள்செய்ய வேண்டும்.

(உ) ஆங்காங்கு க்ஷயரோக ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்தப்பட வேண்டும். அங்கு இந்நோயினால் துன்புறும் ஆரம்ப நோயாளிகள் நிபுணர்களால் சிகிச்சை செய்யப்படவேண்டும்.

(ங) இந்நோயைப்பற்றிப் பல ஆண்டுகள் படித்தறிந்த நிபுணத்தன்மை பெற்றவர்கள் மட்டும் நியமிக்கப்பட வேண்டுமேயன்றிப் பெயரளவில் நிபுணர்கள் எனப்படுவோரை நியமித்தல் ஆகாது. ஆரம்பகாலத்தில் இந்நோயின் தன்மைகளை நன்கு அறிந்து சிகிச்சை செய்யக்கூடிய வைத்தியர்களே நமக்குத் தேவை. ஏனெனில் அக்காலத்தில் நோயை அறிந்து சிகிச்சை செய்வது கஷ்டமாகும். இவைகள் தரும ஆஸ்பத்திரிகளாக இருக்கவேண்டும். இவைகள் பொதுஜனங்களால் நிர்வகிக்கப்படவேண்டும்.

---

## பசுவின்பாலும்

### அதனால் உண்டாக்கிக்கொள்ளும் வியாதிகளும்.

திருவண்ணாமலை வைத்திய வேங்கடாசல முதலியார் எழுதுவது.

உலகில் உத்தம பசுவின் பாலை உபயோகியாதாரிலர். பால், தயிர், வெண்ணெய், மோர், நெய், சாணம், கோஜலம் முதலியவற்றால் உலகை உய்வித்துவரும் தாய்போன்ற பசுவினத்தைத் தற்காலம் கவனித்துப் பாதுகாப்பாரில்லை. காய்ந்த புல்லை மேய்தற்கும், கலங்கல் நீரைக் குடித்தற்கும் கட்டுங் காவலும் பெரு

கிற்று. பால் வியாபாரிகள் நாகரிகப் பெருங் குடியாகிய காப்பிக் கடைகளுக்காகப் பசுவின் அடிமடியையும் ஈர்த்து நாளைப் பாலாக மாறவேண்டிய உதிரச் சத்தையும் இன்றே சேர்த்துக் கறந்து விடுதலால், தனக்குரிய பாலைத் தாய் கொடுக்க முடியாதும் தான் குடிக்கவொட்டாதும் தூரத்தே கட்டுப்பட்டுத் தாயும் சேயும் ஒன்றையொன்று பார்த்துப் பதைத்துக் கண்ணீர்விட்டு வருந்திச் சாகும் கன்றுகள் எண்ணிலடங்கா. இச் சிசுவதை எவரைச் சாருமென்பதை அறிஞர் ஆழ்ந்து சிந்திக்க. கசாய்க்கடை (பசுக் கொலை)க் காரர்களிடம் விற்கப்படுவன பல! இவ்விபத்துகட்கு மீட்சி தேடாது உறங்கும் வரை நமது நாடு நலமுறாதெனல் ஆன்றோர் கொள்கை.

நிற பேதம்.

1. வெண்மை நிறப் பசுவின் பால்:—

பித்த சம்பந்த ரோகங்களையும்,

2. செம்மை நிறப் பசுவின் பால்:—

வாத சம்பந்த ரோகங்களையும்,

3. கறுமை நிறப் பசுவின் பால்:—

கப சம்பந்த ரோகங்களையும்,

4. கறுமை கலந்த பொன்னிறமான கபில நிறப் பசுவின் பால்:—

திரிதோஷ சம்பந்த ரோகங்களோடு மற்றும் எல்லாவித ரோகக் கூட்டங்களையும்,

5. காராம் பசுவின் பால்:—

கண்ணைப்பற்றிய ரோகங்களையும் இதர பாலாலுண்டாம் ரோகங்களையும், இரத்த பித்தரோகத்தையும் இராஜ கோபத்தையும்,

6. நாரை நிறப் பசுவின் பால்:—

முயல்வலி முதலிய வலிப்பு ரோகங்களையும்,

7. மான் நிறப் பசுவின் பால்:—

வாதாதி முப்பிணிகளையும்,

8. கொம்பை அசைத்துக் கொண்டே இருக்கும் பசுவின் பால்:—

பித்த ரோகங்களையும், தாது க்ஷீணத்தையும்,

9. மூன்றும் ஈற்றுப் பசுவின் பால்:—

அளவு மீறி விஷமித்த சிலேத்தும (கப) ரோகத்தையும,

10. நான்காம் ஈற்றுப் பசுவின் பால்:—

திரிதோஷங்களையும், சுகவீனத்தையும், விய சனத்தையும் போக்குகின்ற இயற்கை குணத்தைப் பிறப்பிடமாக கொண்டுள்ளது.

## ஆகாப் பசும் பால்.

அர்கண நோய், தாரா நோய் முதலிய ரோகங்கள், மிகவும் சுற்றுதல், வெண்புள்ளி, தூங்கித் திரிதல், மலம் அருந்தல், சுடுகாடு எலும்புண்ணல், இவ்வையுடைய பசுக்களின் பால் வாதாதி மூன்று தோஷங்களையும் மார்பிற் சேர்ப்பிக்கும் க்ஷய ரோகத்தையும் விளைக்கும். ஆயுளைக் குறைக்கும்.

## கறக்கும் அளவு.

கன்றுக்குப் போதுமானதை விட்டு, மிகுந்திருப்பின் அப்பாலை மாலை ஒரு வேளைமட்டில் கறத்தல்.

## பாத்திரம்.

பால் கறப்பதற்கும், வைப்பதற்கும், காய்ச்சுதற்கும், உபயோகித்தற்கும், பொன் பாத்திரமும், மண் பாத்திரமுமே உத்தமம். வெள்ளி, வெண்கலம், இரும்பு, தாம்பிர பாத்திரங்கள் மத்திபம்.

## ஆகாப் பாத்திரம்.

பித்தளை, அலுமினியம், ஜர்மன் சில்வர்களாலாய பாத்திரங்கள், சீதள, ஜன்னி விஷ பித்த ரோகங்களைச் சிறுகச் சிறுக உண்

டாக்கி, இரத்த (தாது) உற்பத்தி, இரத்த (தாது) விருத்தியைச் சன்னஞ் சன்னமாய்க்கெடுத்து மீளாத ரோகங்களுக்கு ஆளாக்கும்.

### காய்ச்சுதல்.

ஒரு பங்கு பாலுக்கு எட்டுப் பங்கு நீர்விட்டு, விட்ட நீர் சுண்டக் காய்ச்சல் கிரமம். 'ஆடு பசும்பால் காய்ச்சில் அஷ்டபாகம் புனலாம்' என்பது தேரையர் வாக்கு. எட்டுப்பங்கு பாலுக்கு ஒரு பங்கு நீர் எனக் கூறுவாருளர். இது பொருந்தா உரை. இதனை,

வெண்பா. (முன்—ஈரடி)

"பாலைக் குடியானுன்
பார்வையென வட்டநிசிப்
பாலைக் குடியானுன்
பற்றுமெயிற்—பாலை
... ... ...
... ... ... "

### சுருக்க உரை.

பாலை—பாலை நிலத்தில்
குடியானுன்—வசிக்கின்ற (துர்க்கா தேவியின்)
பார்வையென—பார்வையைப் போலச்
அட்ட—காய்ச்சின [(செந் நிறம் பொருந்த)
நிசிப் பாலை—இராப் பாலை
குடியா நான்—அருந்தாத தினத்தில்
மெயில் (மெய்யில்)—சரீரத்தில்
பாலை—வெப்பம்
பற்றும்—உண்டாகும்.

என முன்னிரண்டடியால் கடுமையாகிய பாலை நிலத்தில் வசிக்கின்ற துர்க்கா தேவியின் சிவந்த கண்களையொப்ப நன்றாய்ச் சிவக்கும் வரையில் காய்ச்சின இராப்பாலை இரவில் பருகாதார்க்கு சரீரத்தில் உஷ்ணரோகம் உண்டாம் என விபாமாகக் கூறுதலால்,

எட்டுபாகம் நீர்விட்டாலன்றி செந்நிறம் காண்பதற்குள் பாலத் தனையுமே சுண்டித் தீய்ந்துவிடும் என்பதால் விளக்கமாம்.

### நன்ருகக் காயாத பால்.

நீர்த்தாரையிலும், குண்டிக்காயிலும், கல் உற்பத்தியாகி கல் அடைப்புண்டாம். மண்ணீரலும் பலவீனப் பட்டுபோம்.

### ஆடை (ஏடு) நீக்கல்.

நன்ருகச் சிவக்கக் காய்ச்சிய பாலை ஆறவிட்டு மேல் ஆடை (ஏடு) நீக்க வேண்டும்.

### ஆடை நீக்காப் பால்.

ஆடை நீக்காத பாலைப் பருக பித்த பைத்திய ரோகங்கள், வாத ரோகங்கள், சிலேத்ம ரோகங்கள், சப்த தாதுக்களின் விகற்பங்கள் முதலியன உண்டாகும்.

### பரிகாரம்.

போஜன பதார்த்த வகைகளுக்கு உப்பு ஜீரணகாரியாயிருத்தல் போன்று, பாலுக்கு, "சுக்கு, சிறுகாஞ்சொறி வேர் கூட்டிச் சுவரிய பால்—ஒக்கும் வெள்ளாட்டுப்பாற் கென்ருேது" தோல் சீவிய சுக்கும், கறுப்பு நிறமுள்ள சிறிய பூனைக் காஞ்சொறிச் செடியின் வேரும் சேர்த்துக் காய்ச்சல் பரிகாரமாம்.

### வியாதி.

பாலுக்குள்ள நற்குணம் பலவே போன்று, துற்குணம் சில உள. அவை, மந்தித்தல், வயிற்றிற் களிம்புகட்டல், கட்டியாதல், வயிறூதல், மலஞ்சிக்கல் அல்லது பேதியாதல், நீர்த்தாரை குண்டிக்காய் இவ்விடங்களில் கல் விளைதல், மண்ணீரலைப் பலவீனப் படுத்தல், மாரடைத்தல் முதலியவற்ருேடு வாத ரோகங்களை உண்டாக்கலும் விருத்திசெய்தலும் இயற்கையாம். இவற்றை நீக்கவே மேற்காட்டிய பரிகாரம் அவசியமென்ப மருத்துவ நூற்கள்.

## பாலின் அமிர்த காலம்.

பகலிற் சுரந்து, இரவிற் கறந்த பாலை, கறந்த மூன்றே முக்கால் நாழிகை (ஒன்றரை மணி)க்குள் முன் கூறியவாறே நீர்விட்டு சுண்டக் காய்ச்சி ஆடைநீக்கிப் பருகல் முறை. தவறின் ஐந்து நாழிகை (இரண்டு மணி)க்கு மேலாதல் கூடாது. மத்திய காலமாகிய ஐந்து நாழிகைக்கு மேற்பட்ட பால், கால அளவு மிஞ்சி நஞ்சாகி விட்டதால் அருந்தத் தகாதெனை அகற்றனர் அகத்தியாதி மருத்துவ நூலாசிரியர்கள். இதனை,

### வெண்பா.

துப்பான் முகூர்த்தத்துள்
ஐங் கடிகைக்குள் உள் அது
மீப்பான் மனுவர்
விருந்தாகும்—மூப்பாயின்
அஞ்சத்தான் காண்டற்கு
அரியான் அகிலம்முளாய்
அந்தத் தானுண்ட விருந்தாம்.

உலகமே நடுங்கும்படி நீலகண்ட மூர்த்தி யுண்ட ஆலகால விஷத்தை யொக்கும். என்னும் தேரையர் வாக்கும் சான்றும்.

## பால் கூடாதார்.

அதிசாரம், சீதம், அஜீரணம், வாதம் இந்த ரோகங்களுடையோர் பாலை உபயோகித்தல் கூடாது.

## பச்சைப் பால்.

பன்னிருவயதிற்குட்பட்ட பாலர்கட்கு வெப்பந்தணிய (வீட்டு வைத்தியரின் அனுமதி கொண்டு) மூன்றே நாள் சூரிய உதயகாலத்தில் பசுவின் மடி உஷ்ணம் தணியா முன் ஒரு உழக்குப் பால் உட்கொள்ளலாம். இதற்கு மண்—கண்ணாடிப் பாத்திரமே உதவும்.

## பகலில் பால் அருந்தலால் உண்டாகும் வியாதிகள்.

பகலில் பால் பருகல், விலகாத—விலக்கமுடியாத பலவேறு ரோகங்களுக்கு விதை இடுவதாகிறது. பாலை, தனித்தோ காப்பி,

டிதயிலே, கோக்கோ முதலியவற்றுடன் கூட்டியோ பருகி வரு வார்க்கும் இன்னர் சந்ததிகட்கும் வம்ச வியாதிகளாக,

1. மலக்கட்டு, 2. மலபந்தம், 3. மலத்தீய்ச்சல், 4. மல வாயு, 5. மலவெட்டை, 6. மலச்சிக்கல், 7. மலக்குடல் வாதம், 8. மூலம், 9. மூலாத்தம், 10. மூலமுளை, 11. பவுத்திரம், 12. வெள்ளை, 13. வெட்டை, 14. நீர்ரோகம், 15. அஜீரணம், 16. சீதபேதி, 17. இரத்த பேதி, 18. வயிற்றுப் பொருமல், 19. மார்பு நோய், 20. குலைநோய், 21. மாரடைப்பு, 22. மூச் சுத் திணறல், 23. சுவாச பந்தர், 24. சுவாச காசம், 25. க்ஷயம், 26. இருமல், 27. பால்ய நரை, 28. பால குருடு, 29. பீனசம், 30. அண்டவாதம், 31. சுக்கில க்ஷீணம் முதலிய பல ரோகங்கள் நிலைத்துவிடுகின்றன.

## பசுற் பாலால் அரிவையர்க்கு நேர்வன.

மேற் காட்டிய ஆடவர்க்குடைய ரோகங்களால் அந்த குடும் பத்துள் அரிவையர்க்கும் மணவாழ்க்கையின் பலனை அவ்வியாதி கள் பற்றுவது தேக சுபாவம். இது போதாவெனப் புருடரை யொப்ப பூவையரும் பகலில் பாலே—தனித்தோ—காப்பி, கோபிலே, கோக்கோவுடன் இணைத்தோ குடித்து வரின் இகற்துப் பிரதி கைம்மாருக, சுரோணிதமும், கெற்பவாசமும், கெற்ப உறுப்பு களும் இயற்கையில் மாறுபாடுற்று,

1. தலைவலி, 2. புறவலி, 3. கழுத்துவலி, 4. முதுகுவலி, 5. இடுப்புவலி. 6. அடிவயிறு வலி, 7. தொடைவலி, 8. கண்டக் கால்வலி, 9. மார்புவலி, 10. சூதகச் சிக்கல், 11. சூதகத் தடை, 12. சூதகங் கண்டுமறைதல், 13. மாதம் இருமுறை மும்முறை சூதகங்காணல், 14. நான்கைந்து மாதத்தொருமுறை சூதகங் காணல், 15. பெரும்பாடு, 16. சூதக நிறபேதம், 17. சூதக வலி, 18. சூதக நாளில் இழுப்பு வலிப்பு, 19. சூதக சுரம், 20. சூதக பாண்டு, 21. சூதக நாளில் தலைவலி, 22. சித்தப்பிரமை, 23. சிரி ப்பு, 24. அழுகை, 25. கேவல் முதலிய சூதகவாத ரோகங்கள் குறையாடா நிற்கும்.

இவையே யன்றி இந்த பகற்பால் வாதத்தால், அழிகெர்ப்பம், சாவுபிள்ளை பெறல், அடிக்கடி கெர்ப்பம் சிதைந்து கெட்டுப் போதல், பிறந்து பிறந்து சாதல் முதலிய கெர்ப்பச் சிதைவு ரோகங்களும் உண்டாகின்றன.

## நீர் மேக ரோகம்.

பூகிமா முனிவர் வைத்திய சிந்தாமணி மூத்திர கிரிச்சி ரோக படலத்தில்,

"பரிதியே பகல்தனிலே
ஸ்திரீ சங்கித்தல்
பகல் தனிலே பால் கொள்ளல்
... ... ... ...
மகத்தான கிரிச்சிரத்தின்
மன்னுவாரே"

பகற்காலத்திற் பாவையரின் லீலையை விரும்பினும் பகலிற் பாலைப் பருகினும் தீராத--தீர்க்கமாட்டாத மேக ரோக கூட்டங்களுடன் மகத்தான கிரிச்சிரம் என்னும் (மூத்திரவியாதி) நீர் ரோகத்தாலும் வருந்துவர் எனக் கூறப்பட்டுள்ளது.

... ... ... ...
'காலைப்பாலு மாலைத்தயிரும்
காலனுக்கு விருந்தாம்.'
... ... ...
" பாலோடாயினும்
காலமறிந் துண் "
" பாலென்ப தெல்லாம்
பகரைந்து நாழிகையே "
" காலங் கடந்தாற் காலனும் பாலே "
" பால்போற் பெரும் பகைவேறில்லை "
" அமுத மைங்கடி மாறின் அரவின் விஷமே "
"அமுதம் ஐங்கடி அமுதமைங்கடி."

ஐங்கடி என்பது ஐந்து கடிகை-ஐந்து நாழிகை.

"பாலெனக் குடித்து
பலபிணிக் கிரையாவர்"

"(கால) அளவிற்கு மிஞ்சினல்
அமுதமும் நஞ்சாம்"

என்பன தமிழ் நாட்டுப் பழமொழிகள்.

## நாட்டின்கேடு.

மேற்கண்ட விதிகளின்படி கூடிய பசுவின் பாலைப் பகலில் அருந்துதலாலேயே இத்தகைப் பல மேக ரோகங்கள் பற்று கின்றன வெனின் நவ நாகரிகத்தின் பயனாகத் தாங்களும் கெட்டு, பாரத நாட்டுக்கற்பகத்தருக்களாய வனிதா மணிகளையும் இக் குடி-கெடுக்கும் பெருங்குடியிற் பழக்கி, அந்த கெர்ப்பவாச சிசுக்களையும் பாலாரிஷ்ட ரோகங்களிற்சிக்கி மடியச்செய்தல் நாட்டையே பாழாக்குவ தொக்கும் என்பதை இல்லறவாசிகள் ஆழ்ந்து சிந்தித்தல் அவசியமே.

## பாழ் உணவு.

நம்நாட்டில் காபி, தேயிலைக்குடிகள் பெருத்து விட்டதனுலேயே பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் இவற்றிற்குப் பஞ்சமுண்டாகிவிட்டது. பால்களவே விற்பனை செய்ய காப்பிக் குடிக்கடைகள் பெருத்துவிட்டமையின் நெய் கிடைப்பதில்லை: இதனுல் (நெய்யில்லா உண்டிபாழ்) என்றபடி சுத்தமான பசுவின் நெய் சேராத உண்டி பாழ்உண்டியே! தற்காலம் மலிந்துள்ள உஷ்ண, பித்த, மூல, க்ஷய ரோகங்கட்கெல்லாம் காரணம் காப்பிக்குடியும் சுத்தமான நெய் கிடையாமையுமேயாம்.

## கலப்புப் பால்.

பசும்பாலுக்கே இவ்விதமாயின் முதல் நாள் இரவு கறந்து மறுநாள் காலையில் உபயோகிக்கும் பால், எருமைப்பால், ஆட்டுப் பால், சில அவசர சமயங்களில் டப்பிப்பால் முதலியன கலந்து பருகும் காப்பி, தேயிலை, கொக்கோக் குடிகளால் நேரும் கொடிய ரோகங்களைக் கூறவேண்டுவதில்லை.

## மகாத்மா காந்தியடிகள் கருத்து.

மகாத்மா தாம் எழுதிய 'ஆரோக்கியவழி' யில் பாலைப்பற்றிக் கூறும் முக்கிய குறிப்பு:—

"பாலினால் ஒருவித சாரம் உண்டாகிறதென்று பல டாக்டர்கள் அபிப்பிராயப்பட்டு, அதைப்பற்றி பல நூல்கள் எழுதியிருக்கிறார்கள். வியாதிகளை உண்டு பண்ணக் கூடியவைகளாக ஆகாயத்தில் இருக்கும் கண்ணுக்குத் தெரியாத கிருமிகள் பாலில் விரைந்து புகுந்து அதற்கு விஷத்தன்மையை உண்டு பண்ணிவிடுகின்றன. ஆகையால் பால் பரிசுத்தமாக விருக்கும்படி வைத்திருப்பது அசாத்தியமான காரியம்.

பால் உற்பத்தியைப்பற்றி ஆப்பிரிக்காவில் வெகு விஸ்தாரமாக விதிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன; பாலை எப்படிக் காய்ச்ச வேண்டுமென்றும், பிறகு அதை எப்படிப்பக்குவமாக வைத்திருக்கவேண்டுமென்றும், பாத்திரங்களை எப்படிச் சுத்தமாக வைத்திருக்க வேண்டுமென்றும், வேறு பல விஷயங்களையும் பற்றி அந்த விதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வளவு பிரயாசை எடுத்துக் கொள்ளவேண்டியிருப்பதை உத்தேசிக்கையில் பாலை உணவாக உபயோகப்படுத்தி எவ்வளவு பிரயோஜன மடையலா மென்பதை யோசித்துப்பாருங்கள்.

மேலும், பால் சுத்தமாக இருப்பதானது பசுவின் உணவையும் அதனுடைய ஆரோக்கிய நிலைமையையும் பொறுத்திருக்கிறது. காசநோயுள்ள பசுவின் பாலைக்குடிக்கிறவர்களுக்கு அந்த நோய் வந்து விடுகிறதென்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். முற்றிலும் ஆரோக்ய நிலையிலுள்ள ஒரு பசுவைக் காண்பதரிது. ஆகையால் சுத்தமான பால் அகப்படுவதில்லை. உற்பத்தி ஸ்தானத்திலேயே அது கெட்டுப் போய்விடுகிறது. தாயின் பாலைக்குடிக்கிற குழந்தைக்கு தாய்க்குள்ள வியாதி வந்துவிடுகிற தென்பது எல்லோருக்குந்தெரியும். அதுபோல் பசுவின் பாலைக் குடிக்கிறவனுடைய தேக ஸ்திதியானது அந்தப்பசுவினுடைய தேகஸ் திதியைப் போ

லாகிவிடும். பசுவின் பாலால் இத்தனை அபாயங்கள் விளைவதா யிருக்கையில், அதை நீக்கி விடுவது புத்திசாலித் தனமல்லவா?

நெய்யை உபயோகப் படுத்தாமல் எண்ணெயையே உபயோகப்படுத்திக்கொண்டு ஆயிரக்கணக்கான இந்தியர்கள் வாழ்கையில், நெய்யின்றி உயிர்வாழக் கூடுமென்பது தானாக விளங்குகிறது.''

## பருகத் தகாப் பால்.

(அநுபவியான ஓர் பெரியார் அபிப்பிராயம்.)

“ ஒருகுளம்பி யிருகன்றி
ஒட்டகப் பால்
உப்புடன் பால் மோருடன் பால்
மாதர் தம் பால்
கருவுடைய வயிற்றின் பால்
கன்றில்லாப் பால்
கறுகன்றாற் கறந்திடும் பால்
திரிந்திடும் பால்
திருமகளார் கணவனல்லாத்
தெய்வத்தின் பேர்
சின்ன முடையவற்றின் பால்
செம்மறிப் பால்
பரிவதில் அந்தணர் விலைப்பால்
செம்பினிற் பால்
தீதாம் பால் இவையனைத்தும்
பருகாப் பாலே. ”

பிளவில்லாத ஒரு குளம்புள்ள மிருகம், இருகன்றுகளை ஈனும் மிருகம், ஒட்டகம் இவற்றின் பால், உப்புச் சேர்ந்தபால் மோர் அன்னம் உண்ட பின் அருந்தும் பால், பெண்பாலரின் பால், சினைப் பசுவின் பால், கன்றில்லாப் பசுவின் பால், வேறு கன்றைக் கொண்டு கறக்கும் பசுவின் பால், திரிந்திடும் பசுவின் பால், திரித்திரியாய்த் திரிந்து கெட்டுப்போன பால், செம்மறி

மாட்டுப்பால், பிராமணர் விற்கும் பால், தாமிர பாத்திரத்தில் தங்க, வைத்த, காய்ச்சின, உபயோகித்த பால், இவையெல்லாம் வியாதிக் கூட்டங்களை உண்டாக்குமாகையால் தேகாரோக்கியத்தையும் சந்தானவிருத்தியையும் கருதுவோர் இவ்வகைப்பால்களை எவ்வித அவசர சமயத்தும் பருகாது நீக்கல் இன்றியமையாததொன்றும்.

## தமிழ் நாடு.

சிறப்புமிக்க தண்டமிழ்நாட்டுச் சீதோஷ்ணநிலைக்கு முற்றும் மாறான, உஷ்ண பித்தகுணமுடைய காப்பி, தேயிலை, கொக்கோ முதலிய பானவகைகள் பொருந்தா உணவேயாம். காப்பி வகைகளை நீக்கிவிடின் பகலிற்பாலைப் பருகவேண்டிய அவசியம் நேராது. பகற்பாலை நீக்கிவிடின் மாரடைப்பு, தமரகவாயு, சுவாசகாசம், க்ஷயம், மூலம், பவுத்திரம், சூதக வாயு வியாதிகள் பீடிக்கா.

## யுக்திவாதம்.

ஐந்து நாழிகைக்கு மேற்பட்டும், பகலிலும் பருகக்கூடாதெனல் தனிப்பாலுக்குடைய விதி. காப்பிவகைகளுடன் கலந்துவிடின் அக்குற்றம் இல்லை. மேலும், தற்கால டாக்டர்கள் வேளை, நேரம், காலம் என்பதொன்றுமின்றியே எப்போதும் எந்த நேரத்தும் கொடுத்துவருகின்றார்கள். ஆகையால் இந்தக் கர்ணாடக வாதம் பொருந்தாதென யுக்திவாதம் செய்வாருமுளர்.

## கூரைவீட்டில் தீ.

காப்பிவகைச் சேர்க்கையால் பகற்பாலின் விஷக்குணம் மாறுபடவில்லை. பின்னும் மீறியே நிற்கிறது. மனித தேகம் ஓர்கூரை வீடு. காப்பிவகை உஷ்ணபித்தரோகங்களைத்தரும் அக்கினி. இதில் சேர்க்கும் சர்க்கரை கபரோகங்களையுண்டாக்கும் காற்று. இவற்றுடன் கூட்டும் பால் வாதரோகங்களைத் தருவிக்கும் எண்ணெய். ஓர் குச்சு (கூரை) வீட்டில், அக்கினிபிடிக்க, அத்துடன் காற்றும் வீசியடிக்க, இவற்றிற்குதவியாய் எண்ணெயையும் அத்தீயில்

விட்டால் எவ்வளவு விரைவில் வீடு கூரையனைத்தும் அழிந்து சுவர்கள் மட்டில் நிலைக்குமோ அவ்வாறே காப்பிவகைக் கஷாயம் சர்க்கரை, பால் இவை சேர்ந்த தேகம், இரத்தம், மஜ்ஜை, தாது சுக்கிலம் முதலிய யாவும் அழிந்து, எலும்புக்கூடாக, தோல் பொம்மையாக தேகம் மட்டில் வன்மையும் திண்மையுமற்று உயிர் வாழலாம்.

## இயற்கைக் குணமே.

ஒரு பலம் நேர்வாள விதையைக் கிழப்புடி. பலவிதசுத்திகள் செய்தும், இதர சரக்குகள் நூறுபலத்துடன் சேர்த்தும் அரைத்திடினும், அந்நூறு சரக்குகளையும் மீறி தன் இயற்கைக் குணமாகிய பேதியாக்குதலையே சிறப்பித்துக்காட்டுதல் போன்றே, காலகூட விஷத்திற்குச் சமமென முனிவர்களால் சொல்லப்பட்ட பசுநற்பால் எத்தனை வஸ்துக்களுடன் சேர்க்கப்படினும் தன் இயற்கைக் குணத்தைக் காட்டாதிராது. பசுப் பால் விஷமெனக் கூறிய மகரிஷிகளின் ஆராய்ச்சியைவிட நமது ஆராய்ச்சி சிறந்ததாகாதென்பதை அறிஞர் மறுக்கார்.

## பழக்கமே.

டாக்டர்கள் நமது தேசத்தினராயினும் அன்னோர் பயின்ற வைத்தியக் கல்வி மேல் நாட்டு முறையையே முற்றும் அனுசரித்தது. அந்நாட்டிற்கும் இந்நாட்டிற்கும் காலை விழிப்பு முதல் இரவு படுக்கை வரையிலுள்ள ஒழுக்கம், ஆகாரம், உடை, சிற்றுண்டி முதலிய யாவும் வேறுபாடே. அதே போன்று இப்பால் சேர்க்கையும், இந் நவீன நடைமுறைகளாலேயே இந்நாள் பல்வேறு நூதனவியாதிகளும் அதற்கேற்ப பரிசோதனைசெய்து பார்க்கும் நூதன ஆராய்ச்சி மருந்துகளும், இதற்கேற்ப கப்பல் கப்பலாக வரும் ஆகாரம், சிற்றுண்டி, பானம், சுகந்தப் பொருள்களும் இடையறாக் கவலையும், வருவாய்க்கு மேற்பட்ட செலவும், இவ்வளவிலும் தீராத பிணிகளும் பஞ்சமும் அதிகரித்து வருதலே கண்கூடு என அனுபவசாலிகளான நமது நாட்டுப் பெரியார்

நன்குவிளக்கிவருதலை இன்றும் கிராமாந்தரங்களில் காணலாம். ஆகவே, டாக்டர்கள், அவர்கள் பயின்ற மேல்நாட்டு வைத்திய முறைக்கேற்ப பால் மாத்திரமல்ல! ஏனைய மருந்துகளும், ஆகார பான, சிகிச்சாவகைகளும் இருத்தல்கூடும். இவ்வாழ்க்கையைநாம் கைக்கொள்ளவேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. தேக பலத்திற்காக மீன் எண்ணெய், மற்றும் இதர ஜெந்துக்களின் மாமிச சத்துக்களாலாய ஆகாரம்முதலியவற்றையும் உண்ண வேண்டுமெனல் அந்நாட்டு வைத்திய முறை. இவற்றை ஏற்க எல்லோரும் சம்மதியார். ஈதேபோல, நமதுநாட்டுநீர்வளம், நிலவளம், தேகம், தேசம், ஆகாரம், ஆசாரம் இவற்றிற்குக் காப்பிவகை ஏற்றதன்று. காப்பிவகையை நீக்கிவிடின் பகற்பால் தானே நீங்கிவிடும். அப்பொழுது இது போன்ற யுக்தி வாதம் தோன்று!

## குற்றங் குற்றமே!

எவர் எத்தனை விதமாக வாதம் செய்யினும் நமது நாட்டு மகான்களாகிய மருத்துவ நூலாசிரியர்களின் ஆராய்ச்சியே முதன்மைபெறும். இக்காலத்தில் காப்பி வகையின்குற்றம் தோன்றுவிடினும் பின்னரேனும் அதன் குற்றம்தோற்றுவிடாது. அநுபவத்தால் அறிந்து கொள்ளலாம்.

## காலை ஆகாரம்.

காலை ஆகாரமுண்ணும் பழக்கமுளோர் இட்டலி, தோசை, அப்பம் முதலியன உண்டு, நீராகாரம் என்னும் சாத தீர்த்தம், வெந்நீர், தண்ணீர், நீர்க்க விளாவிய நீர்மோர் இவற்றுள் ஏதேனுமொன்றைக் காப்பிக்குப் பதிலாக உட்கொள்ளலாம்.

## புராதனமே சிறந்தது.

எல்லாவற்றையும் விட, நீராகாரமும் பழைய சாதமும் கலந்து, எலுமிச்சை, நாரத்தை, மாங்காய் முதலிய ஊறுகாய்களுடன் உண்டுவருவோர்களிடம்எவ்வித சண்டி ரோகங்களும் அண்டாது. தண்டன் செய்து ஓடிப்போம். இப்பழைய சாதம்

உண்ணலைக் கொள்ளலும், பரிகசித்துத் தள்ளலும் அவரவர் வாழ்க்கை நலத்தைப் பொறுத்தது.

முடிவாகப் பின்னும் பன்னிக்கூறுவது பாலைப் பகலில் தனியாக வாதல், பிறவற்றுடன் சேர்த்தாக வாதல் உட்கொள்ளலாகா தென்பதே!

நம்மினோர் நலமுறுதல் திண்ணமே!

---

# சதங்கையொலி.

## கூட்டுறவு முறை.

கவியரசர் ரவீந்திரநாத தாகூர் சர்வதேசக் கூட்டுறவாளர் தினத்தன்று கூறியதாவது:—

ஆதிகாலத்தில் காட்டுமிராண்டிகள் எப்போதும் பிறரைச் சந்தேகித்துத் தங்கள் குகை வீடுகளை அம்பும் வில்லுங்கொண்டு ஓயாது காத்துவந்தார்கள். ஆதலின் அவர்கள் மனமும் ஆன்மாவும் வளர்ச்சியுறாமலேயிருந்தன. இக்காலத்தில் தனி மனிதர்கள் பணத்தைச் சேர்த்து வைத்தலும் அத்தகைய காட்டுமிராண்டித் தனமேயாகும். கூட்டுறவு முறையால் இக்காட்டுமிராண்டித்தனம் போய் நாகரிகம் தோன்றவேண்டும்.

## இராட்டினத் தொழில்.

இலங்கை ஆதிதிராவிடர் மகாநாட்டில் தலைமை வகித்த ஸ்வாமி ஸகஜானந்தர் இராட்டினத்தொழில் பற்றிக் கூறியிருக்கும் சொற்கள் கவனிக்கற்பாலன. அவை வருமாறு:—

யோகாப்பியாசிகளுக்குப் புறமுயற்சியில் நூல் நூற்றலினும் உயர்ந்த அப்பியாஸம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. யான் நூல் நூற்கக் கற்றுக்கொண்ட பின்னர் நூற்கத் தொடங்கினால் உடல், பொறி, மனம் மூன்றும் ஒரு நெறிப்பட்டாலன்றி நூல் நல்லதாகத் தோற்றாது. ஒற்றுமையடைந்ததும் மனதில்

அமைதி உண்டாகிறது. அதனால் சிவானந்தம் மனதில் ததும்புகிறது. பிறகு பசியெடுத்தாலும் இராட்டினத்தைவிட மனம் வரவில்லை. வேதாந்த நூல் பயின்றவர் நூல் நூற்பவர்களாயின் இந்த இரகசியத்தை உணர்வார்கள். இராட்டினத் தொழிலே சரியைத் தொழில்; இராட்டினத் தொழிலே கிரியைத் தொழில்; இராட்டினத்தொழிலே யோகப்பயிற்சி; இராட்டினத் தொழிலே ஞானசாதனமுமாம்.

## நன்மொழிகள்.

சென்னைக் கான்ஸி ஆபீஸைச் சேர்ந்த திரு. அ. குமாரசாமி முதலியார் எழுதியது:—

எதிர்காலத்தில் என்ன நேரிடுமோ என்ற அச்சம் ஒன்றும் புலன்களுக்கும் எட்டாத கடவுள் முதலிய தத்துவங்களின்று வரும் அச்சம் ஒன்றும், மரணபயம் ஒன்றும் வறுமை முதுமைப் பருவம் உலகநுகர்ச்சிகளுள் வரும் நட்டம் இவை முதலியவைகளெல்லாம் நடுக்குறச் செய்யும் அச்சத்தினது பெரும் பிரிவுகளாகும். எந்த இதயத்தினிடத்து உண்மைப் பிரகாசமுண்டோ அவ்விடத்து அச்சம் காணுதல் இல்லை.

மனிதர் உலகத்தை இருவித வகுப்புக்களாகப் பிரிக்கலாம். உலகம் நன்மைபயக்கும் எனும் கொள்கையுடையவர் ஒரு சாரார். தீமைபயக்கும் எனும் கொள்கையுடையவர் மற்றொரு சாரார். நன்மைபயக்குமென்பார் மனச்சாந்தியும் உலகபோகங்களில் இன்ப மிகுதியும் அடைவர். தீமை எதிர்ப்படினும் அதுவும் ஒரு நன்மைக்கே என்று கருதும் வன்மை பெற்றவர்கள். உலகம் தீமை பயக்கும் என்பார்க்குத் தீமைகள் எதிர்ப்படின் மனப்பொறுமையின்றி துக்க மிகுதியுடன் அனுபவிப்பர். மனதினின்றும் எழுந்த தீய சிந்தனைகளே தேசத்தில் காணப்படும் துன்ப மிகுதிகளுக்குக் காரணமாதல் உண்டு.



உ
சிவமயம்.

"குமரன்" KVC0009

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௬. { காரைக்குடி பிரபவ-ஞூ ஆடி-மீ } மணி ௧௦.

# * விளக்குப் பூச்சி.

குடந்தை ஐ. கிருஷ்ண மூர்த்தி.

ஸ்ரீமான் ஜகதீசய்யரின் படுக்கையறையில் ஒரு பெரிய ஹரிகன் லைட் எரிந்து கொண்டிருந்தது. ஸ்ரீமான் ஜகதீசய்யர் ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு இந்தியர்களின் ஒற்றுமையின்மையைப் பற்றி சம்பாஷித்துக் கொண்டிருந்தார். நானும் ஓர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஷண்முகம் மூக்குத்தூளில் சிறிது சிறிதாக எடுத்து இந்தியர்களுக்குள் ஒற்றுமையில்லாமையால் கவலைகொண்டு ஒரு பட்டை முழுவதையும் காலி செய்துவிட்டேன்! எல்லாம் விதியின் பயன். பிரம்மா எனது தலையில் "௨௦-ம் நூற்றுண்டில் கிருஷ்ணமூர்த்தி யவ்தரித்து இன்றிரவு ஜகதீசய்யரின் படுக்கையறையில் உட்கார்ந்து இந்துக்களுக்குள் ஒற்றுமை யில்லாமையால் ஒரு பட்டை பொடியையும் இழுதது விடுவார்" என்று எழுதியிருக்கிறுர். நான் அதை எப்படி மாற்ற முடியும்?

எனக்கு நன்றுக நெரி (காரம்) ஏற ஆரம்பித்தது. நான் அப்படியே பத்துத் தும்மல் தும்மிக்கொண்டு நாற்காலியில் சாய்ந்தேன். சற்று நோக்திற்கெல்லாம் ஒரு விளக்குப் பூச்சி விளக்கின் கண்ணுடியைச் சுற்றி 'பம்

* வங்காளி பாஷைக்கே புத்துயிரளித்தவரும் சிறந்த நாவலாசிரியரும் கவியும் 'வந்தே மாதா கீத'த்தின் ஆசிரியருமான காலஞ் சென்ற ராய் பகதூர் வங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் C. I, E. அவர்கள் சுமார் ௬௦ ஆண்டுகளுக்கு முன்னர் எழுதிய கமலாகாந்தேர் தப்தர் என்னும் கட்டுரைத் தொகுதியிலுள்ள ஓர் வியாசத்தின் மொழி பெயர்ப்பு. ஆழ்ந்து யோசித்தால் ஆசிரியரின் உட்கருத்துக்கள் புலனுகும்.

பம்' என்றும் 'ரீம் ரீம்' என்றும் கத்த ஆரம்பித்தது. நான், "என்ன? எனக்கு விளக்குப் பூச்சியின் பாஷைகூடத் தெரியாதா?" என்றேன். சிறிது நேரம் அது செய்யும் சப்தத்தை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தேன். 'ரீம் ரீம்' என்று சப்தமிடுகிறாய்; அதற்கு ஒன்றும் அருத்தம் புரியவில்லையே" என்றேன். உடனே தேவியின் அருளால் அதன் பாஷை புரிய ஆரம்பித்தது. விளக்குப்பூச்சி, "நான் இந்த விளக்கு வெளிச்சத்துடன் பேசிக்கொண்டிருக்கிறேன். நீ சும்மாயிரு" என்றது. நான் அப்படியே பேசாமல் உட்கார்ந்துகொண்டு விளக்குப் பூச்சியின் பேச்சுக்களைக் கேட்க வாரம்பித்தேன்.

விளக்குப் பூச்சி சொல்ல வாரம்பித்தது:— ஓ ஜோதிமயானந்தரே! முதலில் நீர் நல்லவராயிருந்தீர். பித்தளை விளக்குகளிலும் வெங்கலக் குத்து விளக்குகளிலும் மண் விளக்குகளிலும் சந்தோஷமாய் இருந்தீர். அதனால் நாங்களும் தடையின்றி விழுந்து இறந்து வந்தோம். இப்போது நீரும் ஆங்கிலேயரின் பக்தராகி நவீன நாகரிக வலையில் சிக்கி கண்ணாடிக் கோட்டையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர். நாங்கள் நாலாபக்கமும் சுற்றுகிறோம். உள்ளே உம்மிடம் வரும் வழியைக் கண்டோமில்லை. விழுந்து மடிவதற்கும் முடிவதில்லை.

சுவனி! இம்மாதிரி விழுந்து மடிவதற்கு எங்களுக்கு அதிகாரமிருக்கிறது 'ரைட்' இருக்கிறது. எங்கள் விளக்குப் பூச்சி குலமே தொன்று தொட்டு பிரகாசத்தில் விழுந்து மரித்து வருகின்றன. எவ்வித பிரகாசமும் எங்களைத் தடுத்ததில்லை. எண்ணெய் வெளிச்சம், மெழுகுவர்த்தி வெளிச்சம், கட்டை வெளிச்சம் முதலிய எச்ச வெளிச்சமும் எங்களைத் தடுத்ததில்லை. பிரபோ! நீர்மட்டும் ஏன் கண்ணாடிக் கோட்டையில் இருந்துகொண்டு எங்களை மரிப்பதினின்றும் தடுக்கிறீர்? நாங்கள் ஏழை விளக்குப் பூச்சிகள். எங்கள் பேரில் "ஸஹமரண நிஷேத்" (உடன் கட்டை யேறாமலிருக்கச் தடை உத்தரவு) சட்டத்தை ஏன் அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறீர்கள்? நெருப்பில் விழுந்து இறக்க முடியாமலிருப்பதற்கு நாங்களென்ன ஹிந்துக்களுடைய ஸ்திரீகளா?

எங்களுக்கும் ஹிந்துக்களுடைய ஸ்திரீகளுக்கும் எவ்வளவோ வித்தியாசமிருக்கிறது. ஹிந்து ஸ்திரீகள் ஆசையினால் தூண்டப்பட்டவர்களாக இருப்பதால் நெருப்பில் விழுந்து உடன் இறக்கத் துணிவதில்லை. முதலில் விதவையாகவும் பிறகு சதியாகவும் ஆகின்றனர். ஆனால் எங்களுடைய ஜாதியோ எப்பொழுதும் விழுந்து மாள்வதற்குத் தயாராய் இருக்கிறது. அதனால் எங்களை ஸ்திரீகளுக்கு ஒப்பிடுவது சரியல்ல!

கேள். பரிபூரண ஜ்வாலை நிறைந்த நெருப்பில் விழுந்திறக்காத இச் சரீரம் எதற்கு? வேறு ஜீவஜந்துக்கள் இவ்விஷயத்தைப்பற்றி என்ன நினைக்கின்றனவென்பது எங்களுக்குத் தெரியாது. நாங்கள் எவ்வளவு தூரம் யோசித்தாலும் இச் சரீரத்தின் பிரயோசனம் தெரியவில்லை. இச் சரீரம் எதற்கு? இதனை வைத்துக்கொண்டு நாம் என்ன செய்யப்போகிறோம்? தினம் நாங்கள் புஷ்பங்களிலுள்ள தேனைக் குடிக்கிறோம். தினந் தோறும் உலகத்தை மகிழ்விக்கும் கிரணங்களில் அலைகிறோம். ஆனல் இதிலென்ன சுகமிருக்கிறது? புஷ்பங்களில் அதே வாசனைதானிருக்கிறது. தேனில் அதே சுவைதானிருக்கிறது. சூரியனிடம் அதே வெளிச்சம்தான் இருக்கிறது. இப்படிப்பட்ட சாரமற்ற, பழைய உலகில் வசிப்பது எவருக்குத்தான் பிரியமாயிருக்கும்? இக்கண்ணுடிக் கூண்டைவிட்டு வெளியில் வாரும். தேஜோமயமான உமது சுவாலையில் நாங்கள் எங்கள் சரீரத்தை அர்ப்பணம் செய்கிறோம்.

நான் உன்னிடம் ஒரு சாதாரணமான பிக்ஷை கேட்கிறேன். நான் என்னுடைய பிராணனை உனக்கு அர்ப்பணம் செய்துவிடுகிறேன். எடுத்துக்கொள்ளமாட்டாயா?

நான் உனக்குக் கொடுக்கிறேனே தவிர உன்னிடமிருந்து ஒன்றும் பெற விரும்பவில்லை. அப்படியிருக்க இதில் உனக்கென்ன ஹானி? நீ உன்னத ரூபத்தில் எரிப்பதற்காக ஜன்மம் எடுத்திருக்கிருய். நாங்கள் எரிந்து போவதற்காகப் பிறந்திருக்கிறோம். வாரும், நம்முடைய கடமையைச் செய்வோம். நீர் சிரித்துக்கொண்டேயிரும். நான் எரிகிறேன்.

உலக முழுவதையும் எரித்துவிடக்கூடிய சக்தி உன்னிடமிருக்கிறது. உம்மைத் தடுக்கக்கூடிய பொருள் உலகிலொன்றுமில்லை (?) அப்படியிருக்க நீர் ஏன் கண்ணுடிக் கோட்டையில் ஒளிந்துகொண்டிருக்கிறீர்? உலகமே உம்மால் நடைபெற்றுக்கொண்டிருக்க நீர் ஏன் கைதிபோல் இங்கு கிடக்கிறீர்? எந்த மூடன் உமக்காக இந்தக் கண்ணுடிக் கூண்டு செய்தான்? எந்த முட்டாள் உம்மை இதற்குள் அடைத்துவைத்தான்? பிரபோ! நீர் விஸ்வ வியாபியாயிருக்கிறீர். கண்ணுடிக் கூண்டை உடைத்துக்கொண்டு எனக்குக் காட்சி யளிக்கமாட்டீரோ?

நீர் யார்?—இது எனக்குத் தெரியாது. இது தெரியாவிடினும் நீரே எனது இச்சைக்குரிய வஸ்து; விழிப்பின் தியானப்பொருள்; தூக்கத்தில் சுகஸ்வனத்திற்குக் காரணம், வாழ்நாளின் ஆசை மரிப்பதற்குரிய இடம் என்பது எனக்குத் தெரியும். உம்மை ஒரு நாளும் என்னால் அறிய

முடியாது. அறிந்துகொள்ள ஆசையுமில்லை. எந்நாள் உம்மை அறிவேனே அந்நாளே என் சுகம் சென்றுவிடும். எந்த வஸ்துவை விரும்புகிறோமோ அதன் ஸ்வருபத்தை அறிந்துவிடின் அது பழைய சுகப்பொருளாயும் விரும்பத்தக்க பொருளாயும் இருப்பதில்லை.

"உம்மை என்னால் அடையமுடியாதா? எத்தனைநாட்கள் வரைதான் நீர் இக்கண்ணாடிக் கூண்டில் இருப்பீர்? என்னால் இக்கண்ணாடியை உடைக்க முடியாதா? சரி, இங்கேயே இரும். நான் உம்மை இலகுவில் விட்டுவிடப்போவதில்லை. மறுபடியும் வருகிறேன்." சப்தம் செய்து கொண்டே விளக்குப்பூச்சி பறந்து சென்றுவிட்டது.

ஃ ஃ ஃ

இதற்குள் ஸ்ரீமான் ஜகதிசய்யர், "ஐயரே!" என்றார். நான் திடுக்கிட்டேன். கண்களைத் திறந்து பார்த்தேன். அவர் கூப்பிட்டிராவிடில் தலையணையை எடுத்துக்கொண்டு கட்டிலின் கீழ் படுப்போம் என யோசித்தேன். ஸ்ரீமான் ஜகதிசய்யரைப் பன்முறை கண்களைப்பிசைந்து விழித்துப் பார்த்தேன். அடையாளம் புரியவில்லை. அவரிருந்த இடத்தில் ஒரு பெரிய விளக்குப்பூச்சி தலையணையின்பேரில் உட்கார்ந்திருப்பது போலக் காணப்பட்டது. அது என்னுடன் பேச ஆரம்பித்தது. 'பம்பம்' என்பது போலிருந்தது. அப்போதிருந்து உலகிலுள்ளவர் எல்லோரும் விளக்குப்பூச்சிகள் என்று அறிந்தேன். எல்லோரும் விழுந்து இறப்பதற்கென வெவ்வேறு அக்னியிருக்கிறது. எல்லோரும் அவ்வக்னிகளில் வீழ்ந்திறக்க விரும்புகின்றனர். எல்லோரும் அவ்வவ்வக்னிகளில் வீழ்ந்து இறப்பதற்கு அதிகாரம் உண்டென்று நினைக்கின்றனர். அதில் சிலர் விழுந்து இறக்கின்றனர். பலர் கண்ணாடிக் கூண்டைச் சுற்றிவிட்டு மறுபடி வந்து கொண்டேயிருக்கின்றனர். ஞானக்னி, தனஅக்னி, மானஅக்னி, ரூபஅக்னி, தர்ம அக்னி, இந்திரிய அக்னி—சரி அடுக்கிக்கொண்டே போவதில் பயனென்ன? உலகமே அக்னி மயமாயிருக்கிறது. இந்த அக்னிமய உலகிற்கு கண்ணாடிக்கூடும் இருக்கிறது. எந்த பிரகாசத்தைக்கண்டு மோகிக்கிறார்களோ—மோகித்து எதனில் குதித்துவிட விரும்புகின்றனரோ அதனை அடையமுடியாமல் முணுமுணுத்துக்கொண்டே திரும்பிப்போவதும் மறுபடிவந்து கூண்டைச் சுற்றுவதுமாயிருக்கின்றனர். கூண்டில்லாவிடில் உலகம் பஸ்மமாகி வெகு நாட்களாகியிருக்கும். எல்லோரும் தருமத்தைத் தெரிந்தவர்களாகி தர்ம அக்னியை அஞ்ஞானமென்னும் கூட்டிலிருந்து பிரித்தெடுத்துவிட்டால் இவ்வுலகம் எத்தனை நாளைக்குத்தானிருக்கும்? அநேகர் ஞானக்னியில் ஏறிக்கொண்டு போய் கடைசியில் கண்ணாடியில்

மோதுண்டு விழுந்துவிடுகின்றனர். ஆனால் ஸாக்ரடீஸும் கேலிலியோவும் அதில் விழுந்து எரிந்தனர். ரூபாக்னி, தனாக்னி, மானஅக்னி இவைகளில் விளக்குப்பூச்சிகளாகிய நம்மில் பலர் தினந்தோறும் விழுந்து வருகின்றனர். இவ்வக்னியில் சுவாலையின் சூட்டை வர்ணிப்பதற்கு காவ்யம் என்று கூறுகிறோம். மஹாபாரத ஆசிரியர் மானஅக்னியை உண்டாக்கி அதில் துர்யோதனப் பூச்சியைக் கொளுத்திப் பெருத்த காவியம் எழுதிவிட்டார். ஞானாக்னியில் எரியும் விதத்தை "சுவர்க்க இழப்பு Paradise Lost (of Milton)" என்னும் கீதத்தில் வர்ணித்துள்ளார். தர்மாக்னியின் இணையற்ற கவி "St Paul சேன்ட் பால்" ஆவர். போக அக்னியின் பூச்சிகள் அன்டோனியும் கிளியோ பேட்டோவும் (Antonio and Cleo Patra of Sha kes peare) ரூபாக்னியின் பூச்சிகள் ரோமியாவும் ஜூலியட்டும் (Rome and Juliet of Shake peare) பொறாமை அக்னியில் ஒதேல்லோவும் (Othello) இந்திரிய சுகஅக்னியில் கீத கோவிந்தமும் (ஜயதேவர்)வித்யா சுந்தரமும் எரிந்து கொண்டிருக்கின்றன. ஸ்நேக அக்னியில் சீதைப்பூச்சி விழுந்தமையால் ராமாயணம் ஏற்பட்டது.

நெருப்பு என்பது யாது? இது நமக்குத் தெரியாது. ரூபம், வேகம், தாபம், கிரியை, கதி முதலிய சப்தங்களுக்கும் அர்த்தம் ஒன்றுமில்லை. இவ்விஷயத்தில் வேதாந்தப் புத்தகங்கள் தோல்வியடைந்து விட்டன. ரசாயன புத்தகங்கள் முகத்தைத்திருப்பிக்கொண்டுவிட்டன. தர்ம புத்தகங்கள் தோல்வியடைந்து விட்டன. காவியங்கள் பராஜெயமடைந்து விட்டன. ஈஸ்வரன் யாது? தர்மம் என்பது என்ன? ஞானமென்பது யாது? ஸ்நேகம் எது? இவைகள் என்னவென்பது நமக்குத் தெரியாது. அப்படியிருந்தும் இந்த தெரியாதவும் அறியாதனவுமான பதார்த்தங்களைச் சுற்றி வந்துகொண்டிருக்கிறோம்.

நாம் விளக்குப்பூச்சிகளில்லாமல் வேறு என்ன? சகோதர விளக்குப் பூச்சிக் கூட்டங்களே! கவனியுங்கள். இம்மாதிரி வட்டமிடுவதில் முட்டிக் கொள்வதில் யாதொரு லாபமுமில்லை. முடியுமானால் நெருப்பில் விழுந்து உயிரைவிடு. முடியாவிடில் 'பம் பம்' என்று கத்திவிட்டு போய் விடுவோம்.



# கண்களின் அருமை.

(சா. கணேசன்)

கண் ஆச்சரியமும் நுட்பமும் வாய்ந்த ஓர் முக்கியமான உறுப்பு. அது தான் நோக்கும் பொருள்களை எல்லாம் ஒப்பற்ற ஓவியமாய் வரைகின்றது. அவற்றைக் கண் நரம்புகள் மூளைக்கு கண்ட உடனே அறிவிக்கின்றன. அதன் பிறகே தான் மூளை வேலை செய்ய ஆரம்பிக்கின்றது. ஆகவே தான் உடலுறுப்புகளில் எல்லாம் கண்களை ஒப்பற்றதாகப் போற்றுவது. அதை நினைந்து தான் படைப்புக் கடவுளும் முகத்தில் மிகவும் தகுதியான இடத்தில் இரு குழிகள் அமைத்து அவற்றினுள்ளே கண் மணிகளை வைத்து அவற்றில் சிறு தூகள்களும் விழாமல் தடுத்தற் பொருட்டு கண்ணிமைகளையும் புருவங்களையும் தக்க தக்க இடங்களில் ஏற்படுத்தினன் போலும்!

இப்படிப் படைப்புக் கடவுளாலும் பெரிதும் பேணித் தரப்பெற்ற ஒப்பிலாக் கண்களைப்பேணும் முறையறியாது அல்லற் படுவோர் பலருளர்.

## கண்நோயும், தடுக்கும் முறையும்.

கண்களில் வலியும் பீளையும் வருதற்குப் பெரும்பாலும் ஈக்களே காரணமாகும். கண்நோயுள்ள ஒருவர் தூங்கும் பொழுது அன்னவர் கண்களில் உள்ள பீளைகளை 'தின்னற் பொருட்டு ஈக்கள் உட்காருகின்றன. ஈக்கள் உட்கார்ந்திருக்கும்பொழுது கண்களிலுள்ள பீளை அவைகளின் கால்களில் பற்றிக்கொள்ளுகிறது. இப்படித் தன் கால்களில் உள்ள பீளைகளோடு மற்றவர் கண்களிலும் உட்காருகின்றது. உட்காரும்பொழுது ஈயின் கால்களில் உள்ள பீளை மற்றவர் கண்ணிலும்படுகின்றது. அப்படி அவருக்கு ஒரு கண்ணில் மாத்திரம் பீளையோடு கூடிய வலி பற்றினும் அவர் வலியுள்ளகண்ணைத்துடைத்த கையைக்கழுவாமல் தொடுவதாலும் நோய்க்கண்ணைத்துடைத்த துணியாலேயே நோயிலாக்கண்ணைத் துடைப்பதாலும் மற்றைக் கண்ணிற்கும்நோய் பரவுகின்றது.

அல்லாமலும் இராக்கால விழிப்பு அதிகம் உடைமையாலும், அதிக ஒளி உடைய விளக்கின் முன் படுத்துறங்கலாலும், விளக்கின் ஒளி கண்களில் படும் வண்ணம் உட்கார்ந்திருத்தலாலும், மதுவருந்தலாலும், புகைக்குடித்தலாலும், புகை போக வழி இல்லாச் சமையலறையில் புகையும்போது இருப்பதாலும்,

குறிப்பிட்ட ஒரு பொருளைக் கவனமாக உற்று நோக்கலாலும் கண்ணோய் உண்டாகலாம். உதாரணமாக மது உண்பவர்களையும் நாடகம், படக்காட்சி பார்ப்பவர்களையும் சதாகாலமும் புத்தகமும் கையுமாயிருப்பவர்களையும் பார்த்தால் அவர்களின் கண்கள் கொவ்வைப்பழம் அன்ன செந்நிற மடைந்திருப்பதைக் காணலாம். புகைக்குடிப்பவர்களின் கண் பழுத்த செந்நிறம் அடைந்திருப்பதையும் காணலாம். இதனாலேயே அன்னவர்களின் கண்கள் இயற்கைக்குமாறான நிறம் வாய்ந்து இயற்கை ஒளிகுன்றி மங்கல் நிறைந்து மந்தப் பார்வையும் புரண்ட தோற்றமும் அடையும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றார்கள். இவற்றினுள்ளே யெல்லாம் கைம்மேற் பலன்றருவது மதுவேயாம். 'மது உண்டவன்' எங்கு செல்கின்றோம், எதைப்பார்க்கின்றோம்' என்ற உணர்வேயின்றி மயங்கி மயங்கி, வீழ்ந்து வீழ்ந்து, தட்டுத் தடுமாறி, நிலை குலைந்து, அறிவிழந்து, ஆண்மையற்று, பொறிகலங்கி புலன் கெட்டு உழல்வதை இந்நிலவுலகில் யாண்டும் காணலாம்.

மஞ்சட் காமாலை முதலிய பெருநோய் வினைவிற்கு கூர்ந்த பார்வையும் மதுவருந்தலுமே காரணம் என்று நுண்ணறிவுடைய ஆராய்ச்சியாளர்கள் பலர் கூறுகின்றார்கள். இவையன்ன தீமைகளை ஒழித்தற்குப்பின் வருபனவற்றைக் கவனித்தல் வேண்டும்.

குழந்தைகளை எப்பொழுதும் கொசுவலையினுட் படுக்கவைத்தல் வேண்டும். குழந்தைகள் படிக்கும் புத்தகம் பெரிய எழுத்தால் அச்சிட்டதா யிருக்கவேண்டும்.

யாவராயினும் தாம் படிக்கும் பொழுதன்றி எழுதும் பொழுது தமக்கும் புத்தகத்திற்கு அல்லது காகிதத்திற்கு இடையே ஒரு அடி வெளியிடையேனும் இருக்கின்றதா எனக் கவனித்தல் வேண்டும்.

வைசூரி, கண்ணோய் முதலிய வியாதிகள் உண்டாகித் தீர்ந்த இரண்டுமூன்று வாரங்கட்கிடையில் படித்தல், எழுதல், பாடசாலைக்குப் போதல், வெயிலில் செல்லல் முதலியன கண்டிப்பாய்த் தவிர்க்க வேண்டியவைகளாம்.

வெளிச்சமும், காற்றோட்டமும் இல்லாத அறைகளில் படித்தலும், எழுதலும், ஓய்வின்றி அதே வேலையாயிருப்பதும் கூடாதாம்.

கூர்ந்து கவனிக்கும் தன்மைவாய்ந்த ஓவியம் கொடித்தையல் முதலியன அதிக நேரம் செய்யலாகாது.

படிப்புப்போன்ற கூர்ந்து கவனிக்கும் வேலை மிகுதியாயிருக்கும்பொழுது கொஞ்ச நேரத்துக்கு ஒருமுறை பசிய மாஞ்செடி கொடிகளையாவது வெப்பமற்ற வானத்தையாவது பார்ப்பதாலும் கண்களை மூடிக்கொண்டிருப்பதாலும் கண்கட்கு சிறிது ஓய்வு கிடைக்கின்றது. படிக்கும்போது விளக்கின் ஒளி முதுகுப்புறமிருந்து வரும்படியாவது அல்லது ஒளியை முகத்தில் விழுவதினின்றும் தடுக்கும் மங்கல் கண்ணாடி அல்லது துணி போடப்பெற்ற விளக்கை வைத்துக்கொண்டாவது படித்தல் வேண்டும்.

பிறர் உபயோகப் படுத்தும் கைத்துண்டு, கண்ணாடி முதலியவற்றைத் தொடவே கூடாது.

புகைச்சல் உள்ள இடங்களில் இருத்தல் கூடவே கூடாது. சமையலறையில் புகை தாராளமாகத் தட்டுத் தடையின்றி வெளிக்கிளம்புதற்கு ஏதுவான புகை போக்கி பலகணி அமைத்தல் வேண்டுவது மிக முக்கியம்.

ரயில், மோட்டார், கப்பல், முதலிய பிரயாணங்களில் கண்ணாடி போட்டுக்கொள்ளல் வேண்டும்.

கண்களில் தூசி முதலிய நுண்பொருள்கள் விழுந்தால் கண்களை ஆமணக்கெண்ணெயிலாவது, தெளிந்த பன்னீராலாவது காய்ச்சிய சுத்தமான கிணற்று நீராலாவது கண்களைத் தோய்த்துக் கண்ணிமைகளால் கண்ணைக் கசக்கித் தூசியைவரும்படி செய்யவேண்டுமேயன்றி கண்களைக் கைவிரல்களால் தேய்த்தாவது துரும்பு, வேட்டி முனை முதலியன கொண்டாவது தூசியை அகற்றலாகாது. கண்கள் உறுத்தினால் கட்டிப்புகை. (சுத்தமான வெள்ளைத்துணியை எலுமிச்சம்பழ அளவினதாய் உருட்டி வாயுதட்டில் வைத்து வேகமாக, வாயிலிருந்துவரும் காற்றை ஊதுவதாலே சூடு உண்டாக்கி கண்ணில் ஒற்றுதல்) போடவேண்டும். இச்சந்தர்ப்பத்திலும் கையினால் தேய்த்தல் தீமையையே விளைக்கும்.

"நன்றாக பேணிவளர்க்கப்பெறும் கண்கள் பிறரைப் பார்த்த அளவிலேயே அவர்களைக் கண்களின் ஒளி தன்வயம் செய்து விடும்" எனக்கூறும் பிரபல அமெரிக்கத் தத்துவ ஆராய்ச்சியாளரின் கூற்று முற்றத் தெளிந்த உண்மை.

உடலுறுப்புகளில் மிகமுக்கியமும் மென்மைத் தன்மையும் வாய்ந்த கண்களைப்பேணு முறையை நாம் நன்கு கற்றிருத்தல் நமது கடமைகளில் ஒன்றாகும்.

---

# ஆராய்ச்சிக் குறிப்புக்கள்.

(அரு. சோமசுந்தரன்.)

உயர்திரு வேதாசல சுவாமிகள் கரந்தையில் இயற்றிய சொற்பொழிவின் சாரம்:—

பழந்தமிழ் நூல்களில் பொய் புனைந்துரைத்தல் மிகமிகக் குறைவு. உண்மை உரைத்தலும் இயற்கை வருணனையுமே பழந்தமிழ்ப் புலவர் பாராட்டியனவாகும். தமிழ் அல்லாத பிறமொழிகளில் பொய் புனைந்து உரைத்தல் மிகுதியாகக் காணப்படுகின்றது. பழந்தமிழ்க் கதைகளிற் பல மெய்வரைகளாக விளங்குகின்றன. சிலப்பதிகாரக்கதை சான்றும். பிற்காலத்துப் புலவர்கள் தமிழிலும் பொய் புனைந்து உரைத்தலைப் புகுத்தி விட்டார்கள். தலபுராணங்கள் சான்றும். பொய்புரைகளைப் பயில்வது பயனில் செயலே.

ஃ ஃ ஃ

பண்டைநாளில் தமிழகம் இந்தியாவின் பல பாகங்களில் நிலவி இருந்தது. மகத நாடு தமிழர் நாடு என்று தெரிகின்றது. புத்தர், மகாவீரர் இருவரும் தமிழரே. பரதன் ஆண்டது பாரத நாடு. பரதன் என்பது தமிழ்ப் பெயர். அதன் பொருள் நெய்தல் நில அரசன். அவனே அந்நாட்டிற்கு அப்பெயரை ஈந்தான். தமிழ் முனிவாகிய விசுவாமித்திரனை பரதர் வணங்கினர். திருச்செந்தூரில் பரத குலத்தினர் வணங்கும் விசுவாமித்திரர் கோயில் ஒன்று உளது. இவ்வாராய்ச்சிக்கு அது ஒரு துணையாகும். பரதர் தீவேட்டனர். "தீவேட்கும் பரதற்குத் தீங்கு செய்" எனும் செய்யுட் குறிப்பால் உணரலாகும். தீ யெனும் சொல்லுக்கு பரதன் எனும் பொருளும் உண்டு தீவேட்டல் தமிழர் வழக்கம் என்று தெரிகிறது.

ஃ ஃ ஃ

தமிழர் முழுமுதற் கடவுள் வழி பாட்டையே போற்றினர். பல தெய்வ வழி பாட்டைச் சிறப்பித்துச் சொல்லவில்லை. இறைவன் பிறப்பு இறப்பு இல்லாதவன் என்று குறிக்கப்படுகின்றான்,

"பிறவாயாக்கைப் பெரியோன்" "பிறப்பிறப்பிலாத் திருமால்" எனும் தொடர்கள் சான்றும். இராமபிரான், கிருஷ்ணன் ஆகிய இருவரும் பிறப்பு இறப்பு உடைய மக்களாகவே காணப்படுகிறார்கள். இவ்வாறு கூறுவது ஆரிய வழக்கு. முழுமுதற்கடவுள் நிலையை உணராத சிலர், 'திருமாலும் செஞ்சடையனும் வழுத்துங் கண்ணன்' என்று தவறாக உரைப்பாராயினர்.

ஃ ஃ ஃ

பஞ்சாப்பில் பழய அரண்மனை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அக்கட்டிடம பண்டைத் தமிழ் நாகரிகத்தின்படி அமைக்கப்பட்டிருக்கிறது. அதனுல் சர் ஜான் மார்ஷல் எனும் ஆராய்ச்சியாளர் ஆரியர் நாகரிகத்திற்கு முன்னர் தமிழர்நாகரிகம் தலைசிறந்து விளங்கிற்று என்று கூறுகின்றார். ஏழு அல்லது எட்டு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தமிழர் நாகரிகம் பெற்றிருந்தனர் என்று கூறப்படுகிறது. வேத இந்தியாவெனும் ஆராய்ச்சி நூலில் ஒரு குறிப்புக் காணப்படுகிறது. ஆறாயிரம் ஆண்டுகட்கு முன்னர் மூயிர் எனும் அரண்மனை தமிழ்நாட்டுத் தேக்கு மரத்தால் கட்டப்பட்டது என்று தெரிகிறது.

ஃ ஃ ஃ

தமிழர் மரக்கலங்களில் கடல் கடந்து பல நாடுகளுக்கும் சென்று வாணிபம் செய்தனர். தேக்குமரம், துணி முதலிய பல பொருள்கள் அந்நிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டன. சேர நாட்டிலிருந்து பலர் அந்நிய நாடு சென்றுகொண்டு விற்றனர். தமிழர், சாலடியர், மெசபடோமியர், எகிப்தியர் ஆகியவரோடு கடல்கடந்து வாணிபம் புரிந்தனர். "முந்நீர் வழக்கம்" எனும் தொல்காப்பியச்சூத்திரம் கடல்கடத்தலைக் குறிக்கிறது. ரிக்வேதத்தில் 'பணியர் பணிகர்' என்ற சொற்கள் காணப்பெறுகின்றன. அவர்கள் ஆரியர்களுக்குப் புறம்பானவர் என்று குறிக்கப்படுகிறது. வணிகர் எனும் தமிழ்ச்சொல் பணியர் என வடமொழியில் திரிவுபட்டு இருக்கிறது. வாணிபம், தொழில் எனும் தமிழ் சொற்கள் வியாபாரத்தையே குறிக்கின்றன. மேற்காட்டியிருக்கும் வேதக் குறிப்பால் தமிழர் நீண்ட நாட்களுக்கு முன்னர் நாகரிகம் பெற்றிருந்தனர் என்று விளங்குகிறது.

எகுபதியர் நாட்டில் (Egypt) ஏழாயிரம் ஆண்டுகள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இறந்தவரின்பிணங்கள் பதம்செய்து வைக்கப்பட்டு இப்பொழுது வெளிப்படுத்தப்பட் டிருக்கின்றன. அப்பிணங்களின் இடையில் தமிழரது மெல்லியஆடைகள் சுற்றப் பட்டிருக்கிறதாகத் தெரிகிறது. சிலப்பதிகாரத்தில் எலி மயிர் உடையும், பால் நுரை, எண்ணெய் நுரைபோன்ற ஆடைகளும் பழந்தமிழரால் மிகவும்மென்மையாக நெய்யப்பட்டன எனும் குறிப் புக்கள்உண்டு. எகுபதியர் பிணங்களுக்குத் தமிழராடை புனையப் பெற்றிருப்பதால் இருவரும் முற்காலத்தில் உறவு பெற்றிருந்த னர் என்று தெரிகிறது. தமிழரது மெல்லியஆடைக்குறிப்புக்களை நூல்களில் பயின்றகாலத்து என்னுள்ளத்து உவகை பொங்கிச் சில இன்னுரைகளைத் தோற்றுவித்தது. வருமாறு:—

கொழும்பாம் பின் உடை யெனவும்
செழும் பாலின் நுரை யெனவும்
ஒழுங்காக உடை உலவியதன்றே.

ஃ ஃ ஃ

முன்னாளில் தமிழர் கடல்கடந்து வாணிபம்செய்ததைக் கை விடாது வணிகர்மரபினராகிய நாட்டுக்கோட்டையார்இந்நாளிலும் உலகில் பல பாகங்களிலும் உலவி வாணிபம் புரிந்து வருகின்ற னர். அவர்களது சுறுசுறுப்பும் முயற்சியும் பெரிதும் பாராட்டற் பாலன. மேற்கொள்ளும் எக்காரியத்திலும் அவர்கள் ஊக்கம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

ஃ ஃ ஃ

தமிழர் உடல் வளர்த்தலில் சிறந்த கவனம் செலுத்தினர், தமிழர் வீரர்களாக விளங்கினர். என்றும் இளமையோடிருத்தலை விரும்பினர். பிசிராந்தயார் எனும் புலவரைக் கோப்பெருஞ்சோ ழன், யாண்டு பலவாகியும் நீவிர் நரைபெறாது இருத்தலின் கார ணம் என்னவென வினவினன். அதற்கு அவர் "நான் என்றும் இளமையோடு இருப்பதற்குக் காரணம் கவலைபற்ற இன்ப வாழ்வே" என்று கூறினர். கவலையையும் துன்பத்தையும் ஒழி த்து உடலைச் செவ்வனே பாதுகாத்து வந்தால் ஒவ்வொருவரும் நரை திரை மூப்பெய்தாது இளமையோடிருந்து நீண்டநாள் வாழ லாம். தற்கால அமெரிக்க மருத்துவர்கள் இவ்வுண்மையை

இனிது விளக்குகின்றார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நமது பழந்தமிழ் புலவராகிய பிசிராந்தயார் எடுத்துரைத்துப் பயின்றுகாட்டினர்.

ஃ ஃ ஃ

நீண்ட நாள் வாழ்தற்கு உடற்பயிற்சியும் உணவு ஒழுங்கும் அவசியம். தக்கவேளையில் தக்க உணவை உட்கொள்ளவேண்டும். காப்பி, தேயிலை, கோக்கோ முதலிய குடிவகைகளை அருந்துதல் கூடாது. அவைகளில் யூரிக்ஆசிட் எனும் நஞ்சு இருக்கிறது. டாக்டர் ஹேக் அவைகளை விட்டுவிடுமாறு வற்புறுத்துகின்றார். "Uric acid poison" என்று ஒரு நூல் உண்டு. அப்புளிப்பு நஞ்சு பெரிதும் கொடியது. ஒரு பவுண்டு எடை உள்ள பொருளில், காப்பியில் ௬அ குன்றுமணியும், தேயிலையில் எ௨ குன்றுமணியும், கொக்கோவில் ௫௬ குன்றுமணியும் நச்சுப்பொருள் உள்ளன. கடலைப்பருப்பில் புளிப்பு நஞ்சு உண்டு. உருளைக்கிழங்கு புளிப்பு நஞ்சைப்போக்குவது. அக்கிழங்கை வாயுவென்று சிலர் நகையாடுவது சரியன்று. காப்பி, கொக்கோ ஆகிய குடிவகையே நீரழிவுக்கும் பிளவைக்கும் காரணம். உயிர்தப்பி வாழ விரும்புவோரனைவரும் தீய குடிவகைகளை ஒழித்தல் வேண்டும்.

ஃ ஃ ஃ

புலால் உண்டல் உடல் வளர்ச்சிற்கு உரியதன்றென்பது மருத்துவ ஆராய்ச்சியாளர் சிலாது துணிபு. ஊன் உண்டல் இரக்கமற்ற செயல் என்பது போன்பர்கள் கருத்து. மேற்றிசை அறிஞர் பலர் ஊன் உணவு கூடாது என்பது குறித்துப் பல அரிய நூல்களை எழுதி இருக்கின்றார்கள். அவர்களிற் சிலர் சைவம்பிடிக்கின்றார்கள். அந்நாட்டவரிலும் இந்நாட்டவரிலும் சிலர்முட்டை, மீன் உண்டல் ஜீவகாருண்யத்திற்கு விரோதமற்றதெனக் கூறுகின்றனர். இது நகைப்பிற்குரியதே. புலால் உணவை அறவே நீக்க வேண்டுவது மிக முக்கியமாகும்.

ஃ ஃ ஃ

அறிவு விளக்கத்திற்கு ஆராய்ச்சி இன்றியமையாதது. நூல்களை ஆராய்ச்சி முறையில் சோதித்தல் வேண்டும். நமது புராணங்களில் புனைந்துரையான கதைகள் பல உள்ளன. அக்கதைகள் சிலவற்றில் சில உண்மைகள் பொதிந்திருக்கின்றன. சில

பெருமான் நஞ்சுண்ட கதையை எடுத்துக் கொள்வோம். இது இருக்கு வேதத்திலுள்ள பழங்கதை. இது உண்மையாக நடந்ததன்று. உண்மையை விளக்குதற்பொருட்டு எழுந்த ஒரு புனைகதையேயாகும். கதையின் சுருக்கம் பாற்கடல் கடைந்ததும் நஞ்சுண்டதுமேயாகும். திருவருள் ஒளியாகிய பாற்கடல் உடம்புகளைக்கொண்டு கடையப்பட்டது. அஞ்ஞானஇருள்நஞ்சாகஉருவகிக்கப்பட்டது. இறைவன் அவ்விருளை ஏற்றுக்கொண்டு அறிவுச்சுடர் கொளுத்துகின்றான். அழுக்கு இருள்பற்றியிருந்தமனம்அவ்வினையின் நீங்கி அறிவுமயமாகின்றது. அவ்வறியாமை இருளின் ஆற்றலை இறைவன் ஒடுக்கிவிட்டான் என்பதே நஞ்சுண்டதன் கருத்து. பிறந்த காலம் முதல் அஞ்ஞான இருளில் ஆழ்ந்திருந்த உயிர் இறைவனருள் அழைப்பால் நல்லறிவு பெற்று இன்புறுகின்றது. திரிபுரக்கதையும் இவ்வாறு தத்துவக் கருத்துடையதே;

'அப்பணி செஞ்சடையம் ஆதிபுராண'

என்று திருமூலர் கூறும் செய்யுளால் இக்கதையின் உண்மை விளங்கும். இக்கதையும் நிகழ்ந்த சரித்திரமன்று, புனை கதையே. திரிபுரத்தை இறைவன் எரித்தான் என்பதன் பொருள் ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களையும் போக்கினான் என்பதேயாகும்.

ஃ ஃ ஃ

காலையில் நிகழ்ந்த சொற்பொழிவொன்றில் ஒருவர் வள்ளுவர் குறளுக்குப் பொருள் உரைக்குங்காலத்து ஆறு ஆதாரங்களைப்பற்றிக் குறிப்பிட்டார். வள்ளுவர் காலத்தில் அவ்வழக்கில்லை. அது மிகவும் பிற்பட்டது. அதைத் தழுவி வள்ளுவருக்குப் பொருள்உரைத்தல் இழிவே. குறள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. திருமூலர் திரு மந்திரம் ஆயிரத்து முன்னூறு ஆண்டுகட்கு முற்பட்டது. ௫000; ௬000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ்நூல்களும் உண்டு. அவைகளுக்குப்பொருள் உரைக்குங்காலத்து ஆங்கிலேயரது புதிய ஆராய்ச்சிகளையும் நீராவி, மின்சாரம் ஆகியவற்றையும பொருத்திக் கூறுதல் தக்கதோ? அவ்வாறே வள்ளுவர் குறளும் ஆறு ஆதாரமும். ஒரு நூலுக்கு உரை செய்யப் புகுங்காலத்துமுதலில் அதன் காலவரையறையைச்செய்

மை செய்து கொள்ள வேண்டும். அக்கால வழக்கை ஒட்டி உரை காணுதல் வேண்டும். பிற்கால விஷயங்களைப் புகுத்தி பொருந்தா உரை செய்தல் தக்கதன்று. காலவரையறையையும் வழக்கையும் ஒட்டி ஆராய்ச்சி செய்தற்கு ஆங்கிலத்தில், 'Historical-criticism' என்று பெயர். 'மலர் மிசையேகினன்' எனும் குறளிலுள்ள மலர் எனும் சொல் மலர்போலும் நெஞ்சத்தையே குறிக்கின்றது. நெஞ்சு தாமரை மொக்குப்போல் இருக்கின்றது. மனித உடலில் நெஞ்சுபக்கம் முக்கியமானது. குவிதலும் விரிதலும் கவனிக்கத்தக்கவை. 'நெஞ்சுத்தாமரையே உயிரின் இருப்பிடம். மூளை உயிரின் இருப்பிடம் என முன்னர் சிலர் கருதியது தவறு.' என்று வில்லியம் ஜேம்ஸ் கூறுகிறார். நெஞ்சுத்தாமரையிலேயே இறைவன் வீற்றிருக்கிறான் என்று குறளும் திருவாசகமும் கைவல்லியோபநிடதமும் கூறுகின்றன.

ஃ ஃ ஃ

பாற்கடல் தயிற்கடல் முதலிய ஏழு வகைக் கடல்களைப் பற்றிச் சொற்பொழிவாளர் நினைப்பூட்டினர். அவை புராணத்திலே தான் காணப்படுகின்றன. உண்மையில் எங்கும் காணமுடியாது. வாயுபுராணம் மச்சபுராணம் இரண்டிலும் இதைப்பற்றிய குறிப்பு இல்லை. விஷ்ணு புராணத்தில் உண்டு. எழுவகை நெகிழ்ச்சிப் பொருள்கள் உருவகப்படுத்தப்பட்டன என்று வேண்டுமானால் யூகிக்கலாம்.

ஃ ஃ ஃ

ஒரு முழுமுதற்கடவுளை வணங்குவது தமிழர் நாகரிகம். ஞாயிறு, திங்கள், தீ ஆகிய மூன்றுமே இறைவனது முக்கண்களாகக் குறிக்கப்படுகின்றன. முக்கண் சிவத்திற்கு மட்டுமன்று முருகனுக்கும் முக்கண் குறிக்கப்படுதல் உண்டு. முருகன் என்றும் குன்றா இளமையும் சிவந்த மேனியும் உடையவனாகக் குறிக்கப் படுகின்றான். 'பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு' எனும் தொடக்கத்தினையுடைய திருமுருகாற்றுப்படை அடிகள் நோக்கத்தக்கன.

ஃ ஃ ஃ

ஞாயிற்றிலிருந்து வணக்கம் ஆரம்பம் ஆகிறது. அறிவு பிறந்தது. திருமாலுக்கும் சூரியனுக்கும் தொடர்புண்டு. விஷ்ணு எனும் சொல்லுக்கு சூரியன் எனும் பொருள் உண்டு. உதயம்,

உச்சி, அஸ்தமனம் ஆகிய மூன்று நிலையினாலுமே மூன்றடியாகத் திருமால் அளந்ததாகக் கதை புனையப்பட்டிருக்கிறது. விஷ்ணு பாதத்திலிருந்து கங்கை இறங்கியதென்பதற்கு சூரியன் வழியே நீராவியாகப் போந்ததென்பதே பொருள். இவை ஆங்கிலத்தில் 'Mythology' என்று கூறப்படும்.

ஃ ஃ ஃ

உலகம் இறைவனாக உருவகிக்கப்படுகிறது. ஞாயிற்றின் முக்கூறுகளும் மூன்று கண்கள் செக்கர்வானம் சிவந்த மேனியும் சடையுமாகும். முற்காலத்தில் கதிரவன் வணக்கம் முதன்மை பெற்றிருந்தது.

ஃ ஃ ஃ

இறைவன் ஒருவனே என்றே எண்ணம் வலுப்பட வேண்டும். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். அறிவின்றி வணங்குதல் பயனில்லை. உயிர்ப்பலி இருத்தல் பெருங் கொடுமையாகும். அகக்கண்ணறிவு கொண்டு இறைவனைப் போற்றுதல் வேண்டும். சம்பந்தர் அக்கண்ணின் வழியே ஒளியுடன் காட்சி பெற்றார்.

ஃ ஃ ஃ

கொடிநிலை, வள்ளி, கந்தழி எனும் சொற்களுக்கு முறையே சூரியன், சந்திரன், நெருப்பு எனப்பொருள் கொள்ளலாம். கந்தழி என்பது கட்டறுத்தல் என்பதாகும். பற்றிய பற்றுக் கோட்டை அழிப்பது நெருப்பாதலால் அவ்வாறு கொள்ளப் பட்டது. அத்தொடரின் இறுதியில் கடவுள் எனும் சொல் வருதலால் கந்தழி என்பதற்குத் தத்துவம் கடந்த கடவுள் என்று பொருள் கோடல் பொருத்தம் அன்று.

ஃ ஃ ஃ

முத்தீவேட்டல் ஒரு முக்கியமான வழக்கம். இறைவன் தீயின் வடிவமாக வருணிக்கப்படுதல் உண்டு. நெருப்பெரியும் பொழுது கூம்பிய வடிவமாக விளங்குகிறது. அவ்வாறு லிங்க வடிவமும் வாழைப் பூப்போல் அமைப்பதுண்டு. கடவுளுக்கு எரியாடி என்ற பெயரும் உண்டு. பழைய காலத்தில் தீ மேடைகள் கூட இருந்ததாகத் தெரிகிறது.

---

# பெரும் விந்தை.

(த. ராமகிருஷ்ண விச்வகர்மன், வேதமாணுக்கன்.)

இவ்வுலகில் ஆங்காங்கு பல விந்தைகள் இருக்கின்றன. இவற்றுளெல்லாம் மக்கள் வாழ்க்கையில் பெரும் விந்தைகள் காணப்படுகின்றன.

க. மாந்தர் பெரும் நகரங்களில் உறைய நினைக்கின்றனர். சிற்றூர்களில் தங்குவார்க்குத் தூய காற்று நன்றாக வீசுவதால் உடல் நலனும் இன்பமும் மிகுகின்றன. பெரும் நகரங்களில் பற்பல நோய்களும் இலவசமாகப் பெறப்படுகின்றன. பிணிகளும் வலிமையின்மையும் கிராமங்களைவிட நகரங்களில் குவிந்திருக்கின்றன. ஆனால் யாவரும் கிராமங்களைவிட்டு நகரங்களில் நெருங்கிய வீடுகளில் நுழைந்து வாழ்வதற்கே விழைகின்றனர்.

உ. மக்கள் உயர்ந்த பெரிய கட்டிடங்களில் குடியிருக்க விரும்புகின்றனர். பெரிய வீடுகள் கட்ட எத்துணைப் பொருட்களைச் செலவிடுகின்றனர். அவற்றுள் நூற்றிலொரு பங்காவது உடம்பு நீண்டநாள் வாழ்வதற்கும் வலிமையடைவதற்கும் செலவிடுவதில்லை. வீடுகளையும் தோட்டங்களையும் சீர்திருத்த வைத்திருக்கும் கவனத்தில் நூறிலொரு பங்குகூட உடம்பு நோயின்றியிருத்தற்கு வைப்பதில்லை.

ந. மக்கள் தங்கள் உடைகள், கழுத்துக்கட்டு, காலர், பூட்ஸ், சூட்டுகளைத் திருத்துவதிலும் புதுப்பிப்பதிலும் எத்துணை செலவிடுகின்றனர்; அக்கறையா யிருக்கின்றனர்? அவ்வாறு தங்கள் உடம்பைக்குறித்துச் சிந்திப்பதில்லை; கவனிப்பதில்லை. உடம்பிற் காகவே இவ்வணிகளென்பதையும் அணிகளுக்காக வன்று இவ்வுடம்பென்பதையும் அவர்கள் உணரவில்லை. புறவணிகளில் மிகுந்த கவனம் செலுத்துகின்றனர். ஆனால் அகத்தே உடம்பிற்காக ஒரு சிறிதும் பொருட்படுத்துவதில்லை.

௪. பலர் உடற்பயிற்சியால் உடம்பை அழகு படுத்துகின்றனர். ஆனால் வீரியத்தைக் கட்டுப்படுத்தத் துணிவதில்லை. வீரியத்தின் தீயபோக்கினால் உடல் கேடுறுகின்றது.

௫. பலர் கல்விப் பயிற்சியாலும் பிற பல்வகை நெறிகளாலும் வீரியத்தைத் தன்வயப் படுத்த முயற்சிக்கின்றனர். ஆனால், மனதைக் கட்டுப்படுத்துவதில்லை. மனதின் தீய எண்ணங்களின் முன்னிலையில் உடம்பும் வீரியமும் சாம்பலாய் விடுகின்றன.

௬. பலர் நல்லெண்ணங்களாலும் அறிவுத்தேட்டத்தாலும் மனதைச் சீர்திருத்த விரும்புகின்றனர். ஆற்றல் தன்னறிவை யாராய்ந்து கவனிப்பதில்லை. தன்னறிவின் தூண்டுதலாலேயே உடம்பின் அகப்புறச் செயல்கள் நிகழ்கின்றன வென்பதும் தன்னறிவின் தகுதிக்கேற்பவே மனிதத்தன்மை பெறப்படுகின்றது வென்பதும் உணர்வதில்லை.

எ. பலர் புத்தியை அறிவு மயமாகவும் அமைதியாகவும் ஆக்க விரும்பிய போதிலும் ஆன்ம ஆற்றலை வளர்க்க முற்படுவதில்லை. புத்தியின் யோக சித்திகளிலும் திறமைகளிலும் அழுந்தி விடுகின்றனர்.

மக்கள் இத்துணைப் புறநிலைப் பட்டிருக்கின்றனர். அக நிலையை யாராய்ந்தால் புறப்பொருட்கள் சிறப்பிலவாம். இவ்வுலகில் யாவற்றினும் மிகுதியாக நிலவுவது இவ் அறியாமையே. உண்மையில் எப்பொருட்கள் மிகுந்த பயனளிப்பன வென்பதை ஒவ்வொருவரும் நன்கு ஆராய்தல் வேண்டும். மக்களகத்து கீழ்க் குறித்த ஆற்றல்கள் மிளிர்கின்றன :—

(க) ஆன்மா :— என்ஞான்றும் உறுதிப் பயன்களையே நாடி வினையாற்றுந் தகையது.

(உ) அறிவு :— மாறுபடாத தூய அறிவை அணியுந் தன்மையது. பக்தி சிரத்தை நம்பிக்கையின் அடித்தானம்.

(௩) உள்ளம் :— சிந்தித்தல் நினைத்தல் நன்மை தீமை ஆராயும் பெற்றியது. தருக்கம் விதருக்கம் குதருக்கத் தானம்.

(ச) புலன்கள் :—அறிவுப்புலன் :— ஓசை ஊறு ஒளி சுவை நாற்றமென்ற ஐம்பொருட்களையும் உணர்கின்ற செவி தோல் கண் நாவு மூக்கென்னும் ஐந்து அறிவுப் புலன்கள்.

தொழிற் புலன் :— ஆசனவாயில் நீர்வாயில் கைகள் கால்கள் வாய் என்னும் ஐந்து தொழிலாற்றும் புலன்கள்.

(ரு) உடம்பு :—மேற்குறித்தபுலன்கள் முதலியன உறையுமிடம். அன்றியும் மிக உயர்வான பொருளொன்றும் தங்கியிருப்பது.

(சு) நுகர்வு :— உலகங்களினின்றும் பெறப்படுகின்ற நலன்களை உடம்பொடு பொருத்தி நிற்பது.

யாவற்றிற்கும் அகத்தே ஆன்மாவும் புறத்தே முறையே அறிவு முதலியனவும் இலங்குகின்றன. அகம் கேடுறுவதால் புறமும் தானே கெடுகின்றது. அகப்பொருட்களை நன்றாகக் கவனித்தல் வேண்டும். ஆனால் உலகத்துச் சாதமாக மக்கள் புறப் பொருட்களையே சிறப்பாக நோக்குகின்றனர். அகப் பொருட்களைக் குறித்துச் சிந்திப்பதில்லை. உலகத்துள்ள வித்தைகளில் இதுவே உண்மையில் சிறந்தது. நன்றாக ஆராய்ந்தால் மக்கள் தங்கள் அகச் சக்திகளைச் சிறப்பாகச் சீர்ப்படுத்துவதே சிறந்ததாகும். அகச் சக்திகளைக் குறித்து ஆராய்கின்றவர் மிகச்சிலரே யாவர்.

மேற்குறித்த சாதாரண மக்களின் நெறியினின்றும் வேறாகப் புறஆற்றல்களில் சிறிதும் கவலை வையாது அக ஆற்றல்களை மட்டிலும் கருதுவார் பலநூர். புறச் சக்திகளை வளர்ப்பவர் கேடடைவது போலவே அகச் சக்திகளை மட்டிலும் வளர்ப்பவர்களும் தாழ்வுறுவர். அகப்புறச் சக்திகள் ஒன்றுக்கொன்று துணை நிற்பன. இரண்டிலொன்றை விடுவதால் துன்பம் விளையும். எனவே வைதிக தர்மத்தில் இரண்டையும் சமமாக வளர்க்குமாறு வற்புறுத்தப்படுகின்றன.

வேதநெறியில் ஆன்மா அறிவு உள்ளம் புலன்கள் உடல் உறைவிடம் குடியமைப்பு நகரம் நாடு முதலியன யாவும் தக்கவாறு வளர்ச்சி பெறுவித்தல் வேண்டுமென்றே ஆய்வுறுத்தப்

படுகின்றது. யாதேனுமொன்றில் கருத்துச் செலுத்தாதிருப்பது தவறாகும். யாவும் அவ்வவற்றின் நிலையில் சிறப்புடையது; ஒன்றின் வளர்ச்சி மற்றொன்றிற்குத் துணை நிற்கின்றது. வேத நெறியில் 'அப்புதய, நிச்ரேயஸ்' புறப்பொருளுயர்வும் அகப் பொருளுயர்வும் பெறவேண்டுவதே குறிக்கோளாகும்.

(க) நிச்ரேயஸ் :— ஆன்மா அறிவு உள்ளம் புலன்களின் உயர்வும் நிறைவும் ஆற்றலின் முழு வளர்ச்சியுமாகும்.

(உ) அப்யுதய :— உடல் குடும்பம் வீடு இனம் கூட்டம் நகரம் நாடு இவற்றின் உயர்வும் நிறைவும் உண்மையான ஆற்ற லின் முழு வளர்ச்சியுமாம்.

புறப்பொருளுயர்வும் அகப்பொருளுயர்வும் கலந்ததே உயர் நெறியாகும். இவற்றின் 'வேத நெறி' எத்துணை நிறைவுடைய தென்பது புலனும். பிற நெறிகளில் இவ்வாறு சமவளர்ச்சித் தன்மை கிடையா. ஒரு சமயத்தில் ஒன்று சிறப்பாகக் கூறப் படின் பிறிதொரு சமயத்தில் மற்றொன்று சிறப்பாகக்கூறப்படும். யாவும் நிறைவுடையதாகவும் சமமாகவும் புகட்டுவது மறைகளே யாகும். இதனை :—

க. வாங்ம ஆஸந் நஸோ: ப்ராணஸ் சக்ஷு ரக்ஷ்ணோ: ச்ரோத்ரம் கர்ணயோ :

அபலிதா: கேசா அசோணு தந்தா பஹு பாஹ்வோர் பலம்.

உ. ஊர்வோரோஜோ ஜங்கயோர் ஜவ: பாதயோ: ப்ரதி ஷ்டா அரிஷ்டாநிமெ ஸர்வாத்மா அநிப்ருஷ்ட:

௩. தநூஸ் தந்வா மெ ஸஹெ தத: ஸர்வ மாயுரசிய ஸ்யோ நம்மெ ஸீத புரு: ப்ருணஸ்வ பவமாந: ஸ்வர்கெ.

௪. ப்ரியம் மா க்ருணு தேவஷு ப்ரியம் ராஜஸு மாக்ருணு. ப்ரியம் ஸர்வஸ்ய பச்யத உத சூத்ர உதார்யெ. அதர்வ வேதம்.

(க) மெ ஆஸந் வாக் :— என் வாய் நற்சொல் வன்மை பெறுக.

(உ) மே நஸோ ப்ராண :— என் மூக்கு உயிர்க்குஞ் சக்தி பெறுக.

(௩) மே அக்ஷ்ணோ சக்ஷு :— என் கண்கள் பார்க்கு மாற்றல் அடைக.

(௪) மே கர்ணயோ ச்ரோத்ரம் :—என் காதுகள் கேட்குந் திறனடைக.

(௫) மே அபலிதா கேசா :— என் மயிர் வெண்மையடை யற்க.

(௬) மே தந்தா அசோண :— என் பற்கள் அழுக்குறா திருந்திடுக.

(௭) மே பாஹ்வோ பஹு பலம் :— என் தோட்கள் மிகுந்த வலிமை பெறுக.

(௮) மே ஊர்வோர் ஓஜ :— என் இடைத் தலம் மிக்கூன் அடைக.

(௯) மே ஜங்கயோ ஜவ :— என் தொடைகள் விரைவு பெறுக.

(௧௦) மே பாதயோ ப்ரதிஷ்டா :— என் அடிகள் நிலைப் புறுக.

(௧௧) மே ஸர்வா அரிஷ்டாநி :— என் (அகக்) கருவிகள் நன்னிலையில் நின்றிடுக.

(௧௨) மே ஆத்மா அநிப்ருஷ்ட :— என் ஆன்மா தாழ்வடை யற்க.

(௧௩) மே தங்வா தநூ :— என் உடலில் (புறக்) கருவிகள் நிலை பெறுக.

(௧௪) மே ஸஹே தத :— என் உழைப்பைத் தாங்கும் ஆற்ற லொடு என் பற்களும் உடலில் நிலைத்திடுக.

(௧௫) ஸர்வம் ஆயு அச்ய :— யான் நெடுநாள் வாழ்க.

(௧௬) ஸ்யோநம் மே ஸீத :— என் (அறிவில்) அமைதி நிலவுக.

(௧எ) மே புரு ப்ருணஸ்வ :— யான் நிறை வெய்துக.

(௧அ) ஸ்வர்கே பவமாந :— யான் தூய்மை பெற்று நல்லு லகில் செல்க.

(௧௯) மா தேவேஷு ப்ரியம் க்ருணு :— யான் அறிஞர்பால் அன்புறுக.

(௨0) மா ராஜஷு ப்ரியம் க்ருணு :— யான் வீரர்பால் அன்புறுக.

(௨௧) மா அர்யே ப்ரியம் க்ருணு :— யான் வணிகர் பால் அன்புறுக.

(௨௨) மா சூத்ரே ப்ரியம் க்ருணு :— யான் சூத்திரர்பால் அன்புறுக.

(௨௩) உத ஸர்வஸ்ய பச்யத ப்ரியம் :— யாவையும் ஒன்றாகக் காண்பவனிடம் யான் அன்புறுக. யான் யாவர்க்கும் நலம் புரிபவனாகுக. உணர்வுடையார் யாவரும் என்பால அன்புறுக.

இவை மறைகளின் அறவுரைகள். உடற் சக்திகளை வளர்ப்பதோடு தேசத்திற்குரிய கடன்களும் செவ்வனே விளக்கப் படுகின்றன. சிறியவற்றுள்மிகச்சிறிய பொருட்களையும் வேதத்து விடாது கூறுவது விந்தையே. பற்கள் அழுக்கடைந்து மஞ்சள் நிறமாகி விரைவில் விழுந்து விடுமாதலால் அவற்றைக் கவனித்தல் வேண்டுமென்று அறிவுறுத்துவதோடு; 'லோகமாந்ய' உலகம் போற்றத்தக்க தலைவனுமாறும் உணர்த்துகின்றது.

நல்லூன் மிக்க உடல் படைத்திடற்கு இவ்வுரைகள் போதிக்கின்றன; எனினும் மருந்துகள் யாதும் உண்ணுமாறு கூறப் படாமை யோர்க. தன் விருப்பாற்றலை (இச்சா சக்தி) உள்ளத்தோடு ஒன்றுபடுத்தி வினை நிகழ்த்தத் துணியின்; அவ் இச்சா சக்தியான் நோயின்மையும் வலிமையும் பெறப்படும்.

வலிமை குன்றிய மனத்தின் காரணத்தால் நோய்கள் பீடிக்கின்றன; வலிமை நிறைந்த மனத்தால் சுறுசுறுப்பும் நிறைந்த உடல் நல்லூழ் பெறப்படுமென்பதுணர்க. இறைவன்பால் இடை

விடாப்பற்றும் மனவுறுதியும் நிலை பெறின் தாம் உடல்வளம் பெறுவதன்னியில் பிறக்கும் இவ்விரு பழக்கத்தின் துணையான் உடல் நலன் நல்குதல் கூடும். யோகப் பயிற்சியின் பயன் இதுவே.

மருந்து முதலிய புறப்பொருட்களில் எத்துணை நம்பிக்கை வைக்கின்றேமோ அத்துணை உடல் நலன் குன்றும். எனவே மக்கள் வெளிச் சக்திகளோடு அகச்சக்திகளை வளர்ப்பதில் மிகுதியும் கருத்துச் செலுத்தற் குரியர்.

மக்கள் அகச் சக்திகளை மறந்து வெளிபுலகிலேயே சுழன்று உழல்கின்றனர். இதுவே யாவற்றினும் பெரும் விந்தையாகும்.

---

# இந்துமதச் சீர்திருத்தம்.

(திரு. கோவிந்தராம் கான்னு எழுதியது)

---

என் சமூகத்தின் நிலைகுறித்து நான் அடிக்கடி நினைப்பதுண்டு அவ்வாறு நினைக்கையில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சிறந்ததோர் நாகரிகத்திற்கு உறைவிடமாயிருந்து வந்ததோர் மாபெரும் சமூகம் நசித்துப் போகத்தக்க சீர்கேடான நிலையிலிருக்கும் பரிதாபக்காட்சியே என்முன் தோன்றும். இவ்விதக் காட்சி என் மனக்கண் முன் தோன்றுகிருக்க நான் எவ்வளவோ முயன்று பார்த்தும் பயன்பெறவில்லை. இவ்வாபத்தினின்றும் மீளத்தக்க நம்பிக்கை எப்பொழுதாவது தோன்றும். எனினும் அந்நம்பிக்கை சிறிது நேரத்திற்கெல்லாம் அகன்றுபோய் விடும். இந்து சமூகம் மரணத்தறுவாயில் மிகுந்த பரிதாபநிலையிலேயே இருந்துவருகின்றது. இக்காட்சி மிகுந்த மனத்துன்பத்தைத்தருகின்றதெனினும் அதனைக்கூறுதிருக்கமுடியவில்லை. இந்துமதத்திற்குப் புத்துயிர் அளிக்க ஆரிய சமாஜத்தார் செய்துவரும் முயற்சிகளும். இத்திங்களின் நிலையைப் பலப்படுத்தவும் அவர்

களுக்குப் புதியதோர் சக்தியினையளிக்கவும் அகில இந்திய இந்துமகா சபையும் அதன் கிளை ஸ்தாபனங்களும் செய்துவரும் முயற்சிகளும் விளக்கு அவிக்கப்போகுமுன் திரி சற்று பிரகாசமாக எரிவதைப்போல், நம்பிக்கை இழந்திருக்கும் எனக்குத் தோன்றுகின்றனவேயன்றி வேறல்ல.

## இந்து சமூகத்தின் தற்போதைய நிலை.

இந்து சமூகம் முன் இருந்த நிலையில் இப்பொழுது இருக்கவில்லை. முன் இருந்தசக்திகளெல்லாம்இழந்து அதன் எலும்புக் கூட்டைப்போலமட்டுமே இருந்துவருகின்றது. அதன் சக்தியனைத்தும் அதனைப் பல நூற்றாண்டுகளாகப்பற்றிக் கொண்டிருக்கும் கொடிய பிளவை நோயால் விழுங்கப்பெற்று விட்டன. இக்கொடிய பிளவை நோய் யாது என்பதை ஒவ்வொருவரும் எளிதில் அறிந்து கொள்ளலாம். ஜாதிப்பாகுபாடே இந்நோயாகும். பாரத வருஷத்தில் (பாரத நாட்டில்) குடியேறிய ஆரியர்கள் வகுத்த ஜாதிப்பாகுபாடே இந்நோயாகும். இதன் பயனாகச் சமூகத்தில் பிளவுகள் பலதோன்றின. இச்சாதிப் பாகுபாடுகள் இந்து சமூகத்திற்கு எக்காலத்திலாவது எத்தகைய நன்மையையாவது அளித்திருக்கின்றதா என்பது எனக்குப்பெரும் சந்தேகமாகவே இருக்கின்றது. யான் பெற்றுள்ள சிறிது சரித்திர அறிவுகொண்டு கடந்த காலத்தின் நிலையினை நோக்குங்கால், இந்து சமூகம் பல ஜாதிகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதால் எவ்வித நன்மையும் எக்காலத்திலும் பெறவில்லை என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. அவ்வளவு கண்டிப்பான முறைகளுள்ளதாகத் துவக்கத்தில்லாத ஆரியர்களின் ஜாதிப்பாகுபாடு இந்து சமூகத்தில் கண்டிப்பான முறைகளுள்ள சாதிப் பிரிவினைகளாக்கி விட்டதென்று இந்துசமூகச் சரித்திரத்திலிருந்து நாம் அறியக்கிடக்கின்றது. தாழ்ந்த வகுப்பாரெனப்படுவோர் தம் மீது ஆதிக்கம் செலுத்தும் புரோகித வகுப்பாரின் ஆதிக்கத்தினின்றும் விடுபட அவ்வப்போது முயற்சித்து வந்திருக்கின்றன ரென்பதையும் அவ்வக்காலத்தில் சிற்சில சாதகங்கள் அவர்கள் அடைந்தபோதிலும் இறுதியில் அப்போராட்டங்கள் சமூகத்தில் புரோகிதர்களது ஆதிக்கத்தை

அதிகமாகப் பலப்படுத்தி வந்திருக்கிறதென்பதையும் காண்கின்றோம்.

## ஜாதி இறுமாப்பு.

முக்கியமான மதச்சடங்குகளும் சமூகச்சடங்குகளுமே பார்ப்பனர்களுக்கு ஏனைய வகுப்பார்கள் மீது பலமான ஆதிக்கத்தைக் கொடுத்திருக்கவேண்டும். காரணம் எதுவாயிருந்தபோதிலும் ஓர் கெடுதலின் பயனாகப் பலகெடுதல்கள் தோன்றி ஒவ்வொரு வகுப்பாரும் சமுதாய விஷயங்களில் தங்களுக்குக் கீழ்ப்பட்ட வகுப்பார்களைக் காட்டிலும் நாங்கள் உயர்ந்தவர்களென்று எண்ணி அவர்கள் மீது ஆதிக்கம் வகிக்கும் நிலை ஏற்பட்டுவிட்டன. இரத்தக்கலப்பு (கலப்பு மணம்) சமபந்தி போஜனம், சாதாரணமாக ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகுதல் முதலியனவுங்கூட ஜனங்களிடையே நின்றுவிட்டது. இவ்வாறாக வல்லமை பொருந்தியதோர் சமூகத்திற்குரிய சக்திகளனைத்தும் பாழ்பட்டுப் போயின. பல வகுப்பாருள்ளும் ஒருவருக்கொருவர் இருந்துவரவேண்டிய அனுதாப குணமும் அற்றுப்போயிற்று. ஜாதி இறுமாப்பு அதிகரித்தது. ஆன்ம ஞானப் பேற்றைப் பெறுவதற்கும், இறுதியான மோட்ச வீடு பெறும் நிலையெய்துதற்கும் இச்சாதி இறுமாப்பு எவ்வளவு பாதகமாயிருக்கிறதென்பதைப் புத்தர் பெருமான் கண்டார். சாதி வழக்கத்தை யொழிக்கப் பாடுபட்டார். சமூக விஷயங்களிலும் மதவிஷயங்களிலும் மனிதர்களுள் சமத்துவம் இருக்கவேண்டுமெனப் போதித்து வந்தார். இவற்றின் பயனாக இவ்விரு அம்சங்களிலும் முதன் முதலாக ஜனநாயகக் கொள்கை புகுத்தப்பட்டது.

## மீண்டும் பாகுபாடு.

புத்த மதம் வீழ்ச்சியுற்றதும் மீண்டும் பிராமணியம் ஆதிக்கம் வகிக்கத்துவங்கியதும் இந்து சமூகத்தைப் பாழ்படுத்தி வந்த அம்சங்கள் மீண்டும் தோன்றின. இச்சாதிப் பாகுபாடுகள் நாளடைவில் பெருகி இப்பொழுது பல சாதிகளும், அவற்றுள் பிரிவுகளும் உபபிரிவுகளும் தோன்றி நம்முன் பரிதாபகரமானதோர் நிலையில் நாம் காண்கின்றோம்.

## சாதிப்பாகுபாடும் அரசியல் வாழ்க்கையும்.

இந்துதேச சரித்திரத்தைச் சிறிது கற்றிருப்பவருக்கும் இச்சாதிப் பாகுபாடு இந்துக்களின் அரசியல் வாழ்க்கையை எவ்வளவு தூரம் பாழ்படுத்தியிருக்கிற தென்பது இனிது விளங்கும். இந்துக்களை அன்னிய நாட்டார் ஜெயித்து அரசியல் விஷயங்களில் அடிமைப்படுத்தி யிருப்பதற்குரிய காரணங்களை அலசிப் பார்ப்போமாயின் இருவிஷயங்களை முதன்மையாகக் காணலாம். முதலாவது சாதாரண ஜனங்கள் அளவுக்கு மிஞ்சிய நாகரிக நிலையடைந்து போர்புரிவதில் அவர்களுக்கு வெறுப்புத் தோன்றியதாகும். இரண்டாவது ஜாதிப் பாகுபாடாகும். இந்தியாவின் ஜனத்தொகை கோடிக்கணக்காக இருந்ததையும், வெளிநாடுகளிலிருந்து படையெடுத்து வந்தவர்களின் தொகை வெகு குறைவாக இருந்ததையும், உயர்ந்த மலைகளும், பரந்த காடுகளும், பெரிய நதிகளும் இயற்கையரண்களாக இருந்து வருவதையும் கவனிக்குமிடத்து மேற்கூறிய இரண்டுமே இந்து மக்களின் அரசியல் அடிமைத் தனத்திற்குக் காரணமாயிருந்திருக்க வெண்டுமென்று எண்ணவேண்டியிருக்கிறது. இவ்விரு காரணங்களுமில்லையேல், இந்துக்கள் அவ்வளவு விரைவாக அடிமைப்பட்டிருக்க முடியாது. இது ஆச்சரியத்திற்குரியதோர் மகத்தான விஷயமாகும். வேறு பெரிய சமூகமெதுவும் இவ்வளவு இலகுவாக ஜெயிக்கப்படவில்லை. வெளிநாட்டார் நம்மீது படையெடுத்து வந்த சரித்திரத்தைப் படிப்போமாயின் நம்மை இழிவுபடுத்துவதாகவும் அவமானப்படுத்துவதாகவுமே தோன்றும். இடையிடையே இராஜபுத்திரர்கள் காட்டிய வீரச் செயல்களும் சில மிளிர்கின்றன. இராஜபுத்திர வகுப்பார் மட்டுமே போர்புரியும் இனத்தவராக இருந்து வந்திருக்கின்றனர். அவர்களுள்ளும் ஒற்றுமை நிலவி வரவில்லை. எனவே இராஜ புத்திரர்களது படை எங்கு தோல்வியுற்றதோ அங்குள்ள ஏனைய வகுப்பார்களனைவரும் மாற்றார் அடிபணிவதைத் தவிர வேறு வழி கிடையாது. ஏனெனில் நமது ஜாதி முறைப்படி வேறெவ்வகுப்பாருக்கும் போர்ப் பயிற்சி அளிக்கப் பெறுவதில்லை. எனவே க்ஷத்திரிய வகுப்பினைச் சார்ந்த ஒரு சிறு படை தோல்வியடைவது ஓர் பெரிய அரசாங்கத்தின் தோல்வியாக நேர்ந்து வந்தது.

## மதமாற்றத்திற்கு உண்மைக்காரணம்.

மகமதிய அரசர்களும் இந்தியாவின்மீது படையெடுத்து வந்த மகமதிய வீரர்களும் கொடுமையான முறைகளைக் கையாண்டதாலேயே கோடிக்கணக்கான இந்துக்கள் மகமதிய மதத்தைத் தழுவ நேர்ந்ததெனக் கருதுவது தவறாகும். இந்தியாவின்மீது படையெடுத்து வந்து வெற்றிபெற்ற மகமதிய வீரர்கள் இந்துக்களைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொள்ளும் மனப்பான்மையுடையவர்களா யிருந்தன ரென்பதிலும், கத்திமுனையால் பயமுறுத்திப்பலரை மகமதியமதத்தில் சேர்த்துக்கொண்டார்களென்பதிலும் சந்தேகமில்லை. எனினும் கடந்த எட்டுநூற்றாண்டுகளில் மகமதிய மதத்தில் சேர்ந்திருப்பவர்களனைவரும் பலாத்காரத்தால் மட்டும் அம்மதத்தினைத் தழுவநேரவில்லை யென்பதைக் குறிப்பிட வேண்டுவது அவசியமாகும். மொகலாய ஏகாதிபத்தியம் அழிந்து தக்காணத்திலும் மத்திய இந்தியாவிலும் மகாராஷ்டிர ராஜ்யமும், பாஞ்சாலத்தில் சிக்கியர் ராஜ்யமும் தோன்றியகாலத்தில் மகமதியர்களின் அரசியல் ஆதிக்கம் தொலைந்து போயிற்று. எனினும் இந்துக்கள் மகமதியர்களாவதுமட்டும் நிற்கவில்லை. மனதுக்கு எவ்வளவு வெறுப்பைத் தருவதாயினும் உண்மையை வெளியிடாதிருக்க முடியவில்லை இந்துக்களின் ஊழலான சமூக முறையே இந்துக்கள் பலர் மகமதிய மதத்தில் சேர்ந்துகொண்டிருந்ததற்கும், சேர்ந்துகொண்டிருப்பதற்கும் காரணமாகும். பிரிட்டிஷாரது ஆதிக்கம் இந்தியாவில் ஏற்பட்டதும் பலவந்த மதமாற்றம் நின்றுவிட்டது. எனினும் அத்துடன் மத மாற்றம் நின்றுவிட்டதா? மிருக பலம் உபயோகிப்பட்டே இந்துக்கள் மகமதிய மதத்திற்கு மாற்றப்பட்டார்கள் என்ற எண்ணத்தை விட்டுவிடுவோமாக! தற்புகழ்ச்சியும் தாமாகத் திருப்தியடைதலும் மனிதர்களுக்குப் பெரும் விரோதிகளாகும். நாம் உண்மைகண்டு தவறுகளை அகற்றவேண்டுமாயின் மேற் கூறியவைகளைக் களையவேண்டும். நிர்ப்பந்த வைதவ்யம், இந்து சமூகத்தைச் சேர்ந்த பற்பல வகுப்பார்களுள்ளும் சமத்துவ மின்மை, தீண்டாதவர்களென நாம் ஒதுக்கி வைத்திருக்கும் ஒரு சாராரை மிருகத்தனமாக நடத்துதல் ஆகியவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து கோடிக்கணக்கான இந்துமக்

களை இஸ்லாம் மதம் புகும்படி செய்திருக்கின்றனவே யன்றி வேறல்ல. தற்போது இந்து சமூகம் இருக்கும் நிலையினின்றும் முற்றும் மாறுவிட்டால் இம் மதமாற்றம் அதிகப்பட்டுக் கொண்டிருக்குமேயன்றிக் குறையுமென்று எண்ண வழியில்லை. சமத்துவ உணர்ச்சி யாண்டும் பரவி வருகின்றது. உலகமெங்கும் ஜன நாயகக் கொள்கைகள் தோன்றி பாகுபாடுகளை யெல்லாம் ஒழித்து யாவருக்கும் சம சுதந்திரத்தையும் சம வசதிகளையும் அளித்து வருகின்றன. இந்தியா பிரிந்து ஒதுங்கி வாழ்ந்துவரும் ஓர் தனித்தேசமல்ல. உலக சக்திகள் இந்திய சமூக முறைகளைப் பாதிக்காமலிருக்க முடியாது. வெளியுலகில் தோன்றியுள்ள சமத்துவக் காற்று இந்தியாவிலுள்ள தீண்டாதார் என்றழைக்கப்படுவோர் மீதும் வீசியிருக்கின்றது. அவர்கள் மனத்தில் புதிய எண்ணங்களும் கோரிக்கைகளும் தோன்றியிருக்கின்றன. சமமாகத் தாங்கள் நடத்தப்படவேண்டுமென்றும், மனித வருக்கத்தார்களுக்குள்ள உரிமைகளை தாங்களும் அனுபவிக்க வேண்டுமென்றுமுள்ள அவர்களது அவா இப்பொழுது வெகுவாக அதிகரித்திருக்கின்றது. இந்துசமூகத்தின் உறுப்பினர்களாயிருக்கையில் அவர்களது இவ்வவா பூர்த்தி செய்யப்பட வில்லையாயின் இவ்வவாவை நிறைவேற்றிக்கொள்ள வேறு மதத்தில் அவர்கள் சேருவார்கள். இதன் பயனாக நேரக்கூடியதென்ன? இந்துசமூகம் சிதறுண்டு நாளடைவில் அழிந்து போவதேயாகும். இந்துக்கள் தங்களது போக்கை மாற்றிக் கொள்ளுவார்களென்றெண்ணச் சிறிதும் இடமில்லை. கடந்த காலங்களில் எவ்வளவோ எச்சரிக்கைச் சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. இக்காலத்திலும் இந்துமக்களை எச்சரிக்கும் சம்பவங்கள் எவ்வளவோ நிகழ்ந்துவருகின்றன. எனினும் அவர்கள் விழிப்படைவதாகக் காணோம். சீர்திருத்த உணர்ச்சியே அவர்களிடம் இல்லாதொழிந்துபோயிற்று. இந்தியாவில் தோன்றிய சீர்திருத்த இயக்கங்களனைத்தும் சிறிதுகாலம் வெற்றியுடன் நடைபெற்று பிறகு கற்பாறையின்மீது மோதிய மரக்கலங்கள்போல் சிதறுண்டு போயிருக்கின்றனவேயன்றி வேறல்ல. புத்தர், சைதன்யர், நானக், கபீர், ராமதாஸ், ஏகநாதர், நாமதேவர் முதலிய பல

மகான்கள் தோன்றி மனிதவருக்கத்தார் அனைவரும் சமம் என இந்துக்களுக்கு அவ்வப்பொழுது போதித்து வந்திருக்கின்றனர். அவர்களது உபதேசங்களெல்லாம் இந்துசமூகத்தைச் சீர்திருத்த முடியவில்லை. எந்த சீர்திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ளாத நிலையில் இந்துக்களின் மனப்பான்மை இருந்துவருகிறதென்றே எண்ணவேண்டியிருக்கிறது. ஆகவே இந்துசமூகம் அழிவுறும் நிலைக்குச் சென்றுகொண்டிருக்கின்றது என்று நான் கூறவேண்டியதாயிருக்கின்றது.

## ஒரே வழிதானுண்டு.

எனவே சீர்திருத்துவதென்பது சாத்தியமில்லாதிருப்பதால் இந்துசமூகம் அழிந்துபோகாமலிருக்கும்படி செய்வதற்கு ஒரே ஒரு வழிதான் எனக்குத் தோன்றுகிறது. அதாவது சமூகப் புரட்சி யொன்று ஏற்பட வேண்டுமென்பதேயாம். இந்தியாவிலுள்ள பெரியாரெவரேனும் வேறு விஷயங்களெதிலும் தலையிடாது இந்து சமூகத்திலுள்ள சாதிப் பாகுபாடு எனும் கொடுந்துன்பங்களை யொழித்துச் சமத்துவத்தை நிலைநாட்டவும், இறுமாந்திருக்கும் உயர் வகுப்பாருக்கு விரோதமாக ஏனையோரைக் கிளப்பவும் முன்வரவேண்டும். மகாத்மாகாந்தி இவ்வேலையை மேற்கொள்ள வேண்டுமென்பது எனது விருப்பம். ஏனெனில் இவ்வேலைக்கு சமத்துவம், அஞ்சாமை, வீரம் பொதுஜனக் கண்டனத்தைப் பொருட்படுத்தாமை, எதிர்ப்புகளுக்கும் கண்டனங்களுக்கும் அஞ்சாமை, சகிப்புத்தன்மை முதலிய குணங்கள் அமையப்பெற்றவர்களே தேவை. இத்தகைய குணங்களெல்லாம் மகாத்மா காந்தியவர்களிடம் அமைந்துள்ளன. இப்புரட்சிக்குக் காரணஸ்தனாக நானே முன்வர வேண்டுமென்பதும், தீண்டாதவர்கள் எனப்படுவோர் உள்ளத்தில் உண்மைச் சத்தியாக்கிரகக் கொள்கையைப் புகுத்தி பிராமணர்களையும் தாங்கள் உயர்ந்தோரென அக்கிரமமாகக் கருதிக்கொள்ளுபவர்களையும் அடிபணியச் செய்து ஒடுக்கப்பட்டவர்களைச் சமமாக நடத்தும்படி கிளர்ச்சி செய்ய அவர்களைத் தூண்டவும் நான் முன்நிற்க வேண்டுமென்பது எனது அவா. மேல்வகுப்பார் எனப்படுவோரிடத்தில்

தங்களை அன்பாக நடத்தும்படி அவர்கள் ஏன் இரந்து கேட்க வேண்டும்? ஆடுமாடுகளுக்குங்கூட நாம் வழங்க மறுக்காத உரிமைகளுக்காகவும், பொதுக்கிணறுகளில் தண்ணீர் எடுத்துக் கொள்ளுதல் போன்ற சிறு உரிமைகளுக்காகவும் அவர்கள் மேல் வகுப்பாரென்போரிடத்தில் ஏன் தங்கள் கைகளைக்கட்டிக்கொண்டு நிற்கவேண்டும்?

## தென்னாட்டுப் பார்ப்பனர்.

சமத்துவம் அவர்களது உரிமையாகும். அவர்களது உரிமைகளை இந்துசமூகம் ஏற்றுக்கொள்ளவில்லையாயின் இவ்வுரிமைகள் மேல் வகுப்பார் என்போரிடமிருந்து பறித்துக்கொள்ளப்படும். முடியுமானால் சமூகப்புரட்சி ஏற்படுத்துவதால்மட்டுமே கதிமோட்சமடைய முடியும். தாங்கள் தெய்வலோகப் பிறவிகளென்றும் ஏனையோர் மிருகங்களிலும் கேவலமானவர்களென்றும், அவர்களது நிழல்கூட தங்களைத் தீட்டுப்படுத்திவிடுமென்றும் கருதி இறுமாந்திருக்கும் தென்னாட்டுப் பார்ப்பனர்களின் செவிகளில் எனது சொற்கள் நுழையுமா? அவர்கள் மனித வருக்கத்தை பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் என இருபிரிவுகளாகப் பிரித்துவிடுகின்றனர். முந்தியவர்கள் மிக மிக உயர்ந்தவர்களென்றும் பிந்தியோர் தாழ்ந்தவர்களென்றும், தங்கள் உடைகளைத் தொடுவதற்குங்கூட அவர்கள் தகுந்தவர்களன்றென்றும் அவர்கள் கருதுகின்றனர். மனித வருக்கத்தாரை இவ்வாறு அவமதிப்பது தெய்வத்திற்கடுக்குமா? இவர்கள் போன்ற இறுமாந்தவர்கள் இழைக்கும் தீவினைக்குத் தகுந்தவாறு தண்டிக்கப்படவேண்டும். இப்பொய்ப் புரோகிதர்களை உன்னத பீடங்களிலிருந்து வீழ்த்தும் முயற்சியில் நாம் வெற்றி பெறுதவரை தெய்வம் இந்து சமூகத்திற்கு அருள் பாலிக்காது.



# பத்திரிகை யாராய்ச்சி.



## இராட்டையும் பொன்னுடும்.

'குடிநூல்' பத்திரிகையில் ச. து. சு. எழுதுவதாவது:—

'பொன்னுடென்னும் சொர்க்கத்தே போம்பொழுதும் கக்கத்தே ராட்டையைச் சுமப்பதேனோ?' என்பது தண்டலையார் சதகத்தில் ஓர் பாடலில் கடைசி வரி. அக்காலத்துத் தமிழ் நாட்டைப் பொன்னுடாக்கிய தாம் இராட்டினம். 'இராட்டை உலகத்தில் பொன்னுட்டுச் சுகத்தைக் கொடுக்கிறது. நீ இப்பொழுது பொன்னுட்டிற்கே செல்லப்போகின்றாய். இன்னும் இராட்டையை என் கக்கத்தே சுமக்கின்றாய்' என்று கவி கேட்கின்றான். தமிழ் நாட்டைப் பொன்னுடாக்கிச் செல்வங் கொழிக்க வைத்த இராட்டை மறையவே நம் நாட்டுச் செல்வம் செத்து விட்டது என்பதில் தடையென்ன?

## ஆப்கன் மன்னரும் நாட்டுச் சாமான்களும்.

'இந்தியன் ரெவியூ' எனும் திங்களேட்டின் ஜுலை மாத இதழில் ஆப்கன் அமீர் அமனுல்லாகானைப்பற்றி திரு. வி. பி. மேட்டா எழுதியுள்ள கட்டுரையில் கீழ்காணும் விவரம் காணப்படுகின்றது :—

ஆப்கன் அமீர் நாட்டுத் தொழில் முன்னேற்றத்தில் பெரிதும் ஊக்கமுடையவர். ஆப்கானிஸ்தானத்தில் தயாரிக்கப்படும் உடைகளையும் பாதரட்சைகளையும் மட்டுமே அவர் அணிகின்றார். அரசாங்க ஊழியர்கள் அனைவரும் அவ்வாறே செய்யவேண்டுமென்று அவர் உத்திரவிட்டிருக்கின்றார். சமய நூல்கள், போர்த்தளவாடங்கள் இவற்றைத் தவிர ஏனைய இறக்குமதிப பொருட்களுக்கெல்லாம் கடுமையான வரி விதித்துள்ளார். ௧௦௦-க்கு ௨௦௦-வீதங்கூட சிற்சில பொருட்களுக்கு இறக்குமதி வரி விதிக்கப் பெற்றுள்ளது. பெஷாவார், பராசினர், குவெட்டா இவ்விடங்களில் ஆப்கானிய வியாபாரப் பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் ஆப்கானிய தூதர்கள் உள்ள இடங்களிலெல்லாம் வியாபாரப் பிரதிநிதிகளும் அனுப்பப்பெற்றுள்ளார்கள். ஆங்காங்கே ஆப்கன் வியாபாரத்தை வளர்ப்பதற்கு வழி கண்டு பிடிப்பதே அவர்களது வேலை. ஆப்கானிஸ்தானத்தில் பாங்கிகள் கிடையா. எனெனில் வட்டி வாங்குதல் குர் ஆன் கட்டளைகளுக்கு மாறுனதாகும். அரசாங்கத் தொழிற்

சாலைகள் அனைத்திலும் ஜனங்கள் சென்று பற்பல பொருட்களும் எவ்வாறு செய்யப்படுகின்றன என்று பார்த்துக் கற்றுக்கொள்ளலாம்.

## பாலுக்குப் பதிலாக இளநீர்.

புதுச்சேரியில் வசிந்துவரும் இயற்கை வைத்திய வல்லுனர் திருவாளர் கி. லட்சுமண சர்மா அவர்கள் "லோகோபகாரி"ப் பத்திரிகையில் எழுதுவதாவது:—

பாலுக்குப் பதிலாக உதவக்கூடியது இளநீர். இதை நான் பல நாட்களாக கீழ்காணும் விதிகளின்படி பருகிகுணம் பெற்றிருக்கிறேன். நோயாளருக்கும் இதையே உணவாகக் கொடுத்து குணமாவதையும் பார்த்திருக்கிறேன். இளநீரானது பாலைக்காட்டிலும் மேலான உணவு. பாலுக்குள்ள குற்றங்கள் ஒன்றும் இதற்கில்லை. பாலுக்கில்லாத குணங்கள் பல இதற்குண்டு. மூளை சட்டின கொத்துக்கடலையும் பாலுக்கு நிகராகுமென்று சொல்லக்கேட்டிருக்கிறேன். எனக்கு நேரில் தெரியாது. ஆனால் இளநீர் உயர்வான உணவாகையால் அதற்குச் சில கட்டுப்பாடுகள் உண்டு. அதைமட்டிலும் உணவாகக்கொண்டு மற்ற உணவுகளை அவ்வேளைக்கு மட்டிலாவது விலக்கவேண்டும். ஒரு இளநீருக்குமேல் உண்ணவேண்டுமாயின் நீரைமட்டிலும் ஒரு தடவை குடித்துவிட்டு அதன் பின் சுமார் ஒரு யாமம் சென்று மறு பசி வரும்போது அதன் இளந்தேங்காயைப் புசிக்கவேண்டும். நீரும் தேங்காயும் ஒரே சமயத்தில் வயிற்றில் சேரக்கூடாது. ஆனால் ஒரு இளநீரோடு நின்றால் இரண்டும் சேரலாம்.

## அன்னிய மொழிக்கு வரி.

'தமிழ்நாடு' பத்திரிகையில் கீழ்காணும் விவரம் காணப்படுகின்றது:-

சிறிது காலமாக இத்தாலியில் பிற பாஷைகளின் பகிஷ்காரம் தீவிரமாக நடைபெற்று வருகின்றது. தெருக்களிலுள்ள விளம்பரங்கட்கும் மற்ற போர்டு முதலிய வற்றிற்கும் இத்தாலிய மொழிதான் உபயோகிக்கப் படவேண்டுமாம். பிறபாஷைகளை இத்தகைய விஷயங்களுக்கு உபயோகிப்பவர்களுக்குப் புதிய வரி போடப்பட்டிருக்கின்றது. ஹோட்டல்கள் கூட 'அல்பர்கோ' என்ற இத்தாலியப் பெயரால் அழைக்கப்படவேண்டுமாம். 'ஹோட்டல்' என்ற பிறபாஷைப் பெயரை வைத்துக்கொண்டால் அதற்காகப் புதிய வரி செலுத்த வேண்டுமாம். ஸினர் முஸோலினி பிறபாஷைப் பகிஷ்கார சம்பந்தமாக புதிய உத்திரவொன்றும் பிறப்பித்திருப்பதாகத் தெரிகின்றது. அவ்வுத்திரவின்படி கடற்

படையதிகாரிகள் ஆகாயத் தந்திகள் அனுப்பும்போது அவர்கள் உபயோகிக்கும் பரிபாஷைகளில் பிற பாஷை கலந்த பதங்களை உபயோகிக்கக் கூடாதென்று தடுத்திருப்பதாகத் தெரிகிறது. கடற்படை சம்பந்தமாகப் பல முக்கிய ஆங்கில பதங்கள் ரோம் நகரிலும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. இவற்றிற்கெல்லாம் இத்தாலிய பாஷையில் வேறு பதங்கள் உபயோகிக்கப்படவேண்டுமென்று ஸினர் முஸோலினி வற்புறுத்துகிறாம்.

## புலால் மறுப்பு.

மிஸ்டர் 'விட்னிபியர்ட் எனும் ஆங்கிலேயர் மேனாடுகளில் புலால் மறுப்பு இயக்கம் எவ்வாறு வளர்ந்தோங்கி வருகின்றது என்பது குறித்து பத்திரிகைகளில் நீண்டதோர் கட்டுரை வரைந்துள்ளார். அதன் ஒரு பகுதி வருமாறு:—

௧௮௫௨-ம் ஆண்டில் ஆங்கில அரசாங்கத்தார், ஐரோப்பாவிலுள்ள விவசாயத் தொழிலாளரின் உணவைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஒருவரை நியமித்தார்கள். அவருடைய அறிக்கையில், அக்காலத்தில் ஸ்வீடன், ருஷியா, இத்தாலி, பவேரியா, அயர்லாந்து, ஹாலந்து இந் நாடுகளில் விவசாயத் தொழிலாளரில் மிகப் பெரும்பான்மையோர் புலால் அருந்துவதில்லை யென்றும், ஸ்காத்லாந்து, ஸ்விட்ஸர்லந்து, பிரஷ்யா இந் நாடுகளின் குடியானவர்கள் அபூர்வமாக எப்போதேனுந்தான் புலால் உண்கிறார்களென்றும் குறிப்பிட்டிருக்கிறார். உடல் வலிமையும் தேக சுகமும்பெற்ற ஜப்பானியரில் பெரும்பான்மையோர் மாமிசம் புசிப்பதில்லை. பெயர்பெற்ற வீரர்களான சீக்கியர்களும், கூர்க்கர்களும், சண்டையில் அபஜெயம் என்பதை அறியாத அராபியர்களும் புலால் உண்பதில்லை. ஐரோப்பாவில் பற் பல மடங்களையும் சேர்ந்த சந்நியாசிகள் புலால் உண்ணாமலே சிறந்த தேக வலியுடன் இருக்கிறார்கள். பண்டைக் காலத்தில் பல நாடுகளை வெற்றி கொண்ட ரோம வீரர்களும், கிரேக்க நாட்டின் சிறந்த மல்லர்களும், கிறிஸ்தவ மதத்தின் அப்போஸ்தலர்களும், பொதுவாக ஆதிகாலத்துக் கிறிஸ்தவர்களும் புலால் உண்ணாதவர்களா யிருந்தனர். நமது சொந்த நாட்டில் (பிரிட்டனில்) இக்காலத்தில் புலால் விலக்கு விரதம்பூண்ட ஆயிரக்கணக்கானவர் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் தாங்கள் புலால் உண்ட காலத்தில் இருந்ததைவிட இப்போது அதிக சுகத்துடனும், மன மகிழ்ச்சியுடனும் வாழ்வதாக அத்தாட்சி கூறுவார்கள். அவர்களில் பல வகை உடற் பயிற்சிப் பந்தயங்களில் வெற்றிபெற்றவர்கள் எவ்வளவோ பேர் உண்டு.

சிவமயம்.

# "குமரன்"



எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை சு. | காரைக்குடி பிரபவ-ஹூ ஆவணி-மீ | மணி கக

## ஆலயப் பிரவேசம்.

திரு. பே. பெரி. சுப்பிரமணியன் செட்டியார்.

ஆலயம் அல்லது கோவில்களில் ஹிந்துமத சம்பிரதாயப் படி கெர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் என மண்டபங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இன்னின்ன மண்டபத்துள் இன்னின்னார்தான் பிரவேசிக்கலாம் அல்லது நுழையலாம் என்ற விதியும் செய்யப்பட்டிருக்கிறது. தீண்டப்படாதார் அல்லது தாழ்த்தப்பட்ட மக்கள் என்பாருக்கு இச் சட்டங்களில் இடங்கிடையா. ஆலயங்களிருக்கின்ற வீதிகளின் வழியேயும் அவர்கள் நடக்கப்படாதெனப் புறம்பான சட்டமொன்றை ஆக்கி வைத்துள்ளார்கள். ஆகவே வீதிகளின் வழியே செல்வதற்கு உரிமையற்றவர்கள் கோயில்களுள் நுழைவதெப்படி? தாழ்த்தப்பட்ட மக்கள் உண்மையில் ஹிந்துக்களாகவிருந்தும், சைவ சமயிகளாக விளங்கியும், சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்ற நம்பிக்கைகொண்டிருந்தும், அப்பெருமானை வணங்குதல் வேண்டுமென்ற பேரவாப் படைத்திருந்தும், அவர்களுக்கு நோன உரிமை அளிக்க மறுக்கப்பட்டு வருகிறது. விஷ்ணு வழிபாட்டினர்க்கும் பிற தெய்வ வழி பாட்டினர்க்கும் இங்ஙிலையே. இதற்குக் காரணம் புலால் உண்ணுவதாலும், கட்குடிப்பதாலும், பிற ஒழுக்கங்களின்மையாலும் தான் எனில்

அஃது ஓர் புடை நேர்மை யுடைத்தெனலாம். ஆனல் வைதீக சித்தாந்திகள் தாழ்த்தப்பட்ட குலத்தில் அம் மக்கள் பிறந்தமையால் அவர்களுக்கு ஆலய வீதிகளில் நடத்தற்கும் உரிமை இல்லை என்று உரைக்கிறார்கள். உரையளவோடு நில்லாது இஃது நாங்களாகக் கூறும் மொழிகளல்ல; இதற்கு வேத, ஆகம, புராண, இதிகாச, ஸ்மிருதிகளிலும் ஆதார மிருக்கிறதென்று பழைய புளுதக் குப்பைத்தொட்டியைக் கிளறவும் ஆரம்பித்து விடுகிறார்கள். பழைய ஓலைகள் ஒரு புறமாக விருக்கட்டும். அதில் வேண்டுவன விருப்பின் கொள்ளுவோம், வேண்டாதன விருப்பின் தள்ளுவோமெனின். "ஆ! நாஸ்திகன்! நாஸ்திகன்!!" என்று ஓலமிடுகிறார்கள். ஆராய்ச்சி முறையால், அறிவுசான்றோரால் கொள்ளப்படும் பொருளிருப்பின், அன்னம் தண்ணீரை அகற்றிப் பாலைப் பருகுவதை ஒப்பப் பழைய ஓலைகளில் கிடக்கும் பொருள்களில் நேர்மையானதைக் கொள்ளுவதன்றோ சீலமாகும்? அஃதை விடுத்து அப்பழைய ஓலைகளில் எழுதியிருப்பவைகள் எல்லாம் தெய்வ மொழி என்றும், அம்மொழியில் ஐயுறுவார்க்கும், அஃதை ஆராயப் புகுவார்க்கும், பொய்யெனப் புகல்வார்க்கும் அ௯—நூறு ஆயிர நரகங்களில் மிகத்தீமையும் கீழ்மையும் படைத்த ரௌரவாதி நரகம் கிடைக்குமென்றும் கூறி அச்சுறுத்தி விடுகின்றார்கள். இவ் வன்கண்ணர்களின் அச்சுறுத்தலுக் கஞ்சியே மக்கள் அறிவு மழுங்கப் பெற்றதோடு நமது ஹிந்துமதமும் மிகத்தாழ்மையும், கீழ்மையும் அடைந்து விட்டது. அறிவுச்சுடர் கதிர்விடு மின்னுளில் கேட்பவற்றிற்கு நேர்மையான விடையிறுக்க முடியாது பழைய ஓலைகளின் பேரில் பழியைச் சுமத்துவது வீண் பரிதாபச் செயலேயாகும். ஆயினும் இவர்கள் கூற்றுக்கு யாம் உடன்பட ஒரு சிறிதும் பின் வாங்குகின்றேமில்லை. ஆனல் எமது கேள்விகட்கு நேர்மையான விடைவேண்டும். (க) அநேக இலட்சம் வருஷங்கள் வரையில் தனிப்பட்ட ஒரு மனிதன் வாழ்ந்துள்ளான் என்பது பழைய ஓலைகளின் தெய்வ மொழி. இற்றை நாளில் ஆயிரம் ஆண்டுகள் வேண்டாம், ௨௦௦ யாண்டுகட்கு உயிரோடு வாழும் மனிதர்களை யாம் கண்டதுண்டா? (உ) பல தலைகளோடு மனிதனிருந்தானென்பது புராணவுரை. இரண்டு தலைகளோடு இந்நாளில் யாம் ஒரு மனிதனைக் காண்கின்றேமா?

(௩)பானைமுகம், குதிரை முகம், சிங்கமுக மாதிய விலங்கினங்களின் தலையினைத் தாங்கிய மனித உடல் இருந்ததாகப் பழைய சுவடிகள் கூறுகின்றன. இன்று அந்நிலையான மனிதனிருக்கின்றானா? இவையே போன்று பல்லாயிரம் கேள்விகளை எம்மனோர் அடுக்கடுக்காகக் கேட்கின்றார்கள். அவைகட்குச் சிரிய விடை செப்பி ஒப்பவைப்பின் அவர்கள் வழிச்சென்று ஒழுகற்கு எம்மனோர் முன்னணியில் நிற்கின்றார். அஃதை விடுத்து வெறும் ஒலை வேதாந்தம் பேசுவதாற் பயனென்? இது கிடக்க புலால் உன்பானும், கட் குடிப்பானும், சிலமில்லானும் கோயிலினுட் புகுதல் ஒரு வகையில் ஒவ்வா என மேற் கூறப்பட்டுள. இதற்கு உடன்படுவாரும், மறுப்பாரும் உளர். அது ஒரு புறமிருக்கட்டும். தாழ்த்தப்பட்ட மக்கள் மட்டும் புலை உண்டு, கட்குடித்து, சிலமின்றித் திரிகின்றாரில்லை. பார்ப்பான் ஆவுரித்துத் தின்றுழன்றும், கட்குடித்து அறிவு கேடுற்றலைந்தும், சிலமின்றிக் கோலமுற்றுக் குலைந்தும் மிகக் கேவலமாகத் திரிகின்றான். இஃதேபோன்று ஒவ்வொரு குலத்தவனும் கீழ்மையாகவே காணப்படுகின்றான். ஆகவே எக்குலத்திலும் முற்றாகவே நல்லாரில்லை என்று யான் கூற வரவில்லை. அத்தியூக்தாற்போன்று ஆயிரத்தொருவனிருப்பதும் அரிது! அரிது!! இந்நிலையில் எக்குலத்தான் கோயிலுட் புகலாம். எக்குலத்தான் புகுதல்படாதென வரை யறுத்தல் முடியுந் தன்மையதன்று. முடிவாகக் கூறுமிடத்து எக்குலத்தானும் கோயிலுட் புகலாம் என்பதே நேர்மையுடைத்து. அல்லது நல்லார் புகலாம் அல்லார் புகப்படாதென முடிவுகட்டின், நல்லார் பொல்லாரின் திறம் ஆய்ந்து நல்லவரைக்கண்டு ஒவ்வொரு பகலிலும், ஒவ்வொரு கோயிலிலும் உட்புகச் செலுத்துபவர் யார்? இதற்கொரு பண்டாரச் சந்நிதி நியமிப்பின் அது பழங்கதையினை நினைவிற்குக் கொண்டுவரும். அதுவும் தொல்லை. பாபி வீட்டிலும் பகலவன் கதிரைப் பரப்புமாறு போல பரமன் அறநெறியாளனிடத்தும், மறநெறியாளனிடத்தும் விளங்குகின்றான். எல்லாரையும் அன்பாகவே பெருமான் எண்ணுகின்றான். ஆகவே அப்பெருமானை வணங்குதல் வேண்டுமென்று எவன் எண்ணுகின்றானோ அவனைத் தடைப்படுத்தல் மிக அநீதி! எவன் கோயிலுட் புகவேண்டுமென்று விரும்புகின்றானோ அவனின் உரிமையைப்

பிடுங்குதல் கொடுமை! கொடுமை!! இறைவனும் இறைவனாலய மும் யாருடைய உடைமைப் பொருள்? அப்பொருள் எல்லா ஜீவ ராசிகளுக்கும் உரிமையானதே யாகும். அதை எவன் தடுக்கின் றனே அவனே நாஸ்திகன்; ரௌரவாதி நரகத்திற்கு உரிமை யானவன்; அவனிலும் கொடியன் உலகில் வேறு எவனுமிலன். மகமதியனும், கிறிஸ்தியனும், பௌத்தனும் விலங்கினங்களும் நுழையும் ஹிந்துக் கோயிலில் ஓர் உண்மையாகிய ஹிந்து நுழைதல் படாதெனப் பறையறையின் இதனினும் தாழ்மையும், சிறுமை யும், கீழ்மையும் வேறு யாண்டுள? தாழ்த்தப்பட்ட குலத்தில் பிறந்த குற்றத்திற்காக ஒருவனைக் கோயிலுட் புகாது தடுத்தல் என்பது எவ்வளவு துக்ககாமான விஷயம். குலத்தைத் தாழ்வுபடுத் திக் கூறுவதல்லாது வேறு தாழ்வேது? உயர் குலத்தான், தாழ் குலத்தான் என்று அவனவன் நெற்றியில் எழுத்தால் அச்சிட்டா இறைவன் படைப்பிக்கின்றான்? இரு நிலைபாளனும் பத்துத் திங் கள் தாய் வயிற்றில் வளர்ந்து தான் பிறக்கின்றான். பிறக்கும் பொழுதும் எவ்வித வேறுபாடுகளும் காணப்படுகின்றதில்லை. நிறத்தாலும் வேறுபட்டுக் காண்கின்றாரில்லை. உறுப்புக்களிலும் வேறுபாடோ குறைவோ காணப்படவில்லை. தொழிலால் மட்டும் பெருமை சிறுமை பாராட்டப்படுகிறது. இஃதன்றி வேறு எவ் வாற்றானும் உயர்வு தாழ்வைக் காண்கின்றேமில்லை. இன்று சென்னைச் சட்டசபையில் தாழ்த்தப்பட்ட குலத்தவரில் எத்தனை பெயர் அங்கத்தவராகவிருக்கின்றா ரென்பது அரசியல் உலகில் புகுந்தார்க்குத் தெரியும். நியாயாதிபதிகளாக எத்தனை தாழ்த்தப் பட்ட மக்களிருக்கின்றார்களென்பது பத்திரிகை உலகில் நுழைந் தார்க்குப் புலப்படும். ஆகவே தொழிலாலன்றி பிற எவ்வாற்றா னும் உயர்வு தாழ்வு இல்லை என்பதும், உயர்வு தாழ்வு என்பது நல்லார் பொல்லார் என்பதையே குறிக்குமென்பதும், பிறப்பால் உயர்ந்தவன் எவனுமில்லை என்பதும், இறைவன் பால் அன்பு மேலிட்டு அவன் திருவடி நிழலை அடைதல் வேண்டுமெனும் எண்ணமுடையானும், பிறனும் அவன் எக்குலத்தானாயினும், எத் தொழில்புரிபவனாயினும், செல்வனாயினும், வறியனாயினும், கற்றானா யினும், மற்றானாயினும், நல்லானாயினும், பொல்லானாயினும், வேறு

எவனேயாயினும் ஆலயத்துட் பிரவேசித்து இறைவனை வணங்குதற்குத் தகுதி உடையவனே என்பதைச் சீரிய அறிவுபடைத்த செவ்வியர் எவரும் ஏற்று உவப்பர். மாறுபட்டார் கசப்பரன்றே? மாறுபடும் மக்கட்கு மறலியின் மறத்தை மாற்றிய மழுக்கான் மதியினைமாற்றி யமைத்தாலன்றி வேறு புகல் ஏது?

---

# திருவிழாக்களில் சதுர் அவசியமா?

மு. சாத்தப்பன்.

யாவரும் இறைவனை ஒருங்கு சேர்ந்து வழிபடும் பொருட்டாகவும், ஜனங்கள் கோவிலுக்கு அவசியம் செல்லவேண்டுமென்பதற்காகவும், அறிவுகுன்றியுள்ள எளியவர்கள் இதை முன்னிட்டேனும் இறைவனது திருக்கோயிலுக்குச் செல்லவேண்டுமென்ற பேரெண்ணத்தினாலும், தொன்றுதொட்டு நமது முன்னோர்கள் ஒவ்வோர் ஊரிலும் திருவிழாக்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனால் இப்போது மேற்கண்டவைகளுக்கு முற்றிலு மாறாகப் பொழுதுபோக்கிற்காகவும், விருந்துண்ணுதலுக்காகவும், வீண் டம்பங்களுக்காகவும், தற்பெருமைக்காகவுமே இத்திருவிழாக்கள் கையாளப்பட்டு வருகின்றன. இவ்வீண் டம்பங்களில் மிகவும் முக்கியமானது இத்திருவிழாச் செலவில் ஒரு பகுதியை விழுங்கக் கூடியதும், பலருக்குப் பலவிதத்தில் தீய செய்கைகளை உண்டாக்கக் கூடியதும், ஜனங்களின் பக்தி நிலையைக் குலைக்கக் கூடியதும், இக்காலத்தில் முக்கியமாக அநாகரிமானது என்றுபலராலும்எண்ணப்படுவதுமான ‘சதுர் ஆட்டமே’ யாகும். இவ்வாட்டத்தினால் பொது ஜனங்களுக்கு ஏற்படும் தீமை செப்புந்தரத்ததன்று. இறைவன் சன்னிதான முன்பு நிம்மதியாக வழிபட வேண்டியதற்குப் பதிலாக மாலை ஆறு மணி முதலே ஜனங்கள் கூடி ஒருவருக் கொருவர் (பெரும்பாலும் பெண் மக்கள்) இடித்துப் புடைத்துக்கொண்டு சதுர் ஆரம்பிக்கும் வரை பேரிரைச்சல் போடுகிறார்கள்.

இதில் ஜனங்களைச் செம்மையாக அமரும்படி செய்வதற்குச் சில மூடர்கள் முன்வருகின்றனர். அன்னார் ஆண் பெண் என்று பாராமல் ஒருவர்மேல் ஒருவர் விழும் வண்ணம் ஒரே மூச்சாக நெருக்கிவிடுகின்றார். இவ்வசந்தர்ப்பத்தில்பெரியஅதிகாரிகளோஅல்லது தனவந்தர்களோ வந்துவிடுவார்களாயின் அவர்களுக்கு இடமொழித்துக்கொடுப்பதற்குளவண் முன்னிருந்தவர்கள்நிலை பெரும் சங்கடத்திற்குள்ளாகிறது. சன்னிதானத்தின்முன்பு இன்னவிதம் தான் நடனம் புரிகிறதென்ற வரம்பு கிடையாது. கேவலம் நாடகம்போன்றவைகளும், சர்க்கஸ், கத்திவிளையாட்டு, தீப்பந்தம், மேல்நாட்டு முறைப்படி டான்ஸ் இன்னும் அருவருக்கத்தக்க பல விரும்பத்தகாத விதங்களிலும் நடப்பதைக் காணலாம். இந்நிலையில் சதுர் முடிந்ததும் இதற்காக வந்திருந்த பல முதியோர்களும் சிறப்பாக வாலிபர்களும் இன்னும் பலரும் சுவாமி தீபாராதனை திருவுலா முதலியவைகளுக்குச் சிறிதுகூட நில்லாமல் தத்தம்அலுவல்களுக்குச்சென்றுவிடுகின்றனர். இவைகளால்பலர் தீய செய்கைகளிற் புகுந்து பொருள் நஷ்டமடைவதோடு தேகாரோக்கியமும் குன்றிப் பலவிதகஷ்டநஷ்டங்களுக்காளாகின்றார்கள்.

ஆகவே நாம் பொது மக்களுக்காகச் செய்யும் அறப்பணியில் மேற்கண்ட தீமைகளெல்லாம் நிகழ்ந்தால் அவற்றை நியாயம் என்று அறிஞரெவரும் அறையார். நாம் இறைவனுக்கு உண்மையான திருவிழா நடத்துவோமாயின் மேற்கண்ட தீமைகளை யறவே ஒழித்துப் பொதுமக்களுக்கு, இறைவனிடத்தும், சைவ சமயத்தினிடத்தும் அன்பு உண்டாகும் வண்ணமும், ஜீவகாருண்யம் அறிவு வளர்ச்சி முதலானவைகளில் அபிவிருத்தி யடையும் பொருட்டும் அறிவின்மிக்க பெரியோர்களின் மூலம் போதனை செய்து நிம்மதியான வழிகளில் விழாவைச் சிறப்பாய் நடத்துதல் வேண்டும். அவ்வாறு நடத்துவோமாயின் தீமைகளொழிந்து பல் கோடி மக்கள் நன்னிலைமை யெய்துவார்கள். மேலும் பொது மக்கட்கு நாம் செய்யாமற் செய்த பேருதவியுமாகும். ஆகையால் திருவிழா நிகழ்த்தும் பெரியோர்களே! மேற்கண்ட தீமைகளை நீக்கி நல்லன செய்யுமாறு நான் உங்களைப் பன்முறையும் வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன். சிலர் பண்டைக்காலம்தொட்டு

நடந்து வருகிறதை இப்போது நிறுத்தமுடியுமா என்று நினைக்கலாம். வாஸ்தவமே. அக்காலத்திற்கும் இக்காலத்திற்குமுள்ள வித்தியாசங்கள் எணி வைக்கினும் எட்டா. பண்டைக்காலத்தில் ஒழுக்கமுள்ளவர்களைக்கொண்டு அவர்களைக் கோவிற்கென்றே நியமித்துத் தினம் கோவிலில் மெழுகுதல், கோலம் போடுதல் போன்ற பல வேலைகளையும் செய்வித்தலோடு கர்னாடகமுறைப்படி பரதநாட்டிய மாடுதலையும் செய்வித்திருக்கிறார்கள். தற்பொழுது கேவலம் ஒன்றிலும் நிலையில்லாத வேசியர்களைக்கொண்டு என்னென்னவோ பற்பல திருவிளையாடல்களையெல்லாம் நடத்திவைக்கின்றனர். சிலர் சதுர் இல்லாதுபோனால் விழாக்காலங்களிற் கூட்டம் கூடாதென்கின்றனர். ஆனால் சதுருக்குப் பல அறிவிலிகளின் கூட்டம் அதிகமாயிருக்கும். மேற்கண்டவாறு சதுர் இல்லாது, சைவ சமயம், ஜீவகாருண்யம், தேசப்பற்று முதலியவைகளைப்பற்றித் தக்க அறிஞர்களைக்கொண்டு திருநாள் முழுதும் பிரசாரம் செய்வித்தால் பல அறிவாளிகளும் மற்றவர்களும் தாங்களாகவே தங்கள் நண்பர்களுடன் நாள்முழுதும் வந்து பொறுமையோடு கேட்டு இன்புறுவதோடு பலரும் நல் வழிகளில் அபிவிருத்தியடைவதற்கும் ஓர் சிறந்த சாதனமாகும். சதுருக்குத்தான் கூட்டம் கூடும், இதற்குக் கூடாதென நினைப்பது பெருந் தவறேயாகும். ஆகவே "திருவிழாக்களில் சதுர் அவசியமில்லை." ஆகையால் அன்பர்களே, இனி நடத்தும் விழாக்களைப் பொது ஜன நன்மையின்பொருட்டுச் சிறந்த வழிகளில் நடத்தவேணுமாய் எல்லாம் வல்ல இறைவனை என் மனம் மொழி மெய்களால் இறைஞ்சுகின்றேன்.

---

## குடியைக் கெடுக்கும் கள்.

க. கள்ளுக்கடைப்பக்கம் போகவேண்டாம். பால், தயிர், மோர், கஞ்சி, சோறு, களி, அப்பம், தோசை, இட்டலி, ரொட்டி எது தின்றாலும் உடம்புக்கு பலம் கொடுக்கும். கள்ளும் சாராயமும் உன் தேகத்திலுள்ள இரத்தத்தையும் பலத்தையும் கொன்றுவிடும்.

உ. கள் குடித்தால் உன் கஷ்டம் நீங்காது. புத்தி மாறாட்டமாகச்செய்து கொள்வதில் ஒரு பிரயோஜனமுமில்லை. கள் அல்லது சாராயம் குடித்தால் தேகத்திற்குப் பலம் என்றும் வியாதி

சொஸ்தப்படும் என்றும் யாராவது சொன்னால் அதை நம்பாதே. அது சுத்தப் பொய். தெரியாமையால் சிலர் இப்படிச் சொல்லுவார்கள். அதை நம்பிக் கெட்டுப்போகாதே.

௩. நீ எந்த ஜாதியானுயிருந்தாலும் கள் சாராயம் குடிக்கக்கூடாது. குடிப்பது பாவம். உன்மக்கள் கெட்டுப்போவார்கள். குடும்பம் கெட்டுப்போகும். இதுவரை குடித்திருந்தாலும் இனிமேல் விட்டுவிடலாம். கள்ளின் ஞாபகம் வந்தால் வேறு ஏதாவது ஒரு வேலை செய். சுவாமியை நினைத்துக்கொள். குழந்தைகளுடன் விளையாடு. அந்தக் கெட்ட எண்ணம் நீங்கும்.

௪. கஷ்டப்பட்டு சம்பாதித்தகாசைவீணாக்காதே. கள்ளுக்கும் சாராயத்திற்கும் போடும் பணம் வீண். அரிசியோ, கம்போ, கேழ்வரகோ வாங்கி வீட்டில் வைத்தால் அந்தக்காசு நல்ல உபயோகமாகும். கள்ளுக்கடை ஞாபகம் வந்தால் கையில் உள்ள காசை தாமதியாமல் உன் மனைவி அல்லது தாயாரிடம் கொடுத்துவிடு.

௫. கள் குடியால் வரும் கேடு கணக்கிட முடியாது. சரீரத்தில் வியாதியை உண்டு பண்ணுகின்றது. ஜீரணத்தைக் கெடுக்கின்றது. ரத்தம் கெட்டுவிடுகின்றது. போதை ஏற ஏற விஷசத்து உடம்பில் ஏறி ஆயுளைக் குறைக்கின்றது. கள்தான் யமனுடைய விஷத்திராவகம். இந்தத் திராவகத்தால் நமது ஜனங்கள் சித்திரவதை செய்யப்படுகின்றார்கள்.

௬. கள்குடி மூளையைக் கெடுக்கிறது. புத்தி கெட்டுவிடுகிறது. கள் குடித்தவன் பெரும் பைத்தியம். கள் குடியாட்டம் பேயாட்டம்.

௭. கள் குடித்தவனுக்குக் கண்ணில்லை. பெண்சாதிக்கும் அடி, பிள்ளைக்கும் அடி. கலகத்திற்கெல்லாம் காரணம் கள்தான்.

௮. கள் குடித்தவன் பெண்கள் மானத்தைக் கெடுக்கப் பயப்படமாட்டான்.

௯. கள் குடியால் தரித்திரம் உண்டாகும். கள்ளிற்குக் கொடுக்கும் பணத்தால் எத்தனையோ குடும்பங்கள் பிழைக்கும்.

௧௦. பாடுபட்ட பணத்தைக் கள் பேய்க்கா கொடுப்பது ?

௧௧. கள் குடியை நிறுத்துங்கள்.

௧௨. சட்டசபை மூலம் கவர்ன்மெண்டாரைக் கள் இறக்குவதையே நிறுத்தச்சொல்லுங்கள்.

தேவகோட்டை, சுகாதாரவாரக் கமிட்டி.

# இராட்டினத்தின் பெருமை.

பாபு ஸத்திஷ் சந்திரதாஸ் குப்தா அவர்கள் 'ஸெர்ச்லைட்' பத்திரிகையின் ஆண்டு மடலில் வரைந்துள்ள கட்டுரையின் மொழி பெயர்ப்பு வருமாறு:—

தற்காலத்தில் கதர் என்பது கற்றாரும், மற்றாரும் கவனஞ் செலுத்திடும் கருந்தனமாகும். இக்கதர் நம் பாரத நாடெங்கணும் மெதுவாகப் பரவி வருகின்றதென்பதை அனைவரும் அறிவர். கதரின் உரிமைகளில் முதன்மையானது, வேலையின்றித் துன் புறும் ஏழைமக்கட்கு என்றும் ஓய்ந்திடா வேலையளித்து அன் னார் பொருளாதார நிலையை சீர்படுத்துவதேயாகும். இது ஓர் புறமிருக்க, சுயராஜ்யமடைவதற்கும் ஓர் உயரிய கருவியாக அது இலங்குகின்றது. எனவே, கதர் இயக்கத்தால் அடைதற் குரிய நன்மைகளை ஈண்டு ஆராய்வோம்.

முதன்முதல், தேசீய சுதந்தரம் பெறுவதற்கு நூல் நூற்றல் இன்றியமையாததொன்றெனக் கூறப்பட்டபோது, பலர் ஏளனஞ் செய்தனர். ஆனால், காந்தியடிகளின்கட்டளையே கதராகும் என்று கேட்டபோது பேரார்வத்தோடு பலர் அதைப் பற்றுவாராயினர். ஆகவே, ௧௯௨௧-ல் கதர் பேச்சு எங்கும் பரந்தது. எனினும், ஓர் சிலரே, விடுதலைபெறுதற்கு கதர் ஓர் விசேடக்கருவி என்று கருதுவாராயினர். கதரின் உயர் கருத்தினை ஊன்றியுணர்ந்த பெரியார் பலரும் தமது வாழ்க்கையைக் கதருக்கெனச் செலவிட லாயினர். தலைசிறந்த இன்னார் செயலால் கதர்மணம் எங்கணும் கமழுகின்றது. தேசீயப்பற்றற்றாரும் இதைக் கையாளத் தலைப் பட்டனர்.

கைராட்டினம் வேலையில்லாது சோம்பலுடன் வீண்காலம் போக்குவார்க்கு உயிர்த்துணையாயிருக்கின்றது. ஓய்வு நேரங்களை உல்லாசமாகச் செய்து மனவமைதி கொடுப்பதற்கு நூற்றலினும் மேலாக மிளிர்வது வேறொன்றில்லை.

எளிய குடிசைத்தொழில்கள் எல்லா இடங்களிலும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மேற்கொள்வதற்குகந்தவையன்று. விசேட வசதிகள் ஒன்றுமின்றிக் கையாளக் கைராட்டினத்தினும் மேலான ஓர் கைத்தொழில் வேறு இல்லை. இதைக் கற்பதும் மிக எளிது. பெருங்கஷ்டமோ, நஷ்டமோ வந்துவிடுமென்ற கவலையும் வேண்டாம். கதர் விற்பனையாகாமலிருந்துவிடுமோ என்ற கலக்கமும் வேண்டாம். நமது ஆடையை அந்நூலால் ஆக்கிவிடலாமன்றோ? நூற்றலால் பெரும் வருவாய் வந்துவிடாதென்பதுண்மையே. எனினும் வீணே சோம்பிப் பொழுது போக்குவதைவிட ஒருவர் ஒய்வு சமயத்தின் சிறுபாகத்தை நூற்பதில் செலவிடுவது நன்மையேயன்றோ? இவ்வாறு தேடும்பொருள், சாதாரணமாக, மாதம் இரண்டு ரூபாயே யெனினும் சோம்பலால் வாளாவிருப்பதைக் காட்டிலும் ஓர் சிறு தொகை பெறுவது மேலல்லவா? அன்றியும், நம் நாட்டினர் யாவரும் தம் ஒய்வு நேரத்தின் சிறு பாகத்தை நூல் நூற்றலில் செலவிடுவாரேல், நம் நாட்டின் ஆடை யாவற்றையும் நாமே செய்து மீதியைப் பிற நாட்டிற்கு அனுப்புந்தருணத்தையும் நாம் பெறுவோம் என்பதை நாம் மறக்கலாகாது.

சென்ற வருடத்தில் சர்க்கா சங்கத்தினர் இருபது லக்ஷம் ரூபாய்க்குக் கதர் உற்பத்தி செய்ததாகக் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது. நம் நாட்டிற்கு வேண்டும் ஆடையை கவனிப்பின் இது மிகக்குறைவுதான். இந்நாட்டில் இறக்குமதியாகும் பருத்திப் பொருளைத் (துணிவகைகளை) தடுப்பதைப்போல் நானூறுபங்கு அதிகமான ஆடையை நாம் செய்திடவேண்டும். எனவே, இருபது லட்ச ரூபாய் பெறுமதியுள்ள ஆடை மிக அற்பமேயாகும். இதனால், நாம் சோர்வடைவதற்குக் காரணமொன்றுமில்லை. ஓர் வளர்ந்த மனிதனோடு ஓர் சிறு மகவை ஒப்பிடின் அம்மகவு மிக அற்பமெனக் காண்போம். ஆனால், இக்குழவியே நாளடைவில் வளர்ந்து ஓர் கம்பீர புருடனாகின்றது. அவ்வாறே, புகழ்பெற்று, செழிப்புற்று விளங்கிடுவதற்குரிய ஓர் சிறு குழந்தைக்கு ஒப்பவே நமது கதரியக்கம் இருந்துவருகின்றது. இவ்வியக்கம் வளர்மதியெனத் தழைத்தோங்கி, நாட்டின் செல்வத்திற்கும்,

செழிப்புக்கும் அடிப்படையாகுமென்று நாம் எதிர்பார்க்க வேண்டும்.

கைராட்டினத்தால் நூற்று நெய்யப்பட்ட நம் நாட்டு ஆடையை மாய்த்திட பல பெரும் பொறிகளையுடையாராயிருக்கும் ஆங்கிலேயருக்கு பலநாட்களாயின. எனவே, இவ்வியந்திரங்களால் ஆக்கப்பெற்று அரசாங்க ஆதரவைப்பெற்ற 'லங்காஷயர்' துணியை இங்கு வாராது தடுத்திட சின்னாட்களால் இயலுமோ?

ஏழைமக்கள் நூற்ற நூலை, நூற்புக் கழகத்தினர் பொது ஜனங்கட்குக் கைத்தறிகளில் நெய்து விற்கின்றனர். ஏனையோரின் தேசப்பற்று இத்தொழில் விருத்தியுறுவதற்குப் பேருதவியாக இருக்கின்றது. இயந்திரத்தில் நெய்த மெல்லிய ஆடைகள் புனைந்த மக்கட்குக் காடு முரடான துணிகளைக் கட்டுவது சற்று வருத்தத்தைக் கொடுக்கலாம். ஆனால் மெல்லிய ஆடைகள் கட்டுவதில்லையென உறுதி கொண்டால், நூற்பவரும் கதருடுக்க முன் வருவர். அப்பொழுது தான், கையால் நூற்ற ஆடையைக்கட்டுவது சிக்கனத்தைக்கொடுக்கும் என்றுணர்வார்கள். இவ்வுணர்ச்சி வளர்ந்துவிடின் இவ்வியக்கம் பொதுஜனங்கள்பால் வேரூன்றித் தழைத்தோங்கும். நம் தங்கக் கையினால் நூற்று நெய்த ஆடை, பலவாற்றானும் பெருமையுடையதென ஒ ந ச வு வேலைக்காரர் உணர்ந்துவிடின் அக்கணம் அந்நியநாட்டுத் துணிகள் தலைகாட்டா தொழிந்திடும். அதுகாலை, இந்நாட்டில் இயந்திரத்தொழிற்சாலைகள் தேவைப்படமாட்டா. அத்தருணம் வரும்வரையில் நாட்டின் நலத்தை நாடுவோர் அனைவரும் அல்லும் பகலும் ஒய்வின்றி இவ்வுணர்ச்சி நம் பொதுமக்கள்பால் பரவ முயற்சித்தல் வேண்டும்.

நம் நாட்டின் பண்டையப்புகழுக்கும் பொருளுக்கும் முதற் காரணமாக இலங்கியபருத்தித்தொழில், அன்னிய அரசர்களாகிய ஆங்கிலேயரால் அழிக்கப்பட்டது. ஆகவே நம் நாட்டில் இத்தொழில் தலை தூக்குவதானது ஆங்கில நாட்டின் பருத்தித்தொழிலைத் தாக்குவதாகும். எனவே அரசாங்கத்தாரும் இவ்வியக்கத்தைத் தாக்கவே முன் வருவார். அருள்வடிவாயிலங்கும் அண்ணல் தண்ணருளால், நாம் பிறர்க்கின்னல் இழைக்காது நம் இயக்கத்தி

ற்குப் புத்துயிர் அளிப்பின் அரசாங்கத்தார் முயற்சி ஓர் கலைத்தில் அழிந்திடும். கதர்ப்பணி எத்தகைய பணிகளிலும், தலை சிறந்திலங்கிடும். உள்ளங்கனிவுற்று ஆற்றிடும் இப்பணி, கண்டார் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் இயல்புடையது. அறச்சாலைகளும், பஞ்ச நிவாரணதாபனங்களும் பிறர் பால் பேரன்புகொண்டு ஏற்படுத்தப்பெற்றவையேயாம். இவையாவினும் ஒப்பற ஒளி வீசி மிளிர்வது கதர்ப்பணியன்றோ? வைத்திய சாலைகளால் நோய் வாய்ப்பட்ட ஓர் சிலருக்கு உதவியளிக்கலாம். பசிப்பிணியால் வாடிய எண்ணிறந்த மக்கள் துயராற்றிட வல்லதன்றோ கதர்ப்பணி? பசிப்பிணியை மாற்றிடும் பணி, வறுமையால் நலிந்து மெலிந்த மாந்தர் பால் நல்லுணர்ச்சி கொள்ளத் தூண்டுகின்றது. அன்பு இன்மையாலன்றோ மாந்தர் பிறருக்கு இன்னல் விளைக்கின்றார்! மக்கள் அன்புருகிக் கைராட்டினத்தைக் கையாண்டு, பசிப்பிணியால் நலிந்த மக்கட்குப் பணி செய்ய முன் வந்த நூற்போர் உயர் நிலை எய்துகின்றார். நூற்கச் சிறிது பழகிவிடின், பிறகு இயல்பாகவே நம் மனம் அதில் சென்றுவிடும். அவ்வன்பில் உறைந்த உள்ளத்தின் அறிகுறியாக அப்போது இராட்டினம் இலங்கிடும். இவ்வாறு உள்ளங்கசிந்து இராட்டினத்தைக் கையாளும் உண்மைப்பணியாளனே ஏழைகள் பால் உள்ளன்பு பூணுபவன்.

இத்தகையான் ஓர் கனவு காண்பானெனக் கருதிடாது, செயலாற்றுந்திறம் வாய்ந்தானென்றுணர்ந்திடவேண்டும். இவ்வுணர்ச்சியோடு நூற்பவனே ஏழை மக்கட்குத் தொண்டுபுரிய வல்லோன்.

ஆகவே கிராமங்கள் தோறும் கைராட்டினம் சுழன்று இத்தகைய உண்மைத்தொண்டர்கள் பணிசெய்யத் தலைப்படின், நம் பாரத நாட்டினரனைவரும் ஒன்று சேர்ந்திடுவது எளிது. அது காலை, எவர் தடுப்பினும், எவ்விடுக்கண் வரினும், இவ்வுயர்நாடு விடுதலை பெற்றுச் சுதந்தர நாடுகளுள் தலை சிறந்து விளங்கிடும் என்பது திண்ணம்.

---

# பௌதிக சாஸ்திரம்.

## ஓடும் மின்சாரம்.

( ஏ. ஸ்ரீநிவாஸாசாரியார் பி. ஏ.; எல். டி. )

தற்கால நாகரிகம் சிறப்புற்று விளங்கும் பெருநகரங்களில் வீதிகளிலும் வீடுகளிலும் எண்ணெயும் நெருப்பும் இன்றி விளக்குகள் எரிவதை அநேகர் கண்ணுற்றிருக்கலாம். இவ் விளக்குகளின் உட்புறத்தே சிறு கம்பிகளையும் வெளிப்புறத்தே அதனுட் பிரவேசிக்கும் நீண்ட கம்பிகளையும் தவிர நாம் வேறு ஒன்றையும் பார்ப்பதில்லை. விளக்கு ஏற்றப்படும்போது கண்ணாடி மூடிக்குள் காணப்படும் கம்பிகள் செந்நிறத்தோடும் வெண்ணிறத் தோடும் ஒளிவிடுகின்றன. இவைகளைப் பாமர ஜனங்கள் "காந்த விளக்குகள்" என்று கூறுவதுண்டு. "மின்சார விளக்குகள்" என்னும் பெயரே தக்கதாகும். ஏனெனில் மின்சாரம் கம்பிகளின் வழியாய் ஓடிக்கொண்டிருப்பதினால்தான் ஒளி உண்டாகின்றது.

மின்னலின் சாரமாகிய மின்சார சக்திக்கும் கம்பிகளின் வழியாய் ஓடி விளக்கேற்றும் மின்சாரத்திற்கும் வேற்றுமை யாது? முன்னது உரசு மின்சாரம் அல்லது தேய்ப்பு மின்சாரம், பின்னது ஓடும் மின்சாரம். இரண்டும் ஒரே இனத்தைச்சேர்ந்தன வாயினும் குணத்திலும் செய்கையிலும் வேறுபட்டிருக்கும். இந்தப் புதிய "ஓடும் மின்சாரம்" தவளையொன்றின் உதவியால் தற் செயலாய்க் கண்டுபிடிக்கப்பட்டது.

சுமார் நூற்றுமுப்பது வருஷங்களுக்குமுன் இத்தாலியா தேசத்து நிபுணரான "கால்பானி" என்பவர் தன் இல்லத்தில் நோயாளிக்கு ஆகாரமாக வைக்கப்பட்டிருந்த தவளையின் கால் களில், இரண்டு வேறுபட்ட உலோகங்களைக் கொண்டு தொட்ட போது கால்கள் "வெடுக்" என்று சுருங்கிப் பின் உதைந்தன. மின்சார யந்திரத்தினின்றும் வரும் சக்தியைக் கால்களின் சதைப் பாகத்தில் பிரவேசிக்கச் செய்யும்போது இதே மாதிரி சதை

சுருக்கி உதைவதை அவர் அறிந்தவர்: ஆதலின் இரண்டு உலோகங்கள் மிருக சரீரத்தோடு சம்பந்தப்படும்போது மின்சார சக்தி உண்டாகிறது என்று யூகித்தார். பின் 'வால்டா' என்னும் பெயர் பெற்ற பண்டிதர், காரியத்தகடு ஒன்றையும் வெள்ளித்தகடு ஒன்றையும் எடுத்து நாக்கின் மேற்பாகத்து ஒன்றும் கீழ்ப்பாகத்து மற்றொன்றும் படும்படி வைத்து, இரண்டு தகட்டின் நுனிகளேயும் ஒருங்கு சேர்த்தால், ஒரு விசித்திரமான ருசியொன்று உண்டாகிறது என்றும் இரண்டு தகடுகளின் நுனியையும் ஒன்று சேராதபோது அந்த ருசி உண்டாகிறதில்லை என்றும் சோதனையால் கண்டுபிடித்தார். மேலும், உண்டாகும் மின்சாரசக்தியின் காரணம் இரண்டு வெவ்வேறு உலோகங்களினால் செய்யப்பட்ட தகடுகளின் நுனிகளின் சேர்க்கையே என்றும், மனிதனின் நாக்கு அந்த மின்சாரசக்தியை ஓர்புறத்தினின்று மற்றொரு புறத்திற்குக் கடத்தும் பொருளேயன்றி வேறு தொழில் அதற்கு இல்லை என்றும் பின் அவரே கண்டுபிடித்தார். அநேகசோதனைகள் செய்த பின்பு, செம்பும் நாகமும் அதிக மின்சார சக்தியை உண்டுபண்ணப் பொருத்தமானவை என்பது தெரிய வந்தது. பின் சிறு கலங்கள் அநேகத்தை வரிசையாக வட்டமாக வைத்து அவை ஒவ்வொன்றிலும் உப்புக் கரைந்த தண்ணீரை ஊற்றி, ஒவ்வொன்றிலும் இரண்டு உலோகங்களேயும் கனத்த தகடுகளாகத் தட்டி அடித்து, கலம் ஒவ்வொன்றிலும் இரண்டு தகடுகளேயும் இரண்டு ஓரங்களிலும் வைத்தார். இதனால் ஏற்படும் மின்சார சக்தியை ஒருங்கு திரட்ட உத்தேசித்து, ஒரு கலத்திலுள்ள செம்பை அடுத்த கலத்தின் நாகத்தோடு கம்பியால் ஒன்று சேர்த்து, அதன் செப்புத் தகட்டையும் அதற்கு அடுத்த கலத்தின் நாகத் தகட்டையும் இன்னொரு கம்பியால் ஒன்று சேர்த்து, இம்மாதிரியே வரிசையாக இரண்டு இரண்டாகக் கலங்களிலுள்ள தகடுகளேக் கம்பியினால் ஒன்றுசேர்த்து, கடைசிக் கலத்திலுள்ள செப்புத் தகட்டிலிருந்தும் முதற் கலத்திலிருந்த நாகத் தகட்டிலிருந்தும் கிளம்பும் கம்பிகளே வேண்டும்போது ஒன்றுசேர்த்துக் கொள்ளுமாறு ஏற்பாடுசெய்தார். இம்மாதிரியான அடுக்கு மின்சாரக் கலங்களின் இரண்டு நுனிகளிலுமுள்ள கம்பிகளே ஒன்று சேர்க்கும்போது, நெருப்புப்பொறி கம்பிகளின் நுனியில் தோன்

றிற்று. இது மின்சாரப் பொறியே என்று நிர்மானிக்கப்பட்டது. ஆயினும் இந்த மின்சாரப் பொறியும் மின்சார யந்திரத்தினின்று கிளம்பும் பொறியும் ஒன்றே என்பது வேறு சில சோதனைகளுக் குப் பின்னரே முடிவு செய்யப்பட்டது.

காலம் செல்லச் செல்லக் கண்டுபிடித்த விஷயங்களை அதிக மாக ஆராய்ச்சி செய்து விருத்திக்குக் கொண்டு வந்தனர். தற் காலத்தில் மின்சாரக் கலம் அல்லது தொட்டி ஒவ்வொன்றிலும் உப்புத் தண்ணீரைக் கரைத்து வைப்பதில்லை. சக்தியை அதிக மாக உண்டாக்கும் முறைகளை அனுபவ மூலமாயும் ஆராய்ச்சி மூலமாயும் அநேகர் கண்டறிந்தார். மின்சாரத் தொட்டிகள் பல வகைப்பட்டிருக்கின்றன; அவைகளில் வைக்கும் உலோகங்களும் மாறுபட்டிருக்கின்றன; அன்றியும் ஒவ்வொன்றிலும் ஊற்றும் திரவ பதார்த்தங்களும் பலபடப்பட்டிருக்கும். தொட்டிகளில் வெடியுப்புத் திராவகத்தையும் கந்தகத் திராவகத்தையும் பொது வாய் ஊற்றிவைக்கவேண்டி யிருத்தலின், அவைகளைப் பீங்கானு லும் ஓர் வகை வெள்ளைக் களிமண்ணுலும் செய்வது வழக்கமா யிருக்கின்றது. இரண்டு திராவகங்களையும் ஒரே தொட்டியில் விடவேண்டி யிருக்கும்போது, வெளித் தொட்டிக்குள் நீரை நிறையச்சேர்த்த கந்தகத் திராவகத்தை ஊற்றி அதில் நாகத்தை வைத்து, அதற்குள்ளே சிறு தொட்டியொன்றை வைத்து அதில் வெடியுப்புத் திராவகத்தை ஊற்றி, அதற்குள் வெடியுப்புத் திரா வகத்தில் கரையாத உலோகத்தையோ அல்லது வேறு ஒரு பொருளையோ அதில் வைப்பதும் உண்டு. மின்சாரத் தொட்டி களை அடுக்கும் முறை முன்கூறியபடியேதான். அநேக தொட்டி களை ஒன்றுசேர்த்து அடுக்கி முன்கூறியவாறு கம்பிகளைக் கொண்டு பொருத்தும்போது மின்சார சக்தி அளவில் பெருகும்; அதிக வலியினை உடையதாகும்.

உலையிலிருந்து கொண்டுவரப்பட்ட புதுச் சுண்ணத்தின்மீது நீரை ஊற்றும்போது அது நீறுகின்றது என்பதும் பொடிப் பொடியாய் உதிர்ந்துவிடுகின்றது என்பதும் நமக்குத் தெரிந்த விஷயம்; ஆனல் குளிர்ந்த தண்ணீரை சுண்ணத்தின்மீது ஊற் றும் போது மிகுந்த உஷ்ணம் உண்டாவதன் காரணமென்ன?

அதை நாம் ஆராய்வதில்லை. ஆயினும் இதைக் கற்றறிந்தோர் சுண்ணமும் நீரும் கலந்து வேறு பொருளாக மாறுகின்றன என்றும், அவ்வாறு இரு பொருள்கள் சேர்க்கையால் பிறிதொரு பொருளாக மாறும்போது பொதுவாய் உஷ்ணம் உண்டாகும் என்றும் கூறுகிறார்கள். இம்மாதிரியே, கந்தகத் திராவகத்தில் துத்தநாகத் தகட்டைப் போட்டால், தண்ணீரில் உப்புக் கரைவது போல் அது கரைவதில்லை. திராவகமும் நாகமும் கலந்து குணமும் தொழிலும் வேறுபட்ட வேறிரண்டு பொருட்களாக மாறுகின்றன. இவ்வாறு இரண்டு பொருட்களின் சேர்க்கையினால் பிற பொருட்கள் சிருஷ்டிக்கப்படும்போது, முன் உஷ்ணம் உண்டாவது போல், ஒரோவழி மின்சார சக்தியும் உண்டாவதுண்டு. இந்த ஓடும் மின்சாரம் கலங்களிலிருந்து வெளியில்வரும் இரண்டு கம்பிகளையும் ஒன்று சேர்க்கும்போது செப்பு நுனியிலிருந்து கம்பிவழியாய் நாகத்திற்கு வந்து, பின் திராவகத்திற்குள் நாகத்திலிருந்து செம்பை நோக்கிச் சென்றுகொண்டேயிருக்கிறது. இந்த சக்தி எத்தன்மைத்து என்பதை அறிவதும் உரைப்பதும் இயலாதாயினும், அதன் குணத்தையும் தொழிலையும் சோதனைகள் மூலமாய் அறியலாம்; இன்னும் அவ்வறிவின் உதவியால் மனித வாழ்க்கைக்குப் பயன்படுமாறு அடக்கியாண்டு வேண்டிய வண்ணம் அச் சக்தியை உபயோகிக்கலாம். இந்த விசித்திரமான சக்தி செய்யாத தொழில் யாதொன்றும் இல்லையென்றே துணிவாய்க் கூறலாம். அதைச் சற்று கவனிப்போம்.

இந்த ஓடும் மின்சாரம் செப்புக் கம்பியின் வழியாய் எளிதாய் ஓடும். கம்பியின் பருமன் அதிகரிக்க அதிகரிக்கத் தடையின்றி எதிர்ப்பின்றி இனிது செல்லும். மிக நுண்ணிய செப்புக் கம்பியின் வழியாய்ச் செலுத்தினால், அது இந்தச் சக்தியின் ஓட்டத்திற்கு இடையூறு விளைக்கும்; அதனால் விரைவாய்த் தாராளமாகச் செல்ல இடர்ப்பட்டு உரசிக்கொண்டே செல்வதன் நிமித்தம் அச்சிறு கம்பி உஷ்ணமடைந்து ஜொலிக்கும். அதி உஷ்ணமடையினும் உருகாத உலோகம் ஒன்றினாற் செய்த சின்னஞ்சிறு கம்பியை மின்சாரக் கலம் அல்லது அடுக்கு மின்சாரக் கலத்தின் இருமுனைகளிலிருந்தும் கிளம்பும் கம்பிகளுக்கு இடையே

மாட்டிவிட்டால், மின்சார சக்தி சிறு கம்பியின் வழியாய்ச் சென்றுகொண்டிருக்கும்வரை அதுவெண்ணிறத்தோடு ஜொலிக்கும். கம்பிகள் தொடர்ச்சியாய் மின்சாரக் கலத்தோடு சம்பந்தப்பட்டிராது. இடை ஒன்று எங்கேயாவது உண்டாகும் பக்ஷத்தில் மின்சார ஓட்டம் நின்றுவிடும்; ஒளியும் குன்றி மறையும். இந்தக்குணத்தினுல்தான் மின்சாரவிளக்குகள் ஏற்றப்படுகின்றன.

ஓர் இரும்புத் துண்டைச் சுற்றிச் செப்புக் கம்பியை ஒழுங்காய்த் திரும்பத் திரும்பச் சுற்றி, செப்புக் கம்பியின் இரண்டு நுனிகளையும் மின்சாரக் கலத்தின் முனைக்கம்பிகளோடு ஒன்று சேர்த்தால், மின்சாரசக்தி இரும்புத் துண்டைச் சுற்றிச் சுற்றிக் கம்பியின் வழியாய் ஓடுமல்லவா? அப்போது அந்த இரும்புக் கம்பி காந்த சக்தி ஊட்டப்பெற்றதாகின்றது. காந்தத்தின் குணங்களையும் தொழில்களையும் அது உடையதாகின்றது. ஆனல் மின்சார ஓட்டம் நின்றதும் அதில் உள்ள காந்தமும் மறைந்துவிடுகின்றது. இவ்வாறு மின்சார சக்தியால் ஊட்டப்படும் காந்த சக்தியை உடைய இரும்பிற்கு 'மின்சாரக் காந்தம்' என்று பெயர். மின்சார ஓட்டத்தால் காந்தமாகும் இரும்பின் சமீபத்து ஓர் சிறு இரும்புத் துண்டை வைத்தால் அக்காந்தம் இரும்பினை இழுக்குமல்லவா? பின் மின்சார ஓட்டத்தை நிறுத்தியதும் ஒட்டிக்கொண்டிருந்த இரும்பு மறுபடியும் கீழே விழுந்துவிடும். இந்தத் தொழிலை நன்கு கவனித்தே மின்சாரக் காந்தத்தின் உதவியால் சிறு இரும்புத் துண்டு ஒன்றை மின்சாரக் காந்தத்தை நோக்கி ஓடிவரும்படிக்கும் அதைவிட்டு விலகும்படிக்கும் செய்யும் முறைகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். வேண்டும்போது மின்சார ஓட்டத்தைத் தடுக்கவோ விடுக்கவோ, அல்லது தடுத்தும் விடுத்தும் மாறிமாறி நிறுத்தவும் ஓடவும் செய்யவோ கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளின் துணையினுலேயேதான் 'தந்தி' யடிப்பதும், தந்தி மூலமாய்ப் பேசிக்கொள்வதும்.

இன்னும் மின்சார சக்தியை நீருக்குள் பிரவேசிக்கும்படி செய்தால், அது நீரைப் பிரித்து அதனிடத்து அமைந்துள்ள இரண்டு ஆவிப் பொருள்களை நமக்குத் தருகின்றது. தண்ணீர்

இரண்டு தனிப் பொருள்களின் சேர்க்கையால் உண்டாகும் ஓர் கூட்டுப் பொருள். ஓர் பாத்திரத்தில் கொஞ்சம் தண்ணீரை ஊற்றி அதில் ஒருசொட்டு திராவகத்தைத் தெளித்துப் பின் மின்சாரக் கலத்தின் முனைகளிலிருந்து கிளம்பும் இரண்டு கம்பி களையும் அந்த நீருக்குள் அமிழ்த்தினால், தண்ணீர்க்குள் இருக் கும் அணுகள் ஒவ்வொன்றிலிருந்தும் ஓர் ஆவி குமிழி குமிழியாய்க் கிளம்பும். இந்த ஆவிகளின் தன்மை, குணம், ரூபம், தொழில் முதலிய விஷயங்களைக் கண்டறிந்து இவை இன்னின்னவைதான் என்று நிபுணர்கள் அறிவார்கள். இதேமாதிரியே, துருசு நீரைக் கரைத்து அதன் வழியாய் மின்சார ஓட்டத்தை விடுத்தால், துருசு நீரும் அநேக பொருள்களாகப் பகுக்கப்படும்; அவற்றில் ஒன்று செம்பு. ஆதலின் செம்பை இதன் மூலமாய்ப் பிரித் தெடுக்கலாம். அவ்வாறு பிரியும் செம்பைக் குறிப்பிட்ட ஓர் உலோகத்தின்மீதோ அல்லது சாமானின்மீதோ ஒட்டும்படி செய்யலாம். தங்கம் அல்லது வெள்ளியைத் தக்க திராவகங்க ளில் கரைத்து அந்த நீரின் வழியாய் மின்சாரம் ஓடும்படி செய் யின், தங்கமோ வெள்ளியோ அதனின்று கக்கப்படும். அவ் வாறு வெளியில் கக்கப்படும் இடத்தில் வேறு உலோகத்தால் செய்யப்பட்ட சாமானை அந்த நீரில் அமிழும்படி கட்டித் தொங்கவிட்டு வைத்தால், அந்தச் சாமான்மீது தங்க முலாம் அல்லது வெள்ளி முலாம் பூசப்படும்.

இன்னும், மின்சார சக்தியால் வண்டிகளை ஓட்டலாம்; பதார்த்தங்களை ஒன்று சேர்த்துப் பிறிதொரு பொருளாக்கவும், ஒன்றை இரண்டு மூன்றாகப் பிரிக்கவும், மணிகளை அடிக்கவும், வெடி மருந்தைக் கொளுத்தி வெடிக்கும்படி செய்யவும், நரம் புச் சிக்குகளைக் குணப்படுத்தவும் இவ்வாறு அதைப் பலவழியாய் உபயோகிக்கவும் கூடும். தற்காலத்து, மின்சாரசக்தியின் உதவி யினால் செய்யப்படும் காரியங்களோ எண்ணிறந்தன. இவை யனைத்திற்கும் முதற்காரணமாயிருந்தது ‘கால்வானி’ யென்பவர் தம் கவனத்தாலும் ஆராய்ச்சியாலும் விதைத்த அற்பமான விதை யொன்றே.

---

# நற்பண்புப் பயிற்சி.

த. ராமகிருஷ்ண விச்வகர்மன்.
(வேத மாணுக்கர்.)

இயம நியம நெறிகள் பயில்வதால் மக்கள் வாழ்க்கை மிகத் தூய்மையும் மேன்மையும் பெற்றுப் பேரிலக்காக அமைகின்றது. இந்நெறிகளை யொருவகைப் பயிற்சியாகக் கருதாது ஒவ்வொரு குணநலன்களையும் வாழ்க்கையிற் கலந்து செயலிற் கொணர்தல் இன்றியமையாதன. வாழ்க்கையே இயமநியமஉருவாதல்வேண்டும். நமது 'ஸ்வ பாவம்' அல்லது தம்மியல்பே அங்ஙனமாதற் குரியது. காண்டல் முயற்சித்தலால் மட்டும் காரியம் நிறைவெய்தாது. சிறந்த உயர்ந்த தூய பண்புக்களைத் தமது முழுவியற்கையாக அமைத்துக் கோட லொன்றே ஈண்டு குறிக்கப்படுகின்றது. இவ்வியல்பினை எங்ஙனமாக்கிக் கொள்வதெனச் சிறிதாராய்வாம்.

குணமெனும் நற்பண்புக்களை முதலில் மனத்தாற் சிந்தித்திடுக. உள்ளத்தி லுறுதி பெற்று அவற்றி னுயர்வு புலப்பட்டதன் பின்னர், அவற்றிற் குரிய செயல் நிகழ்த்துக. மனதில் குணத்தைப் பதித்து, அதன் உயர்வினை உள்ளத்தா லுன்னிச் சீர்தூக்கி நிறுவிச் செயலாற்றுங்கால் வழக்கிற் கொணர்தல் இன்றிமையாதன. இவ்வாறு குணமும் பண்பும் சீர்தூக்கி யாற்றுதலான் உள்ளமும் செயற் புலனு மொன்றுபட்டு வளர்ச்சியுற்று அவ்வியல்பு இயற்கையாகப் பரிணமிக்கின்றது. இங்ஙனம் தம்மியல்பு ஆக்கப்படின், தம்மியல்புகளே தாமாகத் தம் வடிவாக அமைகின்றன். ஆகவே, நன்முறையில் தம்மியல்பாக்கலின் அருமையும் பெருமையும் சிந்தித்திடுக,

உழைப்பே தன்னியல்பை ஆக்குகின்றது. பேருழைப்பால் பெறப்படுவது இப் பான்மை. மிகுதியாக அடக்கிவரினும் சோதனைக் காலத்து அறிவுப் புலன்களும் தொழிற் புலன்களும் உள்ளமும் பிற உறுப்புக்களும் ஏமாற்றி விடுகின்றன. இதற்குக் கார

ணம் வேண்டுமளவு தன்னியல்பு பண்படாமையாம். விசுவாமித்திரன் அருந்தவமியற்றினன். மனதை செவ்விதின் அடக்கினன். சோதனைக் காலத்துக் காமப் பற்று மிகுந்து நின்றது. அறவோருக்குரிய அமைதியும் அடக்கமும் தன்னியில்பிற் குறையவில்லை. யோகப் பயிற்சியால் தன்னியல்பு படைத்தற்கு மிக்கமதிப்புண்டு. வெளிவேடத்திற்கு இங்கு வேலையில்லை. உண்மையான 'ஆன்ம சோதனை'க்கு இதோடு தொடர்புண்டு. இயம நியமங்களைத்தன்னியல்பாக்குதற்குரிய சில அனுபவ மொழிகளை இக்கட்டுரையில் ஆராய்வாம். இவற்றைத் தம்மியல் பாக்கற்குச் சிறந்த முறைபற்றிப் பெருமுயற்சி புரிதல் வேண்டும். முதலாவது 'சிந்தனைவிழிப்பு' இன்றியமையாதது. ஒவ்வொரு எண்ணங்களும் உள்ளத்தில் யாண்டும் விழிப்பொடு உறைதற் பாலன. மனத்தில் யாண்டும் சிந்தனைக் கவனம் நிலைத்தற் கொருவழியுண்டு. அவ் எண்ணங்களைக் குறிக்கும் மொழிகளைப் பெரிய எழுத்தில் பொறித்துத் தம்மெதிரில் யாண்டும் நிறுவுவதாகும். மறைகளின் நன் மந்திரங்கள், உபநிடதவாக்கியங்கள், சாத்திரக்கோட்பாடுகள், சான்றோர் நன் மொழிகள், அறவுரைகள் முதலியன பெரிய அழகிய எழுத்துக்களில் பொறித்து மனையகச் சுவர்களில் மாட்டிடின் அடிக்கடி அவ்எண்ணங்களை உள்ளத்தில் நினைந்து சிந்தித்துக் கவனித்தற் கேதுவாம். இது இயலாதாயின், உங்கள் நண்பர்கள் அடிக்கடி நினைவூட்டிடுக. இதுவு மில்லையானால் உங்கள் மனத்திற் கேற்ற மொழிகளை அச்சிட்டுக் கடைகளில் விற்கச் செய்க. அவற்றைப் பெற்று வீட்டில் வைத்திடுக. அதுவு மின்றேல் தங்கள் உயர்ச்சி இன்றியமையாத தாகலான் கூடியவரையில் அகப்படும் மொழிகள் பலவற்றையுந் தாமே பொறித்து இல்லிற் பலவிடத்தும் நிறுவிடுக. ஈண்டு தங்கள் பரிசிலனைக்காகச் சில மொழிகள் கீழ்த் தருவாம்.

க. உயிருக் குறுகண் செய்யாமை.

மா ஹிம்ஸிஸ் தந்வா ப்ரஜா:.

எசர். கஉ-௩உ.

'தம்முடலான் எம்மக்கட்கும் எவ் வுயிர்க்கும் துன்பம் விளைக்கற்க' உடல் புலன் உள்ளம் அறிவு சொல் செயலாதி எவ்

வகையானும் பிறவுயிர்க்கு உறுகண் நிகழ்த்தலாகா. இக்கொல்லா நெறி உள்ளத்திலுறைந்து, சிந்தனையில் வளர்ந்து, சொல்லில் வெளிப்பட்டு, செயலிலாற்றித் தம் வாழ்க்கையினை அஹிம்ஸா வடிவமாக்குக. உள்ளம் உரை செயலால் கொல்லாநெறி முழுதும் கடைப்பிடித்தோர்—தம் மியல்பே அஹிம்சா மய மாயினோர் பால் உறைகின்ற பிற உயிர்களனைத்தும் வன்மமின்றி வாழ்ந்திடும்.

'நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.'

௨. வாய்மை.

ஸத்யஸ்ய நாவ: ஸுக்ருத மபீபரந்.

இருக்கு. ௯-௭௩-௧.

'சான்றோரை வாய்மைக் கப்பல் துயர்க் கடலினின்று கரை யேற்றுகின்றது.' விருப்பொடு உண்மை காத்தல் புகழ் பயக்கி ன்றது. உண்மையால் தெய்வத்தன்மை பெறப்படுகின்றது. எனவே பொய்மை யகற்றித் திறமையோடு மெய்மை கடைப் பிடித்திடுக. உறுதியாக நின்று பொய் நீக்கிஉண்மை காத்தல் இன்றியமையாதது. எத்துணை இடர்விளையினும், பொய்மையால் எத்துணை இன்பம் பயப்பினும், உண்மையில் திறம்பாதுஉறுதிபட நிற்றல் வேண்டும். உலகனைத்தும் உண்மைநெறியில் இயங்குகின் றது. உண்மைக்கு இறைவன் துணைநிற்கின்றான். உண்மையில் இறைவன் ஒளிர்கின்றான். வாய்மைகடைப்பிடித்தலால் சான்றோர் போற்றிப் புகழ்தற்குரிய ராகின்றனர். வாய்மை கோடலான் மக் கள் அச்சம்அழிக்கின்றனர். வாய்மையின்பெருமை இத்தகையது.

'பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.'

௩. கள்ளாமை.

ந ஸ்தேய மத்மி.

அதர்வம். ௧௪-௧-௫௭.

'யான் களவாடி இன்பம் நுகரேன்.' களவானாகிய பொரு ளால் இன்பம் நுகர்தல் பெரும் பாவம். களவு செய்தல் மிக இழி ந்தது. களவால் எவரும் உயர்ந்ததில்லை. களவை யாவரும் இகழ் வர். எனவே களவு புரிந்து எஞ்ஞான்றும் இழிவு தேடற்க.

என்னாமை வேண்டுவா னென்பா னெனைத் தொன்றுங்
கன்னாமை காக்கதன் னெஞ்சு.'

௪. பிரமச்சர்யம்.

ப்ரஹ்மச் சர்யேண தபஸா தேவா ம்ருத்யு முபாக்நத.

அதர்வம். ௧௧-௫-௧௯.

'பிரமச்சர்யங் காத்து மரண மகற்றிடுக.' நெடைநாள் வாழ்வோர் யாவரும் நன்முறையில் பிர்மச்சர்யங் காத்திருப்பர். பிரமச்சர்யக் குறையால்—புலவடக்க மின்மையால் ஆயுள குறைகின்றது; மக்கள் ஒளியில்லா தொழிகின்றனர்; நினைவாற்றலும் அறிவும் குன்றுகின்றன. வினையாற்றும் உள்ளக் கிளர்ச்சியும் திண்மையும் புலவடக்க முடையார் பால் பொலிந்து திகழ்கின்றன. விரிய மழிக்கின்றவன் வலியிழந்தும் இழந்தும் காணப்படுவான். எனவே எவ்வகையானும் விடாது முயன்று பிரம்மச்சர்யங் காத்திடுக.

'அஞ்சும் அடக்கி அறிவோடு இருந்தபின்
துஞ்சுவதில்லை உடம்பு.'

௫. அவாவறுத்தல்.

மா ஷ்க்ருத:

எசுர் ௪0-௧.

'ஆசை யறுமின்.' இன்ப நுகர்ச்சிகளில் ஆசை குறைத்திடுக. போகத்தி லாழ்ந்தால் யோக வாழ்க்கை நடத்த வியலாது. காம நுகர்ச்சி மிகின் நோயால் பிடிக்கப்படும். இன்ப நுகர்வுகள் பெருகாவிடின் பொருட்களில் பற்றின்மை மிகும். இதனையே அவாவறுத்த லென்பர். இன்ப நுகர்வுகளால் இன்பம் பெற வியலாது. ஆன்ம ஆற்றலானே இன்பப் பேறு பெறப்படும். இப் பண்பினால் தன்னம்பிக்கை பெருகும்.

'இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.'

௬. தூய்மை.

சுத்தா: பூதா ஷ்பவத.

இருக்கு ௧0-௧௮-௨.

'புறந்தூய்மையும் அகத்தூய்மையும் படைத்திடுக.' உடற்றூய்மை, உள்ளத்தூய்மை, புலன்களழுக்கின்மை, அறிவுவிளக்கம், வீட்டுச்சுத்தம், இருப்பிடச் சுத்தம், நாட்டின் தூய்மை, சமூகத் தூய்மையாகிய யாவும் தூய்மை பெற்றிருத்தல் இன்றியமையாதனவாம். தூய்மையால் குற்றமற்ற வாழ்க்கை பெறப்படும். ஆயுள், உடல் நலன், மகிழ்ச்சி முதலியவற்றிற்கு மூலகாரணம புறந்தூய்மையும் அகத்தூய்மையுமாம். எல்லா வகையிலும் தூய்மை பெற்றிடுக.

'புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.'

எ. மகிழ்ச்சி

அகாமோ ஸ்ரீரோ அம்ருத:

அதர்வம் ௧௦-அ-௪௪.

'மகிழ்ச்சி யுடையான் உரம் பெற்று அமரனுகின்றான்.' கடும்பற்றுள்ள முடையார் அச்சமும் அழிவும் தேடுவர். பற்றகற்றின் பற்றில்லா உவகைப் பெருக்கால் இன்பமும் ஊக்கமும் பெறப்படும். உள்ளம் உவகை யுறின் முகத்தின்பம் திளைத்திடும். பொருட் பற்றுடையார்க்கு மனநேர்மை கிடையா. மனநேர்மை யில்லையாயின் மகிழ்ச்சியடைய முடியாது.

'செல்வ மென்பது சிந்தையின் நிறைவே
யல்கா நல்குர வவா வெனப்படுமே.'

அ. தவம்.

அதப்த தநூர்ந ததாமோ அச்நுதே:

இருக்கு க-அ௩-க.

'தவம் செய்யாதார் இன்பமடையமாட்டார்.' தவஞ் செய்தலால் இன்பம் விளைகின்றது. அறநெறி முயலுங்கால் தோன்றுமிடர்களை இன்புடன் பொறுத்தல் தவமெனப்படும். பெரியார் அனைவரும் தவத்தில் முயன்றிருத்தலான் யாண்டும் போற்றப் படுகின்றனர். தவ வாழ்க்கையின்றி இவ்வுலகில் வினையாற்றி வெற்றிபெற வியலாது. அத்யாத்மிக வளர்ச்சியும் எய்தமாட்டாது. தவஞ் செய்வாரை யாவரும் போற்றுவர். தாங்கண்ட உண்மை முடிபுகளைத் தெளிவுறத் தெரித்தலா னேற்படுந் துயர்

களைச் சகித்து, அவற்றில் வெற்றியடைகின்றனர். எனவே உறுதியாக நின்று தவ வாழ்க்கை வாழ்தல் இன்றியமையாததாம்.

'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.'

௯. கற்றல்.

ஸ்வாத்⁴யா யான்மா ப்ரமத³:.

தைத்திரிய உபநிடதம். க-கக-க.

'தாங்கற்க வேண்டுவன கற்று அறிவு வளர்த்தல் இன்றியமையாததாம்.' நாம் எவ்வாறிருந்தோம், எவ்வாறிருக்கின்றோம், இந்நெறியி லிருந்தால் எந்நிலை யெய்துவோ மென்பனவாக அடிக்கடி சிந்தித்தல் வேண்டும். இவ் அறிவுணர்ச்சி ஒருவர்க்கெத்துணைச் சிறந்ததோ, அவ்வாறே சமூகத்திற்கும் தேசத்திற்கும் இன்றியமையாது வேண்டற் பாலதாம். மேற்குறித்த அறிவு தரும் நூல்களே கற்றற்பாலன.

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.'

௧௦. இறைப்பற்று.

த்வே ந இந்த்³ர தே வயம்.

இருக்கு. க-௫௭-௪.

'இறைவ! யாங்கள் நின்பாலதாம்.' யாங்கள் நின்னடி பற்றுபவர். இத்தகைய பற்றினை வளர்க்கும் தொடர்கள் பொறித்து இல்லிற் பதித்திடுக.

'அருளுடைச் சுடரே யளிந்ததோர் கனியே
பெருந்திற லருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.'

## ௧௧. அமைதி.

சாந்திரேவ சாந்தி:, ஸா மா சாந்திரேதி.

எசுர் ௩௬-௧௭

'உண்மை யமைதி நின்பா லுறுக.' உண்மை யமைதி தருவன வியற்றுக. தாமமைதி பெறுக. சமூகமும் தேசமும் அமைதியினின்று வழுவற்க. உலகனைத்திலும் உண்மை யமைதி நிலவுக. சான்றோரனைவரும் அமைதி நிலைநாட்டற்குத் தம்மையே தியாகம் செய்திருக்கின்றனர். மக்கட்கெல்லாம் முடிவான எண்ணம் உண்மையமைதி பெறுவதேயாம்.

'காக்கப் பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.'

இத்தகைய நன்னீர்மைகளைப் புகட்டும் அரும்பெரும் வாக்கியங்களை ஆராய்ந்து பொறித்துச் சுவர்களில் நிறுவுதல் இன்றியமையாதது. நீதி, வழிபாடு, இனிமை, வஞ்சமின்மை, அடக்கம், ஒடுக்கம், உறுதி, நிலைப்பு, ஆள்வினையுடைமை, ஊக்கம், செலவுச் செட்டு, வீரம், புகழ், பெருமை யாதிய குறிக்குந் தொடர்களை யாய்ந்து பொறித்தல் சிறந்த பயனளிப்பதாம். போதும் வருந் தருணங்களில் அம்மொழிகள் கண்ணிற் புலப்பட்டு மனத்தில் நிலைக்கின்றன. இங்ஙனம் அடிக்கடி நிகழ்தலான் அவை உள்ளத்தில் மாறுது பதிந்து விடுகின்றன. இவை சாதாரணமாக வீடு முழுதும் காற்றுப் பாவுமாறு பாவுதல் வேண்டும்.

இங்ஙனமே நண்பர்களை யடுக்குங் காலும் திறமையுடன் ஆராய்ந் தளந்தறிதல் வேண்டும். மேற்குறித்த குணநலன்கள் வாய்ந்த நண்பர்களோடு பழகுதலே இன்றியமையாதன. அவற்றிலும் கேடு நிகழின் களைந்திடல் அவசியம்.

இத்துணைச் செயல்கள் நிகழ்த்தினும் தன்முயற்சி இடையறுது வேண்டப்படும். முயற்சியால் மேற்குறித்த நற்பண்புகள் உள்ளத்தில் நிலைக்கப் பெறுவிடின், வெளித் தோற்றங்களிலெதுவும் 'விரும்பிய அளவு நிலைபெறமாட்டாது. எனவே

தற்சீர்திருத்தத்திற்குத் தாமே அரிதின் கட்டுண்டுழைத்தல இன்றியமையாததாம். இதனை எவ்வாறியற்றுவது? இதற்கு வழி இதுவே, முற்பக்கத்தில் சில பண்புக்களைக் குறித்தோம். அவை மட்டிலும் போதா. 'சான்றோர்' எவ்வகை நற்பண்புக்களால் உருப்பட்டனரென்றாராய்ந்திடுக. அத்தகைய மக்களின் உருவத்தினை உள்ளத்தில் நிறுவுக. அன்னாரிடத்து எத்தகைப் பண்புக்கள் நிலவின, நம்பால் யாவையில, அத்துணை உயர்தற்கு எந்நீர்மைகள் எத்துணை வளர்தல் வேண்டுமெனச் சிந்தித்திடுக. இவற்றை உள்ளத்தானுன்னிக் காகிதத்தில் வரைந்திடுக.

இந்நீர்மைகள் குறித்தபின், எளிதில் கைகூடுவதை முதலில் துவங்கி நிகழ்த்துக. அரியதொன்றை இறுதியில் நிறுவி நடுவண் நின்றவற்றை முறைபேயாற்றுக. தன் விருப்பால் யாவற்றினுமெளிதாக முதற்கண் துவங்கிய செயலை நிறைவேற்றுக. ஒரு காகிதத்தில் அப்பண்பைப் பெரிய எழுத்துக்களால் வரைந்து உறையும் அறையில் நிறுவுக. அப்பண்பினைச் சுட்டும் மந்திரம் தொடர்மொழி பெரியார் சொல்லாதியவும் எழுதி உடன் வைத்திடுக. ஒரு திங்களில் ஒரு பண்பினை உருப்படுக்கத் துணிந்து இயற்றுக. எத்துணை யியலுமோ அத்துணை முயன்று அத்திங்களிலேயே உள்ளத்திலூட்டி நிலைப்பித்துத் தன்னியல்பாக மாற்றிடல் வேண்டும். இதற்கு அகப்புறத் தூய்மை பெற்றிருத்தல் இன்றியமையாததோடு எளிதிற் பயனளிப்பதாகும்.

---

# ஆகாயப் பிரயாணத்தின் அதிசயங்கள்.

[பா. சி. சுந்தரம் B. A. (Hons )]

ஆதிகாலம் முதல் மனிதனால் எளிதில் அறியப்படாததும், அவனுக்கு அதிக அச்சரியத்தை விளைவித்ததுமான இயற்கை

யின் விநோதங்களில் ஆகாயத்தில் பறக்கும் பக்ஷி இனங்களின் இயல்பு ஒன்று. கருடன் சிறகடியாமல் வட்டமிட்டபடியே அழகாய் மேன்மேலும் கிளம்புவதையும், மீன்கொத்திப் பறவை தண்ணீருக்குமேல் ஆகாயத்தில் ஒரே இடத்தில் அசையாமல் சிறகடித்துக்கொண்டு மீன் தேடுவதையும், இன்னும் மற்றப் பக்ஷிகள் சிறகுகளை அடித்துக்கொண்டு வெகு வேகமாய்ப் பறந்து செல்வதையும் நாம் கண்டு, நமக்கும் பறக்கும் சக்தி இல்லாமல் போயிற்றே என்று வருந்தி வந்திருக்கிறோம். ஆனால் மனிதனால் தீர யோசித்துச்செய்ய முடியாதது ஒன்றும் இல்லை, அடையக் கூடாதது ஒன்றும் இல்லை என்ற நம்பிக்கை கொண்ட அறிஞர்கள் மாத்திரம், 'பக்ஷி இனங்கள் எப்படிப் பறக்கின்றன? அவற்றின் சிறகுகளும் உடல்களும் எவ்வகைப்பட்டன?' என்று ஆராய்ச்சி செய்யத் தொடங்கினர். இவ்வித ஆராய்ச்சியின் பயனாகவே, இந்நாட்களில் ஆகாயக் கப்பல்கள் மலைகளையும், மகா சமுத்திரங்களையும் வாயுவேகம் மனோவேகத்துடன் அலட்சியமாகத் தாண்டிச் செல்வதையும் யுத்த சமயங்களில் எதிரிகளின் பெரிய பட்டணங்களை எளிதில் கைப்பற்றுவதற்குச் சாதனமாக இருப்பதையும் நாம் காண்கிறோம். இக்கப்பல்கள் ஆகாயத்தில் பறப்பதன் காரணம் நமக்குத் தெரிந்தபின், இவ்வளவு சாதாரணமான சூழ்ச்சியை மனிதர் என் தற்காலம் வரையிலும் அறியாமலிருந்தனர் என்று நினைத்து வியப்புறுகிறோம். ஆனால் இச்சூழ்ச்சியைக் கண்டுபிடிக்க அநேக நூற்றாண்டுகளும் ஆயிரக்கணக்கான உயிர்களும் செலவிடப்பட்டிருக்கின்றன.

இவ்வித முயற்சிகளின் ஆரம்பத்தில் பக்ஷிகளுக்கு இயற்கையில் அமைந்திருக்கும் இறகுகளைப்போல், மனிதர், தங்கள் தங்கள் தேக அமைப்பு கனம் முதலியவைகளுக்கு ஏற்பச் செயற்கை இறகுகளைக் கட்டிக்கொண்டு ஆகாயத்தில் பறக்க முயன்றனர். ஆனால் இவ்வித முயற்சியால் ஒரு பயனும் ஏற்படவில்லை. மேலும் இப்படி ஆராய்ச்சி செய்தவர்களில் ஒரு நிபுணர், மனிதன் ஒரு நாளும் பக்ஷிகளைப்போல் இறகுகளைக் கட்டிக்கொண்டு பறக்க முடியாது என்று கணித சாஸ்திர மூலமாக நிரூபித்துவிட்டார்,

இதே சமயத்தில் சிலர் பக்ஷிகளைப் பின்பற்றி இறகுகட்டிப் பறப்பதினின்று விலகி வேறு வழிகளைத்தேட ஆரம்பித்தனர். பொதுவாக, பெரிய அதிசயங்கள் கண்டுபிடிக்கப்படுவதற்கு அற்ப சம்பவங்கள் காரணமாக இருந்திருக்கின்றன. உதாரணமாக, மரத்திலிருந்து கீழேவிழுந்த ஒரு ஆப்பிள் பழம் இயற்கை சாஸ்திரத்தின் மூலாதாரமான விதிகள் அறியப்படுவதற்கும், கோபுரத்திலிருந்து தொங்கவிடப்பட்டு ஆடிக்கொண்டிருந்த ஒரு விளக்கு தற்கால கடிகாரங்கள் ஏற்படுவதற்கும் காரணங்களாயின. அப்படியே ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஒரு கார்மேகத்திரள் பலூன் கண்டுபிடிக்கப்படுவதற்குக் காரணமாயிருந்தது. பிரஞ்சு தேசத்தில் ஒரு கனவானின் பிள்ளைகளான ஜோஸப் மாண்ட் கால்பியர், ஜாக்வெஸ் மாண்ட் கால்பியர் ஆகிய இருவரும் அத்தகைய மேகத்தைக்கண்டு அது புகைத்திரள்போலிருப்பதைக் கவனித்து, ஒரு மெல்லிய துணிக்கூண்டினுள் புகையை அடைத்தார்கள். அது உடனே உயரக்கிளம்பி மேகம்போல் ஆகாயத்தில் பறந்தது. இதுதான் பலூனின் ஆரம்பம். இக்கூண்டு ஆகாயத்தில் பறந்தது ஏன் என்பதைக் கவனிப்போம். கடலில் தண்ணீர் எப்படி மீனைச் சுற்றியிருக்கிறதோ அப்படியே காற்று பூமியின் மேலுள்ள எவ்வித வஸ்துவையும் சுற்றியிருக்கிறது. இக்காற்று அசையும் போது நாம் காற்று வீசுகிறது என்கிறோம். இப்புவியிலுள்ள வஸ்துக்கள் எல்லாம் மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளன:— கல் மண்போன்ற திடபதார்த்தங்கள்; ஜலம் எண்ணெய் இவை போன்ற ஜலபதார்த்தங்கள்; வாயுக்கள். இவைகள் எல்லாவற்றுக்கும் நிறையுண்டு. ஆகவே நம்மைச் சுற்றியிருக்கும் காற்றும் நிறையுள்ளது. காற்றைப்போல் அநேக வாயுக்கள் இருக்கின்றன. நாம் சுவாஸம் விடுவது ஒருவித வாயு. அழுக்கு, மலம் இவைகளினின்றும் வருவது மற்றொருவித வாயு. சுண்ணாம்புக் காளவாய்களிலிருந்து நீல நிறத்துடன் எரிவது இன்னும் ஒருவித வாயு. இவைகளில் சில காற்றைவிடக் கனமானவை; சில காற்றைவிட இலேசானவை. ஒரு மரத்துண்டு தண்ணீரில் மிதப்பானேன்? ஒரு சிறு கூழாங்கல் அமிழ்வதேன்? தண்ணீரைவிட மரம் இலேசானது; கல் கனமானது.

அதாவது பெரிய மரக்கட்டை எவ்வளவு இடம் அடைத்துக் கொள்கிறதோ அவ்வளவு இடம் அடைக்கக்கூடிய தண்ணீரின் நிறையைவிட மரக்கட்டையின் நிறை குறைவு. அப்படியே சிறு கல் துண்டு எவ்வளவு இடம் அடைத்துக் கொள்கிறதோ அவ்வளவு பரிமாணமுள்ள தண்ணீரின் நிறையைக் காட்டிலும் சிறு கல்லின் நிறை அதிகம்.

ஒரு மரத்துண்டைத் தண்ணீருக்குள் அழுத்திப் பிறகு விட்டுவிட்டால் அது தண்ணீரைவிட இலேசாய் இருப்பதன் காரணம்பற்றி உடனே கிளம்புகிறது. அப்படியே காற்ருகிய சமுத்திரத்தில் காற்றைவிட இலேசாக உள்ள எதுவும் உயரக் கிளம்பும். நிலக்கரி வாயு காற்றைவிட இலேசானது. மேற் சொன்ன மாண்ட் கால்பியரின் துணிக் கூண்டின் நிறை ௧0 ராத்தல் என்று வைத்துக்கொள்வோம். அது காற்றினுல் அடைக் கப் பட்டதும் அதன் நிறை ௧00 ராத்தல் என்றும் வைத்துக் கொள்வோம். இப்பொழுது காற்றை வெளியே விட்டுவிட்டு நிலக் கரி வாயுவைக் கூண்டினுள் அடைப்போம். நிலக்கரி வாயு காற்றில் பாதி கனமேயுள்ளது. ஆகவே கூண்டும் வாயுவும் சேர்ந்து ருரு ராத்தல்கள் இருக்கின்றன. அதனுல் உயரக் கிளம்புகிறது.

மாண்ட்கால்பியர் பறக்கவிட்ட கூண்டு புகையால் அடைக் கப்பட்டது என்றேும். அப்புகை காற்றைவிட இலேசானதால் கூண்டு உயரப் பறந்தது. கோழி, எலி முதலிய ஜந்துக்கள் கூண் டிலிருந்து தொங்கவிடப்பட்ட ஒரு பெட்டியில் வைக்கப்பட்டன. கூண்டு திரும்பப் பூமியில் வந்து சேரும்போது அவை உயிருடன் இருந்ததைப் பார்த்து மனிதன் தானும் கூண்டில் ஏறி உட்காரத் தெரிந்துகொண்டான். இப்படியாகப் பலூன் கண்டு பிடிக்கப் பட்டது.

இப்படிக் கூண்டின் உதவியால் ஆகாயத்தில் பறக்கும் மனி தன் கவனிக்கவேண்டிய விஷயங்கள் என்னவென்று பார்ப்போம். முதலாவது, பிரயாணிகளும் அவர்களுடைய சாமான்களும் அடங்கும்படியான ஒரு பெரிய பெட்டி கூண்டிலிருந்துபலமான

கயிறுகளால்தொங்கவிடப்படுகிறது. கூண்டில் நிலக்கரி வாயுவை அடைக்குமுன் பெட்டியில் பெரிய பாரங்கள் ஏற்றப்படுகின்றன. வாயுவை அடைத்தபின் பிரயாணிகள் தங்கள் தங்கள் சாமான் களுடன் பெட்டியில் ஏறுவார்கள். பிறகு கூண்டு பூமியிலிருந்து உயரக் கிளம்பும்வரை பாரங்களை ஒவ்வொன்றாகத் தள்ளுவார் கள். கூண்டு மிகவும் உயர எழும்பவேண்டுமானால் உயரப் பறக் கும்போதே இன்னும் சில பாரங்களைப் பெட்டியிலிருந்து தள்ளி விடவேண்டும். மேலே யிருந்து மீண்டும் தரை வந்து சேரக் கூண்டிலேயே ஓர் உபாயம் வைக்கப்பட்டது. அதாவது கூண் டின் உச்சியில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு ஸ்பிரிங்கிலிருந்து ஒரு கயிறு கூண்டின் உள் வழியாய்ப் பெட்டியில் வந்து தொங்குகிறது. பெட்டியில் இருக்கிறவர்கள் இக் கயிற்றைப் பிடித்திழுத்தால் கூண்டின் உச்சி திறக்கிறது. உடனே இலேசான நிலக்கரி வாயு வெளியே செல்லக் காற்று அதன் இடத்தை அடைத்துக்கொள்வதால் கூண்டின் கனம் அதிகமாகி றது. ஆகவே கூண்டு கீழே இறங்குகிறது. (தொடரும்.)

---

# பத்திரிகை ஆராய்ச்சி.



## ஒரு மகாராஜாவின் திருவிளையாடல்கள்.

"டெயிலி ஹெரால்டு" பத்திரிகையில் பின் வரும் விவரம் காணப்படுகிறது:—

ஆள்வார் மகாராஜா வேட்டையாடுவதில் மிகப் பிரியமுடையவர். சென்ற வருஷத்தில் அவர், வேட்டையாடுவதற் கேற்ற மலைப் பிரதேசங் களில் சிறுத்தைப் புலிகளை அவிழ்த்து விட்டால், அங்கு வேட்டைக்குத் தடையாகப் பெருகி வரும் ஜனங்கள் ஓடிப்போவார்கள் என்று யோசனை சொன்னார். இப்போது, ஆள்வார் சமஸ்தானத்தில் வேட்டையாடுவதற்கு வசதிகளை அதிகமாக்குவதற்காக அஜப்கார்த் என்னுமிடத்தில் ஓர் அணை கட்டி வருகிறார். இவ்வணையினால் தேங்கும் ஜலம் சாகுபடிக்கு உப யோகப்படாது. வேட்டைக்கேற்ற காட்டுப் பிரதேசங்களை வளப்படுத் தவே உபயோகப்படும். இவ்வணை கட்டுவதற்கு ௩௦௦௦ ஆட்கள் கட்டாயப் படுத்தி வேலைக்குச் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்குச் சம்பளம் கிடையாது. உணவும் தங்க இடமும் மட்டும் அளிக்கப்படும். இந்த மகா

ராஜா வேட்டைக்காரர் என்று பெயர் பெற்றிருப்பதோடல்லாமல் ஐரோப்பிய விருந்தினரை உபசரிப்பதில் இணையற்றவர் என்றும் கீர்த்தி பெற்றிருக்கிறார். ௧௯௨௫-ல் அவருடைய சமஸ்தானத்தின் வருமானம் ௩,௩௭,௫00 பவுன். இதில் விருந்தாளிகளுக்கு உபசாரத்தில் ௫௨,000 பவுனும், மோட்டார்வண்டி, குதிரைலாயங்களுக்கு ௬௫,000 பவுனும், சமையல் அறைக்கு ௧௧,௨௫0 பவுனும் செலவு செய்தார். கல்வியபிவிருத்திக்கு எ,௫00 பவுன் திட்டம் போடப்பட்டது.

## சாந்திநிகேதனத்தில் மாணுக்கர் விடுதலை.

சாந்திநிகேதனத்தின் பழைய மாணுக்கரில் ஒருவரான ஸ்ரீமான் பி. ஜி. ரெட்டி "வாலண்டியர்" என்னும் பத்திரிகையில் எழுதுவதாவது :—

ஸ்ரீ ரவீந்திர நாதர் சுதந்தரத்தில் அதிகப்பற்றுள்ளவர். அவர் தமது மாணுக்கர்களுக்குப் பூரண சுதந்தர மளிக்கிறார். கல்வியில் அவரவர்களுக்கு விருப்பமான துறையைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள அவர் அநுமதி தந்திருக்கிறார். மற்றப் பள்ளிக்கூடங்களில் மாணுக்கன் வேறு கல்வித் துறைகளில் சுவை காட்டுவதாகத் தெரிந்தால், அவன் அதனுல் சரித்திரத்திலோ பூகோளத்திலோ பரீட்சை தவறிவிடப் போகிறுனென்று பயந்து உபாத்தியாயர்கள் அச்சுவையை முளையிலேயே கிள்ளி விடுகிறுர்கள். இதனுல் மாணுக்கனுக்கு எத்தகைய படிப்பிலும் சுவையில்லாமல் போய் விடுகிறது. சாந்திநிகேதனத்தில் மாணுக்கர்கள் இத்தகைய துன்பத்துக்கு உள்ளாக்கப்படுவதில்லை......மாணுக்கர்கள் தங்களுக்குள்ளேயே தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுகிறுர்கள். மாணுக்கரின் பொது ஒழுக்கத்தைப்பற்றி உபாத்தியாயர்கள் எதுவும் செய்யவேண்டியிருப்பதேயில்லை. எவனுவது ஒருவன் தவருக நடந்தால் அது மாணுக்கர் பஞ்சாயத்தினுல் விசாரிக்கப்படும். மாணுக்கர் அதிகாலையிலெழுந்திருந்து காலைக்கடன்களை முடித்துவிட்டு ௬0 நிமிஷம் பால ரிஷிகளைப் போல் தியானத்தில் அமர்ந்திருக்கிறார்கள். பின்னர் எல்லாரும் சேர்ந்து உட்கார்ந்து உபநிடதத்திலிருந்து ஒரு பாசுரத்தைப் பாடுகிறுர்கள். மாலையிலும் இப்படியே நடக்கிறது. புதன்கிழமை தோறும் விடுமுறை யாகையால் அன்று காலை எல்லாரும் கோயிலில் வந்து கூடுவார்கள். ரவீந்திரர் இருக்கும்போது அவரும், இல்லாதபோது வேறுயாரேனும் மத உபந்நியாசம் செய்வர்...... சாந்திநிகேதனத்தில் வகுப்பு அறைகளோ உபந்நியாச மண்டபங்களோ கிடையா. திறந்த வெளியில் பசிய மர நீழலில் தான் வகுப்புகள் நடக்

கின்றன. சாந்திநிகேதனத்தில் படித்த மாணுக்கர் அதைவிட்டு வெளியே செல்ல மனங்கொள்ளுவதே யில்லை.

## இந்தியாவின் நிலை.

பல நூல்களின் ஆசிரியரான மிஸ்டர் ரஸ்ஸல் ௧௯௨௦-ம் வருஷத்தில் எழுதியதாவது :—

"அரசியல் யதேச்சாதிகாரத்தை ஆதரித்து ஓர் அமெரிக்கர் பேச முன் வருவாரானுல் அதைவிட ஆச்சரியகரமானது வேறென்றுமில்லை. உலகெங்கும் சுதந்திர ஆட்சி நிலைபெற வேண்டுமென்பது அமெரிக்காவின் இலட்சியமன்றெனில், பின் அதன் இலட்சியந்தானென்ன வென்றுயாரே னும் தயவு செய்து சொல்வார்களா? அரசியல் யதேச்சாதிகாரம் பிரிட்டி ஷாருடையதாயிருக்குங் காரணத்தினுல் அதற்குப் புகழ்ச்சிகூற வேண்டு மென்று கூறுதல் பலே தமாஷ்தான்! பிரிட்டிஷ் பெயருடன் கூடியதனுல் அதன் குணம் மாறுபட்டுவிடுமோ? ருஷியாவிலும் துருக்கியிலுமுள்ள யதேச்சாதிகாரத்தைத் தோத்திரஞ் செய்யும்படி நம்மை யாருங் கேட்ப தில்லை. ஜெர்மனியில் இருந்த யதேச்சாதிகாரத்தைப் புகழும்படியும் நம்மை எவரும் கேட்கவில்லை. பிரிட்டிஷ் யதேச்சாதிகாரத்தைப் பாராட் டுதற்கு மட்டும் காரணம் என்னவந்தது? ஒரு தேசத்தை மற்றொரு தேசத் தார் கைப்பற்றி ஆளுதல் எங்கே காணப்படினும் அது வெறுப்புக்குரியதே யாகும். இந்தியாவின் இப்போதைய நிலை இதுதான். நாகரிகத்திற் சிறந்த ஒரு பெரிய தேசத்தார்மீது அன்னியஆட்சி சுமத்தப்பட்டிருக்கிறது...... இந்தியாவின் இந்தக் துயரமான நிலைமையில் நகைப்புக்கிடமான அம்சம் இல்லாமற் போகவில்லை. பிரிட்டிஷார் தங்களுடைய கருணைமிகுதியால் இந்தியாவின் நன்மைக்காகவே அந் நாட்டின் மீது ஆதிக்கம் செலுத்துகிருர்களாம்! இந்திய மக்கள் அதை விரும்புவதுடன் அதற்காக நன்றி பாராட்டுகிருர்களாம்! நன்று நன்று... இஃதெல்லாம் உண்மையானுல், அம்மக்களிடையே பேச்சு சுதந்தரத்தை அடக்க அவசியம் என்ன வந்தது? ஆயிரக்கணக்கானவர்களைச் சிறையி லடைக்க அவசியம் என்ன நேர்ந்தது? அவர்களிடம் எவ்வித ஆயுதமும் அகப்படாமல் சர்வ ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருப்பதேன்?... கடைசியாக நான் கேட்பதென்னவென்ருல், ஒரு நாட்டார் மீது இன் னெரு நாட்டார் வகிக்கும் யதேச்சாதிகார ஆதிக்கம் எங்கேனும் சகிக்கக் கூடியதாக யிருக்க முடியுமா?"

உ
சிவமயம்.

# "குமரன்" KVC00009

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

சதங்கை ௩. காரைக்குடி பிரபவ-ஆ புரட்டாசி-மீ மணி கஉ.

## தமிழ் மொழியும் அதன் பண்பும்.

### ஸ்ரீ. கார்மேகக்கோனார் பிரசங்கம்.

மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழாசிரியர் ஸ்ரீ எ. கார்மேகக் கோனார் அவர்கள் சென்னைச் சர்வ கலாசாலை மண்டபத்தில் நிகழ்த்திய ஓர் சொற்பொழிவில் குறிப்பிட்டதாவது :—

பொதுவாக மாந்தரின் உயிர்ப் பண்பை வளர்ப்பது அவர்களது மொழியேயாகும். தமிழ் மக்களின் புராதன மேன்மைக்கு ஆயுதமாயிருந்தது அவர்தம் தமிழ் மொழியே. "ழ" கர ஓசை தமிழுக்கு மட்டுமே உண்டு. வேறு மொழிக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இவ்விதமிருத்தலாலே இது தனித் தமிழ் மொழி யென்பது விளங்கும். இதன் உண்மை இங்ஙனமாக, அது திராவிடம் என்னும் மொழியினின்றும் திரிந்து வந்ததென்று தமிழ் மொழியின் தொன்மையும் மாட்சியும் தெரியாது கூறுவாருமுளர். ஒரு பொருளுக்கு எத்துணையோ சொற்கூட்டங்களைக் கண்டு அமைத்த தமிழர், தம் மொழி இயல் தெரிந்து அதற்கோர் பெயர் குறிக்க வகையறியாது வேற்று மொழியானரால் இட்ட பெயரினின்றும் பெயராக்கிக் கொண்டனர் என்பது நகையாடற்குரிய தன்மையாகும். ஒரு பாஷையைக் குறிக்க மற்றொரு மொழியில் பெயர் ஆக்கப்பட்டிருந்த தென்பது விந்தையான விவாம். திராவிடம் என்பது பண்டைத் தமிழ் நூல்களுள் காணப்படாத

தென்பது முன்னரே கூறப்பட்டது. இனி இதுபற்றிய செய்தியை நிறுத்தித் தமிழின் தொன்மையைச் சற்று கூறுவோம்.

## தமிழின் தொன்மை.

உலகத்தில் மிகப்பழையமொழிகள் சமஸ்கிருதம், கிரேக்கம், எபிரேயம், லத்தின் முதலிய மொழிகள் என்பர். அம்மொழிகளை மிகப்பழமையுடையதென்போர் அவை பேச்சு வழக்கற்று ஏட்டு வழக்கில் மாத்திரம்நிற்பதையேகாரணமாகக்கூறுவர். அதனால்எம் மொழி பேச்சு வழக்கற்று ஏட்டு வழக்கு மாத்திரத்தில் நிற்கின்றதோ அதுவே தொன்மை மொழியாமென்பதும், இரு வழக்குமுடைய மொழி தொன்மையுடையதன்றென்பதும் அவர்தம் கூற்று என அறியப்படுகிறது. இக்கருத்து தருக்கநூல் முறையாக ஒவ்வாததாகும். மொழிகள் இரு வழக்கிலும் வழங்குவதற்கும், வழக்கு மட்டில் நிற்பதற்கும் காரணம் அம்மொழிகளை உச்சரித்தற்கு வேண்டப்படும் முயற்சியின் எளிமை வன்மைகளைப் பொருத்ததன்றி வேறு காரணமொன்றும் பொருந்துவதன்று. நந்தமிழ் மொழி இரு வழக்கினும் பயிற்சியுடைமையால் அது பழைமையிலும், பெருமையிலும் குறைந்ததாகாமல் தன்பயனை மக்கட்கு நன்கு நல்கி தொன்மை மொழியாய் விளங்குகின்றதென்பது அறியப்படும்.

## வரலாற்று முறை.

இனி வரலாற்று முறையால் தமிழ்மொழியின் தொன்மை எத்தன்மையதென்று ஆராய்ந்தால் அதன் பழமை அளவிடற்கரிதாயிருக்கிறது. வடநாடு விட்டு தென்னடு போந்த அகத்தியர் அவர் தென்னடு செல்ல சிவபெருமானல் அணை பெற்றபோது "ஐயனே! தென்னட்டார் சீர்த்த மொழி வல்லுநர் அயிற்றே. அவரோடு பழகி அவரால் உபசரிக்கப்பெற அம்மொழிப்பயிற்சி யான் அடையுமாறு எங்ஙனம்?" எனக் கேட்டனர் என்பது அவர் சரிதையில் கூறப்படுகிறது. தென்னடு போந்து தமிழ் பயின்று அகத்தியமென்னும் அரிய முத்தமிழிலக்கண மருளிய தமிழ்ப் பேராசிரியராய் விளங்கிய அகத்தியர் பாடல் சில இருக்கு வேதத்தில் காணப்படுமென்ப. வேதம் நான்கு பகுப்படைதற்கு முன்னர் உண்டான தொல்காப்பியம் தமிழ்மொழியைத் தொன்மொழியெனச் சுட்டுகிறது. உலகத்துப் பல

மொழிகளிலும் தமிழ் மூலம் காணப்படுகிறது. ஒரு பொருளின் பெயர்களாக ஐம்பதின் மேற்பட்ட சொற்கள் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் தமிழ் மொழியின் தொன்மையை நிலை நாட்டுதற்கேற்ற சான்றாக விளங்குகின்றதன்றோ?

## தமிழ்மொழி தனி மொழியே

தமிழ்மொழி ஒரு உயர் தனிச் செம்மொழியாம். உயர் தனிச் செம்மொழியென்றால் பழமையும், தனித்தியங்கும் ஆற்றலும், பல மொழிகளின் தோற்றத்திற்குரிய முதன்மையும், சிறந்த நயங்களும் அமைந்திருப்பதாகும். தமிழ்மொழியின் தொன்மை மேற்காட்டப்பட்டது. ஏனைய தன்மை அதன் சிறப்பியல்புகளை ஆராய இனிது விளங்கும். முதலாவது தமிழ்மொழி வடமொழி முதலிய ஏனைய மொழிகளின் உதவி சிறிதும் வேண்டப்பெறாது தனித்தியங்குதற்குரிய சொற் கூட்டத்தை நிரம்பப்பெற்றுக் கருதிய கருத்துக்களையெல்லாம் முட்டின்றி வெளிப்படுத்தும் தன்மையதாய் விளங்குகிறது. இதன் கண்ணுள்ள சொற்களினீட்டம் இத்துணையதென்று அளவிடற்கரிய அகற்சியுடையதாகவிருக்கிறது. எழுத்து, சொல், பொருள் இலக்கண அமைதியை முடிந்த நிலையோடு கொண்டுள்ளது. தமிழ் மொழியில் உயிர், மெய், மெல்லினம், வல்லினம், சார்பெழுத்து என்ற எழுத்துப்பாகுபாடும், அதன் வைப்பு முறையும் பிறபாஷையில் காணமுடியாத அருமையுடையதாக இருக்கிறது. இவ்வெழுத்துக்கள் உரப்புதல், கனைத்தல் முதலிய காரிய முயற்சி வேண்டப் பெறாதே எளிதிற் பிறப்பனவாகவும் அமைந்துள்ளன. சொற்களெல்லாம் சில எழுத்துக்களாலாகிய சொற்களாய் அகன்ற பொருளைத் தரும் திட்பமுடையனவாக இருக்கின்றன. பால், திணை பகுப்புகளெலலாம் ஏனைய மொழிகள் போல் சொல் நோக்கத்தாலன்றி பொருள் நோக்கம் பற்றியே அமைந்துள்ளன. தமிழில் ஒரு சொல் ஆண்பாலென்றால் அது குறிக்கும் பொருளும் ஆணாகவே யிருக்கும். பெண்பாலென்றால் குறிக்கும் பொருளும் பெண்ணாகவே யிருக்கும். வட மொழியில் இம்முறை காணுதல் இல்லை.

இனித்தமிழில் வினைச் சொல் விகுதிகளிலிருக்கும் ஓர் விசேடம் பிற மொழி பலவற்றிற்கு அரிதாகும். அது, விகுதிகள் சொற்களின் இறுதியில் நின்று எழுவாயில்லாமலே திணை, பால், இடம் அனைத்தையும் குறித்துவிடுவதாம். 'வந்தான்' என்னும் இவ்வினைச் சொல்லில் 'ஆன்' எனும் விகுதி நின்று உயர் திணையையும், ஆண்

பாலேயும், படர்க்கையிடத்தையும் எழுவாயின்றியே விளக்கி விடுதல் காண்க. இலக்கண விஷயத்தில் தமிழ் மொழி மற்ருேர் தனி நிலேயுடையதாய் இலங்குகிறது. பிறமொழி இலக்கணங்களெல்லாம் எழுத்துச் சொற்களே ஆராய்ந்து கூறுநிற்கத் தமிழ் மொழி இலக்கணம் சொல்லின் பயனுகிய பொருளிலக்கணத்தையும் விரித்துக் கூறத் தலேப்பட்டு அதில் மக்களது ஒழுகலாற்றினே அகம், புறம் என்று திறம்பட விளக்குகின்றது. இத்திறனும் பிற மொழிக்கட்படா பெருமையதாகும். தமிழ் மொழி தோன்றிய பல்லாயிரம் ஆண்டுகளாயும் அதன் செவ்விய நடை இன்றளவும் ஒரு சிறிதும் வேறுபடாது பழைய சொற்ருெடர் அமைதியிலேயே நிற்றல், ஒரு மொழிக்கு வேண்டிய பூர்த்தி நிலேயை அது முன்னரே அடைந்து விட்டதென்பதை வெளியிடுகின்றது. இன்னும் தமிழ் மொழியினியற்கையை ஆராய்ந்தால் பிற மொழிகட்கில்லாத எத்துணேயோ தனிப்பண்பும், சிறப்பியல்பும் காணலாகும். வடமொழியிற் சில தமிழ் மொழியில் வழக்குப் பெற்றது இரு மொழியும் பல்லாயிரம் ஆண்டுகளாக ஓரிடத்து அருகவழக்குற்றிருந்ததனுலும், தமிழ் நூல் செய்தாருட் சிலர் வடமொழிப்பயிற்சி உடையாரா யிருந்ததனுலுமேயன்றி வேறு காரணம் பற்றி யல்ல. இங்ஙனமே தமிழ் மொழிகள் சில வடமொழிகட் பயின்று வழங்குதலுமுண்டு.

## மேனுட்டார் கருத்து.

இனி நற்றமிழ் மொழியைப் பிற மொழிகளோடு வைத்துச் சீர் தூக்கிப் பார்த்த மேனுட்டு மொழி நூல் புலவர் கருத்தும் ஈண்டு அறியப்படுவது அவசியமாகும்.

"திணே பாலிடங்களேச் சுருக்கிய முறையில் தெளிவாய்க் கூறும் ஆற்றலில் திராவிட பாஷைகளுக்குவப்பாவதொன்றில்லே. இவ்விஷயத்தில் வடமொழி தமிழ்மொழிக்கு இணேயாகாது. வடமொழி தமிழிலிருந்து கற்றுக்கொண்டன பல எனக் கூறின் அது தவருகாது" என்ருர் ஆசிரியர் காட்வெல்.

"பொருள் நலத்திலும், அவற்றின் பரப்பிலும் தமிழ்மொழி கிரேக், லத்தின் பாஷைகளிலும் சிறந்தது" எனக் கூறினர் ஆசிரியர் வின்ஸ்லோ.

"கிரேக், லத்தின் மொழியிலுள்ள கவிகளே இனிமையிற் சிறந்தனவென்றுகருதிக்கொள்ளும் ஐரோப்பிய அறிஞர்கள் தமிழ், தெலுங்கு மொழிகளிலுள்ள கவிகளேக் கற்பரேல் தாங்கொண்ட

கருத்தை மாற்றிக்கொள்ளுவாரென்பது திண்ணம்'' என்றார் பண்டிதர் டேய்வர்.

"உலகிலுள்ள சிறந்த பாஷைகளுள் தமிழும் ஒன்றே'' என்று மொழிந்தனர் சார்லஸ் கோவர்.

இவைகளெல்லாம் அவ்வாசிரியர்கள் காய்தல் உவத்தல் அகற்றி நடுநிலைமையினின்று அவர்கள் கண்ட உண்மையல்லவோ?

தற்காலத்துத் தமிழ் நூல்களுள் மிகப் பழமையானது தொல்காப்பிய மென்பதும், அதன் பழமை வியாசர் வேதத்தை முறை செய்தகாலத்திற்கும், சரித்திர காலத்திற்கும் அப்பாற் குறிக்கப்பட்ட தென்பதும் பல விடங்களில் குறிக்கப் பெற்றிருக்கிறது. அத் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே தமிழ்மொழி வழக்கு பெற்றிருந்ததென்று தெரிகிறது. அன்றியும் தமிழ்மொழியிலுள்ள முதனூல் வழி நூல்களையும் தொல்காப்பியனார் குறித்துச் சொல்லுதலும அவருக்கு முன்னரே நூல்கள் பல உண்டென்பதை விளக்கும். தொல்காப்பியரது ஆசிரியரெனப்படும் அகத்தியர் தென்னாடு வருவதற்கு முன்னரே தமிழ்மொழி திருந்தியநிலையில் வழக்குற்றிருந்த தென்று அவர் சரித்திரத்தால் அறியப்படுதலும் தமிழ் இலக்கியத் தொன்மைக்குச் சான்றாகும்.

## இயல், இசை, நாடகம்.

இங்ஙனம் மிகப் பழையகாலத்தே இலக்கியத் தோற்றம் பெற்ற தமிழ்மொழி இயல், இசை, நாடகமென்னும் மூவகையால் பிரிக்கப்பட்டு மூவகையிலும இலக்கணங்களும் இலக்கியங்களுமாகப் பல எழுந்தன. இயற்றமிழ் எனப்படுவது வெண்பா முதலிய பாவகையால் செய்யப்பட்டு நடப்பது. வசனமும் ஒருசார் இதனுள் அடங்கும். இசைத்தமிழ் பண்ணும் திறனும் அமைந்து தாளத்தோடு இயங்குவது. நாடக மென்பது கதை தழுவிய பாட்டுக்களைப் பண்ணோடும் தாளத்தோடும் பாடி நடித்தற்காகும் வகையியல்வது. தமிழ் மொழியில் இம் மூத்திறப் பாகுபாடு பண்டு தொட்டே உண்டு என்பதை "தலைச் சங்கத்து இசைத் தமிழ் நூல்களாகிய பெருநாரை, பெருங்குருகும் பிறவும் இறந்தன. நாடகத் தமிழ்நூலாகிய பரதம், அகத்தியம் முதலாய தொன்னூல்களு மிறந்தன'' என்ற சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரம் ஐயமறத் தெளிவிக்கும்.

மூவகைப் பிரிவோடு அக்காலத்துத் தோற்ற முற்ற இலக்கண இலக்கியங்கள் பல வென்பதனை இறையனர் களவிய லுரை, சிலப்பதிகாரப் உரைப்பாயிரம், தொல்லாசிரியர் பழந்தமிழ் நூலுரை முதலியவற்றால் அறியக்கிடக்கின்றது. இவை அகத்தியம், எத்துணையோ பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களவியலுரை, மாபுராணம், பூதபுராணம், தொல்காப்பியம் முதலியன. இவைகளுள் பெரும்பாலன இயலிசை நாடக இலக்கணங்கள் சரித்திர காலத்திற் குட்பட்ட காலமாகிய கடைச்சங்க காலத்தில் அச்சங்கத்தில் தோன்றிய நூல்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என ௩ பிரிவினதாக உள நூல்களும் பிறவும். இவை யனைத்தும் இப்பொழுது நிலைத்து நிற்கின்றன.

அகம், புறம்.

பண்டைக்காலத்துத் தமிழ்ப் புலவர்களெல்லாம் நூற் பொருளாக வடநூலார் அறம் பொருளின்பம் வீடு என ௪ ஆகப் பிரித்து அகமென்ற பகுதியிலடக்கியும், ஏனைய அறம், பொருள், வீடு என்பவற்றைப் புறத்துள் அடக்கியும் தாங்கள் செய்த நூலெல்லாம் இவ்விரு திறப்படவே செய்து போந்தனர். அகமாவது ஒத்த அன்பினையுடைய தலைவன் தலைவிகளது கூட்டத்தில் பிறந்த இன்பம். அது தலைவன் தலைவிகளது உள்ளத்து உணர்வு மாத்திரம் துய்த்து உணரப்படுதலின் அகமெனப்பெயர் பெற்றது. புறமாவது யாவராலும் உணரப்படுவதாய் பிறர்க்கு எடுத்துரைக்கும் தன்மைத்தாய் அறம் பொருள்பற்றி வெளியே நிகழும் செய்கையும், இயற்கையும் கூறுபாடுமாம். இவ்விரு பொருளையும் சுருங்கக் கூறுமிடத்து காதலர் தம் காதலும், வீரர் தம் வீரமும் எனலாம். இளம்பூரண அடிகள் 'அஃதேல் இந்நூலகத்து விரித்துக்கூறிய பொருள் யாவை யெனின் காமப் பகுதியும் வீரப் பகுதியுமா மென்க' என அகத்திணை இயல் முதல் சூத்திரத்துரையில் உரைத்திருப்பதும், "ஸ்டாப்போர்ட் புருக்" ஆங்கில நூல்களில் காணப்படும் பொருள் காதலர்தம் காதலும் வீரர்தம் வீரமும் என நமது ஆங்கில வாலாற்றுள் கூறியிருக்கிறார். உலகத்து மக்கள் ஒழுக்கமெல்லாம் இவ்விருவகையினுள்ளே அடங்கு மென்று ஆராய்ந்து அவற்றை இருகூறுகப் பண்டையோர் வகுத்தது தமிழ் மொழியின் சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல்

என்னும் அமைதியும், பண்டைப் புலவரது அகன்ற அறிவும் புலப்படுவதாக இருக்கின்றது.

கடல்கொண்ட நிகழ்ச்சி.

இனி தற்காலத்துப் பழந்தமிழ் நூல்களாகக் காணப்படுவன எல்லாம் இங்கு கூறிய அகம் புறம் என்னும் பகுப்புடையவைக ளாகவும் சில நீதி பற்றியனவாயுமே காணப்படுகின்றன. தற் காலத்து ஆங்கிலம் முதலிய மொழிகளுள் காணப்படும் நூல்கள் போலவே ரசாயன நூல், தாவர நூல், கணிதம், வானநூல், பொருள் நூல், தொல்லுயிர் நூல் முதலியவை தமிழ்மொழி யிற் காணக்கிடையா எனினும் இவைகள் எல்லாம் முற்காலத்து இருந்தன என்பதற்குச் சான்றுகளான குறிப்புகள் பழைய நூல்களுள் காணப்படுகின்றன. தற்காலத்தில் வழங்கும் சித்த நூல்கள் பல முற்காலத்திய தமிழ் நூல்களைப் பின்பற்றி வந்த மையாகையால் அதிற் கூறப்படும் ரசாயனம் மருத்துவம்பற்றிய நூல்கள் முன்னமே இருந்தமைபெறப்படும். தொல்காப்பியத் திற் காணப்படும் கருப்பொருள் விளக்கம் ஒன்றே தாவர நூல், விலங்கியல் நூல், பௌதிக நூல், ஜனசமூக நூல் முதலியவைக ளின் அறிவைத் தெரிவிக்கின்றது. அகப்பொருள் நூல்களெல் லாம் ஒருபுடை மனோதத்துவ நூல்களாக அமைந்துள்ளன. புறப்பொருள் நூல்களுள் பொருள் நூல் அங்கங்கள் காணப் படுகின்றன. வானநூல் சோதிட நூல்களிருந்தமை. புலவர்கள் தாங்கள் கூறும் பொருள்கட்கு அவை சம்பந்தமாகக் கூறும் உவமைகளால் தெரிகின்றது. ஆடை நூல் முதலிய பல நூல்கள் முன்னர் இருந்தமையை யாப்பருங்கல விருத்தியில் மந்திரவாத மும், மருத்துவ நூலும், சாமுத்திரிகமும், நிலைத்த நூலும், ஆயுத நூலும், பத்து விச்சையம் ஆடைநூலும். அணிகலநூலும், அருங் கலநூலும்முதலியவற்றுள்உணர்க'' என்றெழுதியிருப்பதால் நன்கு அறியலாம். இவைகள் எல்லாம் காணாது இறந்தொழிந்தமைக்கு முக்கியகாரணம் முன்னர் சர்வகலா சங்கமிருந்த தமிழ் ராஜதானி களாகிய தென்மதுரை, கபாடபுரம் என்பனவற்றை திடும்பிரவேச மாகக் கடல்கொண்ட நிகழ்ச்சியேயாகும். இதனைப் பின்வரும்,

"வானம் உருவம் யோகம்
இசைகணக் கிரதஞ்சாலம்,
தாரண மறமேசந்தம்
தம்பநீர் நிலமுலோகம்,
மாரணம் பொருளின் றின்ன
மானநூல் யாவும் வாரி

வாரணங் கொண்டதந்தோ!
வழிவழிப் பெயரும் மாள."

என்னும் பழைய பாடல் தெரிவிக்கிறது.

பா வகை.

பண்டை நல்லிசைப்புலவர் தாங்கள் கருதும் பொருளை வெளிப்படுத்துதற்கு தாங்கள் கருவியாகக்கொண்ட பாக்கள் பலவகை. அவை வஞ்சிப்பா, கலிப்பா, ஆசிரியப்பா, பரிபாடல் என்பனவாம். இவைகளுள் நூல் வழக்கிற்பயின்றன வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா என்னும் மூன்றுமேயாகும். ஏனைய சிறு பான்மை, இப்பாக்களின் இலக்கணங்களெல்லாம் தொல்காப்பியச் செய்யுளியலிலும் பின்னெழுந்த யாப்பு நூல் பலவற்றுள்ளும் கடல்போலப்பரந்து கிடக்கின்றன. இச்செய்யுள்களின் இலக்கணத்தை ஆராயின் தமிழ்மக்களுக்கிருந்த மொழிநூல், சப்த நூல் முதலிய அரிய நூலறிவின் திறங்கள் எத்தன்மையதென்று எளிதில் புலனாகும்.

வசன நூல்.

முற்காலத்து வசன நூல்களாக இப்போது நமக்கு கிடைப்பன ஒன்றுமில்லையென்றே சொல்லலாம். எனினும் வசன நூல்ளுமிருந்த தென்பதனைத் தொல்காப்பியத்துள் "பாவின்றெழுந்த கிளவியானும், பொருளொடு புணரா பொய்மொழியானும்" என்று தொடங்கும் சூத்திரம் தெரிவிக்கின்றது. அச்சூத்திரத்தை ஆராய்ந்தால் மக்கட்கே விளைவிக்கும் கட்டுக்கதைகளே பெரும்பாலும் உரைநடையாலெழுதப்பெற்று வந்தனவென்பது விளங்கும்.

மேலே எடுத்து மொழிந்த இலக்கியங்களின் தன்மையினையும் தொன்மையினையும் ஆராய்ந்தால் தமிழர் பழங்காலத்துக் கல்வியிலும், ஒழுக்க நெறியிலும் அடைந்திருந்த உச்சநிலை எத்தன்மைத்தென்றறியப்பட்டு தமிழ்மக்கட்குப் பெரு மகிழ்ச்சியையூட்டுகிறது. தமிழ் இலக்கண இலக்கியங்களின் இன்சுவை நுகர்ந்த போப் என்னும் அறிஞர் "இந்திய ஜனங்களில் தமிழரே முற்பட்டவர். அவர்களை அங்ஙனம் செய்வித்தவை திருக்குறள், நாலடியார் முதலிய இலக்கியங்களே" என்று வியந்துள்ளமை கண்டு கருதத் தக்கது. (தமிழ்நாடு)

---

# ஆகாயப் பிரயாணத்தின் அதிசயங்கள்.

[பா. சி. சுந்தரம் B. A. (Hons.)]

( முன் தொடர்ச்சி )

பிள்ளைகள் விளையாடும் பந்து காற்றினுல் அடைக்கப்பட்டிருப்பதுபோல் கூண்டு நிலக்கரி வாயுவால் அடைக்கப்படுவதில்லை. அப்படி அடைக்கப்படுவதாக இருந்தால் ஒரு சிறு குண்டூசி யளவு துவாரம் கூண்டின் பரப்பில் இருந்தாலும் கூண்டு திடீரென்று சுருங்கிக் கீழே விழுந்துவிடும். கூண்டின் துணி ரப்பர் போல் நீளவும் சுருங்கவும் முடியாது. கூண்டில் அடைக்கப்படும் நிலக்கரி வாயு காற்றைவிட இலேசானதால் அது கீழ் நோக்கி வெளியே போகாததலால் கூண்டின் கழுத்துத்திறந்தேயிருக்கும். இப்படிக் கூண்டினுல் உயரப் பறப்பதில் அநேக அசௌகரியங்கள் இருக்கின்றன. கூண்டு ஆகாயத்தில் மிதப்பதால் காற்று எத்திக்கை நோக்கி வீசுமோ, அத்திக்கிலேயே தான் கூண்டும் செல்லும். கூண்டை ஒரே திக்கை நோக்கிச் செலுத்த முடியாது; காற்றை எதிர்த்துச் செலுத்தவும் முடியாது. சில வேளைகளில் காற்றுக் கூண்டைச் சமுத்திரங்களுக்கு மேலேயும், வேண்டாத இடங்களிலும் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். ஆகையால் புகைக் கூண்டில் போகிறவர்கள் காற்றின் கருணையை நாடி நிற்கவேண்டும். இன்னும் சிற்சில வேளைகளில் சூரிய வெப்பத்தினுல் நிலக்கரி வாயு சூடாக்கப்பட்டு அதன் கனம் குறைந்து மேலே எழும்புவதினுல் மிகுந்த அபாயம் நேரிடும். கூண்டை நிலக்கரி வாயுவால் அடைப்பதற்குச் செலவு அதிகமாகும். மேலும் ஒரு கூண்டு சிலமாதங்களே தான் வாயுவை வெளியிடாமலிருக்கும். அதன் பிறகு கூண்டை உபயோகிப்பதில் அபாயம் உண்டு. ஆகவே கூண்டை ஒரே திசையை நோக்கிச் செலுத்துவதற்கும் காற்றை எதிர்ப்பதற்கும் வேண்டிய உபாயங்களை மனிதர் தேட ஆரம்பித்தனர்.

கடைசியாக ஓர் உபாயமும் கண்டு பிடிக்கப்பட்டது. கூண்டு உருண்டை வடிவத்தினின்றும் நீளமானதாகச்

செய்யப்பட்டது. பெட்டிக்குப் பதிலாக நீளமானதொரு சட்டம் தொங்கவிடப்பட்டது. இப்படிச் செய்வதினால் கூண்டு காற்று வழியே ஊடுருவிச் செல்லும்போது அதிகத் தடங்கல் ஏற்படாது. அச் சட்டத்தின் நடுவில் ஒரு யந்திரம் வைக்கப்பட்டது. அவ் வியந்திரத்தின் உதவியால் மின்சார விசிறிகளில் இருப்பதுபோல் இரண்டு அலகுகள் மிகவும் விரைவாகச் சுற்றப்படுகின்றன. இப்படி அலகுகள் சுழலுவதினால் காற்று அசைவற்றிருக்கும் சமயத்திலும் கூண்டு காற்றை ஊடுருவிச் செல்லச் சாத்தியமாகிறது. [இஃது எதனால் என்பதைப் பின்னால் விவரிப்போம்.] கூண்டு காற்றின் வேகத்தையும் திசையையும் சார்ந்து நிற்காமல் வேண்டிய திசைகளிலும் காற்றை எதிர்த்தும் செல்லச் சக்தியுள்ளதாகின்றது. இந்தச் சௌகரியம் ஏற்பட்ட பின் பெரிய கூண்டுகள் பெரிய சட்டங்களுடனும் அதிக பலமுள்ள இயந்திரங்களுடனும் மணிக்கு ௨௦, ௩௦ மைல்கள் செல்லக்கூடியவைகளாகவும் செய்யப்பட்டன. இவ்விதக் கூண்டுகளே ஆகாயக்கப்பல்கள் எனப்பெயர் வழங்கிவருகின்றன.

இக் கப்பல்கள் முதலாவதாக பிரெஞ்சு தேசத்திலேயே பறந்தனவெனினும் ஜர்மானியர்கள் பிரெஞ்சு தேசத்தவர்களைக் காட்டிலும் மிகவும் சிரத்தை எடுத்ததின் பயனாக இக்கப்பல்கள் கட்டுவதில் ஒப்பற்ற தேர்ச்சியை அடைந்தனர். இவ்விதக் கப்பல்களில் கௌண்ட் ஸெப்பலின் என்பவர் கட்டினவை மிகவும் கியாதி பெற்றவை. அவர் கட்டின கூண்டுகள் அநேக அறைகளாக வகுக்கப்பட்டு ஒவ்வொரு அறையும் வாயுவால் அடைக்கப்பட்டது. இதனால் ஒன்று இரண்டு அறைகள் பழுதுபட்ட போதிலும் கப்பல்கள் சேதப்படுவதில்லை. இவர் கப்பல்கள் எல்லாம் எரிந்தும், குண்டுகள் பட்டு நாசமடைந்தும் வேறு சில காரணங்களால் உடைந்தும் போயின. ஆனால் அவருடைய முயற்சிகளால் ஆகாயக் கப்பல்கள் முன்னைவிட அபாயம் குறைந்தவைகளாயும் அநேக சௌகரியங்கள் அடங்கியவைகளாயும் செய்யப்பட்டன.

ஆகாயக் கப்பல்கள் சிற்சில காரணங்களால் அதிக முன்னேற்றத்தை அடைய முடியவில்லை. இக்கப்பல்களின் கூண்டு மிகப் பெரியதாக விருப்பதனால் காற்றின் வழியாக மணிக்கு ௨௦,

௩௦ மைலுக்குமேல் சுலபமாகச் செல்வது முடியவில்லை. காற்று அதன் பக்கங்களில் வேகத்துடன் தாக்கும்பொழுது கப்பல்கள் சமுத்திரத்தில் புயற்காற்றில் அகப்பட்ட நாவாய்கள் போல் தத்தளிக்க ஆரம்பித்தன. கூண்டுகள் வேறு, சட்டங்கள் வேறாகச் சில சிதறிவிடுகின்றன. தவிர, கப்பல்கள் பூமியில் இறங்கும் போது, பலமான காற்றடித்தால், சட்டமும் கூண்டும் விரைவாகப் பூமிமேல் தாக்கப்பட்டு உடைகின்றன. மேலும் ஒரு கப்பலை ஓட்டுவதில் செலவு அதிகமாகின்றது.

மேற்கூறிய ஆகாயக் கப்பல்கள் ஆகாயத்தைவிடக் கனம் குறைவாக இருந்தமைபற்றி உயரப் பறந்தன. ஆகாயத்தைவிடக் கனமுள்ளவைகள் எவையும் உயரப் பறக்க முடியாது என்ற ஒரு பொது நம்பிக்கை நிரம்பகாலம் இருந்துவந்தது. இந்த நம்பிக்கை சீக்கிரத்தில் நீங்கி தற்காலத்திய ஆகாய சலனிகள் (Aeroplanes) கண்டுபிடிக்கப்பட்டதின் பெருமை முக்கியமாக இந்நூற்றாண்டிற்கே உரியதாகின்றது. ஐம்பது வருஷங்களுக்குமுன் சில ஆராய்ச்சிக்காரர்கள் பறவைகள் ஆகாயத்தைவிடக் கனமுள்ளவைகளாக விருந்தும் பறக்கின்றன என்பதையும் மேலும் அப்படிக் கனமில்லாவிட்டால் பறக்க முடியாவென்பதையும் தெரிந்துகொண்டார்கள். பிறகு பறவைகள் பறப்பதை நன்கு கவனித்து ஆகாய சலனிகளின் இரகசியத்தைக் கண்டுபிடித்தனர்.

நாம் சாதாரணமாக சமுத்திரக் கரையில் அல்லது ஏரிக்கரையில் சிறு பிள்ளைகள் காற்றாடி விடுவதைப் பார்த்திருக்கிறோம். அவர்கள் கடிதத்தினால் செய்த காற்றாடிக்குக் கயிறு ஒன்றைக் கட்டி அதைப் பிடித்துக்கொண்டு காற்றடிக்கும் திக்கை நோக்கி நிற்கிறார்கள். அப்பொழுது காற்று தன்னுடைய வேகத்தில் தன்னை எதிர்த்து நிற்கும் காற்றாடியை இருவிதமாகத் தாக்குகிறது. முதலாவது தான் அடிக்கும் திசையில் இழுத்துப்போக யத்தனிக்கிறது. ஆனால் கயிறு அதை அப்படிப் போவதினின்றும் தடுக்கிறது. இரண்டாவது காற்று அதைத் தூக்குகிறது. காற்று நின்றபொழுது கயிற்றைப் பிடித்திருக்கும் பையன் அசைவற்று நின்றுவிட்டால் காற்றாடி கனமாயிருக்கும் காரணம்பற்றிக் கீழே விழுந்துவிடும். காற்றாடியை ஆகாயத்தில் நிறுத்துவதற்கு

அடித்துக்கொண்டிருக்கும் காற்றை காற்றாடி தாக்கவேண்டுவது அவசியமாகிறது.

காற்று அசைவற்றிருந்தால், காற்றாடி முன்போல் பறப்பதற்குப் பையன் என்ன செய்யவேண்டும்? கயிற்றைக் கையில் பிடித்துப் போதுமான வேகத்துடன் தரைமேல் ஓடவேண்டும். இப்படி ஓடுவதினால் காற்றாடி காற்றை ஊடுருவிச் செல்கின்றது. காற்றாடி தூக்கப்படுவதற்கு காற்றும் காற்றாடியும் ஒன்றை யொன்று எதிர்க்க வேண்டும். காற்றுக்குத் தன்னை ஊடுருவிச் செல்லும் எதையும் தடுக்கும் சுபாவம் உண்டு. விரித்த குடையுடன் ஓடும் ஒருவனைக் காற்று தடுப்பதை நாம் காண்கிறோம். குடை சற்று சாய்ந்திருப்பின் காற்று அவனை உயரத்தூக்கவும் முயலுகின்றது. அப்படியே காற்றாடி காற்றின் வழியே வேகத்துடன் இழுக்கப்படும் பொழுது காற்று அதை உயரத்தூக்குகிறது. காற்றாடி பெரியதாகவும் அதிகக் கனமுள்ளதாகவும் இருப்பின் அதை உயரப் பறக்கவிடப் பையன் முன்னைவிட அதிக வேகத்துடன் ஓட வேண்டும். அதாவது அக்காற்றாடி அதிக வேகத்துடன் காற்றை ஊடுருவிச் செல்லவேண்டும். காற்றாடிக்குப் பதிலாக சுமார் ௧௦-அடி நீளம் ௨-அடி அகலம் உள்ள ஒரு மூங்கிலால் செய்யப்பட்ட ஒரு தகட்டை காற்றாடியைப் போல் காற்றை ஊடுருவிச் செல்லச்செய்தால் அதுவும் காற்றினால் உயரத்தூக்கப்படும். தகட்டின் கனம் அதிகமாக அதிகமாக காற்றின் ஊடேசெல்லும் அதன் வேகத்தையும் அதிகரித்தால் தான் அது உயரே பறக்க முடியும்.

இவ்விதம் ஒரு காற்றாடி அல்லது காற்றாடி போன்ற ஒரு தகட்டைக் காற்றில் அதிக வேகத்துடன் செலுத்துவதற்கு என்ன செய்யவேண்டும்.? மேலே சொன்ன தகட்டின் நான்கு மூலைகளிலேயும் கம்பிகளைச் சேர்த்துக்கட்டி அவற்றின் நுனியைக் கையில் பிடித்துக்கொண்டு ஒருவன் ஒரு கோபுரத்தினுச்சியிலிருந்து தகட்டைச் சற்றுச் சாய்த்துக்கொண்டு குதிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அம்மனிதன் சாய்ந்திருக்கும் தகட்டின் பயனாக செங்குத்தாய்க் கீழே வேகத்துடன் விழுந்து விடாமல் மெதுவாய் சரிவாக வந்து சேருகிறான். மனிதர் அதிக உயரத்

தினின்றும் இவ்வித உபாயத்தால் கீழே பத்திரமாய் வந்திறங்க ஸாத்தியமாகின்றது. இம்மாதிரி உபாயம் ஆங்கிலத்தில் பாராசூட் 'Parachute' என்று சொல்லப்படுகிறது. இத்தகைய பாராசூட்டின் உதவியால் மிக உயரத்திலிருந்து அதிக விசித்திரமாக இறங்குவதில் இஸ்ட் என்பவர் பெயர் பெற்றவர்.

மேலே சொன்ன காற்றாடிபோன்ற தகட்டுக்குப் பதிலாக சமநிறையுள்ள இரண்டு தகடுகளை ஓரடி தூரத்தில் ஒன்றின்மேலொன்று வைத்து மூலைகளில் சிறு கம்பிகளால் சேர்த்துப் பறக்கவிடுவோம். காற்றை இரண்டு தகடுகள் எதிர்ப்பதனால் அதிக பாரம் தூக்கும் வல்லமை பெறுகின்றன. காற்றை ஊடுருவிச் செல்லும் இத்தகைய தகடுகள் மனிதரையும் கனமுள்ள பொருள்களையும் கூடத்தூக்கிச் செல்லும். இவ்விரண்டு தகடுகளில் கீழ் உள்ளதில் ஒரு மனிதன் ஏறிக்கொண்டு ஒரு மலையுச்சியினின்றும் வேகமாகக் கீழ்நோக்கி இழுக்கப்பட்டால், போதுமான வேகம் கிடைத்தவுடன் ஆகாயத்தில் தூக்கப்படுகிறான். அவன் நிறைக்கும் தட்டுக்களின் நிறைக்கும் ஒத்தவேகம் தட்டுக்களுக்கு இருக்கும் வரை ஆகாயத்தில் மெல்ல மெல்லச்சாய்ந்து பறந்து பத்திரமாகப் பூமிவந்து சேருகிறான். இம்மாதிரி ஆகாயசலனிகளின் உருப்பெறுவதற்கு முன்னர், அநேகர் இது மாதிரித் தகடுகள் செய்து அரைமணி நேரம், ஒரு மணி நேரம் வரையில் ஆகாயத்தில் பறந்தனர். இவர்களில் ஒஜில்விரைட், வில்பர்ரைட் ஆகிய இரு அமெரிக்க ஸஹோதரர் மிகவும் திறமை வாய்ந்து உலக முழுவதையும் ஆச்சரியப்படச் செய்தனர். இவ்விதம் ஆகாயத்தில் பறப்பதற்கு நழுவுதல் (Gliding) என்றும், நழுவும் தட்டுகளுக்கு நழுவிகள் (Gliders) என்றும் பெயர் வழங்கி வருகின்றன. இவைகளே தற்காலத்திய ஆகாயசலனிகளின் வருகையை முன் வரிசை கூறின.

இந்த நழுவிகளுக்கு ஆகாயத்தை ஊடுருவிச செல்ல மலையுச்சியிலிருந்து இழுக்கப்படுவதினாலும் கீழ் நோக்கி விழுவதினாலும் வேகம் கொடுக்கப்பட்டது. நழுவிகளின் கீழ்த்தகட்டில் ஆகாயக்கப்பலின் சட்டத்தில் இருப்பதுபோல் ஒரு இயந்திரம் வைக்கப்பட்டால் அது நழுவிகளை ஆகாயத்தை ஊடுருவி வேகத்துடன்

செலுத்தும். இவ்விதம் இயந்திரத்தினால் ஓட்டப்படும் நழுவிகளே ஆகாய சலனிகள் என்று சொல்லப்படுகின்றன.

பருந்துகள் ஆகாயத்தில் சிறகடியாமல் பறப்பதின் ரகசியம் இப்பொழுது நமக்குத் தெளிவாய்த் தென்படும். பருந்தின் விரிந்த சிறகுகள், நழுவிகளின் தகட்டுக்களை ஒத்தவை. காற்றுக்கு எதிராகப் பருந்துசெல்லும்போது, காற்று அதன் சிறகுகளைத்தாக்கி அதைத் தூக்குகிறது. காற்றில்லாத வேளைகளிலும் அல்லது காற்றை எதிர்த்துப் போகவேண்டிய சமயங்களிலும் பருந்து சிறகுகளை அடித்து, இயந்திரம் நழுவிகளுக்கு வேகம் கொடுப்பதுபோல் தனக்கு வேகம் கொடுத்துக்கொள்ளுகிறது. கீழ் நோக்கி இறங்கும்போது நழுவிகள் இறங்குவதுபோல் சிறகைவிரித்துமெல்லச் சாய்ந்து இறங்குகின்றது.

ஆகாயசலனிமேலிருந்து கீழே இறங்கும்போது சாய்ந்தே இறங்கவேண்டும். ஏனெனில் கீழ்நோக்கிச் செல்லும் சலனி ஆகாயத்தில் இருக்கும்வரை அதன் கனத்துக்குத்தகுந்த வேகத்துடன் பூமிக்குச் சம மட்டத்தில் (Horizontally) சென்றுகொண்டிருக்க வேண்டும். ஆகவே அது சாய்ந்தே செல்ல வேண்டியிருக்கும். இதே மாதிரி பூமியிலிருந்து உயர எழும்பும்போதும் சரிவாகவே உயரச் செல்லவேண்டும். சலனிகள் தரையைத்தொடும்வரை ஆகாயத்தில் அதைத் தூக்குவதற்கு வேண்டிய வேகத்திற்குக் குறையாமல் சென்று கொண்டிருக்கவேண்டும். ஆகவே தரையைத் தொடும்போது அதை வேகத்துடன் தொடுமாதலால் தரையில் கொஞ்சதூரம் ஓடின பிறகுதான் நிற்கமுடியும். இதற்காகவே தரையில் ஓடுவதற்கு ஸௌகரியமாகச் சக்கரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மேலும் இக்காரணத்தால் சலனிகள் மேடுபள்ளமாயிருக்குமிடங்கள், சதுப்பு நிலங்கள், நெருங்கின இடங்கள் இவைகளில் இறங்கமுடியாது. சலனிகளின் ஆரம்ப நாட்களில் அநேகர் இந்த அஸௌகரியத்தால் ஆகாயத்தில் நன்றாய்ப் பறந்த போதிலும் கீழிறங்கும்போது சலனிதரையில் மோதி இறந்தனர். ஆனால் தற்காலத்தில் பூமியிலிருந்து செங்குத்தாக எழும்பி ஆகாயத்தில் பறக்கவும், அப்படியே செங்குத்தாக இறங்கவும் வேண்டிய உபாயங்களைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்.

ஆகாய சலனியின் பக்கங்களைச்சிறிது விவரிப்போம். அதன் தட்டுக்கள் சிறிது உள்குவிந்து நீளம் அதிகமாகவும், அகலம் சுருக்கமாகவும், மிகவும் திடமானவைகளாகவும், குறைந்த நிறையுள்ளவைகளாகவும் செய்யப்பட்டு இருக்கின்றன. அகலத்தை விட நீளம் அதிகமாக இருப்பதனால் தகடுகள் சுலபமாகப் பறக்க முடியும். உதாரணமாக, நீளம் அதிகமான இறகுகளை உடைய பருந்து காக்கு இவைகள் நீளம் குறைந்து அகலம் அதிகமாகவுள்ள இறகுகளை உடைய கோழி முதலிய ஜந்துக்களை விட வேகமாகவும், சுளுவாகவும் பறக்கின்றன. சலனியின் இயந்திரம் அதிக கனம் அற்றதாகவும், ஆனால் சலனிக்கு அதிக வேகம் தரக்கூடியதாகவும் செய்யப்பட்டுள்ளது. இத்தகைய இயந்திரம் சீக்கிரம் கண்டு பிடிக்கப்படாததால் தான் சலனி வெகு காலம்வரை செய்யப்படாமலிருந்தது. கடைசியில் டி. ஹாவலிண்ட் (De Havelind) என்பவர் தம்முடைய பிரஸித்திபெற்ற ஸ்வல்பகனமும் அதிக சக்தியும் வாய்ந்த இயந்திரத்தைக் கண்டு பிடித்தார். அவருடைய இயந்திரசாலையே இப்பொழுது எல்லாப்பெரிய சலனிகளுக்கும் இயந்திரங்களை அளித்து வருகின்றது. இவ்வியந்திரங்கள் மணிக்கு உ௦௦-மைலுக்கு அதிகமான வேகத்துடன் ஆகாயத்தில் செல்லத்தக்கன. சில நாட்களுக்கு முன்னர் தான் ஒரு ஆகாய சஞ்சாரி ௪அ-மணி நேரத்தில் இங்கிலாந்திலிருந்து ரு௦௦௦ மைல் தூரத்திலிருக்கும் கல்கத்தாவுக்கு ௪அ-மணி நேரத்தில் வந்து சேர முயற்சி செய்கிறார் என்று அறிந்தோம். இத்தூரத்தைத் தாண்ட இதுவரையில் குறைந்தது ௪ரு-நாட்கள் பிடித்தன என்பதை நினைக்கும்போது இப்பொழுது நடக்கப்போகும் ஸம்பவம் நமக்குப் பேசவொண்ணு வியப்பைத்தருகிறது.

சலனி ஆகாயத்தில் நிதானமாய்ச் செல்லும்பொருட்டுச் சலனியின் பின் புறத்தில் வால் போன்ற ஒரு ஸாதனம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் உதவியால் சலனி திடீரென்று காற்றடிக்கும்போது தானே நிதானம் பெறும். சலனியை ஓட்டும் இயந்திரம் மின்சார விசிறிகளின் அலகுகளைப்போன்ற இரண்டு அலகுகளை வெகு வேகமாகச் சுற்றுகிறது. இவ்வலகுகளின் வடிவம் ஒரு ஸ்குரூ ஆணியைப்போன்றது. அவ்வித ஆணி ஒன்றை ஒரு மரத்துண்டுக்குள் முறுக்கினால், அந்தத் திருக்குண்ட மரம் அதைத் தடுப்பதின் காரணம்பற்றி, ஆணி அதனுள் செல்லுகிறது. மரம் வைரம் பாய்ந்திருப்பின் ஒவ்வொரு முறுக்குக்கும் திருகு கொஞ்சம் கொஞ்சம் உள் செல்லும். மரம் மிருதுவாயிருப்பின் ௪, ரு-முறுக்குக்குக் கொஞ்ச தூரமே செல்லும். இது

போல் ஒரு திருக்கைத் தண்ணீரினுள் வேகமாகச் சுற்றினால் அது தண்ணீரைத் துளைத்து அப்பால் செல்லும். இத்தகைய திருக்கின் அமைப்புபெற்ற சக்கிரங்களின் உதவியால் தான் கப்பல்கள் கடலில் வேகத்துடன் செல்லுகின்றன. இத்திருக்கு காற்றில் சுற்றும்பொழுது, காற்று வாயுபதார்த்தமாதலாலும், அதிக எதிர்ப்புக் கொடாததாலும் திருகு ௪000-சுற்றுக்குக் கொஞ்ச தூரமே செல்லும். எனவே இயந்திரம் அலகுகளை வெகு வேகமாகச் சுற்றும்பொழுது அலகுகள் ஸ்குரு ஆணிபோல் இருப்பததைபற்றிச் சலனியைச் செலுத்த உதவி செய்கின்றன. அலகுகளின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க சலனியின் வேகமும் அதிகப்படும். இவ்வலகுகளுக்குத் துடுப்புகள் (Propellors) என்று பெயர்.

ஆகாயசலனிகளில் அநேக விதங்கள் இருக்கின்றன. இவைகளின் அமைப்பு அததற்கென்று ஏற்பட்டிருக்கும் வேலைக்குத் தகுந்தபடி வேறுபடுகிறது. யுத்த காலங்களில் உபயோகப்படும் சலனிகள் பீரங்கிகள் உள்ளவை. பிரயாணிகள் செல்லும் கப்பல்கள், அவர்கள் ஸௌகரியத்திற்காகவேண்டிய உபாயங்கள் அமையப்பெற்றன. சிலசலனிகள் தரைமேல் இறங்குவதற் கென்று சக்கரங்கள் உடையன. இன்னும் சில தண்ணீரின்மேல் இறங்குவதற்கு அநுகூலமாக மரக்கட்டையால் செய்யப்பட்ட மிதப்புகள் பொருந்தியன. இத்தகைய சலனிகள், செப்ளேன், அல்லது ஹைட்ரோப்ளேன் எனக் கூறப்படுகின்றன. இவற்றில் ஒன்றில் தான் பிரஸித்தி பெற்ற Allan Couhan உலகமறியும்படியாக இங்கிலாந்திலிருந்து ஆஸ்திரேலியாவுக்குப் பறந்துபோய்த் திரும்பிவந்தார். இன்னும் பட்சிகளின் இறகுகள் போல ஒரே தகடுடைய சலனிகளும் உள. இவைகளுக்கு மானோபிளேன் என்று பெயர்.

இவ்வாறு, மனிதன் அதிகபொருட் செலவின் பேரிலும், உயிர்ச்சேதத்தின்பேரிலும், விடாமுயற்சியுடனும், தைரியத்துடனும் ஆகாயத்தில் செய்துவந்த சஞ்சாரங்களே நவ நாகரிகத்தின் முடிமணியாக விளங்குகின்றன. இப்பொழுது ஆகாய சஞ்சாரம் ஐரோப்பாவின் பல இடங்களிலும் அதிவேகமாகப் பரவி வருகின்றன. நமது தேசத்திலும் ஆகாயயாத்திரை வெகு சீக்கிரமாகப் பலப்படுத்தப்பட்டு நமக்குச் செய்ய விருக்கும் நன்மைகள் அளவிறந்தன.

---

# கோமதன்.

## இயற்கை மகவு.

(முன் தொடர்ச்சி.)

### கன்னிகை வருகிறாள்.

இராகம்—செஞ்சுருட்டி.] [தாளம்—ஜம்பை.

1 இந்தநல்ல நேரமதி லெற்குநெறி நேரேகாட்டும்
நந்தலிலா வென்செவியு முண்மையுரை நாடு மென்னில்

2 தமதுபண்ட சாலைகளுந் தகைமைபெறு மானிரையும்
நிறைவுபெறு நேரந்தன்னில் விளைவின் றெய்வந் தன்னைநாடி

3 சீரின்மிக்க கல்விகலன் றனையறியாச் சிறுபுன்மாந்த
ராரும்விழு வணியைப்போற்றி யமையுமின்பந் தன்னினொடும்

4 பாடியாடிப் பாவுங்காலைப் பயின்முறையி லோசைநோ
வென்செவியிற் கிட்டுமோசை யிசைந்ததுமிச் சூழலிலே

5 இம்முறையி லோசையாக்கும் வெம்மதுவுண் மாந்தராடல்
செம்மையொடு காணுமாசை சிறிதுமடைந் துள்ளேனல்லேன்

6 ஆயினும்பன் மரங்கடுன்றி யலரிகதிர் நுழைதல் செல்லாப்
பாயிருளா ரடவியூடே பயின்றறியா வேழையேனும்

7 எண்ணில்கவ ரான்மயங்கு மிவ்வழியு ளெவ்வழியாற்
செல்வேனந்தோ வென்றனைவர் செறியுமிந்த நெறியின்பாலே

8 படருவதால் யானுமெய்தே படுதுயரைக் கண்டனரா
யித்தருவி னீழலிலே யிருக்கவென வெற்பணித்தே

9 விருந்தின [illegible] றுமக்க மேன்மைசேர் தனைந்தைபுற்ற
திருந்துதரு வியுறும் திங்கனிகள் யானுகர

10 தருவோமெனு மென்னமுடன் தாமுமெனே விட்டகன்றே
சென்றனரா லங்கவர்தாஞ் செங்கதிரார் சூரியன்றன்

11 தேருருளின் பின்பாலுற்ற சிறுகதிரா னனைநிறமாய்
சிரின்மிக்க தவத்தர்தங்கள் சீரைநேரு மந்தியிலே

12 கனிகவருங் காதலுடன் போயவவ ரெவ்விடையே
யுற்றனரோ வேதுநிகழ் வுற்றனரோ வங்கவர்தாம்

13 மீண்டுவாராக் காரணந்தா னேதோவென்று மெய்யுணர்வே
யிண்டெனுளத் துற்றதுவா லெனைப்பிரிந்த வென்றுணைவர்

14 சேணிடையே சென்றனரா லங்கவரைக் காரிருளுந்
தன்னுடைய வஞ்சனையாற் றகைந்ததிங்கு வாராமலே.

---

1 படிற்றுத் துறையிற் பயிலும் நிசியே
படருஞ் நெறியிற் றவறுற் றனரா
யடிப்பா டறியா தவராய் வருந்து
மவர்க்கே யாகும் நெறிநேர் காட்ட
வடுக்கும் புகழா ரியற்கை யென்று
மருள்சே ரிறைதான் மகிழ்வோ டளித்த
வுடுக்க ளென்னும் பெயரான் மலியு
மொளிசேர் தூண்டாத் திபங் களையே.

2 மறைத்தே சதிசெய் செயலி னினக்கே
வருமோர் பயனு முளதா மெனவே
சிறப்பா னியு மதிக்கின் றனையோ
சிறியேன் பயிலு மிடமா மிதுவே

முறைப்பா டில்லா வொலியா மதனுல்
முன்னே யென்றன் செவியின் றுளையை
நிறைக்குந் தன்மை வாய்ந்த வோசை
நிலவா நின்ற விடமா மன்றே.

---

ஆயினு மிவ்வயி னுரிரு ளதுவே
கட்புலந் தனிற்படு காட்சி யுற்றதுவால்
அந்தோ! விந்நில் யாதென வறியேன்
கையினி லழைக்குந் தன்மை கடுப்பவும்
வாயினில் விளிக்கும் மாண்ப தொக்கவும்
காவடம் பயிலுங் கருமன மாந்தரைக்
கரையினு மணலினுங் கானக மருங்கினும்
விரவு நற்பெயரால் விருப்புட னழைக்கும்
ஓசை காற்றிடை யுறுதல் போலவும்
இல்பொருட் காட்சிகள் பலவு மிவ் விடைப்
பல்பதி னுயிரப் பாங்கின வாத
வென்னுளத் திடையே தோன்றுகின் றனவால்
இவ்விடைத் தோன்றுங் காட்சிகளியாவுஞ்
செவ்விய மனச்சான் றெனப்படு சிறப்பின்
வலந்தரு வீரன் காவலின் மருவி
நன்னெறிப் படரு மென்னுள நடுக்குறச்
செய்திட லன்றிக் கலக்குறச் செய்த
லியலு வதன்றால்! இயலுவதன்றால்!!
சுத்தந் திகழுந் துலங்குநல் லியல்பின்
விசுவாசம்மே! விழுமிய புகழார்

நம்பிக்கையே! நல்வரவாக
பொலஞ்சிறைத் தேவ தூதுவர் போன்றே
விண்ணிடைச் சுழன்று மேன்மை பெற்றிலங்கி
வலந்தரு கற்பினை மாசறக் காப்பீர்
நும்முருத் தன்னை நேர்பட நோக்கி
நம்புகின் றனனு மிவ்விடை யானே
தீவினை பலவும் செறிவினை செய்யு
மேவல ரென்னத் திகழ்தரு மிறையாம்
விழுமிய சிறப்பின் முழுமுதற் கடவுள்
என்னுயி ரதுவு மெனதுறு கற்புங்
காக்கப் படத்தகு காலையுண் டாமெனிற்
சோதியிற் றோன்றுமோர் காவலன் றன்னைக்
காதலின் விடுத்தே யென்றுயர் களைவார்
இவ்விடை யானு மேமாந் தனனே
வவ்விடை வானத் துச்சியி லணிசேர்
கார்முகி லொன்று வெண்ணிறச் சோதியைச்
சீர்மிகு சிறப்பிற் காட்டிய தன்றே
வெண்ணிறச் சோதி விளங்கிய காட்சி
யுண்மையின் பால தியான்றவ றுற்றே
னல்லே னல்லே னென்னுடன் பிறந்தார்
தம்மை விளிக்கத் தக்கதொ ரோசையை
மாக்குதற் கேற்ற மனவலி யடைந்தேன்
ஆங்கவர் தாமுஞ் சேணிடை யகன்று
ரல்ல ராதலின் யான்செயு மொலியு
மவர்செவிப் புலத்தி னுறைதலுமாமே.

---

1 கல்லினை வருவி வீழுங் கருவரை முழஞ்சி னூடும்
புல்லெழிற் பசும்பட்டாடை போர்த்தெனப் பொலிந்து [தோன்றப்
பல்வளஞ் சுரக்கும், பள்ளத் தாக்கினும் பாயு மாற்றி
னல்லியற் கரைக டோறு நலம்பெறப் பயில லுற்றே.

2 காற்றெனுங் குரம்பை யூடு காதலான் மறைந்து வாழும்
பேற்றினு மினிமை சேரு மெதிரொலிப் பெண்ணங்கே!
மாற்றருந் துயரா லின்முன் மருவலை விழைத்து பாடு
மேற்றமா ரழகின் மிக்க "நாக்கிச" செனும் போனை.

3 பொருவிடுந் தகையதான பொற்பின ரிருவோர் தம்மை
யிருளிடைக் கண்ட துண்டே வியம்புதி நினதுளத்தே
மருவிய காதலானை நேர்தரு மாண்பினாலே
யுருகுவை யென்னிற் சீர்சால் முழஞ்சிடை யொளித்தியன்றே

4 ஒளிப்பினு மனையாருற்ற விடத்தினை யுரைத்தி நீயுங்
களிப்புறக் கண்டாயல்லை யென்னினல் லினிமை சேருங்
கழற்றெதி ருரையின் செல்வத் தாசியே! கவினார் கோள
மிழைத்தாற் றவத்தார் ரென்று மிசைமிகு புதல்வியாரே.

5 யானுரை மொழிகள் யாவு நீமகிழ்ந் திசைத்தே யந்த
வானினு மதற்கப் பாலாய் வயங்குறற் நலத்தின் மீது
மேனைய விடங்கடோறு மெழில்பெற விசைப்பா யந்தத்
தேனினைப் பாலை வென்றே தித்திக்கு மின்சொனல்லாய்.

# காதல் மணம்.

ந. வீரப்பசெட்டியார்.

இன்று நமது தமிழகத்தில் நிகழும் மணங்கள் உண்மை மணங்களாகத் திகழவில்லை. கணவன், மனைவி இருவருக்கும் இன்பம் நல்கும் முறையில் மணங்கள் நடைபெறவில்லை. தாய் தந்தையின் மனம் மகிழ்ச்சியுறும் வகையில் மணங்கள் நடைபெறுகின்றன. மணவினையின் உண்மை உணராது மக்கட்கு மணம் முடித்து வைப்பதால் மணமக்கள் இருவரும் மீளாத் துன்பத்திற்கு ஆளாகின்றனர். தாய் தந்தையர்கள் மணமக்களுடைய அபிப்பிராயத்தைக் குறித்துச் சிந்திப்பதே கிடையாது. எங்ஙனமேனும் தங் குழந்தைகட்கு மணவினை நிகழ்ந்துவிடில், அதுவே தங்கட்குப் பெரும் பெருமை அளிக்குமென்னும் குறுகிய எண்ணத்தால் மணமக்கள் இருவருடைய வாழ்வினையும் கெடுத்துவிடுகின்றனர்.

நமது நாட்டில் எங்கு நோக்கினும் பெரும்பாலாக கணவன், மனைவி இருவருக்குமிடையில் நாடோறும் பூசல் நிகழ்ந்துகொண்டிருப்பதைக் காணலாம். இருபாலாரும் இல்லற வாழ்க்கையின் வெற்றியை உணராது பூசலிட்டுக் கொண்டிருப்பதால், இன்பம் நல்கும் இல்வாழ்வு துன்பம் தருவதாகின்றது. கணவன், மனைவி இருவருடைய மனமும் ஒன்றியிருக்குமாயின் இல்வாழ்வில் பூசல்கள் நிகழா. கணவன் எண்ணமும், மனைவியின் எண்ணமும் வேறுபட்டு நிற்றலால் இருவருள்ளும பூசல்கள் நிகழ்கின்றன. கணவனை இன்னானென்றறியாது, அவனுடைய குணம் தெரியாது, அவன் அறிவு எவ்வளவென்பதை உணராது ஒரு பெண் வாழ்க்கைப்படுத்தப்படுகின்றாள். அதுபோலவே பெண்ணின் குண நலன் முதலியவற்றை அறியாது ஆண்மகன் ஒரு பெண் மகளை மணந்து கொள்கின்றான். வாழ்க்கை நடத்தத் தொடங்கியபின் இருவருள்ளும் கருத்து வேறுபாட்டால் பூசல்கள் நிகழ்கின்றன. படித்த ஆண்மகனுக்குப் படியாத பெண் மகளை

மணம் செய்விப்பின் இருவரும் ஒத்து வாழ்தல் எங்ஙனம்? அவன் மனம் ஒரு வழியில் செல்கின்றது. இவள் மனமோ, அதற்கு மாறான வேறொரு வழியை நாடுகின்றது. கணவனுடைய செயல்கள் மனைவிக்கு வெறுப்பைத் தருகின்றன. மேலும், கணவனைத் தன் வழிக்கிழுக்க மனைவி முயற்சிக்கின்றாள். மனைவியைத் தன் வழி இழுக்கக் கணவன் முயல்கிறான். இதனால் இருவர் மனமும் பிளவுண்டு வாழ்க்கை துன்பமாய் முடிகின்றது. இவ்வாறே ஒன்றையொன்று ஒவ்வாமல் நமது நாட்டு மணங்கள் நடைபெறுகின்றன.

பிற நாடுகளில் மணவினை செவ்விய முறையில் நிகழ்கின்றது. ஆண்மகனும், பெண்மகளும் ஒருவரை ஒருவர் நேசித்து, இருவர் அபிப்பிராயமும் ஒன்றுபட்ட பின்னரே மணவினை நிகழ்கின்றது. அறிவு வளர்வதற்கு முன் மணவினை அங்கு நடைபெறுவதில்லை. இருவரும் நல்ல அறிவு பெற்ற பின்னரே மணவினை நிகழ்த்தப் படுகின்றபடியால் அவர்களுடைய இல்வாழ்வு இன்பகரமாய் இருக்கின்றது. கணவனும் மனைவியும் ஒருவர்க்கொருவர் வேண்டும உதவிகளைச் செய்துகொள்ளுகின்றனர். ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்த எண்ணுவதில்லை. கணவன், மனைவி இருவரும் ஒன்றுபட்ட வாழ்க்கை நடத்துவார்களானால் இல்வாழ்வு எவ்வளவு இன்பகரமாயிருக்கும் என்பதைக் கூறவேண்டியதில்லை.

நம் நாட்டில் இல்வாழ்க்கை இன்பகரமாகவில்லாததற்குக் காரணமென்னை? காதல் மணம் ஒழிந்து காம மணம் எழுந்ததேயாகும். காதல் மணம் இல்வாழ்வில் இன்பத்தைத் நல்குகின்றது; காம மணம் இல்வாழ்வில் துன்பத்தைத் தருகின்றது. இருவர் மனத்துள்ளும் உண்மை அன்போடு எழும் உணர்ச்சியே காதல். சிற்றின்ப விருப்பத்தால் ஒருவர்மேல் ஒருவர்க்குண்டாகும் பிரியமே காமம். காதல் உயிரை வளர்ப்பது; காமம் உயிரை அழிப்பது. காதல் இருவர் மனத்தையும் ஒன்றுசேர்க்கும்; காமம் இருவர் மனத்தையும் வேறுபாடடையச் செய்யும். நமது தமிழ்நாட்டில் முன்னர்க் காதல் மணமே நிகழ்ந்தது. ஆரியர்கள்

குடியேறிய பின்னரே காதல் மணம் ஒழிந்து காம மணம் எழுந்தது. காதல் தானே உண்டாதல் வேண்டும்; காமம் செயற்கையால் உண்டாவதாகும். பண்டைத் தமிழாசிரியர் ஒருவர் கூறுகின்றார் :—

> “வடகடலில் கிடக்கும் நுகத்தடியும், தென்கடலில் கிடக்கும் முளைக்குச்சியும் ஒன்று சேருதல் போல காதலர் கூடுகின்றனர்.”

வடகடலில் கிடக்கும் நுகத்தடி அலையால் தள்ளப்பட்டு மிதந்து வருகின்றது. அதுபோலவே முளைக்குச்சியும் அலையால் தள்ளப்பட்டு மிதந்து செல்கின்றது. இவ்வாறு மிதந்து வரும் இரண்டும் ஒன்று சேர்தல் அருமையாகும். அவ்வாறு ஒன்று சேரினும், நுகத்தடித் துவாரத்தில் முளைக்குச்சி பொருந்துதல் எளிதன்று. எனவே இவ்விரண்டும் பொருந்துதல் எவ்வளவு கடினமோ அவ்வளவு காதலரிருவர் ஒன்றுதலுமாகும். எங்கோ பிறந்து வளர்ந்த இருவருடைய மனமும் ஒன்றி நிற்றல் பெருங் கடின மென்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும். அவ்வாறு ஒன்றி நடைபெறும் மணங்களே சிறந்தவையாகும். அது இல்வாழ்வில் இன்பம் நல்கும் மணமாகும். காம மணத்தால் நமது நாடு அடைந்த—அடைகின்ற துன்பங்கள் எண்ணில. காம மணம் தொலைந்து காதல் மணம் எழும் நாளே நமது நாட்டிற்கு நன்னாள். காதல் வாழ்க!

**“காதல ரிருவர் கருத்தொ ருமித்து**
**ஆதரவு பட்டதே இன்பம்.”**



# உணவிற்குத் திண்டாட்டம்.

ந. வீரப்பன்.

பகல் பன்னிரெண்டரை மணிக்கு ஷண்முகசுந்தர முதலியார் கோர்ட்டிலிருந்து வீட்டுக்கு வந்தார். சமையற்காரனைக் கூப்பிட்டார். அவன் வீட்டிலில்லை. மனைவி பங்கஜத்தை அழைத்தார். அவள் கோபமான முகத்துடன் இவர் எதிரில் வந்து நின்றாள்.

முதலியார்:— பங்கஜம்! ஏன் கோபமாக நிற்கிறாய்? மணி பன்னிரண்டரை ஆகிவிட்டது. பசி அதிகமாயிருக்கிறது. இலை போடேன் சாப்பிடலாம்.

பங்கஜம்:— இங்கே என்ன! வேகவாவைத்திருக்கிறது? சமையற்காரன் காலையிலேயே தொலைந்துவிட்டான். எனக்கும் தலைவலி வந்துவிட்டது. அதைக் கவனிப்பாருமில்லை. சாப்பாட்டு நோத்திற்கு வந்து 'சமையலாகிவிட்டதா? பசி அதிகமாயிருக்கிறது' என்று சொல்லத்தான் ஆளிருக்கிறது.

முதலியார்:—பங்கஜம்! என்ன கோபித்துக்கொள்ளுகிறாய்! தலைவலி எப்படியிருக்கிறது? தலைவலிக்கு என்ன மருந்து போட்டாய்?

பங்கஜம்:— என்ன மருந்து போட்டால் உங்களுக்கென்ன கவலை? நான் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதைப்பற்றி யொன்றும் கவலைப்படுவதே கிடையாது! இன்றைக்கு என்ன தலைவலியைப்பற்றி அவ்வளவு கவலைவந்துவிட்டது?

முதலியார்:— வீணாக என் மேல் ஏன் பழிசுமத்துகிறாய்? நான் நீ சொல்வதற்கு எப்பொழுதேனும் மறுமொழி கூறியதுண்டா? உனக்கு சீக்கு வந்தால் எப்பொழுதேனும் நான் தேடாதிருந்ததுண்டா? இப்பொழுது சமையலாகிவிட்டதா; இல்லையா? பசிதாங்கமுடியவில்லை!

பங்கஜம்:— தாங்கள் என்னை ஓர் பெண்ணாக எண்ணியிருந்தால் அவ்விதம் கேட்பீர்களா? தலைவலியால் உபத்திரவப்பட்டுக்கொண்டிருந்தேன் என்று கூறும்பொழுது சமயலாகி விட்டதாவென்று கேட்கிறீர்களே! இதிலிருந்தே தங்களுக்கு அன்பில்லையென்பது தெரிந்துவிட்டதல்லவா? வெளிக்கு மாத்திரம் அன்

பிருப்பதுபோல் காட்டிக்கொள்கிறீர்கள். ஆனல் உங்களுக்கு உண்மையில் அன்பில்லே.

முதலியார்:— மற்றதெல்லாம் பிறகு பேசிக்கொள்வோம். பசி என்னை வாட்டுகிறது. விரைவில் இலையைப்போடு.

பங்கஜம்:—சமையற்காரன்தான் காலேயில் தொலேந்துவிட்டானென்று கூறினேனே! அப்புறம் சமையல் எவ்விதம் ஆகியிருக்கும்?

முதலியார்:— சமையற்காரன் இல்லாவிட்டால் அனைவரும் பட்டினி கிடப்பதா? நீ சமையல் செய்திருக்கக்கூடாதா?

பங்கஜம்:— என்னுடைய உடம்பைப் பற்றித் தங்களுக்குக் கவலேயில்லே. சமையல் செய்யவில்லேயென்பதைப்பற்றிக் குறை கூறுகிறீர்கள்!

முதலியார்:— நான் குறைகூறவில்லேயே? உன்னுடைய வேலேக்காரி மீனுக்ஷியை ஏனும் சமையல் செய்யச் சொல்லியிருக்கக் கூடாதா?

பங்கஜம்:— இதற்கு நானென்ன பதில் சொல்லுகிறது? எனக்குத் தலேவலி வந்ததற்கு அவளில்லாவிட்டால் நான் இறந்தேயிருப்பேன். எனக்குத் தலே பிடித்துக்கொண்டிருந்தாள்.

முதலியார் :—இது வேடிக்கையாக இருக்கிறது. சமையற்காரன் இல்லாவிட்டால் மனிதன் சாக வேண்டியதுதான் போலிருக்கிறது. கணவனிடத்தில் அன்பிருக்குமானல் இவ்வாறு இருக்க முடியுமோ ?

பங்கஜம்:— கணவனிடத்து அன்பில்லாதவள் என்று கூறுகிறீர்கள். நான் தங்களிடத்தில் அன்பைச் செலுத்தாமல் வேறு எவனிடம் அன்பைச்செலுத்தி அவனுக்கு எல்லாம் செய்து போடுகிறேன். நீங்கள் என்ன செய்வீர்கள்? எல்லாம் என்னுடைய தலேவிதி !

முதலியார்:— உன்னுடைய தலேவிதி என்ன கோணலாயிருக்கிறது ? என் தலேவிதியை நான் நொந்து கொள்ளவேண்டும். ஒரு நாள் சமையற்காரன் இல்லாததற்குப் பட்டினி போட்டு விட்டாய். வேலேக்காரியைச் சமைக்கச் சொல்லலாகாதாவென்ருல் தலேபிடிக்க ஆளில்லாமல் என் செய்வேனென்கிருய் ?

பங்கஜம்:— என்னுடைய தலைவிதி என்ன கோணலாய்ப் போய்விட்டதென்று கேட்கிறீர்கள். அடுத்த வீட்டு இராமாமிர்தத்தைப் பாருங்கள்! அவள் புருஷன் அவளை என்ன மாதிரி வைத்திருக்கிறான்? அவள் சிறு பிள்ளையாயிருந்தும் அவளுக்கென்று ஒரு பெண்பிள்ளை வைத்திருக்கிறான். அவள் இராமாமிர்தத்திற்கு வேண்டிய வேலைகளை மாத்திரம் பார்க்கிறாள். வேறு வேலை செய்கிறாளா? நீங்கள் என்னுடைய ஆள் சமைக்கவில்லை யென்று பிரமாதமாகக் கோபித்துக் கொள்கிறீர்கள். ஒரு நாளைக்குக் கிளப்பில் வாங்கி வந்து தின்றாலென்ன?

முதலியார்:— பங்கஜம்! உன்மேல் எனக்கிருக்கும் பிரியத்தால் ஒன்றும் கடுமையாய்ச் சொல்ல என் மனம் எழவில்லை. கிளப்புச் சாப்பாடு சுகப்படுமா? கொஞ்சம் உப்புமாக்கிண்டேன்.! பசி மயக்கமாக வருகிறது.

பங்கஜம்:— நான் பலகாரம் செய்ய முடியாது. வேலைக்காரி போல் நினைத்துப் பேசுகிறீர்கள். இந்த இழவுக்குத்தான் முன்னமே உங்களை நான் விவாகம் செய்துகொள்ள மாட்டேனென்றேன். என் தாயும் தகப்பனும் நாசமாகப்போக! கேட்கமாட்டேனென்று விட்டார்கள். பாழாய்ப்போன கடவுள் என் தலையில் இப்படி எழுதினானே! உங்களோடு கத்திக் கத்தித் தொண்டையெல்லாம் காய்ந்து போய்விட்டது. காப்பி போட்டுத்தா ஒரு ஆளேனுமிருக்கிறதா?

முதலியார்:— எனக்குக் கலியாணம் செய்து உன்னைக் கெடுத்தா விட்டார்கள்? வீணாக உன் தாய் தந்தையர்கள் மேல் குற்றம் கூறுகிறாய். ஒரு நாள் சமையற் காரனில்லையென்றால் இவ்வளவு சண்டையா? கலியாணம் செய்து கொண்டு என்ன பயன்? ஒரு வேளை உணவிற்கும் வழியில்லையே!

பங்கஜம்:— மனைவிக்கு என்ன செய்கிறீர்கள்? கோபித்துக் கொள்வதைத் தவிர வேறு ஏதேனும் பிரயோசனமுண்டா? மற்றவர்களைப் பாருங்கள். எவ்வளவு வைர நகைகள் மனைவிக்கென்று வாங்கிக்கொடுக்கிறார்கள்? கார்வாங்கி வைத்துக்கொண்டு மனைவி வேணடுமிடங்கட்கெல்லாம் அழைத்துச் செலகிறார்கள். இந்தப் பாவி எதை அனுபவித்தேன்? ஒரு காருண்டா? ஒரு வைர நகையுண்டா! உங்களைச் சொல்ல என்ன இருக்கிறது! ஈசன் எழுதினான் இப்படி!

முதலியார்:— உனக்கு நான் சென்ற வருஷம் நாலாயிர ரூபாய்க்கு வைர நகைகள் செய்து கொடுக்கவில்லயா? வாங்கிக்

கொண்டு வைர நகைகிடையாதென்று சொல்லுகிருயே? வீணுக என் பழி சுமத்துகிருய்?

பங்கஜம் :— என்ன வைரம் வாங்கிவிட்டீர்கள்? எங்கேயோ கிடந்த கழிபட்ட கல்லை வாங்கிக்கொண்டு வந்து நாலாயிர ரூபாய் என்கிறீர்கள். நாங்கள் என்ன படித்தவர்களா? உங்கள் நோக்கம்போல் சொல்லலாமல்லவா? அடுத்த வீட்டு ராமாமிர்தத்தைப் பாருங்களேன். அவளுடைய வைரங்கள் என்ன அழகாய் இருக்கின்றன. அவள் கொடுத்து வைத்தவள்!

முதலியார் :— உன்னேடு பேசுவதில் என்ன இருக்கிறது? மேலும் மேலும் மனத்திற்கு வருத்தந்தான் உண்டாகிறது. கலியாணம் செய்துகொள்ளுதல் சந்தோஷமாயிருப்பதற்கு என்று சொல்வார்கள். அது இப்பொழுது பொய்யாய்ப் போய்விட்டது. கணவன் சந்தோஷமாக இருக்க முயன்ருல் பெண்கள் வருத்தத்தை உண்டாக்குவதில் கெட்டிக்காரர்களா யிருக்கிருர்கள். முற்காலத்தில் பெண்கள் இப்படியாயிருந்தார்கள்? கணவனையே தெய்வமென நினைத்து அவன் சொற்படி நடந்து அவனுக்கு வேண்டுவன செய்து அவன் மனத்தைக் களிப்பிப்பார்களென்று நூல்கள் கூறுகின்றன. திருவள்ளுவருக்கு அவருடைய மனைவி வேண்டும் பணிவிடைகளைச் செய்து அவர் படுத்த பின்பு அவருக்குக் கால் பிடித்துவிட்டுத் தூங்கி விடியற்காலையில் முன்னே எழுந்து வீட்டு வேலைகளைக் கவனிப்பது வழக்கமென்று அவருடைய சரித்திரத்தில் காணப்படுகின்றது. ஏழைகளுடைய வீட்டில் இன்று அவைகளைக் காணலாம். செல்வர்களுடைய வீட்டில் தான் இத்தொந்தரவுகள் நேருகின்றன. கணவனுக்கு இன்பத்தை யூட்டும் சொற்களைக் கூறி அவனை மகிழ்விக்காவிடினும் அவனை வருந்தச் செய்யாதிருந்தால் போதுமென்ற நிலையில் பெண்மக்கள் வந்துவிட்டார்கள். உன்னை மட்டுங் குறை கூறுவதில் என்ன பிரயோஜனம்?

பங்கஜம்:— ஏதோ வேதாந்தம் பேசுகிறீர்கள். இப்பொழுது இருக்கும் நிலை கொஞ்சங்கூடத் தெரியாத உங்களிடம் அகப்பட்டுக் கொண்டு நான் விழிக்கிறேன். ஊர்ப் பெண்களெல்லாம் என்னைக் கேலி செய்கிருர்கள். கால்பிடிக்க வேண்டுமாம், பின்னல் தூங்க வேண்டுமாம்! முன்னல் எழுந்து வீட்டு வேலை செய்ய வேண்டுமாம்!

முதலியார்:— இதெல்லாம் செய்ய வேண்டாம். சமயற்காரன் இல்லாத பொழுது சமயல் செய்து போட்டால் போதும். இப்போது உப்புமா கொஞ்சம் செய்து கொடுத்தால் போதும்!

முதலியார் வேண்டியவரை சொல்லிப்பார்த்தார். ஒன்றும் நடக்கவில்லை. மேன் மேலும் பங்கஜத் தம்மாள் கோபித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். முதலியாருக்கும் பசிமயக்கம் உண்டாகி விட்டது. மணியும் ஐந்தரையாகி விட்டது. இனி இருப்பதால் பிரயோஜனமில்லையெனக் கண்டார். எழுந்து கிளப்பிற்குச்சென்று பட்சணங்கள் அருந்திவிட்டுக் கடற்கரை வழியாகச் சிறிது தூரம் சென்று மீண்டும் கிளப்பிற்கு வந்து இரவு உணவருந்தினர். மறுநாள் காலையில் சமயற்காரனுக்கு ஆள் விட்டு அழைத்து வந்து சமையல் செய்ய ஏற்பாடு செய்தார். பங்கஜத் தம்மாள் ஏற்கெனவே கிளப்பிலிருந்து சாப்பாடு வரவழைத்து உண்டு விட்டபடியால் அவர்களைப் பசியொன்றுஞ் செய்யவில்லை.

---

# கதைக் குறிப்புகள்.

## நாடோடி நவில்வது.

பம்பாம்பட்டியில் குப்பண்ணு நாயக்கர் என்றொருவர் இருந்தார். அவர்மிக நல்லவர். அவருடைய வீடு எப்பொழுதும் ஆபாசமாக விருக்கும். அவ்வூர் சுகாதார இன்ஸ்பெக்டர் அதற்காக அவரை எப்பொழுதும் சார்ஜ் செய்வது வழக்கம். இது நமது குப்பண்ணு நாயக்கருக்குப் பிடிக்கவில்லை. பொறுத்துப் பார்த்தார். அவரால் பொறுத்திருக்க முடியவில்லை. உடனே அதிகாரிகளுக்கு ஒரு முறையீடு அனுப்பத் தீர்மானித்துப் பின் வருமாறு கடிதமெழுதித் தபாற்பெட்டியில் போட்டுவிட்டார்.

மகா-ராஜ-ராஜ-ஸ்ரீ,

பம்பாம்பட்டி அச்சய வருஷம் தய்யி மீ௨அ-தேதி,

குலித்தலெ சப்புரீஷ்த்திருர் அவர்கல் திவிய சமுகதிர்கு கீல்க் கைஎலுத்துழ்ல குப்பன்னு நாயிக்கற் எலுதிக்கொன்ட பொட்றிஷின் என்னென்னு இன்த ஊர் சுக்காத்தார இமிசுப்பட்டற் நல்லவரிள்ளே. அவரு எப்போப் பார்த்தாலும் எம்வீட்டே நள்ளா இல்லே இண்ணு எண்னைப் புடுச்சுக்கினு போராரு. ஆககேஷ இது பொட்றிஷன் கிடத்தவுடன் அந்த இமிசுப்பட்டறை வேலையைவிட்டு நீக்கவேணுமாய் கேட்டுகொழ்கிற்றேன்.

அப்படிச் செயிதாக்க எல்லாருக்கும் சன்தோசமாயிருக்கும். மாந்துடப்படாது. ரெம்பக்கும்பிடுகிறேன்.

இப்படிக்கி
ஞ. குப்பன்ன நாயிக்கர்,
பம்பரம்பட்டி.

மகா-ராய-ராய-ஸ்ரீ
குலித்தலே சம்புரீஷ்த்திரூர் அவர்கல்
சமூகம் அலிப்பது.

குப்பண்ண நாயக்கர் இக்கடித மெழுதியதைப்பற்றி ஊரில் எல்லோரிடமும் பெருமையாகச் சொல்லிக் கொண்டார். பதிலுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்.

ஃ ஃ ஃ ஃ ஃ

அப்பரைக்குடி மிகச் சிறிய கிராமம். அங்கு சுந்தரேச முதலியார் என்றொரு ஜமீந்தாரிருந்தார். ஜமீந்தார்களுடைய அறிவு விசாலத்தைப்பற்றி ஒருவருக்கும் கூறவேண்டியதில்லை. பிறந்தது முதல் இன்றுவரை அப்பரைக்குடியைத் தவிர வேறு ஒரு ஊரும் அறிந்தவரில்லை. இப்பொழுது வயது முப்பதாகிறது. சென்னையைப் பார்க்கவேண்டுமென்ற ஆசைமிகுதியுமிருந்தது. அதை நிறைவேற்றக் காலம் பார்த்துக்கொண்டிருந்தார். கிறிஸ்துமஸ் விடுமுறை நாள் வந்தது. அவ்வமயம் சென்னையில் பலவேடிக்கைகள் நடைபெறும் என்பதை முன் போய் வந்தவர்கள் மூலம் அறிந்திருந்தார். உடனே பிரயாணமாகிச் சென்னைபோய்ச் சேர்ந்தார். கூட்டம் நிறையவந்திருந்தது. பலவேடிக்கைகளும் நடைபெற்றன. எல்லாவற்றையும் கண்டு ஆனந்தித்தார். சென்னையிலுள்ள பல இடங்களையும் பார்த்தார். ஒரு நாள் ஒரு ஆங்கிலேய ஓட்டலைப்போய்ப் பார்வையிட்டார். அப்பொழுது ஆங்கிலேயர்கள் உணவருந்திக் கொண்டிருந்தனர். ஒவ்வொருவருக்கும் முன் ஒரு பிளேட்டும், ஒரு கோப்பையும், ஒரு காண்டியும், ஒரு முள் காண்டியுமிருந்தன. ஆங்கிலேயர்கள் பிளேட்டிலுள்ள ஆகாரத்தைக் கரண்டியினாலும் முள் கரண்டியினாலும் எடுத்துச் சாப்பிடுவதைக் கவனித்துக் கொண்டிருந்தார். வெளியில் காவலுக்கு இருந்த வேலைக்காரனிடம் 'கையினால் எடுத்து உணவருந்தாமல் காண்டியினால் எடுத்து உணவருந்துவது எதற்காக' வென்று கேட்டார். 'அவன் 'கையினால் உணவருந்தினால் கைநகத்திலுள்ள அழுக்குகள் உடலுக்குள்சென்று உடம்பைக்கெடுத்துவிடு' மென்று சொன்னான். ஜமீந்தார் ''வெள்ளைக்காரர்கள் கெட்டிக்காரர்கள். இல்லாவிட்டால்

இவ்வாறு செய்வார்களா ? அவர்களுடைய மூளையே மூளை! நாம் அவசியம் மறந்து போகாமல் ஊருக்குப்போகும்பொழுது கரண்டிகள் வாங்கிக்கொண்டு போகவேண்டும்'' என்று தனக்குள் முடிவுசெய்து கொண்டார். சென்னையில் தனக்காகப் பல சாமான்கள் வாங்கினுர். அதோடு கரண்டி ஒன்றும், முள் கரண்டியொன்றும் மறந்து போகாமல் வாங்கிவிட்டார். சாமான்களோடு சௌக்கியமாக ஊர் வந்து சேர்ந்தார். தான் சாப்பிடுவதற்குக் கரண்டி வாங்கி வந்திருப்பதைப்பற்றி எல்லாரிடமும் பெருமையாகப் பேசிக்கொண்டார். கரண்டிகளைப் பார்த்து அனைவரும் ஆச்சரியப்பட்டனர். கரண்டியினுல் உண்வருந்தும் முதல் தினத்தை விசேஷ தினமாகக் கொண்டாடவேண்டுமென்ற ஜனங்களுடைய அபிப்பிராயத்திற்கு ஜமீந்தார் இணங்கினுர். ஒரு நல்ல நாள் குறிப்பிடப்பட்டது. அன்று ஜமீந்தார் அரண்மனையில் விசேஷமான சமையல் பாகங்கள் நடைபெற்றன. சரியாய்ப் பகல் பனிரெண்டு மணிக்கு விருந்தினர்களோடு சாப்பிடப்புறப்பட்டார். எல்லோரும் தரையில் போடப்பட்டிருந்த இலையில் சாப்பிட உட்கார்ந்தனர். ஜமீந்தாருக்குத் தனியே ஒரு மேஜை போடப்பட்டுப் பிளேட்டில் சாதமும் கறிகளும் வைக்கப்பட்டிருந்தன. ஜமீந்தார் மேஜைக்கருகில் இடப்பட்டிருந்த குறிச்சியில் உட்கார்ந்து கொண்டு உணவருந்த ஆரம்பித்தார். கரண்டியினுல் சாதத்தையெடுத்து வாயிற்குள் வைத்துக்கொண்டார். முள் கரண்டியினுல் கருணைக்கிழங்கைக்குத்தியெடுத்து வாய்க்குள் அடித்தொண்டை வரைபோகும்படி வைத்தார். இவருடைய பலமெல்லாம் அந்த முள் கரண்டியில் உபயோகிக்கப்படவே, கரண்டி தொண்டையில் நன்கு பாய்ந்து விட்டது. தொண்டையினின்றும் இரத்தமானது பீறிட்டு எழ ஆரம்பித்தது. இருந்தோரெல்லாம் இதைக்கண்டு பயந்து ஓடிவந்து ஜமீந்தாரைத் தூக்கி ஒரு படுக்கையில் படுக்க வைத்தனர். உடனே பக்கத்தூரிலுள்ள டாக்டர் நாராயணராவிற்கு வண்டி அனுப்பப்பட்டது. அவரும் வந்து சேர்ந்தார். உடனே ஜமீந்தார் தொண்டையில் மருந்து போட்டு சிகிச்சை செய்தார். இந்த ரணம் சௌக்கியமாக பல நாள்கள் சென்றன. அது முதல் நமது ஜமீந்தார் சென்னைக்கு இனிப்போவதில்லையென்றும், சென்னைக்குச் சென்றதனுல் தான் இத்தொல்லை வந்ததென்றும் கூறினுர். அப்பால் எப்பொழுதும்போல் உணவருந்திக்கொண்டு சௌக்கியமாக இருந்து வருகிறுர்.

---

# சதங்கை யொலி.

---

## புலால் புசிப்பதில்லை.

கீழ்க்காணும் விவரம் 'குட் ஹெல்த்' எனும் பத்திரிகையினின்றும் மொழி பெயர்க்கப்பெற்று "ஆரோக்கிய தீபிகை"யில் பிரசுரிக்கப் பெற்றிருக்கிறது:—

மோட்டார் டிரக்குகளும், இதர கருவிகளும் பிராபல்யமடைந்திராத கீழ்த்தேசங்களில் பளுவான சுமைகள் மனிதர்களுடைய முதுகுகளில் தூக்கிச் செல்லப்படுகின்றன. கான்ஸ்டாண்டிநோபிளில் இந்த மூட்டைகளைத் தூக்கிச் செல்பவர்கள் குர்துகள். இவர்கள் துருக்கியின் கீழ்ப் பிரதேசங்களிலிருந்து வந்தவர்கள். இவர்கள் சரீர திடமுடையவர்கள்; இதனால் இவர்கள் அதிக காலம் ஜீவித்திருக்கிறார்கள். இவர்களில் ஸோரோ ஆகா வென்பர் ஒருவர். இவர் கான்ஸ்டாண்டிநோபிளில் நானூறு வருஷங்களுக்கு அதிகமாக இருந்துவரும் பெரிய பள்ளிவாயிலிலிருந்து ௫-நிமிஷ நடை தூரத்திலுள்ள ஒரு இரட்டை மாடிக் கட்டிடத்தில் இருந்து வருகிறார். இவர் தமது நீண்ட ஆயுள் காலத்தில் தமது முதுகில் பல பெரிய மூட்டைகளை அந்நிய நாடுகளிலிருந்து தூக்கிக் கொண்டு வந்திருக்கிறார். இவருக்கு இப்பொழுது ௧௨௬-வயதாகியும் செங்குத்தாக நடக்கிறார்; ஊன்றுகோலை இவர் பிரதீக்ஷிக்கவில்லை. உயிர் வாழ்வின் இன்பத்தை அனுபவிக்கக்கூடிய நிலைமையில் இருந்து வருகிறார். இது நம்பத்தகாததுபோல் இருக்கலாம்; இருந்தாலும் இது வாஸ்தவம். இவர் சமீபத்தில் ஓர் அரசாங்க வேலைக்கு விண்ணப்பம் அனுப்பி இருக்கிறார். இவர் இவ்வளவு காலம் சுகஜீவியாக இருந்து வருவதற்குப் பிராணிநூல் தர்மங்களைப்பற்றி நடந்ததே காரணம். குருதிஸ்தானத்து மலைகளில் பிறந்த இவர் பால்யம் முதலே திறந்த வெளிகளில் வசித்து ஆடுகளை மேய்த்துக்கொண்டு வந்திருக்கிறார். புதிதாகப் பறித்த பழங்கள், கீரைகள், மரக்கறிகள், பச்சை வெங்காயம், கொட்டைகள், முரட்டு ரொட்டி, வெண்ணெய்க் கட்டி, புளித்த பால் இவைகளைத் தவறாமல் இவர் புசித்து வந்திருக்கிறார். தினமிரு முறை தவறாமல் மலப் பிரவர்த்தி செய்து கொள்வார். மாமிசத்தை இவர் புசிப்பதில்லை. மதுபானங்கள், காப்பி, தேத்தண்ணீர், புகையிலை இவைகளை இவர் எக்காலும் உபயோகித்ததில்லை. சூரியாஸ்தமனமானதும் இவர் உறங்கச் சென்று விடுகிறார். சூரிய உதயகாலத்தில் எழுந்துவிடுகிறார். ஸோரோ ஆகா ௬ சுல்தான்கள் காலத்திலிருந்திருக்கிறார். இவருடைய ௫௦ வயதில் கில்ட் ஆப் ஹாமல்ஸ் என்ற ஸ்தாபனத்தில் இவர் அங்கத்தினராக இருந்திருக்கிறார். பிறகு அவரே அதன் தலைவராயிருக்கிறார். இவர் பிட்லிஸ் என்ற இடத்தில் பிறந்தவர். இவர் ௬௦ ஸ்திரீகளை விவாகம் செய்துகொண்டார். இவருடைய குழந்தைகளெல்லாம் இறந்துவிட்டன. இருந்தாலும் இவருடைய கொள்ளுப் பேரன்களும், எள்ளுப்பேரன்களும் ஜீவித்திருக்கின்றனர்.

---